வண்ணநூன்முனிவரல்லர்மருத்துவான்மருத்துநல்கு
மன்னலங்குமாராமென்றயிர்ப்புறுமரசர்யாருங்
கண்ணனுல்விலக்கப்பட்டுக்கடிநகர்தோறுந்தங்க
ளெண்ணமும்பயனும்வேறுவெய்தினரென்பமன்னே. (சுங)

அன்றிலக்கெய்தகோவுந்துணைவருமானவெம்போர்
வென்றுகொற்றவையோடொக்குமின்னிடைப்பொன்னுந்தாமுஞ்
சென்றுமட்கலஞ்செய்கம்மிசெழுமனைமுன்றிலெய்தி
யின்றுபெற்றனமோரையமென்செய்வதிதனையென்றார். (சுச)

உள்ளிருந்தன்னைமைந்தருரைத்தசொற்கேட்டுத்தேவர்
தெள்ளமுதென்னமக்காள்சேரநீருந்துமென்னப்
புள்ளினமொடுங்குமாலைப்பொழுதிவள்புறம்பரெய்திக்
கள்ளவிழ்கூந்தலாளைக்கரும்பெனவிரும்பிக்கண்டாள். (சுரு)

என்னினைந்தென்சொன்னேன்மற்றென்செய்தேனென்றுசோரு
மன்னையைவணங்கிநின்சொல்லாரணப்படியதாகு
நின்னினைவன்றுலெங்கணெஞ்சிலுநினைவுண்டென்றான்
றன்னிகரிலாதகேள்விசான்றசீர்த்தருமனென்பான். (சுசு)

பாரனைத்தினுந்தன்னுமம்பரப்பியபார்த்தனென்னும்
வீரனைப்பயந்தபாவைவிதிவழியிதுவென்றெண்ணி
மாரனுக்கரசுநல்குமங்கையுந்தானுமந்தக்
காரிருட்கங்குன்மைந்தர்கட்டுரைகசிந்துகேட்டாள். (சுஎ)

பொற்றொடிக்கனகமாலைப்பொலங்குழைப்பூவைதன்னைப்
பெற்றபூபதியவ்வீரர்பெருமிதவாய்மையெல்லா
மொற்றராலுணர்ந்துநெஞ்சத்துவகையோடையமின்றி
மற்றைநாள்வந்துகொற்றவாழ்மனைகொண்டுபுக்கான். (சுஅ)

அடுத்தபல்பொருளும்வைக்கவாயுதமன்றிவேறொன்
றெடுத்திலரென்றும்வேதமுனிவரரல்லரென்றுங்
கொடுத்தனசிறப்பினோடுங்குருமணித்தவிசினேற்றித்
தொடுத்ததார்க்குருக்களொன்றேதுணிந்தனன்யாகசேனன். (சுகூ)

கைவருசிலையின்வென்றுகைப்பிடித்தவனுக்கின்றே
மைவருகண்ணினாளைவதுவைசெய்திடுதுமென்ன
மெய்வருமுனைகொள்கூர்வேனிருபனைநோக்கியாங்க
ளைவரும்வேட்டுமென்றானசைவிலாவறத்தின்மைந்தன். (எ0)

தருமன்மாமதலைசொல்லாற்றளர்வுறுகாலைமாலை
நிருபநின்மனத்திலையநீக்குகநீக்குகென்னாத்
துருபதன்முன்னர்வந்தோன்றினன்சுருதியாவும்
விரைமலர்விதியின்மிஞ்சவிதித்தருள்வியாதனென்பான். (எக)

தொழுதுபொற்றவிசினேற்றிச்சூழ்ந்தனரிருந்துகேட்ப
முழுதுணர்கேள்விஞானமுனிகுலத்தரசுபோல்வான்
பழுதறுகன்னிதன்னைப்பாண்டவரைவருக்கு
மெழுதருமறையின்வேள்வியியற்றுதற்கியற்கைகேண்மோ. (எஉ)

வேறு.

மூளாரழலுற்பவித்தாளிவண்முற்பவத்தி
னாளாயனியென்றுரைசால்பெருநாமமிக்காள்
வாளார்தடங்கணவட்காரணவாணர்க்கென்றுங்
கேளானமௌற்கல்லியனென்பவன்கேள்வனானான். (எங)

காதிற்கலந்தகடைக்கண்ணிதன்கற்புமன்புஞ்
சோதித்தலுன்னித்தணியாததுவக்குநோயன்
கோதித்தநெஞ்சன்பெருமுப்பினன்கூர்ந்துநாளும்
வாதித்தலன்றிமகிழாமனைவாழ்வுபூண்டான். (எச)

கச்சிற்கடங்காமுலையாளக்கணவனுண்ட
மிச்சிற்புறத்துவிரல்வீழவும்வீழ்தன்மிஞ்சிக்
குச்சித்தலின்றிநுகர்ந்தாள்கொடுங்காமநோய்கொண்
டிச்சித்தவின்பநுகராமலிளைத்தமெய்யாள். (எரு)

அன்பன்றெரிவைவழிபாடுகண்டார்வமெய்தித்
துன்பம்பயந்தபிணியாலழிதோற்றமாற்றித்
தன்பங்கையீசன்றிறைநல்கமுன்சாபம்வாங்கும்
வன்பன்றனக்குங்கிடையாதவடிவுகொண்டான். (எசு)

மின்னேயுனக்குமிருகற்புடைமீனுமொவ்வா
வின்னேவரம்வேண்டுவவேண்டுகவீண்டையென்ன
நின்னேயமென்றும்பிரியாநலனேர்கவென்று
டன்னேரிலாதமனைவாழ்விற்றவத்தின்மிக்காள். (எஎ)

குன்றுநதியுமரனும்பைங்கொடியுமாகித்
தன்றுந்துணையாய்ப்பலயோனிகடோறுமெய்தி
நின்றுஞ்சரித்துமரும்போகநெடிதுதுய்த்தா
ரென்றும்பிரியாதிருவோருமிதயமொத்தே. (எஅ)

இந்தப்பிறப்பினலமெய்தியிறந்தபின்னுஞ்
சிந்தித்தவண்ணமிவளிந்திரசேனையாகி
யந்தப்பதியையடைந்தான்மற்றவனுமஞ்சி
வந்தித்ததொல்லையருமாதவமன்னிநின்றான். (எகூ)

அன்னானைகலவவன்மேலவளாசைமிஞ்சி
யென்னேபுரிவதினியென்றநுமேந்தல்கூற்றுற்
றன்னேர்வடிவினொருகூறொருதையலாகு
முன்னேநோக்கித்தவஞ்செய்தனண்மூரல்வாயாள். (அ0)

ஐந்தானனத்தோனருள்செய்யவழகின்மிக்கா
யைந்தானசொல்வாற்கணவற்றருகையவென்று
னைந்தானசொல்வானளித்தான்மற்றவனுமுன்னு
மைந்தானபோகமிவளெய்தியவாறறிந்தே. (அக)

முன்னின்றதேவன்மொழியின்படிகங்கைமூழ்கித்
தன்னந்தனிநின்றழுகின்றவத்தையல்கண்ணீர்
பொன்னங்கமலவமான * புதுமைநோக்கி
யென்னென்றிவளையிமையோர்பதியெய்தினனே. (அஉ)

* கண்ணீரெல்லாம் பொற்றாமரை மலர்களாயினவென்க.

அவனைத்தொடர்பால்வருகென்னவவனுமாங்கட்
சிவனைச்சிறிதுமதியாதெதிர்சென்றகாலை
யிவனுக்கென்மேன்மையெனச்சீறலுமெஞ்சினன்போற்
புவனத்தெவருநகையாடப்புலம்பிவீழ்ந்தான். (அங)

வெவ்வாயுதங்களுதவாமல்விபுதநாத
னிவ்வாறுவீழமழுவாளியிமைப்பின்மீண்டு
மவ்வாசவற்குப்பிலமொன்றிலடைந்தவச்சிரக்
கைவாசவர்களொருநால்வரைக்காட்டினனே. (அச)

வன்பாதலத்தில்வருநால்வரும்வானின்வந்த
புன்பாகசாதனனுந்தன்னடிபோற்றிநிற்ப
வன்பான்மகிழ்ந்தரிவட்கைவருமாதிரென்று
மென்பாவைபங்கன்விதிக்கப்புவிமீதுவந்தார். (அரு)

தருமன்பவனன்றினநாதன்றனயர்தம்பால்
வருமிந்தநால்வரவர்நால்வருமாலைமார்பா
தெருமந்தவிந்தச்சிலைவீரனித்தேவர்க்கெல்லாம்
பெருமன்பிறப்பிற்கவனேமுன்பிதாவுமானன். (அசு)

இம்மாதுதொல்லையருமாதவத்தெல்லைகண்ட
வம்மாதிவள்காதலரைவருமாகவென்று
தெம்மாதர்முற்பூண்கவர்மன்னன்றெளியுமாறு
வெம்மாதவத்தோன்பெருஞானவிழியுமீந்தான். (அஎ)

ஓதாதுணர்ந்துமறைநாலுமுருவுசெய்த
வேதாவுமொவ்வாவியாதன்மொழிவெள்ளநீராற்
கோதானநெஞ்சைக்குளிப்பாட்டினன்கோடிகோடி
தோதானவண்டுதுதைமாலைகொள்சோமகேசன். (அஅ)

வியப்போடுதொல்லைமுனிசொற்றலைமீதுகொண்டு
பயப்போன்மகண்மேற்புரிகின்றபரிவினுக்கும்
வயப்போர்நிருபர்பெருமைக்கும்வலிக்குமீடா
நயப்போடுமன்றலயர்வித்தனனன்கொர்நாளில். (அகூ)

பாடுஞ்சுருதிமறைவாணரும்பாரிலுள்ள
சூடுங்கனகமுடிவேந்தருந்தொக்குநிற்ப
நீடுங்கதிர்மாமணித்தூண்கணிரைத்தபத்தி
யாடுங்கொடிமண்டபமெய்தினரண்டர்போல்வார். (கூ0)

குறிக்கும்பணிலமுதலாயிரகோடியாகப்
பிறிக்குங்கருவியிடந்தோறும்பிளிறியார்ப்பச்
செறிக்குங்கழற்காலறன்மைந்தனைச்செம்பொன்வேதி
யெறிக்குங்கிரணமணிப்பீடமதேற்றினரே. (கூக)

இடத்தோளிவட்கும்வலத்தோளிவ்விறைவனுக்குந்
திடத்தோடுரைத்தகுறியின்பயன்சேர்ந்துதோய
விடத்தோடமுதங்கலந்தென்னமிளிரும்வேற்கண்
வடத்தோடுவிம்முமுலையாளைவலத்தில்வைத்தார். (கூஉ)

கேள்விக்கொருவனெனுந்தௌமியன்கீதவேத
வேள்விக்குவேண்டுவனயாவும்விதியினீட்டி
முள்வித்தசெந்தீக்கரியாகமுராசுயர்த்த
தாள்வித்தகற்குவரமானசடங்குசெய்தான். (௯௩)

பன்மங்கலமுமுடன்வைகியபண்பினுளீ
நன்மங்கலப்பூண்டுகிலோடுநயந்துசாத்தித்
தன்மங்கலந்தமனத்தோனையத்தையலோடுந்
தென்மங்கலஞ்செஞ்சுடர்த்தீவலஞ்செய்வித்தாரே. (௯௪)

கங்குற்பவளவனமீதுகடற்றரங்கம்
பொங்கித்தரளத்திரள்சிந்திப்பொழியுமாபோ
லங்கிப்புறத்துத்திருக்காப்பணியங்கையேந்திச்
செங்கட்கரியகுழலாள்பொரிசிந்தினாளே. (௯௫)

இவ்வாறுமன்றலயர்வித்தபினின்றகாதல்
வெவ்வாரழலின்முறைமூழ்கினன்மீண்டுதோன்ற
மைவாராளகவடமீனிகர்கற்பினாளை
யவ்வாறுமற்றையொருநால்வருமன்றுவேட்டார். (௯௬)

மாரன்கரும்புவளரும்படிவார்த்தநீரா
லீரம்புலராக்கரத்தோருக்கியாகசேனன்
றேரும்பரியுங்களிறுந்திரள்சேனையாவும்
பாருந்தனமுமுமதென்றுபலவுமீந்தான். (௯௭)

வேறு.

ஆண்மென்றல்பெற்றங்குரித்தாரிகற், பாண்டுமைந்தரெனுஞ்சொற்பரவலுந்
தாண்டுவெம்பரித்தேர்த்தார்த்தராட்டிரர்*,மீண்டும்வந்தவர்மேல்வினைசெய்யவே.

சென்றசேனையுந்திட்டத்துய்மனுட, னின்றசேனையுநேருறுபூசலிற்
கொன்றசேனையொழிகுருசேனையை, வென்றசேனைவெருண்டுவென்கண்டவே.

சாலும்வஞ்சச்சகுனியொடெண்ணிய, நாலுமைந்தருநச்செயிருகவும்
வாலுமெய்யும்வருக்கங்களாகவு, மாலும்வெம்பகையாடரவானதே. (௧00)

அந்தகாசமழலுமிழ்கண்விடஞ், சிந்தமேல்விடுசெற்றமுந்தோற்றமு
முந்தவார்சிலைக்கைம்முகில்வாகனன், மைந்தன்வாளிமழைகளின்மாய்ந்தவே. ()

சமரவேழமுகாசுரன்சாய்ந்தனன், குமாரனுலெனக்கோநகுலன்றனு
லமரில்பானையணிமுகத்தோடுமெய்ச், சமர்படப்புறந்தந்தனன்கன்னனே. (௧0௨)

முன்னிடச்சமர்மோதுஞ்சகுனியை, மின்னிடைப்புயங்கம்வெருக்கொண்டெனத், தன்னிடக்கைத்தனுவொடுந்தேரொடும், பின்னிடப்பொருதானவன்பின்னவன். (௧0௩)

தன்மதிக்குடைத்தம்முனுந்தம்பியு, மெண்ணுமற்றையிளைஞர்கள்யாவருங்
கன்னுறக்களங்காறுமுன்றீயினல்,வெண்ணெயொத்துடைந்தார்விறல்வீமனல்.

விரோசனக்கதிர்மைந்தனும்வேந்தனுஞ், சரோசனத் † திறற்றம்பியுமாமனும்
புரோசனப்பெயர்ப்புன்மதிதன்வேனோந், தரோசனத் ‡ துடனந்நகர்நண்ணினர்.

* தார்த்தராட்டிரர் - திருதராட்டிரன்மைந்தர்.
† சரோசனன் - ஒத்தகோபமுடையோன். ‡ அரோசனம் - பிரகாசமின்மை.

முந்துபோரின்முதுகிடும்வேந்தரால், விந்தைதன்னையுமேதகவேட்டபி
னந்தமாநகரைவருமாமனும், வந்தகண்ணனுமன்புடன்வைகினர். (௧௦௬)

தும்பைசூடியவேற்றுரியோதனன், வெம்புபோரின்முதுகிட்டமீண்டபின்
றம்பிகூறுதருமனுக்கியுமா, றம்பிகேயனமைச்சரொடெண்ணினன். (௧௦௭)

தாதினூற்பொலிதார்வரைமார்பரைத், தூதினூற்றங்கடொல்பதிசேர்த்தினன்
காதினூற்பயனின்றெனக்கண்கள்போற், கோதினூற்றெரியாமனக்கோளினன். ()

வீடுமற்கும்விதுரற்குமேற்கவந், நாடுமுற்றுநரபதிநல்கவே
யாடுபொற்கொடியந்நகர்வைகினர், நீடுவிற்றிறலோர்நெடுங்காலமே. (௧௦௯)

ஆ செய்யுள் - ௬௦௭.

திரௌபதிமாலையிட்டசருக்கமுற்றிற்று.

---

# இந்திரப்பிரத்தச்சருக்கம்.

வேதமும்வேதம்விளம்புமெய்ப்பொருளுமப்பொருள்விதங்களும்பஞ்ச
பூதமும்புலனும்புலன்களின்பயனுமப்பயன்பொலிவுறநுகரு
ஞாதமுமுலகம்படைத்தளித்தழித்துஞானமாயகிலமுநிறைவுற்
ருதியுநடுவுமுடிவுமாய்நின்றவாதியானடியிணைபணிவாம். (௧)

அத்தினாபுரியிலையிருபதின்மரைவரென்றிரண்டறத்தம்மி
லொத்தனர்மருவத்தெவ்வர்மெய்வெருவவுளமகிழ்நாளின்மற்றொருநாண்
மைத்துனன்முதலாந்தமரையுந்தக்கமந்திரத்தவரையுங்கூட்டி
யித்தினமுயர்ந்ததினமெனமகுடஞ்சூட்டுதற்கெண்ணினனிகலோன். (௨)

செழுமுரசுயர்த்தவேந்தனுக்கின்றுதிருவபிடேகநாளென்று
முழுமுரசறைந்துநகரிகோடித்து * முடிபுனைகடிகொண்மண்டபத்தி
னெழுமுரசதிரப்பகிரோதிமுதலாமெத்துறைப்புனல்களுமியற்றித்
தொழுமுரசுடன்வெள்வலம்புரிமுழங்கச்சுருதிமாமுனிவருந்தொக்கார். (௩)

அத்தியின்பலகைநவமணியழுத்தியாடகத்தமைத்தரிமுகத்தாற்
பத்திகொள்பீடத்தழகுறவிருத்திப்பசும்பொனின்றசும்புகணிறைந்த
சுத்தநீர்வியாதன்றௌமியன்முதலோர்சொரிந்தனர்சோமன்வந்துதித்துச்
சித்திரகிரியினெடுநிலாவெள்ளஞ்சொருடன்வழியவார்த்தெனவே. (௪)

உதயமால்வரையினுதயராகத்தோடுதித்தசேருதயனென்றுரைப்பத்
துதையளிததைந்தமாலையான்சென்னிசோதிமாமகுடமுஞ்சூட்டிப்
பதயுகமரசர்முடிகளாற்சிவப்பப்பகர்விதிமுடித்தபின்பலரு
மிதயமொத்தமிர்தமொழியவரடைவேயிருகைநீராசனமெடுத்தார். (௫)

ஒற்றைபோடிரட்டைவலம்புரிமிழற்றவொருகுடைமதியெனநிழற்றக்
கொற்றவர்முன்பின்போதரமடவார்குழுப்பொரிசிந்திவாழ்த்தெடுப்ப
விற்றைநாளைவரும்வாய்த்தவாவென்னவேழயரிராசகுஞ்சரமேன்
மற்றைநால்வருந்தற்சூழ்வரத்தருமன்மைந்தன்மாநகர்வலம்வந்தான். (௬)

---

* கோடித்தல் - அலங்கரித்தல்.

மாநகர்வலமாய்வந்ததன்குரவர்மலர்ப்பதமுறைமையால்வணங்கிக்
கோநகரிருக்கையடைந்தன்றொருநாட்கொற்றவனேவல்கைக்கொண்டு
பேய்நகரெனுமாறியாவரும்வழங்காப்பிறங்குநீள்கானிடையழிந்த
நாநகர்முன்னோரிருந்ததொன்றநந்தொன்னகர்வகுமாதுணிந்தான். (எ)

அங்கண்மாஞாலமுழுவதுங்கொடுத்தற்காயர்தம்பதியினங்குரித்த
செங்கண்மான்முதலாங்கிளைஞரும்வயிரத்தேர்முதற்சேனையுந்தாமும் [யித்
வெங்கண்மாகணத்தோனென்னமெத்திசையும்வெளிப்பட வேந்தரைவரும்போ
தங்கண்மாதவத்தாற்காண்டவப்பிரத்தமென்னுமத்தழல்வனமடைந்தார். (அ)

போயவட்புகுந்தபொழுதுபைங்கடலும்பூவையும்புயலுநேர்வடிவின்
மாயவற்கெவ்வாறிவ்வழியிவர்கள்வாழ்வதென்றொருநினைவெய்தி
நாயகக்கடவுடன்னைமுன்னுதலுநாகர்நாயகனெடுநெடுங்கி
மேயகட்புலன்கள்களித்திடத்திருமுன்னின்றனன்விச்சுவகன்மா. (கூ)

நுண்ணிதினுணர்ந்தோருணர்தருஞ்சிற்பநூலறிபுலவனைநோக்கித்
திண்ணிதினமரர்சேகரன்மொழிந்தான்றேவருமனிதரும்வியப்ப
மண்ணினும்புயங்கர்பாதலமுதலாமற்றுளவுலகினுநமதாம்
விண்ணினுமுவமையிலதெனக்கடிதோர்வியனகர்விதித்திநீயெனவே. (க௦)

தேவினுந்தேவயோனியிற்பிறந்திரளினுஞ்சிறந்தயாவர்க்கும்
பூவினுமெவ்வெவ்வுலகினுமுன்னம்புந்தியாலியற்றியபுரங்கள்
யாவினுமழகும்பெருமையுந்திருவுமின்பமுமெழுமடங்காக
நாவினும்புகலக்கருத்தினுநினைக்கவரியதோர்நலம்பெறச்சமைத்தான். (கக)

மாகதங்கோமேதகந்துகிர்தாளம்வைரம்வைதூரியநீல
மெரிமணிபுட்பராகமென்றிவற்றிற்காகமிந்தமாநகரென்
றரிமுதலிமையோரனைவரும்புகழ்ந்தாராடகப்பொருப்பினையழித்துத்
தரணியினகரொன்றமைத்தவாவென்றுதபதியர்யாவரும்வியந்தார். (கஉ)

என்பதியழகுகுலைந்ததென்றெண்ணியிந்திரன்வெறுக்கவுமியக்கர்
மன்பதிபொலிவுசிதைந்ததென்றிடவுமற்றுளவானவர்பதிகள்
புன்பதியாகிப்போயினவெனவும்புரையறுபுந்தியாற்புவிமே
லன்பதிதுவொன்றியற்றினனென்றுநாரணனுதிகதித்திடவும். (கங)

சந்திராபதமும் * தினகராபதமுமிருபொழுதினுமெழச்சமைத்த
மந்திராதிகளுமஞ்சமுமதிலுமகரதோரணமணிமறுகுங்
கொந்திராநின்றசோலையுந்தடமுங்கொற்றவன்கோயிலுநோக்கி
யிந்திராபதியவ்விந்திரன்பெயராலிந்திரப்பிரத்தமென்றிட்டான். (கச)

இமையவர்பதியிலுள்ளனயாவுமிங்குளவிங்குமற்றுள்ள
வமைவுறுபொருள்களங்கிலவெனுமாறமைத்தவான்றொல்பதியழகைச்
சமைவுறவிரித்துப்புகழ்வதற்குன்னிற்சதுர்முகத்தவனுமெய்தளரு
நமர்களானவிலமுடியுமோமுடியாதாயினும்வல்லவாநவில்வாம். (கரு)

விதிமறைமுறையிற்சாந்திசெய்கடவுள்வேதியராரவமொருசார்
மதிமுறைதவறுவமைச்சர்சொல்விழையுமன்னவராரவமொருசார்
நிதிகெழுசெல்வத்தளகையோர்நெருக்கானிறைந்தபேராரவமொருசார்
பதிதொறுமுழவர்வினைபயனெடுக்கும்பறைகறங்காரவமொருசார். (கசூ)

* ஆபதம் - ஆபத்து.

தோரணமஞ்சத்தலந்தொறுநடிக்குந்தோகையர்நாடகமொருசார்
பூரணபைம்பொற்கும்பமுமொளிகூர்புரிமணித்தீபமுமொருசார்
வாரணமிவுளிதேர்முதனிரைத்தவாகமுஞ்சேனையுமொருசார்
நாரணன்வனசபதயுகம்பிரியாநலம்பெறுமாதவரொருசார். (கஎ)

சிற்பவல்லபத்தின்மயன்முதலுள்ளதெய்வவான்றபதியரொருசார்
வெற்பகமருவிவீற்றுவீற்றிருக்கும்விஞ்சையர்கின்னரரொருசா
ரற்புதவடிவினுருப்பசிமுதலாமழகுடையரம்பையரொருசார்
பொற்புடையமரர்பதியுமெய்ம்மகிழ்ந்துபொழிதருபொன்மலரொருசார். (கஅ)

வரையெலாமகிலுஞ்சந்தனதருவுமான்மதநாவியின்குலமுந்
திரையெலாமுத்தும்பவளவண்கொடியுஞ்செம்மணிகளுமரகதமுங்
கரையெலாம்புன்னைக்கானமுங்கண்டலடவியுங்கைதையங்காடுந்
தரையெலாம்பொன்னும்வெள்ளியும்பழனவேலிசூழ்சாலியுங்கரும்பும். (கக)

ஆலையிற்கரும்பின்கண்களிற்றெறித்தவாரமும்வயற்புறத்தடுத்த
சோலையிற்பயிலுங்குயிலையுஞ்சுருதிச்சுரும்பையுநிரைநிரைதுரப்ப
வேலையிற்குதித்தவாளையேயும்பர்வியனதிகலக்கிவெண்டிங்கண்
மாலையிற்பரவும்வானமீன்கொடிபோல்வாவியிற்குளிக்குமாமருதம். (உ0)

புரிசையிற்குடுமிதொறுநிரைதொடுத்தபொற்கொடியாடையினிழலைக்
கிரிமிசைபறக்குமன்னமென்றெண்ணிக்கிடங்கில்வாழோதிமக்கிளைகள்
விரிசிறைப்பறவின்கடுமையாலெய்திமீதெழுமஞ்செனக்கலங்கிப்
பரிசயப்படுதெண்சததளப்பொகுட்டுப்பார்ப்புறைபள்ளிவிட்டகலா. (உக)

கயற்றடஞ்செங்கட்கன்னியர்க்கிந்துகாந்தவார்சிலையினலுயரச்
செயற்படுபொருப்பின்சாரலிற்கங்குற்றெண்ணிலாவெறித்தலினுருகி
வியப்பொடுகுதிக்குந்தாரைகொளருவிவிழைவுடன்படிவனசகோர
நயப்புடையன்னச்சேவல்பேடென்றுநண்ணலாலுளமிகநாணும். (உஉ)

அரிமணிச்சிலையின்சலாகையால்வட்டமாகவேயமைத்தசாலகந்தோ
றெரிமணிக்குழையார்வதனமண்டலத்திலெழிலுடன்மிளிருமைத்தடங்கண்
விரிமணிக்கதிரோனளிக்கமுன்களிந்தவெற்பிடைவீழுமாநதியின்
புரிமணிச்சுழியிற்றுணையொடுமுலாவிப்பொருவனகயல்களேபோலும். (உங)

இனத்தினலுயர்ந்தவிந்திரபுரியுமிந்திரப்பிரத்தமுமிரண்டுந்
தனத்தினலுணர்வாற்கேள்வியாலழகாற்றக்கதொன்றியாதெனத்துலைகொண்
மனத்தினனிறுக்கவுயர்ந்ததொன்றென்றுமண்மிசையிருந்ததுமிகவுங்
கனத்தினலன்றித்தாழுமோயாருங்கண்டதுகேட்டதன்றிதுவே. (உச)

நிறக்கவல்விரும்பைச்செம்பொனும்வண்ணநிகழ்த்தியவிரதமேகிர்ப்பப்
பிறக்கமும்வனமுமொழித்தவணமைத்தபெரும்பதிக்குவமையும்பெருமன்
மறக்கடுங்களிற்றுக்குபேரன்வாழளகைவடக்கிரிந்ததுநெடுவானிற்
றுறக்கமுமொளித்ததிலங்கையும்வெருவித்தொடுகடற்சுழிப்புகுந்ததுவே. (உரு)

வாவியும்புறவுஞ்சோலையுமலர்ந்தமலர்களுமணிகளின்குழாமு
மேவியெங்கெங்குமயங்கவிற்றத்தம்வேரியும்வாசமுந்தூதாப்
பூவினஞ்சுரும்பையழைக்கும்வண்பழனப்புதவளஞ்சுரக்குநாடனைத்து
மோவியங்குறித்துப்பூமகள்வடிவையொப்பனைசெய்தவாறொக்கும். (உசு)

பரிமளமதுபமூரல்பசுந்தொடையற்பாண்டவரைவருங்கடவு
ளெரிவலம்புரிந்துமுறைமுறைவேட்டவின்னெழிலிளமயிலன்றி
வரிசையினூறுமுரிமையாலவனிமயிலையுமன்றலெய்தினர்போற்
புரிவளைதாளஞ்சொரிபுனலகழிப்புரிசைசூழ்புரங்குடிபுகுந்தார். (உஎ)

உரங்குடிபுகுந்தபின்டோளுதிட்டிரன்முதலியோரப்
புரங்குடிபுகுந்துதங்கள்பொன்னெயிற்கோயிலெய்தத்
திரங்குடிபுகுந்தகல்விச்சிற்பவித்தகன்றனெஞ்சாற்
காங்குடிபுகாமற்செய்தகடிநகர்காட்டலுற்றான். (உஅ)

நாபுரப்பதற்கேயேற்றநவிரறுவாய்மைவேந்தர்
கோபுரத்தும்பர்மஞ்சகோடியினின்றுதங்கண்
மாபுரத்துள்ளவெல்லைவளமனையாவுமாதர்
நூபுரத்தாவவீதியகலமுநோக்கினாரே. (உகூ)

அரவின்வெஞ்சுடிகைகொண்டவவிர்மணிச்சோதிமேன்மேல்
விரவிவந்தெறித்துப்பச்சைமெய்சிவப்பேறிற்றாக
விரவிதன்னிரதம்பூண்டவெழுபெயர்ப்பவனவேகப்
புரவியையயுற்றேகொல்புரிவலம்புரிவதென்பார். (ஙo)

அருளுடையறத்தின்வாழ்வாமந்நகரில்லமெங்கு
மிருளுடையிந்திரநீலத்தியன்றசாளரங்கணோக்கி
யுருளுடையொற்றைநேமியுறுபரித்தேரோன்சேறத்
தெருளுடைத்திமிரம்போனபின்னெறிபோலுமென்பார். (ஙக)

சமர்முகப்பொறிகண்மிக்கதடமதிற்குமிதோறுங்
குமருறப்பிணித்தபைம்பொற்கொடித்துகிலசைவுநோக்கி
நமர்புரக்கிழத்தியும்பர்நாயகன்புரத்தினோடு
மமர்பொரப்பற்பல்கையாலழைப்பதுபோலுமென்பார். (ஙஉ)

நசம்புறுமகிலின்றூபஞ்சாறுகெரும்பின்றூப
மசம்பருமடையின்றூபமவிபெறுமழலின்றூபம்
விசம்புறநான்குதிக்குமிசைமிசையெழுதனோக்கிப்
பசம்புயலேழன்றின்னும்பலவுளவாகுமென்பார். (ஙங)

அடுக்குறநிலஞ்செய்மாடத்தணியுறுபெரும்பதாகை
மிடுக்குறலனிலனெற்றிவிசையுடனெடுத்துமோத
வுடுக்களுநாளுங்கோளுமுள்ளமுமுடலுஞ்சேர
நடுக்குறுகின்றவிந்நகர்வழிபோகவென்பார். (ஙச)

துதையளிமுரலும்வாசச்சோலையின்பொங்கர்தோறும்
விதமுறவெழுந்தகாளமேகங்கள்படிதனோக்கிக்
கதிர்மணியகழிமாமேகலையுடைநகரமாதின்
புகைநறுமலர்மென்கூந்தல்போலுமாகாண்மினென்பார். (ஙரு)

நட்டியமணியும்பொன்னுமெழில்பெறப்புடைகடோறும்
பூட்டியசிகரிசாலப்புரிசையின்புதுமைநோக்கிக்
கோட்டியநகரியென்னுங்குலக்கொடிமன்றலெய்தச்
சூட்டியசுட்டிபோலத்துலங்குமாகாண்மினென்பார். (ஙசு)

பணையினம்பலவுமார்ப்பப்பைங்கொடிநிரைத்தசெல்வத்
துணைமணிமாடமன்னுந்தோரணவீதியாவும்
புணைவனநெருங்கநீடிப்பொழிபுயல்கிழிக்குஞ்சார
லிணைவரைநடுவட்போதும்யாறுபோலிலங்குமென்பார். (௩௭)

கண்ணுறுபொருள்கள்யாவுங்கண்டுகண்டுவகைகூர
வெண்ணுறுகிளைஞரோடும்யாதவகுமரரோடும்
பண்ணுறுவேதவாழ்நர்பலரொடும்வைகியாங்கண்
விண்ணுறுதபதிக்கம்மவிடைகொடுத்தருளினானே. (௩௮)

கேசவன்முதலாவுள்ளகிளைஞருங்கேண்மைதப்பா
வாசவன்முதலினோருமன்னுதம்பதிகள்புக்கா
ரோச * வன்றிகிரியோச்சியுதயபானுவுக்குமேலாக்
தேசவன்றானும்வையந்திசைமுறைதிருத்தியாண்டான். (௩௯)

யாய்மொழிதலைமேற்கொண்டிளையவர்மொழிகள்கேட்டும்
வேய்மொழிவேய்த்தோள்வல்லிமென்மொழிவிரும்பலுற்றும்
வாய்மொழியறத்தின்மைந்தன்மாநகர்வாழுநாளி
லாய்மொழிப்பாடலோடோரந்தணனாங்கண்வந்தான். (௪0)

இந்தநாரதனைப்போற்றியிருபதம்விளக்கிவாசச்
சந்தனாகருவின்றூபந்தவழ்மணித்தவிசினேற்றி
வந்தனாவிதியிற்சற்றும்வழுவறவழிபாடெய்தி
யந்தநால்வருமவ்வேந்துமாதிவாசவர்களானார். (௪௧)

வரமிகுகற்பினாளுமாமியும்வணங்கிநிற்பச்
சரிகமபதநிப்பாடற்றண்டுதைவருசெங்கையோ
னிருசெவிபடைவீடாகவெம்பிரானளிக்கப்பெற்ற
பெருமுனியவர்க்கோர்வார்த்தைபெட்புறப்பேசுவானே. (௪௨)

முராரியைமுராரிநாபிமுளரிவாழ்முனியைமுக்கட்
புராரியைநோக்கிமுன்னாட்புரிபெருந்தவத்தின்மிக்கார்
சுராரிகடம்மிற்சுந்தோபசுந்தரென்றிருவர்தங்க
டிராரியேவலினால்வந்ததிலோத்தமைதன்னைக்கண்டார். (௪௩)

காண்டலுமவண்மேல்வைத்தகாதலாலுழந்துநெஞ்சி
லீண்டியதுயரத்தோடுமிருவருநயந்தபோழ்தப்
பூண்டகுபொலிவினாடன்பொருட்டமர்தம்மிற்பூண்டு
மாண்டனரென்னும்வார்த்தைமாநிலமறியுமன்றே. (௪௪)

நீவிரும்விதியால்வேட்டநேயமுண்டேனுமன்ற
லோவியமனையாடன்னையோரோராண்டொருவராக
மேவினிர்புரியுமங்ஙன்மேவுநாளேனையோரிக்
காவியங்கண்ணினாளைக்கண்ணுறல்கடனதன்றே. (௪௫)

எண்ணுறக்காணிலோராறிருதுவும்வேடமாறிப்
புண்ணியப்புனல்களாடப்போவதேயுறுதியென்று
வண்ணவிற்றிறலினோர்க்குவாய்மலர்ந்தருளிமீண்டு
பண்ணுடைக்கீதநாதபண்டிதன்விசும்பிற்போனான். (௪௬)

* ஓசம் - ஒளி.

சொன்னநாட்டொடங்கியைந்துசுரருந்தேவர்நாளுக்
கின்னநாளவதியென்றேயெண்ணியங்கிரதிகேள்வ
னன்னநாண்மலர்ப்பைந்தாமத்தறன்மகனாதியாக
பின்னருடன்னைவேட்டமுறையினான்மேவினாரே. (௪௭)

ஆக செய்யுள் - ௯௫௪.

இந்திரப்பிரத்தச்சருக்கமுற்றிற்று.

---

# அருச்சுனன்றீர்த்தயாத்திரைச்சருக்கம்.

---

துன்பம்பயமிடிநோய்பகைசோரங்கொலையெய்தா
இன்பம்பொருளறன்யாவையுமியல்பாதலினெய்தித்
தன்பைங்குடைநிழன்மன்பதைதரியார்முனைமதியா
வன்பன்றனைநிகர்வாழ்வுறவருநாள்களிலொருநாள். (௧)

அறையோதவனஞ்சூழ்புவியரசானவனைத்துந்
திறையோடிடமறநிற்பதொர்திருவாயின்மருங்கே
யிறையோவெயிருகையுமெடுத்தென்றுறமுறையோ
முறையோவெனவொருவைதிகமுனிவந்துபுகுந்தான். (௨)

கடைகாவலர்குறைகூறலும்விசயன்கடிதிற்றன்
புடைகாவலர்தொழவந்துபுவிந்தேவனைமறையின்
றொடைகாவலவிதுவென்னெனவவனுந்தொடுகழலோய்
விடைகாவலர்நிரைகொண்டனர்வில்வேடுவரென்றான். (௩)

அஞ்சாதொழிமுனிநீயுனதானின்கணமின்றே
யெஞ்சாவகைதருவேனெனவேவுக்கொருதிலகன்
வெஞ்சாபமெடுப்பான்வருவிசயன்றருமனுடன்
மஞ்சார்பொழில்விளையாடிமெயில்சிறடிகண்டான். (௪)

காணாமெய்நடுங்காவொளிகருகாமனமிகவு
நாணாவிரைவொடுசாயகநாண்வெஞ்சிலைகொள்ளாச்
சேணாநெறிசெல்லாநனிசேருவமர்வெல்லா
மாணாநிரைமீளாவொரிமைப்போதினில்வந்தான். (௫)

தொறுக்கொண்டவருயிருந்தொறுநிரையுங்கவர்சூரன்
மறுக்கம்பமெறையோன்மனமகிழும்படிநல்கிப்
பொறுக்குந்தவமுனிசொற்படிபுனிதப்புனல்படிவா
னிறுக்குந்தலைநிகர்தம்முனைநிகழ்வோடுபணிந்தான். (௬)

ஆடம்பரமன்வேடமகற்றித்தொழுதகுதோல்
வேடம்பெறுமறையோருடன்விசையன்புரவிசயன்
றுடந்தருபாகீரதிதோய்காலையிலவனை
சேடன்றலமடவார்புனலயர்வானெதிர்சென்றார். (௭)

ஓங்கயல்விழியாரிலுலூபிப்பெயரவளோ
டாடும்புனலிடைநின்றவனுராகமிகுந்தே
நாமெம்பிலவழியேயவள்பின்சென்றுநலத்தா
ளிக்கொடிமணமெய்தினன்முகில்போதுசிறத்தான். (௮)

இம்மென்றளிமுரல்பாயலிலின்பத்தைவளர்த்தும்
பொம்மென்பரிபுரநாண்மலர்பொற்சென்னியில்வைத்துஞ்
செம்மென்கனியிதழாளொடுசின்னாளலமுற்று
னம்மென்கொடியனையாளுமிராவானையளித்தாள். (கூ)

நாகாதிபன்மகண்மைந்தனலங்கண்டுமகிழ்ந்து
நாகாதிபன்மகன்மீளவுநதியின்வழிவந்து
நாகாதிபன்வண்சாரலினன்னீர்கள்படிந்து
நாகாதிபன்விடுமும்மதநாறுந்திசைபுக்கான். (கo)

நெளிந்தாடரவணையயனிறம்போலநிறக்குங்
களிந்தாநதிமுதலாகியகடவுண்ணதிபலவு
முளிந்தாரழலெழுகானெறிமுக்கோலினராகித்
தெளிந்தாறியபெரியோரொடுசென்றாடினனன்றே. (கக)

பத்திக்குவரம்பாகியபார்த்தன்பலதீர்த்த
மத்திக்கினுமெத்திக்கினுமாமென்றவையாடிச்
சித்திக்கொருவிதையாகியதென்னாட்டினையணுகித்
தத்திச்சொரியருவித்தடவரவக்கிரி * சார்ந்தான். (கஉ)

இச்சைப்படிதன்பேரறமெண்ணான்கும்வளர்க்கும்
பச்சைக்கொடிவிடையோனொருபாகத்திறைகொண்டாள்
செச்சைத்தொடையிளையோனுகர்திம்பான்மணநாறுங்
கச்சைப்பொருமுலையாளுறைகச்சிப்பதிகண்டான். (கங)

அயனார்புரிமகசாலையுமணியத்திகிரிக்கே
மயனார்செய்திருக்கோயிலுமாநீழலின்வைகெண்
புயனாருறைமெய்க்கோலமுமுள்ளன்பொடுபோற்றிப்
பயனார்புனனதியேழுமங்ஙகரூடுபடிந்தான். (கச)

பெற்றாள்சகதண்டங்களனைத்தும்மவைபெற்று
முற்றாமுகிழ்முலையாளொடுமுக்கண்ணர்விரும்பும்
பற்றாமெனமிக்கோரிகழ்பற்றாருன்றினுமுன்மை
கற்றார்தொழுமருணாசலமன்போடுகைதொழுதான். (கரு)

உருகுங்கமழ்நெய்பாலிருபாலுங்கரையொத்துப்
பெருகுந்துறையேழேழுபிறப்புங்கெடமூழ்கிக்
கருகுங்கருமுகின்மேனியர்கவிஞானியர்கண்ணிற்
பருகுஞ்சுவையமுதானவர்பாதந்தலைவைத்தான். (கசு)

ஐயானனனியல்வாணனையடிமைக்கொளமெய்யே
பொய்யாவணமெழுதும்பதிபொற்போடுவணங்கா
மெய்யாகமவதிகைத்திருவீரட்டமுநேமிக்
கையாளனயிந்திரபுரமுங்கண்டுகைதொழுதான். (கஎ)

இன்னம்பலபலயோனியிலெய்தாநெறிபெறவே
முன்னம்பலரடிதேடவுமுடிதேடவுமெட்டா
வன்னம்பலபயில்வார்புனலணிதில்லையுளாடும்
பொன்னம்பலநாதன்கழல்பொற்போடுபணிந்தான். (கஅ)

---

* அரவக்கிரி - திருவேங்கடம்.

இலங்காபுரிமுன்செற்றவனிருபோதும்வணங்கத்
தலங்காடரவணைமேலறிதுயில்கொண்டவர்பொற்றாள்
பொலங்காவிரியிருபாலும்வரப்பூதலமங்கைக்
கலங்காரமளிக்குந்தென்னரங்கத்திடைதொழுதான். (௧௯)

வளவன்பதிமுதலாகவயங்கும்பதிதோறுந்
துளவங்கமழுதிசிதளதோயங்கள்படிந்தே
யிளவண்டமிழெழுதேமொழிமுன்னெதிரேறியதுறைசூழ்
தளவங்கமழ்புறவஞ்செறிதண்கூடல்புகுந்தான். (௨௦)

வேறு.

குன்றிலிளவாடைவரும்பொழுதெல்லாமலர்ந்ததிருக்கொன்றைநாறத்
தென்றல்வரும்பொழுதெல்லாஞ்செழுஞ்சாந்தின்மணநாறுஞ்செல்வவீதி
நின்றறிவார்வீற்றிருக்குநான்மாடக்கூடல்வளநகரியாளும்
வென்றிபுனைவடிசுடர்வேன்மீனவனைவானவர்கோன்மதலைகண்டான். (௨௧)

அந்நிலத்தினவரல்லாவந்தணரோடிவனவனுக்காசிகூற
வெந்நிலத்திரெப்பதியீரெத்திசைக்குப்போகின்றீரென்றுபோற்றிச்
சென்னியர்க்கும்வில்லவர்க்குமணிமுடியாங்கனைகழற்காற்செழியன்கேட்பக்
கன்னியைக்கண்ணுற்றுடவந்தனமென்றனன்மெய்ம்மைக்கடவுள்போல்வான். ()

வெய்தின்மகபதிமுடியில்வளையெறிந்துமீண்டநாள்விண்ணின்மாதர்
கொய்துமலர்தொலையாதகுளிர்தருக்களொருகோடிகொண்டுபோந்து
மைதவழ்தன்றடங்கோயில்வருதம* தனெருமருங்குவைத்தகாவிற்
கைதவர்கோன்மற்றவர்க்குப்போனகஞ்செய்தருந்துமிடங்கற்பித்தானே. (௨௩)

வேதியரோடக்காவிலிளைப்பாறியிருந்தளவின்மின்குழாம்போற்
றூதியருஞ்சேடியருந்தற்சூழச்சிலைமதனன்றனிசேவிக்கச்
சோதியரிச்சிலம்பரற்றத்துணைநெடுங்கண்செவியளப்பத்தொடித்தோள்வீசி
யாதியரவிந்தையெனநிருபன்மகள்விளையாடற்காங்குவந்தாள். (௨௪)

பச்சென்றதிருநிறமுஞ்சேயிதழும்வெண்ணகையும்பார்வையென்னு
நச்சம்புமமுதூறநவிற்றுகின்றமடமொழியுநாணும்பூணுங்
கச்சின்கணடங்காதகனதனமுநுண்ணிடையுங்கண்டுசோர்ந்து
பிச்சன்போலாயினனப்பெண்கொடிமெய்ந்நலமுழுதும்பெறுவானின்றான். (௨௫)

புத்திரர்வேறில்லாதுபுரிவரியதவம்புரிந்தபூழிவேந்தன்
சித்திரவாகனன்பயந்தசித்திராங்கதையென்னுஞ்செஞ்சொல்வஞ்சி
பத்திரமுநறமலருமவயவம்போல்விளங்குவனபலவுங்கொய்து
மித்திரமாமகளிருடன்விரவியொருசெய்குன்றின்மேயினாளே. (௨௬)

முன்னுருவந்தனைமாற்றிமுகில்வாகன்றிருமதலைமோகியாகித்
தன்னுருவந்தனைக்கொண்டுசோமனிலுங்காமனிலுந்தயங்குமெய்யோன்
பொன்னுருவமெனமலர்ந்தபொலிந்ததொருசண்பகத்தின்பூந்தண்ணிழன்
மின்னுருவநுண்ணிடையாள்விழிகளிக்கும்படிநின்றான்வீரரேறே. (௨௭)

வண்டானந்திரிதடத்தவரிவண்டினினம்பாடமயில்களாடத்
தண்டார்மெய்க்கிளிக்கூட்டஞ்சான்றோர்களுரைபயிற்றத்தமிழ்கண்மூன்றுங்
கொண்டாடியிளம்பூவைக்குழாந்தலைசாய்த்தளமுருகுங்குன்றினுங்கட்
கண்டாளக்குமரனைத்தங்கோடிக்கயலைப்புறங்காணுங்கண்ணினாளே. (௨௮)

---

* வருதம் - இருப்பிடம்.

செந்திருவையனையாளுந்திருமாலையனையானுஞ்சிந்தையொன்றாய்
வந்திருவர்விலோசனமுந்தடையின்றியுறவாடிமகிழ்ச்சிகூர்ந்து
வெந்துருவமிழந்தமதன்மீளவும்வந்திரதியுடன்மேவுமாபோற்
கந்தருவமுறைமையினாற்கடவுளர்க்குங்கிடையாதகாமந்துய்த்தார். (௨௯)

கூடியிருவருமொருவரெனவிதயக்கலந்ததற்பின்குறித்ததூதீ
ராடியவந்ததுந்தன்னையருச்சுனனென்பதுமிளமானறியக்கூறி
நீடியதென்றையுறவர்கீயினியேகெனவுரைப்பநெடுங்கண்ணாள்போய்ச்
சேடியருக்கஞ்ஞான்றுநிகழ்ந்தவெலாமகிழ்ந்துருகிச்செப்பினாளே. (௩0)

கவுரியர்கோன்றிருமகளைக்கண்ணனையார்கொண்டுபோய்க்கன்னிமாடத்
தவிருமணிப்பரியங்கத்தையமளியேற்றியபின்னநங்கன்போரா
னவிருடைமாமயலுழந்துநயனங்கள்பொருந்தாமனுணுறாமற்
றவிர்கெனவுந்தவிராமற்றன்விரகங்கரையழிந்துதளர்ந்தாண்மன்னோ. (௩௧)

தங்கண்மலேச்சந்தனத்தைத்தழற்குழம்போவிதுவென்னுந்தாபந்தோன்றத்
தங்கள்கடற்றன்முத்தைக்கண்முத்தானீராக்குந்தக்கோராய்ந்த
தங்கடமிழ்க்குழலிசையைத்தன்செவிக்குவிடமென்னுந்தபனனேகத்
தங்கள்குலக்கலைமதியைத்தபனனெனுமென்பட்டாடணிபொருதாள். (௩௨)

அங்குயிர்போலிருமருங்குமாயமடமகளிரிருந்தாற்றவாற்றக்
கங்குலெனும்பெருங்கடலைக்கரைகண்டாள்கடற்புறத்தேகதிருங்கண்டா
ளிங்கிவள்போய்மலர்க்காவினெழில்விசயற்கீட்டிழிந்தவின்னலெல்லாஞ்
சங்கெறியுந்தடம்பொருநைத்துறைவனுக்குச்செவிலியராந்தாயர்சொன்னார். (௩௩)

ஐந்தருவினீழலின்வாழரியுடனேயோராரியாசனத்தில்வைகிப்
புந்தியுறவொருவருமுன்பூணுதமணியாரம்பூண்டகோமா
னந்தவுரைசெவிப்படலுமதிதூரம்விழைவுடன்சென்றாடீர்த்தம்
வந்ததுநந்தவப்பயனென்றுட்கொண்டான்மகோததியும்வணங்குந்தாளான். ()

வழுதிதிருமகள்கொடுத்தமையலினால்வடிவமுந்தன்மனமும்வேறாப்
பொழுதுவிடிவளவுமதன்பூசவிலேகருத்தழிந்துபூவாம்வாளி
யுழுதகொடும்புண்வழியேயூசிநுழைந்தெனத்தென்றலூரவூர
விழிதுயிலாவிசயனுமவ்விபுதருடன்றுயிலுணர்ந்துவிதியுஞ்செய்தான். (௩௫)

பஞ்சவரினடப்பிறந்தோன்பஞ்சவன்பேரவையெய்திப்பஞ்சபாண
வஞ்சகன்செய்வஞ்சனையான்மதிமயங்கியிருந்துழியம்மதுரைவேந்தன்
சஞ்சரிகநறுமலர்த்தார்த்தனஞ்சயனென்றறிந்தெழுந்துதழீஇக்கொண்டாங்க
ணஞ்சலினியுனக்குரியள்யான்பயந்தகடற்பிறவாவமுதமென்றான். (௩௬)

கேண்மதியோர்மொழிமுன்னங்கேண்மையினங்குலத்தொருவன்கிரீசன்றன்னைத்
தாண்மலரன்புறப்பணிந்துதவம்புரிந்தான்மகப்பொருட்டாற்றரித்தகொன்றை
நாண்மலரோன்வெளிநின்றந்நரபதிக்குநின்குலத்துநரேசர்யார்க்கும்
வாண்மருவுங்கரதலத்தோயோரொருமாமகவென்றுவரமுமீந்தான். (௩௭)

அன்றுரைத்தவரத்தின்வழியநேகரவனிபருமகவ்வித்தாரொன்றொன்
றொன்றுரைக்கமருதொழிகீயொருமகவும்பெண்மகவாயுதித்ததென்பா
னன்றுரைக்குமொழியாயென்னவ்விபெறுமகவெனக்கேநல்கவேண்டு
மென்றுரைத்தான்மன்றல்பெறவிருந்தோனுமாமனுரைக்கிசைந்தானன்றே. (௩௮)

றெண்டிசைகைதொழுசுமலோன்றிருமகட்குவதுவையெனச்சேரசோழ
ரெண்டிசையின்முடிவேந்தரெல்லோருமுனிகணத்தோரெவருமீண்ட
வண்டர்பிரானளித்தசிலையாண்டகையையலங்காரமனைத்துஞ்செய்து
மண்டபமொன்றினிலறுகால்வண்ணமணிப்பலகையின்மேல்லவைத்தான்றே. ()

கோமடந்தைகளிகூரப்புகழ்மடந்தைகளிகூரக்கொற்றவிந்தை
மாமடந்தைகளிகூரமணவினையொப்பனைக்குரியமடந்தைமார்கள்
பூமடந்தையனையாளைப்பூட்டியவெண்டரளமணிப்பூண்களாலே
நாமடந்தைநிகராக்கிநாயகன்றன்வலப்பாகநண்ணுவித்தார். (௪௦)

இந்திரனுஞ்சசியுமெனவிறையோனுமுமையுமெனவெம்பிரானுஞ்
செந்திருவுமெனக்காமதேவுமிரதியுமெனவெஞ்சிலைவலோனுஞ்
சந்தணிபூண்முலையாளுஞ்சதுர்மறையோர்சடங்கியற்றத்தழல்சான்றாகத்
தந்துபியின்குலமுழங்கச்சுரிசங்கின்குழாந்தழங்கத்துலங்கவேட்டார். (௪௧)

வேறு.

நோக்கியகண்ணிலமையாமனோக்கிநோக்கிறண்ணியமென்புலவியிலேநொந்
துநொந்து, தேக்கியசெங்கனியிதழாரமுதுண்டுண்டுசேர்த்தியகைநெகிழாமற்சே
ர்ந்துசேர்ந்து, தூக்கியபொற்றுலையினநுராகமேன்மேற்றொடரவரும்பெரும்போ
கந்துய்த்தார்முன்னைப், பாக்கியம்வந்திருவருக்கும்பலித்ததல்லாற்பாயனலத்திப்
டியார்பயன்பெற்றாரே. (௪௨)

பன்னாளினெடும்போகம்பயின்றபின்னர்ப்பப்புருவாகனனென்னும்பைதற்
றிங்க, ளன்னாளையவள்பயந்தாள்பயந்தபோதே யம்மகவையுவகையுடனவனுமீ
ந்தான், றென்னுவென்றளிமுரலவேம்பின்றண்டார்த்தேம்பரிசில்வழங்குபுயத்தெ
ன்னர்கோவு, நின்னாலென்மரபுநிலைபெற்றதென்று நேயமுடன்கவர்ந்துதுயர்நீங்
கினானே. (௪௩)

பார்த்தனருச்சுனன்கரியோன்விசயன்பாகசாதனிசவ்வியசாசிபற்குனன்பா,
ரேத்துதனஞ்சயன்கிரீடிசுவேதவாகனெனுநாமம்படைத்தபிரான்யாழோரின்பம்,
வாய்த்தவிதழமுதமொழிப்பேதைதாதை மனையிருக்கத்திருவழுதிவளநாடுள்ள, தீ
ர்த்தமுழுவதுமாடியன்பாற்றென்பாற்றிருமலையுங்கைதொழுதுசிந்தித்தானே. (௪௪)

கன்றியவெங்கான்முதலோர்களத்தில்வீழக்கவிகுலநாயகனிதயங்கலங்கிவீழ,
வொன்றுபடமரமேழுமுதிியேழுமுடுருவச்சரந்தொடுத்தவொருவில்வீரன், றுன்
றியெழுபதுவெள்ளங் குரங்கின்சேனைசூழ்போதவாய்த்ததிருத் துணைவனோடுஞ்,
சென்றவழியின்றளவுந்துளவநாறுஞ்சேதுதரிசனஞ்செய்தான்றிறல்வல்லோனே.

வன்றிரைவெங்களிற்றினங்க ளிரண்டுபோலுமலையாமலிடுங்கணையமரனே
போலுந், தன்றலைகளமிழாமலெடுப்பான்மேருத் தாழ்கடலினீட்டியதோர்தடக்
கைபோலு, மன்றியிருபூதலமுமிருதட்டாகவகத்தியன்வாழ்குன்றினையுமணிமுக்
கோணக், குன்றினை * யுஞ்சேர்தூக்கிநிறுப்பதாகக் கோகனதனமைத்ததுலைக்கோ
லும்போலும். (௪௬)

* முக்கோணக்குன்று - திரிகோணாசலம். இது ஈழநாட்டினுள்ள தேவார
ம்பெற்ற சிவத்தலமிரண்டனுள் ஒன்று. இது தக்ஷிணகைலாசமூன்றனுள் ஒன்று.
இதற்குப்பிரமாணம்: செவ்வந்திப்புராணம், திருமலைச்சருக்கம். "வந்து வாயுவும்
வந்தவந் தறைந்தனன் வரையை, முந்தி வேரறப் பறித்தனன் கொடுமுடி மூன்
றை, யந்த மூன்றையுங் கொடுநமன் றிசையினி லடைவே, சிந்தி னான்றல மூன்
றிலே விழுந்தனசிகரம். முன்னர் வீழ்ந்திடு சிகரிகா ளத்தியா மொழிவர், பின்
னர் வீழ்ந்தது திரிசிரா மலையெனும் பிறங்க, லன்ன தின்பிற கமைந்தது கோண
மா வசல, மின்ன மூன்றையுந் தக்கிண கயிலையென் றிசைப்பார். வெள்ளிமால்
வரை தனினுமன் றிமையவர் விடைகொண், டுள்ள மானது மகிழ்ந்துதம் முறை
யுளிற் புகுந்தா, ரெள்ளு றுநதென் கயிலையா மூவகை யிடத்தும், வள்ளலார்மலைக்
கொழுந்தெனும் வடிவமாய் வளர்ந்தார்."

அண்டர்தமகங்கையினும்வரனுண்டென்றென்றரம்பையரோடவனியில்வந்தாடுங்கன்னித், தண்டுறையுந்தண்பொருநைப்பாவநாசத்தடந்துறையும்படிந்துநித்தடமேபோந்து, பண்டுமெழுப்படையோனம்மழுவாற்கொண்டபாக்கியபூமியுஞ்சேரன்பதிகளியாவுங், கண்டுமனங்களிகூரச்சென்றுமேலைக் கடல்கண்டானுரகதலங்கண்டுமீண்டான். (சஎ)

அந்தநெடுந்திசைப்புனல்களானொளி லேந்துதடத்தரம்பையரோரைவர்சோ, விந்திரன்வெஞ்சாபத்தா லிடங்கராகி யிடருழந்தோர்பழையவடி வெய்தநல்கிச், சிந்துதிரைநதிபலவுஞ் சென்றுதோய்ந்து திங்களுடனரவுறவு செய்யும்வேணிக், கொந்தவிழுமலரிதழித்தொடையோன்வைகுங் கொடிமதில்சூழ்கோகன்னங்குறுகினனே. (சஅ)

ஆகன்ன * முறச்செம்பொன்வரைவில்வாங்கியவுணர்புரங்கட்டழித்தோனடியில்வீழ்ந்து, கோகன்னவளம்பதியிற் றன்பின்வந்த குலமுனிவர் தமையிருத்திக்கோட்டுக்கோட்டு, நாகன்னப்பெடையுடனே யாடுங்கஞ்ச நறைவாவிவண்டுவரைநண்ணியாங்கட், பாகன்னமொழிக்கனிவாய்முத்தமூரற் பாவைநலம்பெறமுக்கோற்பகவனானான். (சகூ)

வெங்கதிர்போய்க்குடதிசையில்வீழ்ந்தபின்னர் வீழாமன்மாலையின்வாய்மீண்டுமெந்தச், செங்கதிர்வந்தெழுந்ததெனமீதுபோர்த்தசெய்யவாடையுந்தானுந்தீர்த்தவாரிச், சங்கதிருமணிவீதிநகரிசூழ்ந்ததடஞ்சாரலிரைவதகசயிலநண்ணிப்,பொங்கதிர்பைம்புயலெழுந்துபொழியுங்குற்போயொருநீள்வடதருவின்பொதும்பர்சேர்ந்தான். (ருo)

இந்திரற்குத்திருமதலைமன்றலெண்ணி யாதவர்கோன்வளம்பதியிலெய்தினனன், றந்தரத்தைநீலத்தால்விதானமாக்கி யண்டமுறவிடிமுரசுமார்ப்பவார்ப்ப, வந்திரட்டைவரிசிலையாற் பஞ்சவண்ண மகரதோரணநாட்டி வயங்குமின்னன், முந்துறத்திபமுமெடுத்துத்தாரைமுத்தான் முழுப்பொரிசிந்தினகாலமுகில்களம்மா. (ருக)

யாங்கருதிவருங்கருமமுடிப்பானெண்ணிலிராமன்முதல்யதுகுலத்தோரிசையாரென்று, பாங்குடனேதனக்குயிராந்துளபமௌலிப் பரந்தாமன்றனைநினைந்தான்பார்த்தனைப், பூங்கமலமலரோடையனையான்முனும்பொன்னெடுந்தேர்ப்பாகனுமேயாகப்போந்து, நீங்கரியநண்பினனாய்நெடுநாணிங்குநேயத்தோனிவனவின்வழிநேர்பட்டானே. (ருஉ)

யதியாகியவணிருந்ததோழன்றன்னையதுகுலநாயகன்பரிவோடிறைஞ்சவன்பா, லதியானநெடுஞ்சுருதியாசிகூறியாகமுறத்தழீஇமகிழ்வுற்றுலனீழன், மதியார்செஞ்சடைமுடியோனெனனவைகி வந்தவர்றுரைப்பநெமோலுங்கேட்டுத், துதியாடிக்காலையிலே வருதுமென்று சொற்றிமைப்பின்மீளவும்போய்த் துவரைசேர்ந்தான். (ருங)

ஆதவன்வந்துதிப்பதன்முன்மற்றநாளிலணிநகர்வாழ்சனமனைத்துமந்தக்குன்றின், மாதவனதேவலினான்மழைக்காலத்துவாசவற்குவிழாவயர்வான்வந்தகாலை, யாதவரிற்போசரின்மற் றுள்ளவேந்தரியாவருஞ்சூழ் வரநறுந்தாரிராமன்வந்தான், சூதடர்பச்சிளங்கொங்கைப்பச்சைமேனிச் சுபத்திரையுந்தோழியர்கள்சூழவந்தாள். (ருச)

* ஆகன்னம் - காதளவும்.

மூக்கோலுங்கமண்டலமுஞ்செங்கற்றூசு மூந்நூலுஞ்சிகையுமாய் முதிர்ந்து தோன்று, மக்கோலமனைவருங்கைதொழுதுநோக்கியருணலம்பெற் றகன்றதற்பி னனைத்துலோகத், தெக்கோலயோனிகட்கு முயிராய்த்தோற்ற மீரைந்தாய்ப்பாற் கடலினிடையேவரு, மைக்கோலமுகில்வண்ணன்ருனுமெய்தி மனவணக்கம் புரிவோனைவணங்கிருனே. (ருரு)

அன்னியிருவருமொருப்பட்டிருந்தகாலைச் சுபத்திரையத்தடங்குன்றின் சூழ லோர்சார், மின்னியபைம்புயலினெழிலிரேகைபோல வெளிப்படலுமெய்புளக மேன்மேலேறிக், கன்னியிளந்தனிக்கடம்பு மலர்ந்ததென்னக் கண்டவிழியிமை யாதகாட்சிகொளு, மன்னியமாதவத்தோனைமந்தமூரன் மாதவன்மைத்துனமையி ருன்மகிழ்ச்சிகூர்ந்தே. (ருசு)

அடிகடிருவுளத்தென்னமெம்மனேர்களறியினிசையலர்பலரிங்கறிவுருமற், கடியயர்வுற்றும்பதிகொண்டடைகவென்றுங் காவலர்க்குக்கடனென்றுங்கசியக் கூறிக், கொடியிடைவெங்களபமுலைக்கன்னிமானைக் கூயணங்கேமெய்மையுறக் கொண்டகோலப், படிவமுனிக்கிருபருவம்பணித்தவேவல்பரிவுடனீபுரியென்று பணித்திட்டானே. (ருஎ)

வேறு.

உள்ளடங்கியகாமவெங்கனல்புறத்தோடிக்
கொள்ளைகொண்டென்மறைத்தெனக்கூறையுந்தானு
மெள்ளவந்துதன்கடிமனைமேவியவேடக்
கள்ளவஞ்சனையறிந்திலள்கற்புடைக்கன்னி. (ருஅ)

ஈங்குவந்ததென்றவப்பயனென்றுகொண்டெண்ணி
யாங்குவந்தொருமனையிடையருந்தவன்றுயிலத்
தூங்குகண்ணினள்சுபத்திரைதோழியர்பலரும்
பாங்குவைகமற்றொருமனைபுகுந்துகண்படுத்தாள். (ருகூ)

புடவியெங்கணும்புதையவான்பொழிதருபுனலா
லடவியாரழலவியவுமவிந்திலதையோ
தடவிவாடைமெய்கொளுத்திடத்தனஞ்சயற்கணங்கின்
விடவிலோசனக்கடைதருவிரகவெங்கனலே. (சூ0)

மதனலீலையிற்பழுதறவழிபடம்பாவை
வதனவாண்மதிவந்துமுன்னிற்கவுமருண்டச்
சதன * மேவருந்தபோதனன்றனக்குவெம்மோக
விதனவல்லிருள்விடிந்திலதாரிருள்விடிந்தும். (சூக)

அற்றைநாண்முதலநேகநாளகின்மணங்கமழுங்
கற்றைவார்குழற்கன்னிகைவழிபடக்கருத்தா
லிற்றைமாமதன்பூசலுக்கென்செய்வோமென்றென்
ஹேற்றையன்றில்போன்மெய்ம்மெலிந்துள்ளமுமுடைந்தான். (சூஉ)

கல்லிலக்கணம்பலவுடையவயவநலத்தால்
வில்லிலக்கணத்தழும்புடைக்கரங்களான்மிகவுந்
தொல்லிலக்கணம்பலவுடைச்சுபத்திரையொருத
னில்லிலக்கணவனையிவன்யார்கொலென்றயிர்த்தாள். (சூங)

---

* சதனம் - வீடு.

மங்கையங்கொருநாளவன் மலரடிவணங்கி
யெங்கும்வண்புனலாடுதற்கேகினீரெனினுந்
தங்குமாநகர்யாதெனத்தபோதனன்ருனு
மெங்கண்மாநகரிந்திரப்பிரத்தமென்றிசைத்தான். (சுச)

என்றகாலையிலிந்திரன்மதலையையொழிய
நின்றபேரையங்நெடுங்கணாள்வினவலுநிருபன்
வென்றிமன்னவர்யாரையும்வினவினைமின்னே
மன்றலங்தொடைவிசயனைமறந்ததென்னென்ருன். (சுரு)

யாழின்மென்மொழியெங்கணுயகியிவளவனுக்
கூழினன்புடைமன்றலுக்குரியளாதலினுல்
வாழிவெஞ்சிலைவிசயனைமறைத்தனளென்னுத்
தோழிநின்றவளொருத்திகைதொழுதனள்சொன்னுள். (சுசு)

பங்குனன்பெருந்தீர்த்தநீர்படிவதற்காகப்
பொங்குதெண்டிரைப்புவிவலம்போந்தனனென்றே
யங்குநின்றுவந்தவருரைத்தனரவனிப்போ
தெங்குளானெனத்தெரியுமோவடிகளுக்கென்ருள். (சுஎ)

பாங்கிநல்லுரைதன்செவிப்படுதலும்விசயன்
நீங்கிலன்பலதிசைகளுஞ்சென்றுநீராடிக்
கோங்கிளங்கொழுமுகைநிகர்கொங்கையாள்பொருட்டா
வீங்குவந்துநம்மில்லிடையிருந்தனனென்ருன். (சுஅ)

யதியுரைத்தசொற்கேட்டலும்யாதவிநுதல்வாண்
மதிவியர்த்ததுதுடித்ததுகுமுதவாய்மலரும்
புதியகச்சணிகுரும்பைகளரும்பினபுளகம்
பதியிடத்தரிவையர்க்குளமாகுலம்படாதோ. (சுகூ)

உகவைமுத்தமென்பவளமுநீலமுமொளிர
வகவுபச்சிளந்தோகைபோனின்றவவ்வணங்கை
மிகவிருப்பநோய்வளர்தலின்மெலிந்ததோள்விசயன்
றகவுடைத்தனதடக்கையால்வளைக்கரந்தகைந்தான். (எ0)

தகைந்தபோதுயிர்ச்சேடியர்தவிர்கெனச்சிலசொற்
பகர்ந்துபோயொருமாதவிப்பந்தரிற்புகுந்து
புகுந்தநீர்மையைத்தேவகியறியுமாபுகன்ரு
ரகைந்தபல்பெருங்கிளைஞரிலார்கொலோவறிந்தார். (எக)

அறிவுருவகையலாயுதன்முதல்வடமதுரை
செறியும்யாதவர்யாரையுந்தன்னுடன்சேர்த்து
மறிகொள்செங்கையன்விழாவயர்வான்பெருந்தீவி
லுறியில்வெண்டயிருண்டவன்கொண்டுசென்றுற்ருன். (எஉ)

உற்றகங்குலில்யாவருந்தணந்தவாறுணர்ந்து
பெற்றதன்பெரும்பிதாவினைமுன்னினன்பெரியோன்
சிற்றிடைப்பெருங்கொங்கையுந்தம்முனைத்தியான
முற்றமுன்னினளிருவருமுன்முன்வந்துற்ருர். (எ௩)

இந்திராணியோடெய்தியவிந்திரன்றன்னை
யிந்திராபதியெதிர்கொளத்துவரைமாமூதூர்ச்
சந்திராதவமண்டபத்திடைபொலந்தவிசில்
வந்திராவணங்கியதிருமகனுடன்மகிழ்ந்தான். (எச)

பொருவரும்புருகூதனும்புலோமகன்னிகையு
மிருவருந்தமகலன்களாலிவ்விருவரையு
மருவரும்படியணிதலினணிகெழுவனப்பா
லொருவரும்பிறரொப்பலரென்னுமாறுயர்ந்தார். (எரு)

பாலருந்திநறுநெய்யாய்ப்பாடியிற்கள்ளத்
தாலருந்திவிரகனைதருளினால்விரைவிற்
சாலருந்திதலைவனுந்தலைபெறும்பலநுண்
ணூலருந்தியுறப்புகுந்தாசிகனவன்றார். (எசு)

தொடங்கினாதவெம்முரசுடன்சுரிமுகந்தழங்கச்
சடங்கினாலுயராகுதித்தழலவன்சான்றா
விடங்கினான்மிகுவிசயனக்கன்னியைவேட்டான்
மடங்கினார்தமபதிதொறுமவ்வழிவந்தார். (எஎ)

முன்னம்யாவையுமுடித்தருண்மொய்துழாய்முடியோன்
கன்னனாருயிர்கொளவளர்காளையைத்தழீஇக்கொண்
டன்னமென்னடையரிவையர்பொருட்டுநீயின்ன
மென்னவென்னமாதவவுருக்கொள்ளுதியென்றான். (எஅ)

காமற்பயந்தோன்றனதேவலிற்காமபாலன்
வாமப்பதிதன்னினும்வாசவமாபிரத்த
நாமப்பதியேதிசையாகநடக்கலுற்றான்
றாமக்குழலாடனித்தேர்விடச்சாபவீரன். (எகூ)

வென்றித்துவரைநகர்காவலர்தம்மைவென்று
மன்றற்குழலினிளையாளைவலிதினெய்திக்
குன்றச்சிறகரிந்தோன்மகன்கொண்டுபோனா
னென்றப்பலர்க்குக் * கடல்வண்ணனியம்பினானே. (அ0)

சேலாம்பிறப்பிற்றிருமாலிதுசெப்புமுன்னே
காலாந்தகனும்வெருவுந்திறற்காளைதன்னை
சீலாம்பரனும்யதவீரநிருபர்யாரும்
காலாம்படையோடெதிர்சூழ்ந்தமர்நாடினாரே. (அக)

அஞ்சேலமரினுமர்தம்மையுமாவிகொள்ளேன்
செஞ்சேலனையவிழியாயெனத்தேற்றியந்த
மஞ்சேயனையதடந்தேரவளூரவந்த
வெஞ்சேனைமுற்றும்புறந்தந்திடவென்றுபோனான். (அஉ)

மடைபட்டவாளைகிறுமருதவேலி
யிடைபட்டதங்கள்வளநாடுசென்றெய்தியாங்குத்
தொடைபட்டதிண்டோளறன்காளைதுணைவரோடு
நடைபட்டிருகியெதிர்கொள்ளநகரிபுக்கான். (அ௩)

---

* பலன் - பலராமன்.




முன்போர்விளைத்தமுசலப்படைமொய்ம்பினனும்
தன்போலுயர்ந்தோரிலனான தடங்கண்மாலும்
பின்போயினியமொழியாயிரம்பேசிமன்றற்
கன்போடுதேவுமுபசாரமனைத்துமீந்தார்.

ஞாலத்தெரிவைகளிகூரநடாத்துசெங்கோற்
ருலத்துவசன்றுவராபதிதன்னில்வைக
நீலக்கடல்களிரண்டாமெனநெஞ்சொடொத்த
சீலத்தவனோடவண்வைகினன்செங்கண்மாலே. (அரு)

பன்னாளிவரிப்பதிசேர்ந்தபின்பங்கசாத
மின்னாளுமார்பற்குயிர்போலும்விசயனென்பா
னன்னாளினன்மைதருமோரையினல்கவஞ்சி
யன்னாளிடத்திலபிமன்னுவவதரித்தான். (அசு)

வேதஞ்சிறக்கமனுநீதிவிளங்கவிப்பா
ராதங்கமாறவருமைவரினைவர்மைந்தர்
பூதங்களைந்திற்குணமைந்தும்பொலிந்தவாபோ
லோதங்கியிலுற்பவித்தாள்வயினுற்பவித்தார். (அஎ)

அம்மாதலனும்பயந்தோருமழகின்மிக்க
விம்மாமகாருக்கியற்றும்விதியெய்ந்தபின்னர்த்
தெம்மாறுவின்மைமுதலாயசெயல்கள்யாவுங்
கைம்மாறுகொண்டெனிகைவருமாறுகண்டார். (அஅ)

அரிதிற்பயந்தவறுவோருளுமாண்மைதன்னு
விருதுக்களின்மேலிளவேனிலின்றேற்றமேய்ப்ப
மருதுக்கிடைபோமதுகுதன்மருகன்வெம்போர்
விருதுக்கொருவனிவனென்னவிளங்கினனே. (அகூ)

உரனுலழகாலுரையான்மற்றுவமையில்லா
நரநாரணர்க்குநலங்கூர்தருநண்புபோல்வா
னரனார்விழியாலழிந்தங்கமநங்கமான
மரன * ருடனண்பிசைந்தன்றுவசந்தகாலம். (கூ0)

ஆ செய்யுள் - எசச.
அருச்சுனன்றீர்த்தயாத்திரைச்சருக்கமுற்றிற்று.

---

# காண்டவதகனச்சருக்கம்.

நனியாடலனற்கடவுள்யமனிருதிநண்ணுதிசைநாள்கடோறு
முனியாமனடந்திளைத்துமுன்னையினும்பரிதாபமுதிர்ந்ததென்று
தனியாழித்தனிநெடுந்தேர்த்தனிப்பச்சைநிறப்பரியைச்சயிலராசன் [ன்.
பனியாலவ்விடாய்தணிப்பான்பனிப்பகைவன்பணிசெய்வோன் பக்கஞ்சேர்ந்தா

கலக்கமுறவிளவேனிற்கலகமெழுந்திம்பசுந்தண்காவுதோறுஞ்
சிலைக்கணிநாண்முறுக்குவபோற்றென்றலின்பின்சுழலளிகள்சேரவோட்
வுலைக்கனலிற்கருங்கொல்லன்சிறுகுறட்டாற்றகடுபுரிந்தொதுக்கிமாரன்
கொலைக்கணைகள்சமைப்பனபோற்குயிலலகாற்பல்லவங்கள்கோதுமாலோ. (உ)

---

* மரன் - மன்மதன்.

செங்காவிசெங்கமலஞ்சேதாம்பறடங்தொறுமுத்திகளாகப்
பைங்காவினெடுஞ்சினைக்கைமலர்நறுந்தேனுகுதிகள்பலவும்வீழ்க்க
வுங்காமதுகரங்களோங்காரச்சுருதியெடுத்தோதவேள்வி
வெங்காமனிரதியுடன்புரிந்துதன்தென்றலங்தேர்மேற்கொண்டானே. (௩)

தேவியருந்திருமாலுஞ்செழுமலர்த்தார்த்தனஞ்சயனுந்தேவிமாரு
மேவியனந்தரம்வேனில்விழவயர்வான்முரசறைந்துவீதிதோறு
மோவியமுமுயிர்ப்பெய்தவுபேந்திரனுமிந்திரனுமுவமைசாலப்
பூவினமுஞ்சுரும்புமெனப்புரமுழுதும்புறப்படவன்பொங்கர்சேர்ந்தார். (௪)

கொண்டலெழமின்னுடங்கக்கொடுஞ்சாபம்வளைவுறச்செங்கோபந்தோன்ற
வண்டளவுநறுங்குமிழும்வண்டணிகாந்தளுமலரமலைகடோறுந்
தண்டாளவருவிவிழத்தையலார்வடிவுதொறுஞ்சாயற்றோகை
கண்டுகமக்கிளவேனில்கார்காலமானதெனக்களிக்குமாலோ. (௫)

பாராமனையாமற்பாடாமலாடாமற்பாதஞ்செங்கை
சேராமன்முகாரகம்வழங்காமலிகழாமற்செவ்வாயூற
னோராமனிழலதனைமிகழ்த்தாமன்மலர்ந்தழகுநிறைந்தநீழ
லாராமந்தொறுந்தங்களவயவம்போல்வனகொய்தாரணங்குபோல்வார். (௬)

மாற்றுதபனிநீரான்மான்மதகுங்குமமலயவாசச்சந்தின்
சேற்றலச்சோலையெலாஞ்செங்கழுநீர்த்தடம்போன்றசிந்தைத்தாப
மாற்றுதகாதலருக்கமுதானவிளநீராலடர்ந்தபூகத்
தாற்றலம்மரகதச்செந்துகிராலப்பொழில்போன்றதடங்களெல்லாம். (௭)

மெய்கொண்டமொழிவிசயன்மெய்யினெழிலிமையாமன்மேன்மேனோக்கு
மைகொண்டகுழலொருத்திமற்றவன்செங்கையிற்சிவிறிமழைகண்டஞ்சிப்
பொய்கொண்டுவெருத்தனையமருங்கசையத்தனபாரம்புளகமேறக்
கைகொண்டுமுகம்புதைத்துத்தன்விரற்சாளரங்களிலேகண்கள்வைத்தாள். (௮)

நங்கையங்கோர்கொடியனையாள்வதனமதிசலமதியாய்நடுங்குமாறு
பங்குனன்றன்றிருச்செங்கைப்பங்கயத்தின்சிவிறியினுற்பரிவுகூரக்
குங்குமங்கொள்புனல்விடவுமிமையாமற்புனல்வழியேகூர்ந்தபார்வை
செங்கலங்கற்புதுப்புனலுக்கெதிரோடிவிளையாடுஞ்சேல்கள்போலும். (௯)

நறைகமழ்தண்டுழாய்மாலைநாரணற்குநண்பானநரனுர்செங்கை
யுறையுமலர்ச்செந்திருவுமொவ்வாதபொற்புடையாளொருபொற்பாவை
நெறிதருபைங்குழலின்மிசைவீசியநீர்பெருக்காற்றினிறைநீர்வற்றி
யறல்படுறண்கருமணலினரித்தொழுகுஞ்சின்னீரோடமைந்ததம்மா. (௧௦)

விளிந்துமயில்புறங்கொடுக்குமெல்லியலாளொருத்திநெடுவேயும்பாகுஞ்
சுளிந்தவருங்கடகளிற்றுச்சுவேதவாகனன்கடகத்தோளின்மீது
தெளிந்தநறுங்கத்தூரிச்சேறுபடுசிவிறியினீர்சிந்துந்தோற்றங்
களிந்தகிரிமிசைக்கடவுட்காளிந்திபாந்ததெனக்கவினுமாதோ. (௧௧)

பிறையனையதிலகநுதற்பேதையிளம்பிடியொருத்திபிடித்தசெங்கை
நறைகமழும்பொலஞ்சிவிறிநண்ணியசெஞ்சிந்தூரநாரம்வீச
வறைகழல்வெஞ்சிலைத்தடக்கையருச்சுனன்றன்றிருமுகத்திலானபோது
நிறைமதிமேல்வாளிரவிகாங்கணிரைத்தேவெபோனிறத்தமாதோ. (௧௨)

பாண்மெதலையுங்காதற்பாவையருந்துழாயோனும்பாவைமாரு
மீண்டுபெருஞ்சனத்துடனேயிவ்வண்ணமிடந்தோறுமினிதினடி
யாண்டவரிசிலைமதனுமவன்படையுஞ்சேவிப்பவழகுகூர
மீண்டுதமமனைதோறுநிரைநிரைவாள்விளக்கேந்தமேவினாரே. (கஙு)

நெடுவேனில்புகுதரமேலிளவேனிலகன்றதற்பினிகரில்கஞ்சப்
படுவேய்வெள்வளையமுந்தண்பட்டாலவட்டமுஞ்செம்பஞ்சேறு
முடுவேய்நித்திலத்தொடையுமூறுமண்டபத்தடமுமொழுகிநீண்ட
வடுவேய்கண்மடந்தையர்க்குமகிழ்நருக்குமமைந்தனவான்மனைகளெல்லாம். (கச)

திலகநுதற்குறுவியர்தஞ்செவிப்பூவிலளியினத்தின்சிறகர்க்காற்றாற்
புலரமதுநுகர்மாதர்புன்முறுவலிதழூறல்புதிதின்மாந்தி
யிலகுபரிமளபுளகவீரமுலைத்தடமூழ்கியிரதிகேள்வன்
கலகமிடும்பரிதாபமகற்றினாரினிமையுடன்கலந்தகேள்வர். (கரு)

மாரவசந்தனையகன்றுவயங்குறுவெங்கோடையினான்மறுகியாற்றா
தாரமளிமதுமலரிலாரவடங்களிற்பனிநீராரச்சேற்றி
லீரநெடுங்குழலிசையிலியங்கியசாமரக்காற்றிலிளநிலாவிற்
பேரழலும்புகுந்ததெனப்பிணங்கினார்தங்கேள்வர்ப்பிரிந்தமாதர். (கசு)

கோடைவெயில்சுடச்சுடமெய்கொளுந்தியிறந்தனபோலக்கொண்டல்கோடை
வாடைசிறுதென்றலெனுமாருதங்களெம்மருங்கும்வழக்கமின்றி
யாடையில்வெண்சாமரத்திலாலவட்டத்தினிலுயிர்ப்பிலழகார்நெற்றி
யோடைமுகமதகயத்தின்றழைசெவியிற்பல்லிறகிலொளித்தமாதோ. (கஎ)

தாழிநறுங்குவளையந்தார்த்தருமன்மகனருட்புனலுந்தரங்கவேலை
யூழிநெடும்பெரும்புனலுமுடலிலுறுவெயர்ப்புனலுமூறியூறிப்
பாழிதொறுமிறைக்கின்றபைம்புனலுமல்லதுவெம்பருவந்தன்னாற்
பூழிபடுகமர்வாயநானிலத்துப்புகலுதற்கோர்புனலுமுண்டோ. (கஅ)

நீகாரமழைபொழியநித்திலவெண்குடைநிழற்றநிலவாட்கட்
பாகாருமொழிமடவார்மணிக்கவரியிருமருங்கும்பயிலவீசக்
கார்காலம்புகுந்துசெழுங்காளமுகிலிரண்டொருபாற்கலந்ததென்ன
வாகாரமழகெறிப்பவிருவருமாங்குட்னிருந்தாராவிபோல்வார். (கசு)

வேறு.

இனியபான்முகந்தொழுக்குமாகுதியெனவிலங்குமுப்புரிநூலுந்
தனதுவெஞ்சிகைக்கொழுந்தெனப்புறத்தினிற்றாழ்ந்தசெஞ்சடைக்காடும்
புனிதவெண்புகைமருங்குசுற்றியதெனப்புனைந்தவாடையுமாகி
முனிதவேதியர்வடிவுகொண்டவரெதிர்வன்னிவானவன்வந்தான். (உ0)

வந்தவந்தணன்வரவுகண்டிருவருமவந்தெதிர்வணங்கித்தஞ்
சிந்தையன்பொடுவேதிகையெனத்திகழ்செம்பொனின்றவிசேற்ற
வந்தணாளனுங்குழிந்தபொற்கண்ணினனவிமணங்கமழ்வாய
னுந்துவெம்பசிபெரிதுவல்லேயெனக்கோதனமிடுகென்றான். (உக)

கரியமேனியரிருவருஞ்செய்யபொற்காயமாமுனியுண்டற்
குரியபோனகமிடுதுமிக்கணத்தெனவுவகையோடுரைசெய்தா
ரரியவாயினும்வழங்குதற்கேற்றனவல்லவாயினுந்தம்மிற்
பெரியவாயினுமதிதிகள்கேட்டனமறுப்பரோபெரியோரே. (உஉ)

அளித்துமென்றசொற்றன்செவிப்படுதலும்பெற்றனன்போலாகி
யொளித்துவந்தனனிருபிறப்பினனலேனுதாசனனென்னுமக்
களித்துவண்டிமிர்தொடையலீரெனக்குணக்காண்டவமெனுங்கானங்
குளித்தருந்துதற்கிடங்கொடானவ்வனங்கொண்டல்வாகனன்காவல். (உ௩)

மிடைந்தநால்வகைமகிருகங்களு * நெடுவெற்பினங்களுந்துன்றி
யடைந்ததானவராக்கர்பேருரகருக்காலயங்களுமாகிக்
குடைந்துசோரிகொள்வாளுகிரிமுதற்கொடுவிலங்கினமிக்குக்
கடைந்தகூரெயிற்றுலதக்ககனும்வாழ்கானனமதுகண்டீர். (உ௪)

புருந்தியான்முகம்வைக்கினேழ்புயலையுமேவியப்புருகூதன்
னொருந்தராதலவிறுதிபோனெடும்புனல்சொரிந்தவித்திடுமென்னை
முருந்தருணிரைபுரந்தவாறெனவொருமுனைபடவிலக்கிற்பின்
மிருந்ததாகமுமெண்ணமுமுடிந்திடும்வேண்டுவதிதுவென்றான். (உ௫)

என்றபோதிலுன்னிச்சையின்படியுறுவிந்தனமிமைப்போழ்திற்
சென்றுகொள்கெனத்தனஞ்சயன்கூறலுஞ்சிந்தைகூர்மகிழ்வெய்தி
மன்றலந்துழாய்மாயவனருளினால்வடிக்கணைமாளாமற்
றன்றதூணியுஞ்சாபமுமிரதமுஞ்சுவேதவாசியுமீந்தான். (உ௬)

ஈந்தவானரப்பதாகைகட்டிரண்டிவளியுமுடன்பூட்டி
யாய்ந்தவன்றொழிற்பாகனுமருணனிலழகுறும்படிதூண்டக்
காய்ந்தசாயகநாழிகைகட்டியக்காண்டிவங்கரத்தேந்தி
வேய்ந்தமாமணிக்கவசமுமருக்கனிலழகுறமேற்கொண்டான். (உ௭)

நெஞ்சின்மேவிடூக்கமோடணிதிகழ்நெடும்புயம்பூரித்துச்
சிஞ்சினி † முகந்தெறித்தனன்றெறித்தலுந்தெறித்தபேரொலிகாணின்
விஞ்சிவாழ்வனசத்துவமடங்கவுள்வெருவுறவுகாந்தத்து
மஞ்சினிருமொலியெனப்பரந்ததுவான்முகடுறமன்னோ. (உ௮)

ஆழிவாயொருவடவையின்முகத்திடையவதரித்தனனென்ன
வூழிவாயுலகனைத்தையுமுருக்குமாறுடன்றெழுந்தனனென்ன
வாழிவாழியென்றருச்சுனன்கரத்தையும்வார்சிலையையும்வாழ்த்திப்
பாழிமேனியைவளர்த்தனன்பாவகன்பவனனும்பாங்கானான். (உ௯)

முளமுளவெம்பசியொடுஞ்சினத்தொடுமுடுகிவெய்துறவோடி
வாளமாகவோர்பவளமால்வரைநெடுவோரியைவளைந்தென்னக்
காளமாமுகிலூர்திநந்தனநிகர்காண்டவந்தனையண்ட
கோளமீதெழவளைத்தனன்வரைபடிகொண்டலுங்குடர்நிய. (௩0)

ஆனவாகுலந்தன்னொடுதேப்புதற்கணிபடப்பறந்தோங்குந்
தூகிறத்தனகபோதமொத்தனவிடையிடையெழுஞ்சுடர்த்தூமங்
கானமேதியுங்காடியுமேனமுங்கடகரிக்குலந்தாமும்
வாணிவேறவபோன்றனநிரைநிரைவளர்தருகருந்தூமம். (௩௧)

வரைத்தடந்தோறுங்கதுவியகடுங்கனன்மண்டலினகல்வானி
னிரைத்தெழுந்தசெம்மரகதகனகவானிலவெண்ணிறத்தூமந்
தரைத்தலத்தினின்றண்டகோளகையுறச்சதமகன்றடஞ்சாப
முரைத்ததன்வலிவறநிமிர்ந்தழகுறவோங்கின்றதுபோலும். (௩௨)

* மகீருகம் - தாவரயோனி. † சிஞ்சினி - வின்னாண்.

கருதியாயிரகோடிவெம்புயங்கமிக்கானிடையுளவென்று
பரிதிசூழ்வரவெருவுபல்குவடுடைப்பருப்பதங்களின்சாரற்
சுருதிவேள்விநூறுடையவன்சிறகறத்துணித்தவாய்தோறும்பொங்கிக்
குருதிபாய்வனபோன்றனகொளுந்தியகொழுந்தழற்கொழுந்தம்மா. (௩௩)

கோத்திரங்களின்கவானிடைக்கதுமெனக்கொளுந்தியுற்றெரிகின்ற
தீத்திறங்கள்செங்காந்தளுமசோகமுஞ்செங்குறிஞ்சியுஞ்சேரப்
பூத்தவொத்தனவன்றியுங்குலிகநீர்பொழியருவியும்போன்ற
பார்த்தகண்கள்விட்டேகலாவகைநிறம்பரந்ததாதுவும்போன்ற. (௩௪)

தளைத்தபாதபத்தலைதொறும்பற்றினசருகுதிர்த்திளவேனிற்
கிளைத்துமீளவும்பொறியளியெழவளர்கிசலயங்களும் * போன்ற
திளைத்தவேர்முதற்சினையுறவிரிவனதீபசாலமும்போன்ற
வளைத்தகானிடைமெலமெலவுள்புகுவன்னியின்சிகாவர்க்கம். (௩௫)

தழைத்தபேரொளித்திவாகரன்கரங்கள்போய்த்தடவியவ்வடவிக்கட்
பிழைத்தகாரிருட்பிழம்பினைவளைந்துடன்பிடித்தெரிப்பனபோலு
முழைத்தவான்புழையொருகரத்திருபணைமும்மதப்பெருநால்வாய்
மழைத்தகுஞ்சரமுகந்தொறும்புக்குடன்மயங்கியபொறிமாலை. (௩௬)

அரியெனும்பெயர்பொருமையிற்போல்விரைந்தழற்கொழுந்துளைபற்றக்
கிரிமுழைஞ்சுகடொறும்பதைத்தோடினகேசரிக்குலமெல்லாம்
விரியுரோமவாலதிகளிற்பற்றலின்விளிவுடைச்சவரங்க
ளெரிகொள்சோகவெங்கனலினுனின்றுநின்றிறந்தனசலியாமல். (௩௭)

எப்புறத்தினும்புகுந்துதிச்சூழ்தலினேகுதற்கிடமின்றித்
தப்புதற்கருத்தழிந்துபேரிரலையோடுழையினந்தமோற
மெய்ப்புறத்துவெண்புள்ளிசெம்புள்ளியாய்விடும்படிவிரைந்தோடி
யப்புறத்துவீழ்பொறிகளவ்வவற்றினையலங்கரித்தனவன்றே. (௩௮)

காழுடைப்புறக்கழைகளின்றுளைதொறுங்கால்பரந்திசைக்கின்ற
வேழிசைக்குலமுருகிமெய்புளகெழவிரைகொளுமசுணங்க
டாழழற்சுடர்சுடச்சுடவெடித்தெழுசடலவோசையின்மாய்ந்த
வூழியிற்புயலுருமினுன்மடிந்திடுமுரகர்தங்குலம்போன்ற. (௩௯)

அனையபோதிலவ்விபினசாலங்களினுர்தருக்களினீண்ட
சினைகடோறும்வாழ்சிகாவலகலாபமேற்செறிதருதீச்சோதி
பனையினீளுடற்பணிகளையலகினுற்பற்றலிற்படர்பந்திப்
புனையுமாமணிநிழல்பரந்தெழுந்தெனப்பொலிந்திலங்கினமாதோ. (௪0)

ஆசுகன்றனோடடவியைவளைத்தனனசுசுக்கணி † மேன்மேல்
வீசுகின்றனபுலிங்கசாலமும்புகல்வேறெமக்கிலதென்று
பாசிளங்கிளிபூவைகள்வெருவிமெய்பதைத்துளந்தமோதிப்
பேசுகின்றசொற்கேட்டலுநடுங்கினபிறபறவைகளெல்லாம். (௪௧)

நெஞ்சிலீரமுநீதியுங்குடிபுகாநிருதர்சென்னியில்வன்னி
குஞ்சிநீடுறவளர்வபோலசைந்துசெங்கொழுந்துவிட்டனமேன்மேல்
வஞ்சிநேரிடையரக்கியர்நகமுழுமதிசிவப்புறத்தீட்டும்
பஞ்சிபோன்றனவவரவர்பதயுகம்பற்றியசிகைவன்னி. (௪௨)

---

* கிசலயம் - தளிர். † ஆசுசுக்கணி - அக்கினி.

முப்புரங்களைமுக்கணன்முனிந்நாண்மூவரம்முழுத்தியிற்
றப்பினருளர்காண்டவவடவிவாழ்தானவரியாருய்ந்தார்
பைப்புறத்தனிமணியொளிபரந்தெனப்பஃறலைகளிற்பற்றி
வெப்புறுந்தலினாகருந்தங்கள்வாய்விடங்கள்கொன்றெனவீழ்ந்தார். (சங)

புகைபடப்படக்கரிந்தனபொறியினாற்பொறியெழுந்தனவானின்
மிசைபடைத்தவச்சுரபதியாயிரம்விழிகளுங்கணப்போதிற்
றசைவறக்கழைமுதலியதருக்களின்சடுலவாரவமிஞ்சித்
திசையனைத்தினும்பரத்தலிற்செவிகளுஞ்செவிடுபட்டனசேர. (சச)

வே று.

விரதமேல்கொண்டுசெம்பொன்மால்வரையைவிரிசுடர்சூழ்வருவதுபோ
லிரதமேல்கொண்டவருசனுஞ்சுதனுமிமைப்பினிற்பன்முறைதேர்ந்து
சரதமேல்கொண்டுசெரிப்பதுந்தனதுதாவகம்பாவகன்புகுந்து
பாதமேல்கொண்டுநெடிப்பதுங்கருதிப்பார்த்தனன்பாகசாதனனே. (சரு)

முந்திவார்சிலைக்கைப்பற்குனன்றொடுத்தமூரனுடைமூரிவெங்கணைக
ளுந்திவாளுரகர்குடிகாமகுடகோடிகளுடைத்தலினுடைந்து
சிந்திமீதெழுந்தமணிகளுமனலின்சிகைகளிற்றெறித்தெழுபொறியு
மிந்திராலயத்துக்கேற்றியதீபமென்னநின்றிலங்கினவெங்கும். (சசா)

தானவர்புரங்கணீறெழமுனிந்தபனியச்சிலைக்கைவெள்ளூர்தி
யானவனமதுபுரத்தையுஞ்சுடுவானழன்றனன்போலுமென்றஞ்சி
வானவர்நடுக்கவானவர்க்கரசாம்வலாரியுமனனுறத்தளர்ந்து
தானவருட்னேதக்ககனென்னுங்கட்செவிகெடுமெனக்கரைந்தான். (சஎ)

பரந்தெழுபுகையாற்றத்தமவடிவம்பண்டையிற்பதின்மடங்காகச்
சுரந்திடும்புயல்களனைத்தையுநெடுநீர்சொரிந்தவித்திடுகெனச்சொல்லி
நிரந்தரமருவிடாததன்னிழல்போனின்றவானவரையுமேவிப்
புரந்தரன்றானுமீரிருமருப்புப்பொருப்பின்வெம்பிடர்மிசைபுகுந்தான். (சஅ)

ஏவகவிருத்தச்செவ்வியின்றனுவுக்கேற்றநாண்முறுக்கிவிட்டென்னச்
சேவகவிமையோரெண்டிசாமுகத்துஞ்செஞ்சுடர்வாள்விதிர்த்தென்னப்
பாவகன்பகுவாய்நாவிதிர்த்தென்னப்பரந்தவப்பாவகற்குணவாந்
தாவகமுழுதும்வளைந்துகொண்டெழுந்தசலதரசஞ்சலசாலம். (சகூ)

எறியகளிறுபிளிறுகிடொலியுமெடுத்தவிற்றெறித்தநாணொலியுஞ்
சூறியவிமையோர்பெருநகையொலியுந்துந்துபிக்குழாமதிரொலியுங்
கூறியவனலன்சடுலவல்லொலியுங்குறைபடத்திசைதொறுமிருந்த
வூறியபுவனபவனவேகத்தொடுருமுடைமுகிலின்வாயொலியே. (ருo)

ஆமமுமெமதுபவனனுமெமதுதோழனத்தோயமுமெமதே
யாமுமிங்கிவற்றோடொன்றுதவொழிதுமீரிருபொருள்களும்பிறிந்தான்
மாமுகிலெனும்பேரெங்குளதடர்த்துவாசவனென்செயுமெம்மை
யாமுறையறிதுமென்றுகொண்டறவுமகங்கரித்தனன்வெகுண்டழலோன். (ருக)

மூண்டவெங்கனலையுருமின்வெங்கனலான்முருக்கியெங்கால்கையானெருக்கி
யாண்டவன்களிற்றின்கரகர்தாரையருவியின்கணங்களாலவித்துப்
பாண்டவன்பகழிதொடுக்கினுங்கண்ணன்பருப்பதமெடுக்கினுமெங்கள்
காண்டவம்புரத்துமென்றுகொண்டிழிந்துபொழிந்தனகணம்படுகனங்கள். (ருஉ)

காலவாயருக்கன்பனிநுகர்ந்தென்னக்கட்டழற்காண்டவமென்னும்
பாலவாயுள்ளசராசரமனைத்துநுகர்தலிற்பைம்புனல்வேட்டான்
வேலையேழையுமொண்டேழுமாமுகிலும்விதம்படப்பொழிந்ததாரைகளாற்
றூலுவேழினையுநனைத்தனனனைத்துந்தணிந்ததோதன்பெருந்தாகம். (ருங)

எச்கடல்களினுமினிப்பசையிலதென்றேழிருபுவனமுங்கெத்
தொக்கடலுருமோடெழுமெழுகொண்டற்சோனையஞ்சுருவையான்முகந்து
மைக்கடல்வெளுக்கக்கறுத்தமெய்ம்மகவான்வழங்கியவாகுதியனைத்து
நெய்க்கடல்சொரிந்ததென்னுமாறருந்திநீடுவோன்முகடுறநிமிர்ந்தான். (ருச)

தொழுதகுவிசயன்றுலுவேழுடையோன்சுடர்முடிநனைந்திடுவதன்மு
னெழுமுகிலினமும்பொழிதருமாரியாவையுமேவினல்விலக்கி
முழுதுலகமுந்தன்னிடத்தடக்கியவான்முகடுறமுறைமுறையடுக்கிக்
குழுமுவெங்கணையாற்கனற்கடவுளுக்குக்கொற்றவான்கவிகையுங்கொடுத்தான். ()

ஆழ்தருபரவையேழும்வற்றிடுமாறழித்தகாருமிழ்ந்திடுநெடுநீர்
தாழ்தருசரத்தான்மேய்ந்ததற்கிடையோர்தனித்திவலையும்பொசியாமல்
வீழ்தருமருவிபாவகன்றனக்குவிசயனன்றளித்தபொற்குடைக்குச்
சூழ்தரநிரைத்துத்தூக்கியமுத்தின்சுடர்மணித்தொடையல்போன்றனவே. (ருரு)

மண்டிமீதெழுந்தவன்னியின்சிகைகளிந்திரன்மதலைவாளிகளாற்
கண்டகூடத்திற்கமைத்தசெம்பவளக்காண்டகுதூண்டிரள்காட்ட
வண்டகூடத்திற்கிந்திரன்பளிங்காலமைத்தபல்லாயிரகோடி
சண்டதூணங்கள்போன்றனபரந்துதனித்தனிமுகில்பொழிதாரை. (ருஎ)

தக்ககன்றன்னைக்கூயினர்தேடிச்சாயகமண்டபஞ்சுற்றி
மிக்கவிண்ணவர்கடிரிதரவவன்றன்மெல்லியன்மகவையும்விழுங்கி
யக்கணந்தன்னிலந்தரத்தெழலும்வீழ்த்திணைம்பிறுற்றுணித்துச்
செக்கனலுருவச்சென்னியையுரகர்கன்னியைத்திருமணஞ்செய்தான். (ருஅ)

மருவயிற்சதகோடியினிறையைராவதத்தின்மும்மதத்திணையனைத்துக்
கருவயிற்றெழிலித்தாரையால்வருணக்கடவுடன்கணைகளாலவித்துச்
செருவயிற்புரளவொதுக்கியத்தோழன்சிறுவனைச்சென்றெடுத்தணைத்தா
னொருவயிற்பிறந்தோனுதலின்மகவானுடனுடன்றிலனுதாசனனே. (ருகூ)

அன்னவாயொடுதென்வாலதிதுணியுண்டலமருமச்சுவசேனன்
றன்னைவாசவன்போய்வீடுகெண்டுழியத்தனஞ்சயன்றனதுவெங்கணையான்
முன்னைவானவரைமுனைமுகந்தன்னின்முதுகிடமுதுகிடமுருக்கிப்
பின்னைவாரிதங்களேழையும்பொருதுபின்னிடப்பின்னிடப்பிளந்தான். (கூ0)

திரமால் * பொருதுவிடுகெண்டதற்பின்செக்கர்மெய்த்தக்ககன்பயந்த
பாரமாசுணமவ்விசயனுக்கியாவர்பகையெனப்பலரையும்வினவிச்
சூரன்மாமதலைசரணமேயரணநமக்கெனத்தொழுதுபோயெய்தி
வீரமாமுனைவெம்பகழியாகியதெம்மேதினியினும்பெருவார்த்தை. (கூக)

தோழன்மாமகனைக்கண்டபின்றனதுதோழனையொருவயிற்காணான்
வேழமாமுகத்திற்கைத்தலம்புடைத்தான்விழிகளாயிரங்களுஞ்சிவந்தான்
யாழமாதிரத்தினெதிரொலியெழுமாறெயிற்றிளநிலவெழநகைத்தான்
றாழமாநிலத்தினின்றமர்விளைக்குந்தன்பெருந்தனையனைமுனிந்தான். (கூஉ)

---

* மால் - இந்திரன்.

மேகசாலங்களிளைத்ததுங்கிளைத்துமேலிடுவிண்ணவரணிந்த
பூகசாலங்களுடைந்ததுங்கண்டானுருத்தெழுந்துள்ளமுங்கொதித்தா
னேகசாபமுந்தன்னேகசாயகமுமிமைப்பளவையின்விரைந்தெடுத்தான்
பாகசாதனனுமேனையதிசையின்பாலரும்பகடுமேல்கொண்டார். (௬௩)

தேவருங்கோடிதேவருக்கொருவர்சிரங்களாய்நின்றமுப்பத்து
மூவருந்தத்தம்வாகமேல்கொண்டுமூண்டுறவந்துவந்தணிந்தார்
யாவரும்புவனத்தின்றுகொலுகத்தினிறுதியென்றிரங்கினர்நடுங்க
மேவருமனிதரிருவரோடேகவிபுதரும்வெகுண்டுபோர்விளைத்தார். (௬௪)

பச்சைவாசிகளுஞ்செய்யனவாகப்பாகரும்பதங்களேயன்றித்
தச்சவாளிகளாற்கரங்களுமிழந்துதனிப்பெருந்திகிரியுந்தகர
வுச்சமாமகத்திற்பண்டொடிந்தொடியாதொழிந்தனபற்களுமொடிய
வச்சமேதுணையாவருக்கனுமொழிந்தவருக்கர்பன்னொருவருமகன்றார். (௬௫)

எண்ணியவசுக்களெண்மரிற்கங்கையென்னும்யாய்வயிற்றினுற்பவித்த
புண்ணியனொழிந்தோரெழுவருந்தங்கள்புயவலிமையிற்பொருதிடுவார்
நண்ணியவமரின்விசயன்வெங்கணையானுப்புலர்ந்துள்ளமுநடுங்கி
யண்ணியநிலயம்புகுந்தனரென்றுனிற்பரோவாயுள்வேதியரே. (௬௬)

அருணவெங்கனலோன்கனலொடுகலந்தானுசுகனவற்குநண்பானுன்
கருணையில்யமனுங்காணிடைமடியுங்கணத்திலேகவலையுற்றனனால்
வருணனுங்கடல்கள்வறத்தல்கண்டழிந்தான்மதியொடுவைச்சிரவணனு
மிருணிறவரக்கன்றானுமிங்கிவரோடெங்ஙனம்பொருதுமென்றிளைத்தார். (௬௭)

சொன்மழைபொழிந்துநாடொறுந்தனதுதோள்வலிதுதிக்குநாவலர்க்குப்
பொன்மழைபொழியுங்கொங்கர்பூபதிதன்பொற்பதம்பொருந்தலர்போலக்
கன்மழைபொழியுங்காளமாமுகிலுங்கடவுளர்த்துரந்தவன்கரத்தில்
வின்மழைபொழியக்கற்களுந்துகளாய்மேனியும்வெளிறிமீண்டனவே. (௬௮)

மாயவன்றனக்குநேயமைத்துனனுமைந்தனத்தந்தையைமதியான்
றூயவெங்கணையாலவனிடித்துவசந்துணித்தமர்தொடங்குமவ்வளவிற்
காயமெங்கணுநின்றொலியெழப்பரந்துகாயமில்கடவுளக்கடவு
ளுயகன்றனக்குப்பரிவுடனவைநீர்நல்லுரைநவின்றதையன்றே. (௬௯)

தமரினுமினியதக்ககன்முதலேதப்பினன்குருநிலஞ்சார்ந்தான்
குமரனுநம்மாலுய்ந்தனன்றாமக்கொடியனுங்கொண்டலுக்கவியா
னமர்களிலிருவர்நரனுநாரணனுநமக்குமிங்கிவர்சிறிதிளையா
ரமரினையொழிமினமரினையொழிமினமருமமர்நாதனுமே. (௭0)

என்றுகொண்டுரைத்தமொழிசெவிப்பட்டவெல்லையினிரவிமுன்னிருள்போற்
றன்றுதன்சேனைச்சுரகணஞ்சூழச்சுரபதிதுறக்கமதடைந்தான்
வென்றுவெங்களங்கண்டருச்சுனன்றனதுவெற்றிகொள்சங்கமுங்குறித்தா
னன்றுசெந்திருமாலருச்சுனன்பொருதவாண்மைகண்டதிசயித்தனனே. (௭௧)

வடமதுரையினுந்தென்மதுரையினுமதிகுலநிருபர்கன்னியரைக்
கடிமணம்புரிந்தோன்வின்மையின்வன்மைகண்ணுறக்கண்டவானவரும்
புடவியிலொருவரோமினிப்பூசல்போரேனெனப்போனவாசவனு
முடிசடைமவுலிநாரதன்முதலாமுனிவருமுடிவறப்புகழ்ந்தார். (௭௨)

மாசுணத்தரசன்மந்திரமமைத்தவனத்திடையிருந்தமாமயனை
யாசுசுக்கணிசென்றடர்த்தலும்வெருவியருச்சுனுவபயமென்றாற்றத்
தேசுடைத்திகிரிச்செங்கண்மால்கருணைசெய்தனன்றீவினையுறினும்
பேசுதற்கரியபெரியவர்நினைக்கின்யார்கெரலோபிழைத்திடாதவரே. (எங)

அழைத்தடல்விசயன்றனைத்துணைசெய்கென்ருறுபத்தியோசனையாகித்
தழைத்தவவ்வனத்தைக்கனத்தைவென்கண்டுதழலவனுகர்ந்திடுங்காலப்
பிழைத்தவர்மயனுந்தக்ககன்மகவும்பெருந்தவனொருவன்முன்கருப்ப
மிழைத்தநுண்சிறகர்க்கருநிறக்குரீஇயினினங்களு * மன்றிவேறிலரால். (எச)

என்பிறபுகல்வதிரெழுபுவனமெம்பிரானருந்தியதென்னத்
தன்பசிதணியக்காண்டவவனத்திற்சராசரமுள்ளவையனைத்தும்
வன்புடனருந்தியுதரமுங்குளிர்ந்தான்வன்னிதன்வடிவமுங்குளிர்ந்தா
னன்புடையிருவர்க்காசியும்புகன்ருனசைந்துபோய்த்துறக்கமுமடைந்தான். ()

அமரரைமுதுருகண்டகாவலருமவரவராண்மைகளுரைசெய்
தமரிலன்றெடுத்தபல்பெருங்கொடியாலலங்கரித்தமைத்ததங்தேர்மேற்
றமருடன்றுணைவர்நால்வருநகரச்சனங்களுமகிழ்ந்தெதிர்கொள்ளத்
தமரமும்முரசுமுழங்கவெண்சங்கந்தழங்கவந்தணிநகர்சார்ந்தார். (எசு)

ஆ செய்யுள் - அ௨0.

காண்டவதகனச்சருக்கமுற்றிற்று.

---

## ஆ தி ப ரு வ ம்

முற்றுப்பெற்றது.

---

* ஒருசாதகப்புள் இறந்துவிட, மந்தபாலமுனிவன் அதனுடலிற் புகுந்து அதன்பேட்டோடுகூடி நான்கு முட்டைகளை யுண்டாக்கினன். அம்முட்டைக ளிற்றோன்றிய குஞ்சுநான்கையும் அம்முனிவன் வேண்டுகோளினல் அக்கினி தேவன் தகியாதொழிந்தனன்.

## இரண்டாவது

# சபாபருவம்.

## இராசசூயச்சருக்கம்.

பாண்டவர்கள்புரிந்ததவப்பயனாகியவதரித்துப்பகைத்துமேன்மேன்
மூண்டவினைமுழுவதுவுமுனைதோறுமுரண்முருக்கிமுகில்புகாமற்
காண்டவமுங்கனல்வயிற்றுக்கனறணியநுகருவித்துக்காக்குமாறே
பூண்டருளெம்பெருமானைப்போற்றுவாரெழுபிறப்புமாற்றுவாரே. (க)

வியனும்பர்பல்கணமுஞ்சுரபதியுஞ்சென்றெழில்கொள்விசும்பின்மேவ
நயனங்கண்முதலானவைம்புலனுமனமும்போனசரியெய்திப்
பயன்மிஞ்சுதொழிலினராய்ப்பாண்டவருந்திருமாலும்பயிலும்வேலை
மயனென்பான்வாய்புதைத்துவளம்படவந்தொருமாற்றம்விளம்பினானே. (உ)

உம்மாலின்றருவினையேனுயிர்பிழைத்தேனீர்தந்தவுயிர்க்குவேறோர்
கைம்மாறுவேறில்லைக்குருகுலம்போலெக்குலமுங்காக்கிற்பீர்
தெம்மாறவுலகாளுஞ்செங்கோன்மைக்குருபதிக்குச்சிற்பம்வல்லோ
ரம்மாவென்றதிசயிப்பவரியமணிமண்டபமொன்றமைக்கின்றேனே. (ங)

மேனாளிவ்வுலகாண்டவிடபருவனசுரகுலவேந்தர்வேந்தன்
றானாண்மையுடன்பொருதுதரியலரைத்திறைகொணர்ந்ததாராபந்தி
போனாளுமொளிவீசும்பலமணிகள்விந்துவெனும்பொய்கைதன்னி
லானுமற்கிடப்பனவுண்டவையிதற்கேயுபகரணமாகுமென்றான். (ச)

என்பதன்முன்முப்பதின்மேலிரட்டிகொணூறாயிரவரெடுத்தபாரம்
வன்புடனேதரித்தவரையசைந்தாலுமசையாதவயிரத்தோளா
ரன்புமிகும்விழிக்கருணையறன்புதல்வனேவவினாலசுரத்தச்சன்
றன்பணியீதெனப்பணிப்பவொருநொடியிற்கொடுவந்தார்தளர்விலாதார். (ரு)

பீதகெச்சிப்பசும்பொனாற்சுவர்செய்துமரகதத்தூண்வீதிபோக்கி
யோதிடத்திற்சுருங்காமற்செழுந்துகிருத்திரம்பரப்பியுலகோரேழு
மாதிடத்தான்வைகுதற்குவாய்க்குமதோவிதுவென்னவரம்பில்கேள்விச்
சோதிடத்தோர்நாளுரைப்பச்சுதன்மையினுமுதன்மைபெறத்தொடங்கினானே. ()

மனத்தாலுந்திருத்தகுநூல்வரம்பாலுமுரம்பயிறோள்வலியினாலு
மினத்தாலுந்தெரிந்துதனதெண்ணியவெண்ணினுக்கேற்பவெண்ணில்கோடி
தினத்தாலுஞ்செயற்கரியசெழுமணிமண்டபமீரேழ்திங்கட்செய்தான்
றனத்தான்மிஞ்சியதருமன்றம்பியர்க்குத்தண்டென்வெண்சங்குமீந்தான். * (எ)

* வீமனுக்குத் தண்டும் அருச்சுனனுக்குத் தேவதத்தமென்னுஞ் சங்குமென்க,

அத்தபதிதன்குறிப்பாலமைத்தபெருமண்டபத்தினளவுநீளம்
வித்தர *மோடுயர்ச்சியெனும்வனப்பனைத்துங்கண்டோர்கள்வியந்துகூறக்
கொத்தலர்தார்மணிமுரசக்கொடியுயர்த்தோன்கனற்பிறந்தகொடியுந்தானு
மெத்தமருமனமகிழக்குடிபுகுந்தானிறைஞ்சலருக்கிடியேறன்னான். (௮)

தம்பியர்கணால்வருடன்றண்டுழாய்முடியோனுந்தானுமேனை
யம்புவிமன்னருமுனிவரனைவருஞ்சூழ்தரவிருந்தவமையந்தன்னிற்
றும்புருநாரதனென்னுமிருவரினுநாரதனுந்தோன்றறோன்றப் [தன்.
பைம்பொன்மலர்தூவெதிர்போய்ப்பணிந்திறைஞ்சி யென்செய்தான்பாண்டுமைந்

ஏற்றினனாசனத்திற்றனித்தனியேயுபசாரம்யாவுந்தந்து
மாற்றினன்வழியிளைப்புமலரயன்போலிருந்தோனைமகிழ்ச்சிகூர்ந்து
போற்றினனீவரயான்புரிதவம்யாதெனப்புகழ்ந்தான்பொதியிற்றென்றற்
காற்றினாலரும்புநறுஞ்சூதம்போற்புளகரும்புங்காயத்தானே. (௧௦)

யான்புரிந்ததவமுலகில்யார்புரிந்தாரவனிபரிலிசையின்வீணைத்
தேன்புரிந்ததெள்ளமுதாலமுதுண்டோர்செவியிரதந்தெவிட்டுவிப்பாய்
மான்புரிந்ததிருக்கரத்துமதியிருந்தநதிவேணிமங்கைபாகன்
றான்புரிந்ததிருக்கூத்துக்கிசையமகிழ்ந்திசைபாடுந்தத்துவஞானி. (௧௧)

எனத்தருமன்மகன்கூறவிளையோர்கட்டனித்தனிநின்றிறைஞ்சநீல
கனத்தனையதிருமேனிக்கண்ணனுந்தன்மனங்களிப்பக்கண்ணினோக்க
மனத்தினழுக்கணுகாதமாதவத்தோனுதிட்டிரற்கிம்மாடகூடக்
தனத்தின்மிகுகுபேரனெழிலளகையினுமிலதென்றுசாற்றினானே. (௧௨)

மண்மிசைநால்விரனிற்குமணிமகுடத்தணியரங்கின்மண்ணுளோரும்
விண்மிசைவாணருநெருங்கவிராயவருமறைச்சடங்கினிராசசூயங்
கண்மிசைமாமணிநிகரென்கான்முளையைப்புரிவியெனக்காலனூரிற்
பண்மிசைவீணையின்கிழவன்பாண்டுமொழிந்தனனெனவும்பகர்வுற்றானே. (௧௩)

தந்தைமொழிதனயருக்குச்சாற்றிமுனியகன்றதற்பின்றம்பியான
விந்திரனுந்தன்மனத்திலெண்ணமுமீண்டாகுமெனவெண்ணிக்கூறு
மந்நரமேதமகமியற்றுதற்கென்றவனிபரையடையவாரிப்
பந்தமுறுபெருஞ்சிறையிற்படைகெழுவேற்சராசந்தன்படுத்தினானே. (௧௪)

சதகோடிதனக்கொளித்துத்தடங்கடலிற்புகுங்கிரிபோற்றளர்ச்சிகூர்ந்து
சதகோடிமுடிவேந்தர்தங்களுயிர்கொண்டொளித்தார்சமருக்காற்றார்
சதகோடிசுரும்பரற்றுந்தாராயச்சராசந்தன்றன்னையின்னே
சதகோடியிபமதுகைச்சதாகதிசேய்தனையொழியச்சாதிப்பார் † யார். (௧௫)

ஆரமணங்கமழசலமநேகமுளவானாலுமலையின்கூல
வாரிதியைமதிப்பதற்குவல்லதுமந்தரமன்றிமற்றுமுண்டோ
போர்விசயமவனுடன்முன்பொருதோரில்யார்பெற்றார்போதுமிப்போ
தாரணமாமுனிவரராயெனப்புகன்றானறன்மகனுமஃதேயென்றான். (௧௬)

அரிவிரசுந்துழாய்மகுடத்தரியுமிரண்டரிகளருளாண்மையோரு
மெரிவிரசுநெடுங்கானமிருதினத்தில்விரைந்தேகியெண்ணில்காவற்
கிரிவிரசநகரெய்திக்கிரித்தடந்தோண்மகதேசன்கிளருங்கோயிற்
கரிவிரசுங்கோபுரப்பொற்றிருவாயில்புகுந்துரைத்தார்காவலோர்க்கே. (௧௭)

* வித்தரம் - அகலம். † சாதித்தல் - கொல்லுதல்.

## வேறு.

வந்தனர்முனிவர்மூவரென்றுரைமின்மன்னவற்கெனவவருரைப்பத்
தந்திடுமெனவும்புகுந்துநீடம்பொற்றவிசிருந்தாசியுஞ்சாற்றக்
கந்தடர்குவவுத்தோளில்விற்குறியுங்காட்சியுங்கருத்துறநோக்கி
யந்தணரல்லீர்யாவர்நீரென்றானவ்வுரைக்கமலனுமுரைப்பான். (௧௮)

யான்விதுகுலத்தில்யாதவனிவரோகுருகுலத்தலைவனுக்கிளையோர்
மான்மதமலர்த்தார்மன்னகேளொருவன்வாயுவின்மதலைமற்றொருவன்
வான்மதிலுடுத்தபொன்னகர்க்கிறைவன்மதலைநின்வளநகர்காண்பான்
கான்மதக்களிற்றாய்முனிவராய்வந்தோங்காவலர்க்கணுகொணாமையினால். (௧௯)

என்றுகொண்டுண்மையாதவனுரைப்பவிருபுயவலியினெண்டிசையுஞ்
சென்றுகொண்டடர்த்துத்தெவ்வர்தம்முயிருந்திறைகளுமுறைமுறைகவர்ந்து
வென்றுகொண்டணிந்தவாகையோன்றினவுமிக்கனவெமதிணைமேருக்
குன்றுகொண்டமைந்ததோள்களெம்முடனீர்குறித்தமர்புரியுமென்றுரையா. ()

நீயெனிலாண்டோரொன்பதிற்றிரட்டிநெடுஞ்சிறைக்கலுழன்முன்னெறிக்கோ
ளியெனவோடிமதுரைவிட்டாழியெயிற்றுவாரகைப்பதிபுகுந்தாய்
கோயெனவசுரர்க்குடைந்துபொற்காவினுழைதருநூறுமாமகத்தோன்
சேயெனினிளையன்விமலைவிசும்பிற்சேர்த்துவனெனவிழிசிவவா. (௨௧)

மந்திரச்சுற்றத்தவர்களையழைத்துமதலையைமகிதலந்தனக்கோ
ரிந்திரனெனவேமணிமுடிபுனைந்தன்றியாவருந்தேவரும்வியப்ப
மந்தரகிரியும்விந்தமுந்தம்மின்மலைவபோன்மல்லமர்மலைவான்
சந்தணிதடந்தோள்கொட்டியார்த்தெழுந்தான்றழலுமிழ்விழிச்சராசந்தன். (௨௨)

யாளிவெம்பதாகைவீமனுமவனும்யாளியும்யாளியுமெனவே
தாளினுஞ்சமரமண்டலங்களினுந்தாழ்விரற்றடக்கைமுட்டியினுந்
தோளினுஞ்சென்னித்தலத்தினுமற்போர்சொன்னபோர்விதமெலாந்தொடங்கி
நாளினுந்திங்களொன்றினிற்பாதிநள்ளிரவினுஞ்சமர்நடத்தி. (௨௩)

பூதலநடுங்கவெழுகிரிநடுங்கப்போதகத்தொடுதிசைநடுங்க
வீதலநடுங்கக்கண்டகண்டவர்தமெய்களுமெய்யுறநடுங்கப்
பாதலநடுங்கவிருவர்மாமனமும்பறையறைந்தயர்வுடனடுங்கச்
சாதலக்கொழிந்தவிடரெலாமுழந்துதங்களிற்றனித்தனிதளர்ந்தார். (௨௪)

கொல்லவென்றெண்ணுமிருவருமொருவரொருவரைக்கொல்லொணாமையினான்
மல்லமர்வலியுமிருபுயவலியுமிழந்துமாமகிதலத்துறலுங்
கல்லடர்செம்பொன்வரையின்முக்குவடுகோலுடன்பறித்தகால்கண்டு
நல்லதன்மைந்தற்குணர்வுமீண்டெய்தநலத்துடனல்கியதன்றே. (௨௫)

மீளவுமிருதவசனுற்றெழுந்துவிதலையின்விழுந்தமேவலனைத்
தாளொடுதோள்கள்வலியுறத்தன்பொற்றடக்கையான்முடக்கறப்பிடித்து
வாளுகிர்வாளாற்கனகனைப்பிளந்தவண்டுழாய்மணங்கமழ்மௌலிக்
கோளரியெனவேபிளந்தெறிந்தண்டகோளமும்பிளக்கநின்றார்த்தான். (௨௬)

பிளந்தெறிபிளவுமீளவும்பொருந்திப்பிளிறுமாமதகரிகிர்ப்பக்
கிளர்ந்தவெஞ்சமரந்தொடங்கலுந்தனதுசேதனக்கேசரியனையான்
வளர்ந்ததிண்புயத்தின்வலியினான்முன்னைமல்லமரெழுமடங்காக
விளைந்திடமலைந்துவிழுமாறுதைத்தானேரிரண்டானதாவுடலம். (௨௭)

சிறியக்குரிசில்கண்டபெருடலைச்சென்னிதாள்செவ்வையினிடாமன்
மாறியிட்டிடுகென்றுருயிர்த்துணையாய்வந்தமாமரகதவடிவோன்
கூறியிட்டிடாமற்குறிப்பினுலுரைப்பக்குறிப்பையக்குறிப்பினாற்குறித்து
வேறிடப்புவியின்மிசையெறிந்தனனல்வீமன்வல்லபத்தையார்வியப்பார். (உஅ)

வேறு.

சந்தச்சிகரச்சந்தணியுந்தடந்தோளாண்மைச்சராசந்தன்
முந்தப்பொருதமல்லமரின்முரணோடழிந்துமுடிந்ததற்பி
னிந்தப்புதுமைதனைவியவாவேத்தாவிறைஞ்சாயதுகுலமா
மைந்தற்கொருவாசகமுரைப்பான்மணித்தார்ப்புயவாசவன்மைந்தன். (உகூ)

இன்றுரமரினிவன்கையாலிறந்தோனுடலமொன்றியது
மொன்றுதிரண்டுபட்டதும்யாமுணரும்படிநீயுரைத்தருள்வாய்
குன்றுலன்றுமழைதடுத்தகொற்றக்கவிகைக்கோபாலா
வென்றுனென்றபொழுதவனுமிறந்தோன்சரிதமினிதுரைப்பான். (௩0)

வானோர்பகைவர்களிலொருவன்மகதகுலத்துமாரதப்பே
ராேனான் * வயிற்றிலவதரித்தானவன்காணிந்தவடல்வேந்தன்
மீனோததிசூழ்மேதினியின்வேந்தர்குலத்தைவேரோடுந்
தானோராழிதனிநடத்தித்தடிந்தானணிந்தசமர்தோறும். (௩க)

எண்ணற்கரியமுடிவேந்தரெண்ணாயிரவர்பசுவாக
மண்ணித்தனையுந்தன்குடைக்கீழ்வைக்கும்படிமாமகம்புரிவான்
கண்ணிச்சிறையினிடைவைத்தான்கண்ணாயிரத்தோன்முதலாக
விண்ணிற்பயிலுந்தேவர்களுமிவன்பேர்சொல்லவெருவுவரால். (௩உ)

இவனைப்பயந்தோன்மகவொன்றுமின்றிச்சண்டகௌசிகப்பேர்த்
தவனைப்பணிந்துவரம்வேண்டத்தவனுந்தான்வாழ்தடஞ்சூதத்
தவனிக்கரிபதிங்கனியொன்றளித்தானளித்தவக்கனியை
நவனித்திலவாணகையிருவரில்வாழ்பவர்க்குநல்கினனால். (௩௩)

காசித்தலைவன்கன்னியர்தங்கண்போல்வடுமுற்றியகனியை
யாசிற்பிளந்துதங்கொழுநனருளாலமுதொத்தினிதருந்த
மாசற்றிலங்குமகவிருவர்வயினும்பகிர்ந்துவளர்ந்ததற்பின்
பாசத்துடனேயோரொருவர்பயந்தார்வடிவிற்பப்பாதி. (௩௪)

ஒருவனிருவருதரத்துமுடனுற்பவித்தவுற்பாதம்
வெருவிமகதகுலவேந்தன்வியன்மாநகரின்புறத்தெறியப்
புரிசைவாயிற்கண்டவற்றைப்புசிப்பாளெடுத்துப்பொருத்தினளாற்
றருமமுணராமனத்தியொருதசைவாயரக்கிசரையென்பாள். (௩௫)

தன்னாலொன்றுபடுதலுமத்தனயன்றன்னைச்சராசந்த
னென்னுவழைத்தியெனமகதத்திறைவற்களித்தங்கேகினளா
லந்நாண்முதலப்பெயர்படைத்தானதனுலிவ்வாறுனதெனச்
சொன்னனதுகேட்டுளமகிழ்ந்தார்சுரர்கோமகனுந்துணைவனுமே. (௩௬)

வினைமுற்றியபின்மூவருநல்வினையேபுரிவோர்மன்னவரை
யினைதற்சிறைவிட்டிகன்மல்லாவிறந்தோன்மகனையெழின்மகுடம்
புனைவித்தந்நகரீசன்பொற்றாள்வணங்கவவனேறுந்
துனைபொற்றடந்தேரூர்ந்தறத்தின்சுதன்வந்தெதிர்கொண்டிடமீண்டார். (௩௭)

---

* மாரதப்பேராேனான் - பிருகத்ரதன்.

கருதற்கரியநிதியனைத்துங்கவர்ந்தோர்காட்டக்கண்டுவந்த
முரசக்கொடியோன்முன்வேதமொழிந்தோன்முதலாமுனிவரரு
மரசக்குழாமுமீண்டியபேரவையிற்கடவுளரசின்ற
வரிவிற்குமரன்மாதிரங்கள்வெல்வானேகும்வகையுரைத்தான். (௩௮)

சுருதிப்படியேவராசசூயப்பெயர்மாமகந்தொடங்கக்
கருதிக்குணபாலெம்முன்னும்வடபால்யானுங்காற்றிசைக்கு
நிருதித்திசைக்குநடுவெம்பியிவனுஞ்சிலைவேணிரைமணித்தேர்
வருதிக்கினிலிவ்விளையோனுமலைவானெழுகவருகவென. (௩௯)

என்னுஞ்சேனையுடன்விரைவினெழுந்தாரிவரிருவோரும்
வின்னுங்கடவுளாலயமுமுதலாவுள்ளமேலுலகு
மன்னும்புயங்கதலமுதலாமற்றெவ்வுலகுமாதிரமுந்
துன்னென்றிட்டவைந்துவகைப்பெரும்பேரியத்தின்றுவனியினால். (௪0)

நானங்கமழுஞ்செங்கழுநீர்நறுந்தார்வேந்தர்நால்வரையு
மானம்பெறுநின்சேனையுடன்வளர்மாதிரத்துவகுத்தேவி
மீனங்கமடமேனநரவரியாய்நரராய்மெய்ஞ்ஞான
வானந்தமுமாகியநாதனன்றேதுவராபதியடைந்தான். (௪௧)

வேறு.

வான்மருச்சுதனுமீரிரண்டுகடல்வயவருநிணியின்வர்க்கமு
நான்மருப்பொருகைமும்மதத்துவயநாகமேவிவளர்திசையின்வாழ்
கோன்மதிக்கநெடுவங்கமுந்திகழ்கலிங்கமுந்தெறுகுலிங்கமுந்
தான்மலைத்துமுனைமுரண்மிகுத்துவருதரியலாரைமுனைதள்ளியே. (௪௨)

மற்றுமற்றுமவன்மருவுபாடைகளின்மன்குலத்தொடுதடிந்துமே
அற்றவுற்றவரையாணம்யாவையுமொடிந்திடிந்துபொடியுண்ணவே
யிற்றவிற்றபலதலைகளாலலையெறிந்துமோதிவருகுருதியான்
முற்றமுற்றவரையினமும்வார்குருதிநதியுமாயெழமுருக்கியே. (௪௩)

அந்தவந்தவணிபரெலாமபயமபயமென்றடிவணங்கவே
வந்தவந்தநிதியாவையுஞ்சிகரவடமகீதரமெனக்குவித்
தெந்தவெந்தநரபாலர்பாரினிகரென்னவென்னவவரிறையெனத்
தந்ததந்தவிதந்திமீதுகொடுதங்கண்மாநகரிசாரவே. (௪௪)

விசையவெம்பகழிவிசயன்வெவ்விசையொடிருநிதிக்கிழவன்மேவிவாழ்
திசையடைந்தகதிரவியென்னும்வகைசிறிமாறுபொருதெவ்வரா
நிசை*யழிந்துவெளியாகநால்வகைநெருங்குசேனையொடுநிலனுநின்
றசையவன்பினுடனேகினனெழுபராகமெண்டிசையடைக்கவே. (௪௫)

பாரதப்பெயர்கொள்வருடமாதிபலபாரினுள்ளநரபாலரைப்
போரக்குலமும்வேரறப்பொருதுபிஞ்ஞகன்கிரியுமிமையமுஞ்
சேரமொத்தியவனுள்ளகந்தருவர்கின்னரேசர்பலர்திறையிடப்
போரடர்த்தகமுடிந்தகாலையெழுபுணரியென்னநனிபொங்கியே. (௪௬)

விந்தமால்வரையுமேமகூடமுடனிடதநாமநெடுவெற்புமா
மந்தராசலம்விசாலமாலியமணித்தடஞ்சிகரமலையுடன்
கெந்தமாதனமுநீலசைலமுமெனப்புகன்றபலகிரிவில்வா
முந்தராதிபர்நடுங்கமேருகிரியப்புறத்தநனியணுகியே. (௪௭)

* நிசை - இரா.

அத்திசைக்கணாசானவுத்தரகுருக்கண்மேன்மையையடக்கியே
யெத்திசைக்குமிவனன்றிவீரரிலரென்றுதேவருமியம்பவே
மெத்திசைப்பணிநிலாவெழச்சமரவிசயகம்பமுநிறுத்தினான்
முத்திசைக்குமதிவெண்குடைக்கட்வுண்முதல்வனானவரிபுதல்வனே. (௪௮)

கரிகள்கோடியிரதங்கள்கோடிபவனத்தினுங்கடுகுகவனவெம்
பரிகள்கோடிநவகோடிமாமணிகள்பல்வகைப்படுபசும்பொனின்
கிரிகள்கோடியெனவேகவர்ந்தெழுகிரிப்புறந்தெறுகிரீடிவந்
தரிகள்கோடிகிளர்சோலைசூழ்தமதுசெல்வமாநகரிபணுகினான். (௪௯)

வடாதுசென்றவரிசிலைமகீபனினுமெழுமடங்குமிகுவலியுடன்
குடாதுசென்றிளையவீரமாநகுலனகுலனென்றுகுலைகுலையவே
யடாதமன்னரையடர்த்தடுத்தவரையஞ்சலென்றமருடற்றினா
னிடாதவன்றனமெனக்கரந்தனர்களேனைமன்னவர்கள்யாருமே. (௫௦)

மாளவத்தினொடுகேர்ப்படம்பொரவகுத்தெதிர்ந்ததிரிகர்த்தமுந்
தூளவன்புடையிருட்பிழம்பெழவருக்கனிற்பெரிதுசுடரெழத்
தாளவண்கதியுடைத்துரங்கரதகசபதாதியொடுதெகுசின
மூளவந்தெதிர்மலைந்தமன்னவரைமுதுகுகண்டமர்முருக்கியே. (௫௧)

கூற்றிசைக்குமெனவுடன்வருங்கடியகொடியசேனையொடுகுமரனுங்
காற்றிசைக்குமெனவருணனுந்தனிகருக்குலைந்துளம்வெருக்கொளத்
தோற்றிசைக்கும்வசைகொண்டுமற்றவர்கள்சொரிதருந்திறைகள்வாரியம்
மேற்றிசைக்குமொருமேருவுண்டெனவுயர்த்தினானிகரில்வீரனே. (௫௨)

அளவிலாததிறையோடுமெத்திசையுதித்ததோரிரவியாமெனத்
துளபமாலைகமழ்மௌலிநாதனுறைதுவரையெய்தியுயர்சுருதியின்
கிளவியான்முனிவர்தொழுபதந்தொழுதுகேசரித்துவசவீரனுக்
கிளவன்மீளவுமரிப்பிரத்தநகரெய்திமன்னனையிறைஞ்சினான். (௫௩)

குன்றிசைத்தகசரததுரங்கமபதாதிசூழவிறைகொள்ளவு
நின்றிசைத்துவருபலபணைக்குலமிரைக்கவுங்கொடிநிரைக்கவுந்
துன்றிசைப்பணிநிலாவெழக்கவிகையெண்ணிலாதனதுலங்கவுந்
தென்றிசைப்படர்தன்மேயினானகுலநிருபனுக்கிளையசெம்மலே. (௫௪)

அத்திகைக்கணிருகடலினுக்குநடுவானமண்டலமனைத்தினு
மத்திகைப்புரவிமண்டலேசரும்வயங்குமாமகுடமகிபரும்
புத்திகைக்கவமர்பொருதழிந்துதிறைபொழியவாரிவளர்புயகிரிப்
பித்திகைத்தொடையனீலனென்னுநரபதிபெரும்பதிபுகுந்தபின்: (௫௫)

அந்தமாநகரிகாவலானசுடரங்கிசீறியெதிர்பொங்கிமேல்
வந்தவீரன்மிகுசேனையாவையுமயங்கவெம்புகையியங்கவே
கந்துசீறுகளியானைமன்னனதுகண்டுவெங்கனலவிப்பதோ
ரிந்துமாமுகசரங்களேழுநெடுநாவினானழியவேவினான். (௫௬)

அஞ்சியந்தவழலோனுமப்பொழுதொரந்தணாளன்வடிவாகியே
வஞ்சியந்தொடையன்மன்னன்முன்புவரவந்தமாமுனியைமன்னனி
யெஞ்சிநின்றுசுடுகின்றகாணமிதென்னையென்னவுமியம்பினான்
மஞ்சிவர்ந்தபுகைவானவன்றனதுவரவுநீலன்வழிபாடுமே. (௫௭)

நீலனிட்டதிறையானகோலமணிநீலமாதிநவநிதியமுஞ்
சாலமிக்கதபனியமும்வெள்ளியுயர்சாரல்விந்தசயிலப்புறத்
தேலநெட்டடவிமுறியமோதிவெளியாகவேழ்கடலையுங்கடைக்
காலமுற்றியெழுகாலெனும்படிகலக்கினானெழுகலிங்கமும். (௫௮)

சென்னிநாடுகுடகொங்கநாடுதிறைகொண்டுதென்னனுறைசெந்தமிழ்க்
கன்னிநாடுறவுடன்புகுந்துமணிநித்திலக்குவைகள்கைக்கொளா
மன்னிநாடுகடல்கொண்டகைம்முனிவன்வைகுமாமலயநண்ணினான்
மின்னிநாடுறவிளங்குவெஞ்சமரவீரவாகைபெறுவேலினான். (௫௯)

செகத்தியங்குநனியாழியைவரினுமிளையகாளையொடுசேனையந்
நகத்தியைந்தபொழுதவனிபவ்வமுறுநவ்வெனத்தலைநடுங்கவே
மிகத்தியங்கிநெடுமேருவெற்பின்மிசைமேவுவானவர்கண்மீளவு
மகத்தியன்றனைவடக்கிருத்தும்வகையுன்னினார்கள்சமமாகவே. (௬௰)

கன்னிலங்கொலெனவலியமெய்பெறுகடோற்கசன்றனையழைத்துநீ
தென்னிலங்கைதிறைகொண்டுமீள்கவெனவிளையதாதையுரைசெய்யவே
மின்னிலங்கணியெயிற்றரக்கர்குலவீரனாகியவிபீடணன்
றன்னிலங்கொதிகொளப்புகுந்தொருசழக்கறச்சமருழக்கினான். (௬௧)

யாரையோவுரைசெய்நீயெனத்திறனிசாசராதிபனியம்பலும்
பாரையேழினையுமுழுதுடைக்குருகுலத்துமேன்மைபெறுபாண்டுவின்
பேரன்யான்விறலிடிம்பன்மாமருகனெனவரக்கர்பெருமான்மனத்
தாருமாதரவினோடழைத்தவனையுவகையோடுமிகவுறவுறா. (௬௨)

நீயிலங்கையிடைவந்ததென்கொலெனநீதியாலுயருதிட்டிரன்
ராயசூயமெனுநாமமாமகமியற்றுவான்விறலொடெண்ணினா
னேயமானவிளையோர்களால்வருநெடுந்திசாமுகமடங்கவென்
றேயமாநிதிதிரட்டலுற்றனர்களியானுநின்னகரியெய்தினேன். (௬௩)

அற்பினைத்துலகுமெண்ணவேயறனளித்தமன்னனழல்வேள்வியின்
கற்பினைக்குதவிதருகெனப்பழையகால்விழுத்தநெடுவேலைவீழ்
வெற்பினைப்புகலவந்தவீடணனளித்தநீடுயர்வியன்றலைப்
பொற்பினைத்தருவொரேழுமேழுமுடனேகவர்ந்துகழல்போற்றியே. (௬௪)

மீளவந்திளையதாதைபாதமுடிமீதுவைத்தொளிவிளங்குபொற்
பாளையம்பனைகள்பற்பராகமுதலானபன்மணிபரப்பினா
னீரண்டிவிமையோரொடொத்தபெருஞானபண்டிதனுநல்லறன்
காளைபைங்கழல்வணங்கினன்றனதுபதிபுகுந்துநனிகடுகியே. (௬௫)

வேறு.

ஆல்வரும்புரவித்திண்டேரறன்மகனநுசரான
நால்வருஞ்சென்றுதிக்கோர்நாலிரண்டினுந்தன்செய்ய
கோல்வரும்படியேயாக்கிக்கொணர்ந்தனதிறைகள்கண்டான்
மேல்வருமிராசசூயவேள்விநாம்விளம்பக்கேண்மோ. (௬௬)

இரணியனிரணியாக்கனென்றதானவரைவென்றுங்
காணியவிலங்கைமூதூரரக்கனையநுசனோடு
மரணமுற்றிடமுன்சிறிமாமனைமலைந்துமற்றை
மூரணியபகையுந்தீர்ப்பான்மூர்த்திபோய்ப்பிறந்துளோனை. (௬௭)

விரைவினிற்கொணர்தியென்றுவீணைநாரதனைப்போக்கித்
தரணிபர்க்கெல்லாமோலைதனித்தனிதூதிற்போக்கி
வரனுடைச்சுருதிநான்கும்வகுத்தவனுதியான
விருபிறப்பாளர்யார்க்குமுழுவாகனையேவினனே. (௬அ)

தானவர்தச்சன்வந்துசமைத்ததோர்சிற்பந்தன்னை
வானவர்தச்சன்கண்டுமகிழுமண்டபத்தின்வேந்த
ரானவரெவருமீண்டியந்தணரெவருமீண்டி
மானவரெவருமீண்டிவரம்பறநெருங்கினரே. (௬௯)

வரவரவந்தவந்தமுனிவரைவணங்கியாசி
திரமுறப்பெற்றுவேந்தர்சிறப்பெலாந்திருக்கணோக்கி
நரபதிதானுமற்றைநால்வருநீலமேனி
யிரவியையனையான்றன்னையுவகையோடெதிர்கொண்டாரே. (எ0)

காகதக்களிறுபோலுங்கனிட்டரீரிருவரோடுந்
துரகதத்தடந்தேர்விட்டுத்துழாய்மணங்கமழும்பொற்றோண்
மரகதக்கிரியன்னானைவணங்கினர்தழுவிவெள்ளைத்
திருநிறத்தவன்றன்செம்பொற்றிருப்பதமிறைஞ்சினாரே. (எக)

இருபுடைமருங்குந்திக்கோரெட்டையும்வென்றோர்போத
நிருபதிதேரிற்போதநேமியான்களிற்றிற்போதச்
சுரர்பெருந்தச்சன்செய்ததொன்னகர்வீதிபுக்கார்
வருதிருப்பவனிகேட்டார்வளநகர்மாதரெல்லாம். (எ௨)

ஈரடிகளினுஞ்செம்பஞ்செழுதுவாரெழுதமுன்ன
ரோரடியெழுதிமின்போலொல்கிவந்திறைஞ்சுவாரு
மாரமுதனையகண்ணினஞ்சனமெழுதுகின்ற
சீரியகோலுங்கையுந்திருத்தகத்தோன்றுவாரும். (எ௩)

விரிதுகில்வேறுடாமல்விரைகமழ்தூநீராடிச்
சுரிகுழன்மேகமாரிதுளித்திடவெதிர்கொள்வாருங்
கரதலமலரிற்சங்குங்கலாபமுஞ்சிலம்புமார்ப்பத்
தெருவெலாந்தாமேயாகிச்சேறடிசிலப்பிப்பாரும். (எ௪)

வார்குழைப்பற்பராகமணிவிளக்கேற்றுவாரு
நேரிழைமருங்குல்வாட்டுநிறைகுடம்பூரிப்பாருங்
காரிளங்கமுகும்பச்சைக்கதலியுநிரைத்துத்தோளாத்
தோரணநாட்டுவாருந்தூமலர்சிந்துவாரும். (எ௫)

மாதர்களெவர்க்குமுன்போய்வணங்குதற்குன்னிச்சிந்தை
யாதரவுடனேவந்துமாவணமணுகுறுமற்
றூதடர்கொங்கைபொற்றோள்சுரிகுழல்சுமக்கலாற்றாப்
பேதுறுமருங்குலோம்பித்துறுபிடியன்னாரும். (எ௬)

இவ்வகைகுழுக்கொண்டாங்கணெழுவகைப்பருவமாதர்
செவ்வியுமழகுந்தேசுஞ்செய்யபூந்திருவோடொப்பார்
மெய்வழிநின்றபோகமேகமேயனையான்றன்னை
மைவழிகண்ணினோக்கிமனனுறவணங்கினாரே. (எஎ)

வேறு.

மாடம்பயிலுமணித்தோரணவீதி
நீடஞ்சனக்கணெருங்கித்தமொற
வாடம்பரக்கொண்டலன்னனையாபாத
சூடங்கருதித்தொழுதார்சிலமாதர். (எஅ)

கங்கைதருபொற்கழலான்மணிமார்பிற்
கொங்கைமுகுளங்குழையும்படியாகச்
சங்கையறமெய்தழுவுதற்குத்தம்மினுந்தஞ்
செங்கைமலர்பதறச்சென்றார்சிலமாதர். (எகூ)

வண்மெலர்கரும்பாம்வன்னப்படையானைக்
கண்டனையகண்ணிறைந்தகாயாமலர்வண்ணன்
சென்றெரித்தோன்றிருப்பவளத்தாரமுத
முண்மெனத்தினலுய்ந்தார்சிலமாதர். (அ0)

வஞ்சம்பயில்சகடவாளசுரன்மாளவிறற்
கஞ்சன்படவுதைத்தகாலானைக்கண்டுருகி
யஞ்சம்புமெய்யுருவவைம்புலனுஞ்சோகமுற
நெஞ்சந்தமொறநின்றார்சிலமாதர். (அக)

தங்கள்குலமுன்றிற்றலையாயமும்மதத்து
வெங்கண்மதமாமிசைவருவோன்மெய்ந்நோக்கி
யங்கண்மிளிரவரும்புருவவின்முரியத்
திங்களுதல்வேர்வோடநின்றார்சிலமாதர். (அஉ)

காலமுகிலுமலர்க்காயாவுமன்னதிருக்
கோலமுடையோன்குலவுமணிப்பூண்மார்பின்
மாலைநறுந்துளபமன்றலுக்குவானையன
நீலவரிவண்டாகிநின்றார்சிலமாதர். (அங)

வேறு.

மங்கையர்பலருமிங்ஙன்மன்மதபாணநான்கி
னிங்கிதவின்பமெய்தியின்னுயிரோடுநிற்பப்
பங்குறவந்தவந்தப்பாண்டவரைவரோடுங்
கொங்கவிழ்துளபத்தாரான்குந்திவாழ்கோயில்புக்கான். (அச)

கொற்றவரைவர்தம்மைக்குருகுலம்விளங்குமாறு
பெற்றவள்பாதம்போற்றிப்பிறப்பிறப்பறுக்கவல்லோன்
மற்றவள்வாழ்த்தவாழ்த்தமனமகிழ்ந்தழலின்வந்த
பொற்றொடிபணிவுமேனைப்பூவையர்பணிவுங்கொண்டான். (அரு)

அரசவைக்கணிசெய்சிங்கவாசனத்திருத்திவெற்றி
முரசடைத்துவசவேந்தன்முகமலர்ந்திருந்தகாலை
விரைசெயப்புரவித்திண்டேர்வீமனைமுதலோரெங்கு
முரைசெலக்கவர்ந்தசெல்வங்காட்டிநின்றுரைசெய்தாரே. (அசு)

முன்னரமேதஞ்செய்வான்முடிச்சராசந்தனென்னுங்
கின்னரர்பாடுஞ்சீரான்கிளப்பருஞ்சிறையில்வைத்த
வன்னரபதிகளோமேவன்மகன்மாகதேச
னென்னரபதிகளுக்குமிரவியேயென்னவந்தான். (அஎ)

அரும்பனைக்கொடியோனுதியரவுயர்த்தவனிருகும்
பொரும்படைச்சேனைவெள்ளப்பூருவின்குலத்துளோர்கள்
கரும்பனைத்தடக்கைவெங்கட்கரிமுதற்சேனையோடு
மிரும்பிணைக்குழைக்குநெஞ்சர்யாவருமீண்டிமொய்த்தார். (௮௮)

இந்திரபுரிக்குமிந்தவிந்திரபுரிக்குந்தேவ
ரந்தரமறிவுறுமலதிசயித்துவகைகூரச்
செந்திருமடந்தைக்குள்ளசெல்வங்களனைத்துஞ்சேர
வந்ததுபோலும்வேள்விமாநகர்த்தோற்றமம்மா. (௮௯)

தோரணவீதிதோறுந்தூரியமுழக்கந்தன்னி
னாரணமுழக்கமிஞ்சவந்தணராகியுள்ளோர்
காரணமுணர்ந்தோர்வேள்விக்கனன்முகமாகத்தேவர்
பாரணம்பண்ணவிட்டபைம்பொன்வேதிகையிற்சேர்ந்தார். (௯௦)

சுடுமனற்கலுழனாகச்சுருதியின்படியேகோட்டி
நடுவுறத்திசைகணான்குநான்குவெள்ளேறுகோட்டி
வடிவுறச்சமைத்தசாலைமண்டபந்தன்னைநோக்கிற்
கடவுளர்க்கமைத்தயாகதலமெனக்கவினிற்றம்மா. (௯௧)

வேறு.

திருந்தமெய்ஞ்ஞானமுந்தெளிந்ததெய்வத
வருந்தவமுனிவர்பேரவையின்மேன்மையாற்
பெருந்தகைநாபியம்பெருமன்வாழ்வுபோன்
றிருந்ததுகுருபதியாகசாலையே. (௯௨)

யாத[illegible]லத்தினுக்கிறைவனாகிய
மா[illegible]னிணையடிவணங்கிமற்றுள
பூதலத்தரசெலாம்பொருந்துபொற்பினா
லோதநீர்வண்ணன்வாழுலகுபோன்றதே. (௯௩)

விதியினுமுயர்ந்ததொல்வியாதன்மேதினி
பதிகளாகியதிறற்பாண்டுமைந்தரை
மதியினிலொருபுடைவருகென்றன்பினாற்
றிதியுறச்சின்மொழிசெவியிற்செப்பினான். (௯௪)

இங்கிதத்திந்திரரென்பர்யாவருஞ்
சங்கரன்விதியினாற்றரணிபாலராய்
வெங்கனற்றோன்றியமின்னையைவரு
மங்கலம்புவிமகள்வழக்கினெய்தினீர். (௯௫)

ஓரொருதலைவராயோரொராண்டுளங்
கூருவகையினெடுங்கொழுநராயினீ
ராரழற்பிறந்தமானறத்தின்மைந்தற்குப்
பேரழல்வளர்த்திடும்பெற்றிபெற்றனள். (௯௬)

மைந்தர்நீர்நால்வருமகஞ்செய்வேந்தனே
தந்தையுந்தாயுமித்தருமவல்லியே
யிந்தவான்பிறப்பினுக்கிற்றைநாண்முதற்
குந்தியும்பாண்டுவுமென்றுகொண்மினே. (௯௭)

கனல்வருமின்னையுங்கணவன்றன்னையு
முனிவரான்மொழிந்திடமுகூர்த்தமானபின்
புனைமுடிதிருக்குழற்புழுகுநானமு
மினிமையிற்சாத்தினரெண்ணின்மாதரே. (கூஅ)

கதியொடுபிறைதவழ்கடுக்கைக்காடுநென்
னதிதருபுனல்கொடுநானமாட்டினார்
விதிமுறையறிந்தவர்வேள்விக்கேற்பன
பதியுடனணிந்தனர்பாவைதன்னையும். (கூகூ)

வேறு.

மாலைமுன்வணங்கிக்கங்கைமைந்தனைவணங்கியாக
சாலையைநோக்கும்வேந்தன்றம்பியைநோக்கிமுந்நீர்
வேலையின்மணலிற்சாலுமிருசனமருந்தத்தேவ
ராலயத்தமுதமன்னவடிசினியளித்தியென்றான். (க00)

நாவியின்மதமுஞ்சாந்துநறும்பனிநீருந்தாரும்
வாவியிற்காவிலுள்ளமலர்களுமற்றும்யாவு
மேவியவரிவில்லாண்மைவிசயனைநல்குகென்றான்
றூவிலைபளிதமெனைத்துணைவரைவழங்கச்சொன்னான். (க0க)

தானமுந்தியாகந்தானுந்தபனன்மாமதலையான
மானவன்கொடுக்கவென்றான்வரம்பிலாநிதிகள்யாவுங்
கானலங்கடல்சூழ்வையங்காவலன்காவலென்று
னேனையோர்பலரும்வேந்தனேவலின்முறைநின்றாரே. (க0உ)

தழல்வளரோமகுண்டத்தலத்தினில்வலத்திலாதித்
தழல்வருபாவைவைகத்தருமன்மாமதலையாங்கட்
டழல்புரைவேதவாணர்தாளிணைவணங்கித்தானுந்
தழலெனவிருந்தானெல்லாவினைகளுந்தகனஞ்செய்வான். (க0௩)

கடகரியுரிவைபோர்த்தகண்ணுதற்கடவுண்மாறி
யிடம்வலமாகப்பாகத்திறைவியோடிருந்தவாபோ
லுடல்கலையுறப்புத்தோலினொளித்திடப்போர்த்துவேள்விக்
கடனினுக்குரியவெல்லாங்கவினுறச்சாத்தினனே. (க0௪)

பொங்குறுமோமச்செந்திப்புகையினைப்போர்த்ததென்னப்
பைங்கடல்பருகுமேகம்பரிதியைமறைத்ததென்ன
வங்குறப்புடனேவெங்கோட்டரிணத்தொக்கருணமேனி
யெங்கணும்புதைப்பவேள்வித்தொழிலிலேயிதயம்வைத்தான். (க0௫)

தருமன்மாமதலையந்தச்சடங்குசொற்படியேதொட்டுப்
புரிவுடைத்திசைகளெண்கும்புற்களாற்காவல்செய்து
விரிசுடர்த்தீகண்மூன்றும்விண்ணவர்முகங்களாகச்
சருவையான்முகந்தநெய்யைச்சுருதியாலோமஞ்செய்தான். (க0௬)

முழுதுணர்வரம்பில்கேள்விமுனிவார்குழாமுமென்று
மழிவிலாமலரோனுதியமரர்தங்குழாமுஞ்சூழ
வெழுசுடர்முத்திப்பொங்கவெழுபகலோமஞ்செய்தான்
பழுதறுபாண்டுசெய்தமாதவம்பலித்ததொப்பான். (க0௭)

வேறு.

இம்முறையிராசசூயமாமகத்துக்கெழுதொணாநான்மறையுரைத்த
வம்முறையிமையோரானவர்க்கெல்லாமரும்பெறலவியுணவருளி
மும்முறைவலம்வந்திருவருஞ்சுவாகைமுதல்வனைமுடியுறவணங்கித்
தெம்முறையரசரிடுதிறையனைத்துந்தானமுந்தியாகமுஞ்செய்தான். (௧௦௮)

ஏழுநாளிவ்வாறிமையவரெவர்க்குமிமகிரிதனிலயன்வேட்ட
வூழிமாமகம்போலியற்றியெண்டிசையினுயர்புனல்யாவையுஞ்சொரிய
வாழிவாய்முகிலுமின்னுமேயென்னவரும்புனலாடியபின்னர்
வாழிபாடினர்கணாரதன்முதலோர்மங்கலம்பாடினர்புலவோர். (௧௦௯)

பெயர்பெறுமுனிவரெவர்க்குமெண்ணிரண்டாம்பேருபசாரமும்வழங்கி
யுயர்வறவுயர்ந்தவேள்வியினுயர்ந்தோனுயர்குலப்பாவையுந்தானு
மயர்வறுஞானவடிவமாய்நின்றமாயனைமனனுறவணங்கி
யயர்வறுகங்கைமகன்பதம்பணிவுற்றறன்மகன்வினவினனம்மா. (௧௧௦)

பரிதியுமதியும்வன்னியுமுதலாம்பல்வகைக்குலத்துமுற்பவித்த
நரபதிகுழாத்தில்யாவரேபெறுவார்நவிலுமுற்பூசைமற்றென்னக்
கருதியவசுக்களெண்மரிலொருவன்கங்கையின்றிருமகன்றெய்வச்
சுருதிமாமகஞ்செய்புனிதனைநோக்கித்தொன்முனிவரரையுநோக்கி. (௧௧௧)

ஆர்கொலோவக்ரபூசனைக்குரியாரரசரிலந்தணீருரைமின்
பாரெலாந்தத்தங்குடைநிழற்புரக்கும்பார்த்திவர்யாரையுமுணர்வீர்
தாருலாமார்பீரென்றலும்வியாதன்றருமன்மாமதலையைநோக்கிக்
காரின்மாமேனிக்கரியசெந்திகிரிக்கண்ணனுக்குதவெனக்கதித்தான். (௧௧௨)

என்றபோதந்தவேத்தவையிருந்தோர்யாவருமிருந்துழியிருந்து
நன்றுநான்மறையோர்சிகாமணியுரைத்தநவிரறுநல்லுரையென்றார்
சென்றபோர்தோறும்வென்றியேபுனையுஞ்சேதிபபதிசிசுபாலன்
கன்றினானிதயங்கருகினான்வதனங்கனலெனச்சிவந்தனன்கண்ணும். (௧௧௩)

வேறு.

பூபாலரவையத்துமுற்பூசைபெறுவார்புறங்கானில்வாழ்
கோபாலரோவென்றுருத்தங்கதிர்த்துக்கொதித்தோதினான்
காபாலிமுனியாதவெங்காமனிகரானகவினெய்தியேழ்
தீபாலடங்காதபுகழ்வீரகயமன்னசிசுபாலனே. (௧௧௪)

சூரன்குலத்தோர்குபேரன்குலத்தோர்சுடர்ப்பாவகப்
பேரன்குலத்தோர்கண்முதலோரிருந்தார்கள்பெயர்பெற்றபேர்
வீரங்கொலோவாகுசாரங்கொலோசெல்வமிச்சங்கொலோ
பூரம்புராசிப்புவிக்கென்றுமுதுவோர்கள்பொதுவோர்கொலோ. (௧௧௫)

வேறு.

பராசரமுனிவன்மதலையாம்படியேபகர்ந்தனைபழுதிலாமாற்ற
மிராசமண்டலத்தின்மரபினால்வலியாலேற்றமுந்தோற்றமுமுடையோன்
சுராசுரர்வியக்குங்கஞ்சனைமலைவான்சூரன்மாமகன்வயிற்றுதித்தான்
றராதலமிசையேபிறந்திவன்கற்றதெத்தனையிந்திரசாலம். (௧௧௬)

சொற்றவாநன்றுசுகன்றிருத்தாதைசூதிகைத் * தோன்றியபொழுதே
பெற்றதாய்தானும்பிதாவுமுன்வணங்கப்பேசலாவுரையெலாம்பேசிக்
கற்றமாயையினாற்கன்னியங்கிருப்பக்காரிருட்காளிந்திநீந்தி
யற்றைநாளண்டரானவர்க்கெல்லாமரசனுக்கருமகவானான். (௧௧௭)

---

* சூதிகை - பிரசவித்த வீடு.

ஈன்றதாய்வடிவங்கொண்டுளமுருகியிணைமுலைத்தடத்தணைத்தமுதம்
போன்றபால்கொடுப்பப்பொழிமுலைப்பாலோபூதனையுயிர்கொலோநுகர்ந்தான்
சான்றபெருாலாலுறிதொறுமெட்டாத்தயிருடனறுநெய்பாலருந்தி
யான்றதாய்கண்டுவெடத்தினிற்பிணிப்பவணியுரலுடனிருந்தழுதான். (கக அ)

பாடினான்மறுகுபெருநகைவிளைப்பப்பாவையர்மனைதொறும்வெண்ணெய்க்
காடினனவர்கண்முகந்தொறுமெச்சிலாக்கினன்கன்றுமுன்னேட
வோடினனுவின்பேரிளங்கன்றையுயிருடனொருதனிவிளவிற்
சாடினனாவின்முதுகையும்புள்ளின்குலுவோடலகையும்பிளந்தான். (ககசு)

பின்னியகுஞ்சிக்கோவலர்பயந்தபேதையர்பலரையுங்களிந்த
கன்னியின்மருங்குமோரையின் * மருங்குங்கலையெலாநாணிடக்கவர்ந்தே
முன்னியவின்பச்செருக்கிலேமயக்கிமுரிவிற்காமனுமானு
னன்னியனல்லன்மற்றிவன்பெருமையரசரிலாரறியாதார். (கஉ0)

வேறு.

அண்டர்க்கெல்லாமரசானவாகண்டலனுக்கண்டரினி
துண்டற்கமைத்தபாலடிசிலுண்டானொருநாளொருதானே
கொண்டற்கன்மாரியைமுன்னங்கோவர்த்தனமேகுடையாகச்
சண்டப்பிரசண்டவேகமுடன்றடுத்தானேறுபடுத்தானே. (கஉக)

பம்பிப்பரந்தபுன்மேயும்பசுவின்கன்றுங்கோபாலர்
தம்புத்திரருமம்புயத்தோன்றன்மாயையினுலொளித்திடநா
ளெம்புத்திரருமெங்கோவினிளங்கன்றினமுமெனத்தெளிய
வம்பிற்புரிந்தமாயையிவனல்லாலியாவர்வல்லாரே. (கஉஉ)

அதிரப்பொரும்போரஞ்சினனேவஞ்சாமைகொலோதெரியாது
மதுரைப்பதியுந்தன்கிளையும்வாழ்வுந்துறந்துவாரிதிவா
யெதிரொப்பிலாததுவாரகையென்றியற்பேர்படைத்தமாநகரின்
முதிரப்பொரும்போர்த்தம்முனுடனிருந்தான்பன்னுண்முரணறுத்தே. (கஉங)

வேறு.

கஞ்சனெனுமாமனெனுகொலையமர்விளைத்தான்
வஞ்சனையினலமருமெத்தனைமலைந்தான்
றஞ்சமெனவேமருவுதமரிலொருதானே
மிஞ்சிவிரகாலுரியமேதினிபுரந்தான். (கஉச)

வேறு.

அன்னையுந்தாதைதானுமருஞ்சிறையகத்தவைக
முன்னிருமூவர்முன்னேர்தங்களைமுருக்குவித்தான்
பின்னொருதமையன்றன்னைப்பெற்றதாயிருவரென்றென்
றிக்கிலஞ்சொல்லவைத்தானிவனைவேறியாவரொப்பார். (கஉரு)

என்றுகோண்டெண்ணிநாவுக்கிசைந்தனவுரைகளெல்லா
மொன்றினென்றுச்சமாகவுயர்ச்சியுந்தாழ்வுந்தோன்றக்
கன்றியமனத்தினேடுங்கட்டுரைசெய்தான்மன்றற்
றென்றலஞ்சோலைசூழுஞ்சேதிநாடுடையகோவே. (கஉசு)

வேறு.

இன்னியநெஞ்சினனனசிசுபாலன்றன்னெஞ்சிற்றீங்குதோன்ற
வெண்ணியமன்பேரவையினியம்பியபுன்சொற்களெல்லாமெண்ணியெண்ணிப்
புண்ணியர்வந்தினிதிறைஞ்சும்பூங்கழலோன்வேறொன்றும்புகலானகிப்
பண்ணியதன்புரவிநெடும்பருமணித்தேர்மேற்கொண்டான்பரிதிபோல்வான். ()

* ஓரை - மகளிராடுங்களம்.

எந்நாட்டிலவனிபருமீண்டியவித்தொல்லவையினிசைத்தசேதி
நன்னாட்டுக்கதிபதியாநரபாலநின்மாற்றநன்றுநன்று
கன்னாட்டும்படியாகவிருவோரும்பொருதறிதுங்கடிதேகென்று
தன்னாட்டமிகச்சிவந்தான்கரியவடிவினிற்புனைந்ததண்டுழாயோன். (கஉஅ)

சேதிகுலநரபதியுஞ்செருப்புரிதற்கஞ்சுவனோதேரிலானான்
மோதிவலம்புரியூதமுகிலினங்கண்முழங்குவபோன்முரசமார்ப்ப
வேதியரோடவையிருந்தவேந்தரெல்லாமதிசயிப்பவிமானந்தோறுஞ்
சோதிமுடியமரர்வரநகர்ப்புறத்திலமர்புரியத்தொடங்கினாரே. (கஉகூ)

ஆதி * வருகதிப்பரியுமணிவயிரத்திண்டேருமனிலமென்ன
மோதிவருகடகளிறுங்காலாளும்பொருதுநகர்முடிகள்சோர
யாதவனாநரபதியுமிருங்கிளையும்பெருங்கிளையோடெதிரிலாத
சேதிகுலநரபதியுஞ்செய்தவமர்சுராசுரரிற்செய்தாருண்டோ. (கங0)

வேறு.

யானைமேல்வருநிருபருந்திறல்யானைமேல்வருநிருபருஞ்
சோனைமாமுகிலேழுமேநிகரென்னவம்புதொடுத்தலிற்
றானையாறுநிறைந்துபல்லணியாகிமிஞ்சியசதுர்விதச்
சேனையாவையுமெய்சிவந்தனசிந்தைமாமலர்கருகவே. (கஙக)

ஓரிரண்டுவெருதினிக்குளுமுயர்தடங்கிரியொப்பவே
யீரிரண்டுவிதத்தினாலுமியம்பலுற்றனவெண்ணில்பஃ
றேரிரண்டணியுருளினோடுருள்சென்றுமுட்டினதீயிடிக்
காரிரண்டெதிர்மலையுமாறெனவண்டபித்திகலங்கவே. (கஙஉ)

சிங்கமொன்றுடனொன்றுசீறுசெருக்கெனும்படிசேனைவாய்
வங்கர்கொங்கணர்துளுவராரியர்மகதரொட்டியர்மாளவர்
கங்கர்கொங்கர்தெலுங்கர்சீனர்கலிங்கர்சிங்களர்கௌசல
ரங்கர்சோனகரானவீரரதிர்ந்துதங்களினமர்செய்தார். (கஙங)

வெருவரும்படிசம்புகொம்புவிதங்கொண்மாமுரசாதியா
விருவர்தம்படைகளினுமூழியெழுந்தகாலெனவதிர்தலான்
மருவியெண்டிசைமுகமுநிற்பனமத்தவாரணகன்னமுந்
திருவிரும்புபுயத்துவானவர்செவிகளுஞ்செவிடானவே. (கஙச)

புடைபடக்கிளையாகிவந்தெதிர்பூதுரந்தரர்யாவருந்
தொடைபடப்பரிவுறுமனத்தொடுதொந்தயுத்தமுடற்றினார்
குடையெடுத்தனரிருவரும்பெறுகொடியெடுத்தனர்கொற்றவெம்
படையெடுத்தனர்மாமறைப்பசுபாலனுஞ்சிசுபாலனும். (கஙரு)

வேலினால்வடிவாளினால்வரிவில்லினாலுரைபெற்றவெங்
கோவினாலிருவருமுனைந்திருகுன்றமொத்தனதேரினோர்
மாவினால்வருமத்தயானைகண்மலைவதொத்துமதித்தபோர்
நூலினால்வழுவறமலைந்தனர்நுண்மையாவினுநுண்ணியார். (கஙசு)

வேறு.

வெஞ்சினமுடுகவொருவருக்கொருவர்வெல்லலுந்தோற்றலுமின்றி
வஞ்சினமுரைசெய்துள்ளமுமெய்யும்வாகுபூதரங்களும்பூரித்
தெஞ்சினர்தமைப்போலினைத்தபினினிவானேற்றுதல்கடனெனக்கருதிக்
கஞ்சனைமுனிந்தோனிவன்முடித்தலைமேற்கதிர்மணித்திகிரியேவினனே. (கஙஎ)

---

* ஆதி - மண்டலமாயோடல்.

எவியதிகிரிவீரரைத்தறக்கமேறவிட்டிமிரவியைப்போன்
மேவியபகையாமைத்துனன்முடியைவிளங்குகோளகையுறவீசி
யாவிகளனைத்துநிறைந்தொளிசிறந்தவச்சுதனலைகொள்பாற்கடலிற்
றிவியவமுதமமரருக்களித்தோன்றிருக்கரஞ்சென்றுசேர்ந்ததுவே. (௧௩௮)

சேதிமன்னவன்றன்முடியினைநெடியோன்றிகிரிசென்றரிந்திடவொருபொற்
சோதிமற்றவன்றனுடலினின்றெழுந்துசுடரையும்பிளந்துபோய்மீண்டு
மாதிரமனைத்துமொளியுறவிளக்கிமண்ணளந்தருள்பதமடைய
வேதியர்முதலோர்யாவரும்வேள்விப்பேரவைவேந்தருங்கண்டார். (௧௩௯)

ஈதொருபுதுமையிருந்தவாவென்பாரிந்திரசாலமோவென்பார்
மாதொருபாகனல்லதிக்கண்ணன்மதிகுலத்தவனலனென்பார்
கோதொருவடிவாம்புன்மொழிகிளைஞர்கூறினும்பொறுப்பரோவென்பார்
காதொருகுழையோனிளவலைத்தேர்மேற்கண்டுதங்கண்ணிணைகளிப்பார். (௧௪0)

அதிசயித்திவ்வாறிருந்துழியிருந்தோரனைவருமாழியான்றன்னைத்
துதிசெயத்தருமன்சுதன்முதலெவருந்தொழுதெதிர்வந்துவந்திறைஞ்ச
விதியெனப்பொருதவெங்களத்திடையவ்வியாதமாமுனியெடுத்துரைப்ப
மதியுடைக்கடவுள்விடுமென்முதலாமன்னவர்யாவருங்கேட்டார். (௧௪௧)

ஐவகைவடிவாயெங்குமாய்நின்றவச்சுதனமலனானந்தன்
செய்யொளிதிகழும்பங்கயக்கண்ணன்றிருமகள்கொழுநனைக்காணத்
துய்யசெய்தவத்துத்துருவாசமுனிவன்சேறலுஞ்சுடர்கொள்வைகுண்ட
மெய்யுறுகோயிற்றுவாரபாலகரவ்வேதபண்டிதன்றனைவிலக்க. (௧௪௨)

விலங்கியவிருவர்தம்மையுமந்தவெஞ்சினமுனிவரன்வெகுண்டு
துலங்கியகோயிற்றுவாரம்விட்டவனிதோன்றுமின்போயெனச்சபித்தா
னலங்கலந்துளவமௌலியானதுகேட்டந்தணன்றனையெதிர்கொண்டு
கலங்கியதுவாரபாலர்நின்சாபங்கடப்பதெக்காலமோவென்றான். (௧௪௩)

என்றலுமுனிவன்பரிந்திவரெழுகாலின்புறமன்பராய்வருத
லன்றிமும்மடங்குபகைவராய்வருதலல்லதிங்குன்பதமணுகார்
மன்றலந்துளபமாலையாயென்னமலர்மகன்மகிழ்நனுமவரைக்
கன்றியமறையோன்சாபநீர்கடக்குங்கருத்துமற்றியாதுகொலென்றான். (௧௪௪)

மற்றவரிறைவன்மலரடிவணங்கிவான்பிறப்பேழுறமாட்டே
முற்றமுப்பவமுமுனக்குவெம்பகையாயுற்பவித்துன்பதமுறுவேம்
வெற்றிகொண்முதிர்போர்நேமியாயென்றார்விமலனுங்கொடியவெஞ்சாப
மற்றிடும்வகையவ்வரமவர்க்களித்தானசுரராயவரும்வந்துதித்தார். (௧௪௫)

இரணியனிரணியாக்கனென்றுரைக்குமியற்பெயரிருவருமெய்தி
முரணியகொடுமைபுரிந்துமூவுலகுமொய்ம்புடன்கவர்ந்திடுநாளி
லரணியினழல்போனரவரியுருவாயச்சுதன்றூணிலங்குரித்துத்
தாணியினுகிராற்பிளந்துமுன்னுகத்திற்றன்பகைசெகுத்தனன்பின்னும். (௧௪௬)

அரக்கர்தங்குலத்துக்கதிபதியாகியாண்டுபோய்மீண்டுமெங்குரித்துத்
தருக்குடனவர்களிருவருமுறையாற்றம்பியுந்தமையனுமானார்
சிரக்குவையுடனேபுயவரைநிரையுஞ்சிந்தவச்சிந்தவினிடையே
சரக்குவைசொரிந்தானமலனவ்வுகத்துத்தசரதன்றன்வயிற்றுதித்தே. (௧௪௭)

இந்தநல்லுகத்திலிறைவனுக்கன்னேரிருவருங்கிளைஞராயெய்தி
வந்தனர்வஞ்சக்கஞ்சமாமனுமிம்மைத்துனன்ருனுமாய்மன்னே
சிந்தையிலுணர்வீரென்றுகொண்டுரைந்தான்சித்தசித்துணர்ந்தருண்முனியு
மந்தமன்னவையினிருந்துளோரெல்லாமமலனைத்துதித்ததிசயித்தார். (கசஅ)

வீடுமன்விதுரன்றுரோணனேமுதலாம்விரகிலாவுணர்வுடைவேந்தர்
நாடினர்மனத்திற்புளகமுற்றுடலகயனநீர்மல்கநாக்குழறிப்
பாடினர்புகழ்ந்துபரவினர்பரவிப்பைந்துழாய்கமழ்மலர்ப்பாதஞ்
சூடினர்சுருதிக்கெட்டொணுதொளிருஞ்சுடர்மணித்துய்யசோதியையே. (கசகூ)

அப்பொழுதமலனருஞ்சினமொழிந்தாங்கருளுடையறத்தின்மைந்தனைப்பார்த்
திப்பொழுதரசரானவர்க்கெல்லாமிருஞ்சிறப்புதவுகென்றிசைப்ப
முப்பொழுதுணருமுனிவரன்பணியான்முறைமுறைபூசனைபுரிந்தான்
மைப்பொழுதொளிகூர்வெண்ணிலவுமிழுமதிகுலத்துதித்தருண்மன்னன். (கருo)

அருமறைமுறையாலரசனைமுனிவரனைவருமாசிசொற்றருளித்
தருநிரைபயிலுந்தத்தமவிபினஞ்சார்ந்தனர்தகவுடன்மீளக்
கருமுகிலனையமேனியங்கருணைக்கண்ணனுங்கிளையுடன்றுவரைத்
திருநகரடைந்தான்சென்றுவன்றிறல்கூர்சேதிபப்பெரும்பகைசெகுத்தே. (கருக)

அராவவெங்கொடியோனுதியாவுள்ளவரசருந்தந்நகரடைந்தார்
விராடனும்யாகசேனனுமுதலாம்வேந்தருந்தம்பதிபுகுந்தார்
சராசனத்தடக்கைச்சல்லியன்முதலோர்கிளையுடன்றம்புரஞ்சார்ந்தார்
பராவருமுதன்மைப்பாண்டவர்கடற்பார்பண்புறத்திருத்தியாண்டிருந்தார். (கருஉ)

முன்குலத்தவர்க்குமுனிகுலத்தவர்க்குமும்மதக்கைம்முகக்களிற்று
மன்குலத்தவர்க்கும்வான்குலத்தவர்க்கும்வரம்பிலாவகைக்கலைதெரியு
நன்குலத்தவர்க்கும்பொருளெலாநல்கிநாடொறும்புகழ்மிகவளர்வான்
றன்குலக்கதிர்போற்றேய்ந்தொளிசிறந்தான்றண்ணளித்தருமராசனுமே. (கருங)

ஆ செய்யுள் - கூளங.

இராசசூயச்சருக்கமுற்றிற்று.

---

# சூதுபோர்ச்சருக்கம்.

ஞானமாகியபரம்பரவமிழ்தமாய்நவிரறுமயக்காகி
வானமாயுடன்வாயுவாய்த்தேயுவாய்வனமுமாய்மண்ணாகித்
தானமாமறைமுறைமையிற்பற்பலசராசரங்களுமாகி
யேனமாயிவையனைத்தையுமருப்பிறுலேந்திஞனெனையாண்டோன். (க)

வேறு.

தாமரையனையசெங்கட்டரணிபனிராசசூய
மாமகமுற்றித்தங்கண்மாநகர்புகுந்தபின்னர்
நாமருபனுவன்மாலைநாகவேறுயர்த்தசெல்வக்
கோமகனினைந்ரோடிங்குறித்ததுகூறலுற்றும். (உ)

கலைவரும்வரிவில்வாழ்க்கைக்கடுங்கனலனையதோற்றத்
துணைவருந்தானுங்கங்காசுதனுமற்றெவருஞ்சூழ
வினைவருமாசில்லாவிகலரியேறுபோல்வான்
மனைவருமோதைமூதூர்க்கிளர்நெடும்புரிசைபுக்கான். (௩)

சென்றுழியெவருந்தத்தஞ்செழுமனையெய்திவாசந்
துன்றியவமளிகண்டுற்றுயில்புரிந்தெழுந்தபின்னை
நின்றவெம்பரிதித்தோற்றந்தொழுதுதந்நியமமுற்றி
வன்றிறலரசன்கோயின்மன்னவைவந்துசேர்ந்தார். (௪)

இறைஞ்சியவேந்தர்க்கெல்லாமிருப்பளித்தெதிர்ந்தவேந்தர்
நிறஞ்செறிகுருதிவேலானினைவினோடிருந்தபோதி
லறஞ்செறிதானம்வண்மையளவிலாதளித்துநாளும்
புறஞ்சுவர்கோலஞ்செய்வான்பூபதிக்குரைக்கலுற்றான். (௫)

தாதவிழ்குவளைமாலைத்தருமன்மாமதலைபெற்ற
மேதருவேள்விச்செல்வம்வேந்தரில்யாவர்பெற்றா
ரேதளவவன்றன்வாழ்க்கையாரினியெதிருண்டென்று
பாதகனினைவைத்தானும்பகர்ந்தனன்பரிவுகூர. (௬)

விதரணவினோதன்சொன்னவார்த்தையும்வேந்தர்வேந்த
னிதயமுமொன்றாய்நின்றவியற்கையைச்சகுனிகண்டு
புதைநகைமடங்கனாளும்புறஞ்செலாதொடுங்குமானன்
மதகரிவிடுமோவென்றான்வசையிசையாகக்கொள்வான். (௭)

சொல்லிடைநஞ்சுகக்குந்துன்மதியுடையதம்பி
வில்லிடைநின்றுதம்முன்வெம்மனங்களிக்கச்சொன்னா
னல்லிடைநிறைந்ததேனுமமுதவெண்கிரணத்திங்க
ளெல்லிடையிரவிமுன்னரெவ்வழிநிகர்க்குமென்றே. (௮)

தமையனுந்தம்பிசொன்னதன்மையையுணர்ந்துநீதி
யமைதருதந்தைகேட்பவவன்பெருந்தாதைகேட்பக்
கமைபெறுவிதுரன்கேட்பக்கார்முகக்கன்னன்கேட்ப
விமையவன்றுரோணன்கேட்பயாவருங்கேட்பச்சொல்வான். (௯)

இந்திரன்முதலாவுள்ளவிமையவர்சிறப்புச்செய்யச்
சுந்தரப்பொற்றோள்வேந்தர்தொழில்புரிந்தேவல்செய்ய
மந்திரமுனிவர்வேள்விமறைநெறிமுறையிற்செய்யத்
தந்திரவெள்ளச்சேனைத்தருமனேதலைவனானான். (௧௦)

இனியவன்சின்னாட்செல்வினெம்மனோர்வாழ்வுங்கொள்ளுந்
தனிவரும்புரவித்திண்டேர்த்துணைவருஞ்சூரானோர்
முனைவருகூர்முள்வேலைமுனையிலேகளையினல்லா
னனிவரவயிர்த்தபோதுநவியமுமடியுமன்றே. (௧௧)

போதறவிரைந்துமற்றப்புரவலன்செல்வம்யாவும்
பேதுறக்கவர்ந்திலேனேற்பின்னையார்முடிக்கவல்லார்
மோதுறப்பொருதேயாதன்மொழியொளுவஞ்சமொன்று
நீதுறப்புரிந்தேயாதல்கொள்வதேசிந்தையென்றான். (௧௨)

என்னனுமுரியதம்பியெழுவதேகருமமின்றே
செந்நெலின்வாளைபாயுஞ்செல்வநாடுடையகோமா
னென்னலங்கெய்தவீமனகைத்ததுநேயமான
கன்னலின்மொழியாண்மூரல்விளைத்ததுங்கண்டிலீரோ. (கங)

எத்தனைதரணிவேந்தர்யாகநல்விழாவில்வந்தா
ரத்தனைபேரில்யாமுமொருவராயடங்கினின்றேங்
கொத்தனையுகளுநன்னீர்க்குருநிலக்கோமானந்த
முத்தனையன்றிப்பின்னையாரையேமுதன்மைசெய்தான். (கச)

நந்தகோமகனுக்கெல்லாநல்கியமுதன்மைகண்டு
வந்தகோவெள்ளஞ்சேரவாய்திறவாமனிற்ப
வெந்தகோவிவனுக்கிந்தமுதன்மையென்றெதிர்ந்துமாற்றந்
தந்தகோமடியுமாறுசமரமும்விளைப்பித்திட்டான். (கரு)

தன்புயவலியுநான்குதம்பியர்வலியுமாயன்
வன்புயவலியுங்கொண்டேமண்ணெலாங்கவரவெண்ணி
யின்புயச்சிகரிமன்னர்யாரையுந்தன்கீழாக்கி
மின்புயலனையான்மேன்மைவிளக்கவேவேள்விசெய்தான். (கசு)

எல்லியல்பரிதியன்னயதுகுலமன்னன்ருனுஞ்
சல்லிய *மிகுபோர்செய்யச்சல்லியன்றன்மேற்சென்ருன்
சொல்லியகருமம்வாய்ப்பச்சூழ்வலைப்படுத்திக்கொண்ட
வல்லியமென்னச்சூழ்ந்துமலைவதேகருமமென்ருன். (கஎ)

வேந்தனுமொருப்பட்டந்தவெண்ணெய்வாய்க்கள்வன்மீளப்
போந்திவர்தமக்குமின்றுபொருதுணையாகமாட்டான்
சாந்தணிகுவவுத்தோளான்சல்லியன்வலியனிப்போ
தாந்தகவெண்ணில்வல்லேயையவரையடர்க்கலாமே. (கஅ)

வஞ்சனைகொண்டேயாதல்வாரணமணித்தேர்வாசி
நஞ்சனையவராலாதனுளையேயழித்தல்வேண்டுங்
கஞ்சனைமலையவெண்ணிக்கரியபேய்முலைப்பாலுண்ட
நெஞ்சினனெய்தாமுன்னகீர்விரைந்தெழுமினென்ருன். (கசு)

வெஞ்சிலைகுனித்தோரம்பியான்விடின்வெகுண்டவேந்த
ரெஞ்சிவிண்புகுவரல்லால்யாவரேயெதிர்க்கவல்லார்
வஞ்சனைகொண்டுவெல்லமதிப்பதுவாளால்வெல்ல
வஞ்சினமாயினன்றேவென்றனனங்கர்கோமான். (உ0)

யாவருமொழிந்தவார்த்தையின்புறக்கேட்டுப்பின்னுந்
தாவருபுரவித்திண்டேர்த்தானையான்சகுனிசொல்வான்
மேவருகன்னனன்றிவிண்ணுளோரெதிர்ந்தபோதுங்
கோவருமுன்றிலானைக்கொடுஞ்சமர்வெல்லலாமோ. (உக)

இடிம்பனைப்பகனைவைவேவிகற்சராசந்தன்றன்னை
நெடும்பணைப்புயத்தால்வென்றநிகரிலாவீமனிற்கக்
கடும்படைப்பெருமையால்வென்காணலாமென்பராயிற்
றெடும்படைத்தடக்கைவீரர்க்குத்தரஞ்சொல்லலாமோ. (உஉ)

---

* சல்லியம் - கலக்கம்.

துப்புறழமுதச்செவ்வாய்த்திரௌபதிநணைத்தோள்வேட்டுக்
கைப்படுசிலையினேடுங்காவலர்கலங்கிவிழ
மெய்ப்படுமுனியாய்வந்துவிசயன்வில்லிறுத்தபோது
மிப்பொழுதிருந்தவீரர்யாவருமிருந்திலேமோ. (உ௩)

இப்பிறப்பொழியவின்னுமேழெழுபிறப்பினுலு
மெய்ப்பிறப்பற்றநீதித்தருமனைவெல்லமாட்டோ
மொப்பறப்பிணைத்ததோளாயுபாயமெங்கேனுமொன்றுற்
றப்பரச்சூதுகொண்டுசெதிப்பதே * கருமமென்றான். (உ௪)

தன்பெருமாமன்சொல்லத்தாணிபன்றம்பிதானும்
வன்பெருஞ்சேனைகொண்டுமேலவதற்கவர்களஞ்சா
ரின்பெருநேயமிக்கவிவன்மொழிப்படியேமாயப்
புன்பெருஞ்சூதுகொண்டுபொருவதேபுந்தியென்றான். (உ௫)

கோமகனெஞ்சுநாவுங்குளிர்ந்துபேருவகைகூர்ந்து
மாமனைத்தவிசின்கண்ணேவருதியென்றிருத்திக்கொண்டு
பாமருபனுவன்மாலைப்பாண்டவர்தம்மைநின்கைக்
காமருசூதால்வெல்லுங்கருத்தெனக்குரைத்தியென்றான். (உ௬)

மன்னநின்செல்வக்கோயின்மண்டபமொன்றுதேவர்
பொன்னுலகினுக்குமில்லையென்பதோர்பொற்பிற்றுகப்
பன்னுநூற்சிற்பங்குன்றாப்பஃறொழில்வினைஞர்தம்மா
லன்னிலவிரிவுண்டாகநாளையேயியற்றுவிப்பாய். (உ௭)

மண்டபங்காணவெம்முன்வருகவென்றழைத்துவந்தாற்
கண்டுகண்களித்துமற்றக்காவலரிருந்தபோதிற்
புண்டரவிசாலநெற்றிப்புரவலபொழுதுபோக
வண்டரும்விரும்பும்வன்சூதாடுதும்வருகவென்பேம். (உ௮)

அதிர்முரசுயர்த்தகோவுமையெனத்துணியும்பின்னை
மதிமருளியற்கைத்தாகுமாயவெஞ்சூதுதன்னால்
விதியெனப்பொருதுவாழ்வுமேதகுமரசுந்தங்கள்
பதிமுதற்பலவுந்தோற்கும்படிசெகுத்திடுவலென்றான். (உ௯)

இன்னதேகருமமென்றென்றினைரும்விழைந்துசொன்னு
ரன்னதேகருமமாகவவர்வழியொழுகுநீரான்
நன்னதேயாகுமிந்தத்தலமெனுங்கருத்தான்மாமன்
சொன்னதேதுணிந்துமார்புந்தோள்களும்பூரித்திட்டான். (௩ο)

வில்லினுலுயர்ந்தவென்றிவிதுரனைநோக்கிக்கொற்ற
மல்லினுலுயர்ந்தபொற்றோள்வலம்புரிமாலைவேந்தன்
வல்லினுலுபாயம்செய்யமாதுலனுரைத்ததெல்லாஞ்
சொல்லினனவனுங்கேட்டுச்சொல்லெதிர்சொல்லலுற்றான். (௩௧)

வையமுமரசும்வாழ்வும்வாங்குகைகருத்தேயாயிற்
பொய்படர்சூதுகொண்டுபுன்மையிற்கவரவேண்டா
மையநின்றந்தையோலையவருக்கெழுதிவிட்டான்
மெய்யுறமறுத்துச்சொல்லார்வேண்டினதருவரன்றே. (௩உ)

* சதித்தல் - அழித்தல்.

தந்தைதன்னேவலாலேதருமனுந்தம்பிமாரு
மிந்தமண்ணுடல்கைவிட்டெரிகெழுகானஞ்சேர்வர்
முந்துறநுமதேயாகுமுழுதும்வாழ்வெழுதுஞ்செம்பூம்
பைந்தொடையரசர்கேட்டாற்பாவமும்பழியுமாகா. (௩௩)

தீதினல்வரித்துநெஞ்சந்தியவராடுமாயச்
சூதினல்வென்றுகொள்கைதோற்றமும்புகழுமன்று
போதினன்முகனுமாலும்புரிசடையவனுங்கேள்வி
யாதிநான்மறையுமுள்ளவளவுமிவ்வசையருதே. (௩௪)

என்றவனுரைப்பக்கேட்டேயெரியெழுமனத்தனுகி
யொன்றியகேண்மைத்தந்தைக்கொருபுடைவாரமுண்டோ
வன்றிறன்மைந்தர்வாழ்வுவாங்கியின்றெமக்குத்தந்தாற்
புன்ருெழில்வசையேயன்றிப்புகழ்கொலோபுகல்வதம்மா. (௩௫)

நினக்கிதுதொழிலாமென்றுநேயமுமவர்கண்மேலே
யெனக்குயிர்த்தந்தைநீயென்றியானுனைமகிழ்ந்துகாண்ப
னுனக்குமுன்கிளைக்குநாளுமுண்டியும்வாழ்வுமிங்கே
மனக்கருத்தங்கேயென்ருன்மாசுணத்துவசன்மாதோ. (௩௬)

மைந்தனங்குரைத்தமாற்றமனத்தினையீரப்பின்னும்
வெந்திறல்விதுரனுற்றுவிளம்புவனென்பமாதோ
புந்தியின்மறுவிலாதோய்புதல்வரிலொருசாரன்பு
தந்தையர்க்கில்லையென்ருயானுமத்தந்தையன்ருே. (௩௭)

நீங்களுமவருநேயநெறிமுறைதவருதென்றும்
வாங்குநீருததியாடைமண்ணின்மேல்வாழ்தலுற்ருற்
பாங்கலாவரசரெல்லாம்பணிந்துநும்வாயினிற்ப
ரோங்கியபுகழும்வாழ்வுமொருப்படவளருமன்றே. (௩௮)

உங்களினவருநீருமுளம்பிரிந்தெதிர்த்திரானுற்
றங்களினெதிர்ந்தாரம்மாகுருகுலத்தலைவரென்னுப்
பொங்களிங்கழுங்கஞ்சப்புரவலனெழிவுகண்ட
திங்களினுயர்ச்சிபோலத்தெவ்வருந்திகழ்வரன்றே. (௩௯)

ஆதலாலுறுதிசொன்னேனுமுறைதெரிந்துகோடி
யேதிலார்போலயானுமினியுனக்கியாதுஞ்சொல்லேன்
றீதலாதுணராவஞ்சச்சிந்தையார்பரிந்துகூறுங்
கோதலாதுனக்கிங்கேலாதெனச்சிலகூறினனே. (௪0)

நிறுத்தறம்வளர்ப்போனெஞ்சினீதியுங்குரவரேவன்
மறுத்தெதிருரைக்குமென்பால்வடிவுநீவரைந்துகண்டாய்
செறுத்தவராவிகொள்வாயடியனேன்செய்ததெல்லாம்
பொறுத்தருளென்னக்கையாற்போற்றினன்முறுவல்செய்தான். (௪௧)

செழுந்திருவிரும்புமார்பன்செப்பியகொடுமைகேட்டு
விழுந்திரண்மாலைத்திண்டோள்விதுரனும்வெகுண்டுமுன்னித்
தொழுந்தகைமௌலிவேந்தன்சூழ்ச்சியிற்கிசைவுருமை
லெழுந்துதன்கோயில்புக்கானிகலரியேறுபோல்வான். (௪௨)

புரிவிலாமொழிவிதுரான்போகலும்புரிவிலொன்றுஞ்
சரிவிலாவஞ்சமாயச்சகுனியுந்தம்பிமாரும்
விரிவிலாமனத்தோடென்றும்விசாரமே * விசாரமாக
வரிவிலான்விரைவினின்டோர்மண்டபஞ்சமைக்கவென்றான். (௪௩)

பெருந்தகையேவன்மாற்றம்பிற்படமுற்பட்டோடி
யிருந்ததொல்வேந்தர்தத்தமிருக்கையினியன்றவெல்லா
மருந்திறன்மள்ளராலுமணிமணித்தேரினாலும்
பொருந்தவேகொணர்வித்தாய்கட்பொற்சுவரியற்றினாரே. (௪௪)

சங்கையில்சிற்பநூன்முற்றபதியர்தகவுகூரச்
செங்கையினமைத்தகோலச்சித்திரத்தூணநாட்டி
யங்கையிலருணரத்நத்தணிகொளுத்திரமுமேற்றிக்
கங்கையினுயர்ந்தமுத்தின்கற்றையான்முற்றும்வேய்ந்தார். (௪௫)

ஓவியஞ்சிறக்கத்தீட்டியொண்கொடிநிரைத்துச்செஞ்சொற்
காவியமாக்கட்கெல்லாங்கருத்துறுகவினிற்றாகி
வாவியபுரவித்தின்டேர்மன்னவனினைவுக்கேற்ப
வேவியவினைஞர்தம்மாலியல்புறச்சமைந்ததன்றே. (௪௬)

மன்னவைக்கானபைம்பொன்மண்டபஞ்சமைந்ததென்று
தன்னவைக்குரியோர்சொல்லச்சகுனியுந்தானுநோக்கிச்
சொன்னவைக்கேற்றதென்றுதொழுதகுதாதைதன்பான்
மின்னவைத்தொளிரும்வேலான்மேவினன்விளம்பலுற்றான். (௪௭)

அரும்பெறலையகேட்டியடி... ன்கருத்துமுற்றக்
கரும்புயறவழுஞ்சென்னிக்கதிர்மணிக்கூடமொன்று
பெரும்புகழ்நகரினின்டுச்சமைத்தனன்பெருமைகாண
வரும்படிதூதொன்றேவுன்மைந்தரைவிரைவினென்றான். (௪அ)

மகன்மொழிநயந்துகேட்டுவாழ்வுறுதந்தைதானு
மிகநயந்தருகிநல்லவிரகினால்வெல்லலுற்றி
நக † நெமெம்போர்செய்தாலுமைவலாயடர்க்கொணாது
சகுனியையன்றிவேறார்தரவல்லார்தரணியென்றான். (௪௯)

விழிவிலாவென்றிவேந்தன்விதுரனையழைத்துநீபோய்
மொழிவிலாருலகின்மற்றுன்மொழியினைமறுக்கவல்லார்
பழிவிலாவிசைகொணீதிப்பாண்டவர்வந்துன்மைந்தர்
வழிவிலாயொழுகும்வண்ணமருட்டிநீகொணர்தியென்றான். (௫௦)

தம்பியர்விழைவாற்கூடஞ்சமைத்தபேரழகுகாண
விம்பர்வந்தெமையுமெய்தியேகுகவிரைவினென்னப்
பைம்பொனின்றேலேமீதுபண்புறவெழுதியின்னே
யெம்பியுமேகுகென்றானேவலினவனும்போனான். (௫௧)

காரெனக்களிறுசுற்றக்காற்றெனப்புரவியீண்டத்
தேரினுக்கொருவன்றன்னேச்சிலம்பெனத்தேர்கள்சூழ
வீரிற்பலரும்போற்றவிதுரனுமிரண்டுநாளாற்
பாரினுக்குயிரேபோலும்பாண்டவர்நகரிசேர்ந்தான். (௫௨)

* விசாரம் - ஆராய்ச்சி. † அகம் - வருத்தம்.

வே று.

புரியுமொண்கதிர்கவினுறுபொலிவினற்பொன்னுலகாமென்ன
வரியபைம்பொனின்பணிகளினிறைந்தசீரளகைமாநகரென்னத்
தெரியுமன்புடனறங்குடியிருப்பதோர்தெய்வவான்பதியென்ன
விரியும்வெண்கொடிப்புரிசைசூழ்வளநகர்விழிகளித்திடக்கண்டான். (ருங)

ஊடெலாநறும்பொய்கைநீள்வாவியினுடம்பெலாமலர்பூவின்
றோடெலாமெழுசுரும்பினமதுகரச்சொல்லெலாஞ்செழுங்கீதம்
பாடெலாமிளஞ்சோலைமென்பொங்கரின்பணையெலாங்குயிலோசை
நாடெலாநெடும்புனல்வயல்கழனியினடுவெலாம்விளைசெந்நெல். (ருச)

அருகெலாமணிமண்டபமவிரொளியரங்கெலாஞ்சிலம்போசை
குருகெலாம்வளர்பழனமப்புள்ளெலாங்கூடலின்புறவூடன்
முருகெலாங்கமழ்துறையெலாந்தரளம்வெண்முத்தெலாநிலாவெள்ளம்
பருகெலாம்புனனதியெலாநீரெலாம்பங்கயப்பசுங்கானம். (ருரு)

ஆனகம்பலமுழங்கவந்தெதிர்பணிந்தா துலர்க்கமுதன்ன
போனகம்பரிந்திடுநெடுஞ்சாலையேபுகுந்தமாமறுகெல்லாம்
வானகந்தனையமையுமென்றும்பருமண்ணின்மேல்வரவெண்ணு
ஞானகஞ்சுகனகரியையெங்ஙனேநாம்வியப்பதுமன்றே. (ருசு)

வந்தனன்சிலைவிதுரனென்றோடிமுன்வந்தவருரையாமுன்
றந்தைதன்றனிவரவறிந்திளைஞருந் தருமனுமெதிர்கொண்டார்
சிந்தையன்புடன்முழுத்தொழுமைந்தரைச்செங்கையாற்றழீஇக்கொண்டே
யந்தணம்புலிகண்டபைங்கடலெனவவனுமெய்குளிர்ந்திட்டான். (ருஎ)

கொண்டுதந்தையைத்தாமும்வண்கொடிமதிற்கோபுரநெடுவீதி
யண்டராலயமெனத்தகுகோயில்சென்றடைந்தபினடல்வேந்தர்
வண்டுதாமரைமலரெனச்சுழலுமாமலரடிபணிந்தேத்தக்
கண்டுவாழ்வுடனவர்க்கருள்புரிந்துதன்கருத்தினல்விடையீந்தான். (ருஅ)

தானுமைந்தரோரைவருமொருபுடைதனித்திருந்தழிவண்டு
தேனுகர்ந்திசைமுரல்பசுந்தொடையலான்றிருத்தகமொழிகின்முன்
கோனுவன்றுதன்றிருமுகமெழுதிநீகொணர்கமைந்தரையென்ன
யானும்வந்தனனேவலாலழைத்ததற்கேதுவுமுளதன்றே. (ருகூ)

நீபுரிந்தநல்வேள்வியின்கடன்கழித்தியாவருநெடுமாடக்
கோபுரந்திகழ்முதெயில்வளநகர்க்கோயில்புக்கனமாக
நூபுரந்திகழிணையடியரம்பையர்நோக்கருங்கவின்கொண்ட
மாபுரந்தரனிவனெனவிருந்தனன்வலம்புரிமலர்த்தாரான். (சு0)

தம்பிமாரொடுந்தகையிலாத்தன்மதிச்சகுனிதன்னொடுமெண்ணிக்
கும்பமாமணிநெடுமுடிநிரைத்தவண்கூடமொன்றமைக்கென்ன
வம்புராசிசூழ்மண்டலத்தரசெலாமடங்குபேரவைத்தாக
வும்பராலயநிகரெனச்சமைத்தனரொட்பநூலுணர்வுற்றோர். (சுக)

பெற்றதந்தையோடுள்ளுறுமுணர்வெலாம்பேசிமண்டபந்தன்னிற்
கொற்றவன்குடிபுகும்பொழுதுன்னையுங்கூட்டிமன்னவைமுன்னர்
மற்றமாதுலனெஞ்சமேவஞ்சமேமாயமேவகுத்தாங்குக்
கற்றசூதினின்னுடன்பொருநினைவினன்கருத்தினித்தெரியாதே. (சுஉ)

திருதராட்டிரன்றிருமுகமிதுவெனச்சென்றிறைஞ்சினன்வாங்கி
விரதமாக்கமென்றறிந்தறம்பெறுவான்வினைஞர்கைக்கொடுத்திட்டா
னிரதமாற்றமங்கெழுதியபடியினாலியம்பலுமதுகேட்டு
வரதனாற்பணிப்புறுதொழில்யாவர்காமறுக்கவென்றுரைசெய்தான். (௬௩)

முந்தநாளைதன்றலையுமிளையவன்மொழியுமொத்தமைநோக்கி
வார்த்தைவேறுமற்றொன்றையுமுரைத்திலன்மனுநெறிவழுவாதோன்
சேந்தநாகவெங்கொடியவன்கொடியவன்சிந்தையினிலைதோன்றக்
கோத்தகோவைகண்டாயினுந்தருவதோகுருகுலந்தனக்கென்றான். (௬௪)

அடியுமாண்மையும்வலிமையுஞ்சேனையுமழகும்வென்றியுந்தத்தங்
குடியுமானமுஞ்செல்வமும்பெருமையுங்குலமுமின்பமுந்தேசும்
படியுமாமறையொழுக்கமும்புகழுமுன்பயின்றகல்வியுஞ்சேர
மடியுமான்மதியுணர்ந்தவர்சூதின்மேல்வைப்பரோமனம்வையார். (௬௫)

குழகராயிளமடந்தையர்க்குருகுவோர்குறிப்பிலாமையினாலும்
பழகுவார்மிகச்சிந்தைநோய்தாங்களேபடுக்குமாறணைராம
லழகுபேறிவாகவேகொண்டவரறத்தொழில்புரியாமற்
கழகமாடவும்பெறுவரோவிதனினுங்கள்ளுணலினிதன்றே. (௬௬)

மேதகத்தெரிஞானநூற்புலவரும்வேத்துநூலறிந்தோரும்
பாதகத்திலொன்றென்னவேமுன்னமேபலபடப்பழித்திட்டார்
நீதகப்படுபுன்றொழிலினைஞரிற்சிந்தனைசிறிதின்றித்
தோதகத்துட*னென்னையோசகுனிதன்சூதினுக்கெதிரென்றான். (௬௭)

தன்கருத்தினினிகழ்ந்தவாறிம்முறைதருமன்மைந்தனுங்கூறி
யென்கருத்தினாற்பெறுவதென்விதியினையாவரேயெதிர்வெல்வார்
மன்கருத்தையுமவன்றிருவுளநிகர்மகன்கருத்தையுநோக்கி
நின்கருத்தைநீயுரையெனவிதுரனுநிகழ்ந்தனவுரைக்கின்றான். (௬௮)

இங்குநீயெனக்கியம்பியயாவையும்யானுமன்னவர்கேட்ப
வங்குநீர்மையின்மொழிந்தனனென்மொழியார்கொலோமதிக்கிற்பார்
பொங்குநீருடைப்பூதலத்தலைவகேள்புனைந்தநின்னிதயத்துத்
தங்குநீர்மையிற்புரிகெனப்புதல்வனைத்தந்தையுந்தகச்சொன்னான். (௬௯)

அன்றுதாழ்புனற்றுறையினிற்கழுநிரைத்தரியவஞ்சனைசெய்தான்
குன்றுபோலுயர்வாழ்மனைக்கொடுந்தழல்கொளுத்திவன்கொலைசூழ்ந்தான்
வென்றுசூதினில்யாவையுங்கவரவேவிரகினாலழைத்திட்டா
னென்றுநானமக்கன்புடைத்துணைவனாயிருந்ததவ்விகலோனே. (௭௦)

முளையிலேயுயிர்கொல்வதோர்கடுவிடமுற்றிவன்காழேறி
விளையிலேதுசெய்யாதுமற்றவருடன்விழையுநண்பினிவேண்டாம்
வளையிலேதமேபுரிந்துமென்மலைந்திடும்வன்படைகொடுமோதிக்
களையிலேநமக்கிருப்புளதென்றனன்காற்றருள்கூற்றனான். (௭௧)

தேறலார்தமைத்தேறலுந்தேறினர்த்தேறலாமையுமென்று
மாறலாருடன்மலைதலுமாறுடன்மருவிவாழ்தலுமுன்னே
யாறலாதனவரசருக்கென்றுகொண்டரசநீதியிற்சொன்னார்
கூறலாதனசொல்வதென்செல்வதென்கொடியவனருகென்றான். (௭௨)

* தோதகம் - வஞ்சகம்.

விசையனிவ்வகைமொழிந்ததுமுந்துறுவீமன்மாற்றமுங்கேட்டே
யிசைபெறும்பெயர்நகுலனுந்தம்பியுமேகுதறகாதென்றூர்
வசையறும்புகழ்த்துணைவரின்றுரைத்ததேவார்த்தையாயினும்பெற்ற
வசைவிலன்புடைத்தந்தைசொன்மறுப்பதோவென்றனனறஞ்செய்வான். (எ௩)

ஆவியார்நிலைபெறுபவர்நீதிகூரரியவான்புகழன்றிப்
பாவியான * தங்கணுகுருதொழிலினும்பலித்திடுநிலைவின்றி
மேவியாளுடையையன்வந்திருக்கவும்வேறிவண்டெழுமன்றற்
காவியார்தொடைக்காவலனேவனுமறுப்பதுகடனன்றே. (எச)

நாளையேகுதுமெந்தைவாழத்திருநகர்க்கெனத்தருமன்றன்
காளையேவலின்முரசறைந்தெங்கணுங்காவலர்குழூஉக்கொண்டார்
வேளையேறியவரும்படைத்தலைவருமேல்வரும்புனலூடு
வாளையேறுதண்பழனநாட்டெறிபடைமன்னரும்வந்துற்றூர். (எ௫)

மாதுரங்கமமணிநெடுந்தேர்மதவாரணம்வயவீரர்
சாதுரங்கமுந்தந்திரத்தலைவருந்தரணிமன்னருஞ்சூழ
மீதுரங்கவின்கெழுபெருஞ்சேனைசூழ்வேந்தன்மாநகருற்ற
போதுரங்கமுநெளிந்தனபஃறலைபொருமையினிருநான்கும். (எசு)

ஐந்துபூதமேநிகரெனப்புலன்களோரைந்துமேயெதிரென்ன
வைந்துகாவுமேபொருவெனப்பணிமுடியைந்துமேநேரென்ன
வைந்துவாளியேயுறழ்வெனவேள்வியோரைந்துமேயொப்பென்ன
வைந்துவாசமேதரமெனவைவருமைந்துதேர்மேல்கொண்டார். (எஎ)

விழியினெஞ்சின்வானெருப்பினீடுதீயின்விதிபடைப்பினிற்றோன்றிப்
பொழியும்வெண்கதிரைவகைமதியு † மப்பொழுதுதித்தனவென்ன
மொழியுமைந்துபொற்றனிக்குடைநிழற்றினமுழுமதிவடிவின்க
ணிழியும்வெண்சுடர்க்கற்றையிற்சாமரமிரட்டினவிருபாலும். (எஅ)

மைத்திறத்தினின்றதிர்வனமுதிர்வனவரைத்திறத்தினுமோங்கு
மெய்த்திறத்தனவெழுதிறத்தினுமிகவிடுவனமததாரை
யெத்திறத்தினும்பொருதொழில்புரிவனவேழுறுப்புறத்தாழ்ந்த
முத்திறத்தனவெண்ணலப்பிறப்பினமூரிவெங்களியானை. (எகூ)

வன்றபோதனரினுமிகுபொறையனவலனுயர்வனவெண்கோ
வென்றபோதகத்தானையின்பெருமையையெங்ஙனம்புகல்கிற்பா
நின்றபோதுடன்முகிலிடைமறைந்ததுநிரைநிரைநெறிப்பட்டுச்
சென்றபோதுவெம்படைக்கடற்செய்ததோர்சேதுபந்தனம்போலும். (அ0)

சுற்றுநீளமுமுயரமுநிகர்ப்பனசுழியின்மிக்கனதீமை
யற்றுமேதகுநிறத்தனகவினுடையவயவத்தனவாகி
வெற்றுமாமணிமுரசமுஞ்சங்கமுமெனுங்குரன்மிகுத்திப்பார்
முற்றுமாதிரத்தளவுமைங்கதியினுன்முடிப்பனவிமைப்போதில். (அக)

ஆளிநெஞ்சமும்வார்த்தையுஞ்செங்கையுமாசனத்தொடுதாளுங்
கோளிலின்புறக்குறிப்பனவெவற்றினுங்குறைகளற்றனவாகி
யாளிகுஞ்சரம்வானரமுதலியவியக்கினுல்விசும்பெங்குந்
தூளிகொண்டிடமிடைந்துவந்தனநெடுந்துரகதம்பலகோடி. (அஉ)

---

* பாவி - வரற்பாலது.

† அத்திரிமுனிவருடைய கண்ணினும், விஷ்ணுவினுடைய இருதயத்தினும், அக்கினிதேவனுடைய முகத்தினும், திருப்பாற்கடலினும், பிரமசிருட்டியினுஞ் சந்திரோற்பத்தி சொல்லப்பட்டிருக்கின்றது.

வடிவுடைச்சிலகுராகதமாகதவண்ணமிச்சனவாகிப்
படியினிற்செறிதமைவுறமிதித்திலபவனவெங்கதிபோல
முடிவிலிப்படிமிசைவரக்கருதியேமுனிவரனுயிர்க்கெல்லா
மடிபடைத்தருபடைத்தநிங்வெற்றிநுக்கவயவங்குறையாமல். (அங)

நீமொல்வரையடங்கநுகிலேபெறநிற்குமால்வரைமண்மே
லேமொல்வரையிவையெனத்தனித்தனியூர்ந்ததேர்பலகோடி
நாமொல்வரைகடல்வனமெனுநிலனுலுமேயொன்றாகக்
கூமொல்வரையில்லெனப்பார்த்தனர்கொடியவெம்படைவீரர். (அச)

அதிர்முழக்கினகருமுகிலேமுடையண்டர்கோனகல்வானுக்
கெதிர்முழக்கெனமுழங்கினதனித்தனியின்னியமிடந்தோறும்
முதிர்முழக்கிபமவற்றினுமும்மடிமுழங்கினவவைதாமும்
பிதிர்முழக்கெனமுழங்கினவலம்புரியுரகரிற்பிழைத்தோர்யார். (அரு)

எடுத்தநீள்கொடியாடைவானகல்வெளியெங்கனுநெருங்கிக்கீழ்ப்
படுத்தவானமேவானமாய்மறைந்ததுமீதுறப்பகிரண்ட
மடுத்தபூநிவானதிக்கிலதெனவன்புடனுபகாரங்
கொடுத்தமீனெனக்கால்பொரப்பரந்துபோய்க்குளித்தனகுளிர்தோயம். (அசு)

அழுந்தமேலிடுசேனையான்மிகவுநொந்தமரருக்குரைசெய்யச்
செ[illegible]ராதலமடந்தைபொன்னுலகிடைசெல்லுகின்றதுபோன்மே
லெ[illegible]தநுளிகளிடைவிடாதெங்கனுமெழுந்தெழுந்தெதிரோடி
விழுந்தநுளியுந்தடுத்தனநிலனுறவிசும்புறும்படிநின்றே. (அஎ)

முன்னர்மாருதமதலையுஞ்சேனையுமுடுகிவன்பொடுபோதப்
பின்னர்வாசவன்மதலையுந்தானையும்பெருந்தகவுடன்போத
வந்நாதிபரிருவருமிருபுறத்தரும்படையுடன்செல்ல
மன்னராதிபன்முராகாகணத்திடைமதியெனப்புறப்பட்டான். (அஅ)

அங்கண்மாநிலத்தரசர்தம்மகளிர்பேரரும்பிடிமிசைபோதச்
செங்கண்மாமயில்யாகபத்தினியும்வண்சிவிகையின்மிசைபோத
வெங்கண்மாமணிமுரசுயர்த்தருளியமெய்தவாமொழிவேந்தன்
றங்கண்மாநகர்கடந்துவண்சாயையுந்தபனனுமெனச்சென்றான். (அகூ)

வேறு.

எவினபல்லியுமிடத்திலேவரத், தாவினகுக்கிலுந்தருமன்றன்னெதிர்
வாவினடெங்கலேவரதநால்வலோ, ரோவினருரைக்கவுமுணர்கலாமையால். ()

மடந்தையாளகமுமாந்தர்மாலேயு, முடைந்துகுகடகரிமதமுமுன்னியே
தடந்தொறுமுரலளிதமரினண்புறத், தொடர்ந்துடன்வரவரச்சோலையெய்தினர். ()

சம்பகம்பாடலந்தமாலநாண்மலர், வம்பெழுமிலேச்சுவார்வாவியாவொர்
செம்பலவாமிரந்தெலித்திங்கனி, யும்பரினமிழ்தெனவுடனருந்துவார். (கூ௦)

பசிளங்கமுகின்மென்பாளேகுவா, ரச்செழுங்காய்கனிகவர்ந்தருந்துவார்
கொச்சையங்கடைசியர்குழமிவாழ்த்தவே, வச்சிரம்போல்பவர்மருதநீங்கினர். ()

தடாகிறைவெண்ணெயுந்தயிருங்கொண்டெதி, ரடாமுடைநாறுதோளாயர்
கைதொழப், படாமுதன்முல்லையின்பரிமளங்கொளாக், கடாமலேவயவர்தங்கா
னமெய்தினர். (கூச)

தேனினஞ்செறிதருதெரியல்வேவினன், முனிரங்கருண்மிகுதருமனுதலாற்
கானிலப்குறைதருலேகளோடின, மானினம்பேர்கலாமருங்குவைகுமால். (கூரு)

செருவிளங்காளையர்சேனையின்றிறம், வெருவிளம்பொதுவியர்விழைந்துகாண்பபோன், மருவிளங்கிதழினீள்வனமுமாமலர்ச், கருவிளங்கண்கொடுகெலந்துகண்டவே. (௯௬)

புழைநெடுந்தடக்கைவெம்போதகங்களை, மழைமுகிலெனக்களிமயில்களாடின
தழலெழுகானகந்தண்ணெனும்படி, செழுமதவருவியின்றிவலைவீசவே. (௯௭)

வனநெறிகடந்துபோய்மன்னவர்க்கெலாந், தினகரனெனத்தருசெய்யகோவின
னினமுகிறவழ்தலினிரங்குபேரிசைத், தனித * வண்கிரிநெடுஞ்சாரலெய்தினான்.

குன்றுறைகடரிக்குழாங்கள்சேனையி, னொன்றியகளிறுகண்டெட்கியோடின
துன்றியபுறவிபச்சுவடுகண்டுடன், சென்றிலவெருண்டிவன்சேனையானையே. ()

வாளியின்வரும்பரிமாவின்வண்குரத், தூளிகள்விசும்புறத்துன்றியோங்கலா
லாளிகள்சிகரமென்றதிர்ந்துபாய்வன, மீளியர்வேலின்வாய்வீழ்ந்துமாய்ந்தவே.

கார்தவழ்கொடுமுடிக்கானமால்வரை, வார்தவழ்முலையரமாதரார்செவி
தார்தவழ்தடம்புயத்தரணிமன்னவர், தேர்தவழோதையிற்செவிடுபட்டவால். ()

வரைநிலங்கழிந்தெறிமகரவாரிதித், திரைநிலம்புகுந்தனன்சேனைசூழ்வரப்
புரைநிலங்கடந்தறம்புரியுநீர்மையா, னுரைநிலங்கடந்தசீருரைகொள்பேரினான்.

ஒளிநலந்திகழ்வளையுறங்குநன்னிழற், களிநறுஞ்சுரும்பிமிர்கண்டல்வேலிசூழ்
புளினமுங்கானலும்பொற்பநோக்கினா, னளினமும்புறந்தருநயனவேந்தனே. ()

பெருங்கட † மலைக்குலம்பெயர்த்தும்வந்தன, மருங்கடர்பேரணைவகுக்கவேயெனா, விருங்கடகளிறுதேரெண்ணில்சேனைகண், டருங்கடல்வாய்திறந்தலறியார்த்ததே. (௧0௪)

நன்னெடுந்துறையெலாநாளிகேரமோ, டின்னெடும்பனங்கனியெடுத்தருந்தினார்
புன்னையின்புதுமலர்புனைந்துகைதையின், மென்னிழல்வைகினார்விலாசவீரரே.()

நாநலம்புனல்கெழுநாடுங்கானமு, மேனலம்புனக்கிரியிடமுநெய்தலங்
கானலுமிவ்வகைகடந்துகாவலன், றானலந்திகழ்பதிதோன்றவெய்தினார். (௧0௬)

அத்தினாபுரிதனக்கருகுவால்வளை, முத்தினநிலவெழமுகைக்குந்தாமரைத்
தொத்தினபொய்கையுஞ்சுரும்பருமலர்க், கொத்தினசோலையுங்குறுகிவைகினார். ()

மொட்டினபருமணிமுடிகொடேர்ப்பரி, வெட்டினபரிகளும்வெம்மையாறின
மட்டினபரிமளமரங்கள்யாவையுங், கட்டினகழைபொருகவளயானையே. (௧0௮)

தரித்தனர்வீரருந்தத்தமாதருஞ், சரித்தனசும்மைகடங்குபண்டியும்
பரித்தனநன்னிறப்படங்குவீடுகள், விரித்தனரிடந்தொறும்வேந்தரெய்தினார். ()

கைவருதண்டுடைக்காளைவெஞ்சிலை, தைவருசெங்கையான்றாரை ‡ வெம்பரி
மெய்வருகுமரன்வேல்விடலைவேந்தனோ, டைவருமமர்ந்தனராண்மையேறனார். ()

மறத்திருந்தானையான்வஞ்சமெண்ணினா, னறத்திருந்திலனெனாவஞ்சியந்தலூர்
புறத்திருந்ததுவெனப்புனிதன்பாசறை, நிறத்திருந்ததுபிறநிகர்ப்பவில்லையே. ()

மீண்டவர்வரிசிலைவிதுரனேவலாற், பாண்டவர்வரவுமுன்பணிந்துகூறவே
மாண்டவர்குறிப்புருமாயவஞ்சகம், பூண்டவர்களித்துமெய்ப்புளகமேறினார். ()

தேசறையிடங்களுந்தேங்கொள்கானமு, மூசறைமதுகரமொய்த்தசோலையும்
வீசறல்வனநதிவிதமுமேல்கொளப், பாசறையிருந்தவாபகரலாகுமோ. (௧௧௩)

---

* தனிதம் - ஒலி. † கடம் - மலைப்பக்கம். ‡ தாரை - நேரோடல்.

விருந்துறுசேனைவெவ்விரரின்னமு, தருந்தினர்மெய்குளிர்ந்தசைவுதீர்தரும்
வருந்தினரிவர்துயில்வதியவேண்டுமென், றிருந்தபனனுமிவர்க்கிரவுநல்கினுன். ()

மண்வளர்பெரும்புகழ்மன்னரைவரும், பண்வளர்நல்லிசைப்பலமகீபரும்,கண்வளர்பானையங்காணவெண்ணியே,விண்வளர்குபேரனும்விழைந்துதோன்றினுன்.

மருள்மிகுசுரும்பினமணந்தசோலையி, னிருள்களினிடையிடையெறித்தவெண்ணிலா, வருளுடைமைந்தர்தோளணைந்தமங்கையர், புரிகுழனெகிழ்ந்தவெண்போதுபோலுமே. (ககசு)

கானிடைசிலசிலகடிகொடேனுமிழ், நூநிறமுல்லைகண்மலர்ந்துதோன்றுமால்
வானிடைமுறைமுறைவளருமாமதி, மேனியினமிழ்துமிழ்விந்துவென்னவே. ()

பொருவில்வெண்டுகில்கொடுபொதிந்ததென்னவே,பரிநெடுந்தேர்மிசைப்பாணிலாவெழக், கிரணவெண்படைக்கெதிர்கெடாமனின்றபே, ரிருளெனவிளங்கினயானைவெள்ளமே. (ககஅ)

பரியனகந்துகம்பரிந்துமாமதக், கரிசிலபாகையுங்கைகடந்தன
வரிவையர்பலர்துயிலனந்தலோடுதெஞ், சுரிகுழன்மேகலைசோரவோடினுர். (ககக)

நீடுறுதருக்களினிரைத்தமாவதன், கோடிறவெறிந்துகைக்கொள்ளுமோதையான், மாடுறுபொங்கர்வாய்வதிந்தபுள்வெரீஇப், பேடொடுசேவன்மெய்பிரிந்துநேடுமால். (கஉ0)

வலைதயின்மானசையுறப்பொருவட, மோதுறுமுளையுடன்முடுகுவேட்டமாய்த்
தேறுபரிசிலசெல்வன்பாசறை, மாதிரமுறப்பலவாளிபோதுமால். (கஉக)

ஆடுவர்சிலர்சிலரவர்வான்புகழ், பாடுவர்சிலர்சிலர்பாயலின்புறக்
கூடுவர்சிலர்சிலர்சோதைமாதரோ, டுடுவர்சிலர்சிலரோகைவீரரே. (கஉஉ)

பஞ்சவர்வாழ்வுறுபதம்பொருமையின், வஞ்சகமியற்றுவான்மனங்கொலென்னவே, மிஞ்சியகுளிர்மதிமேற்பொருதிகற், செஞ்சுடரவன்குணதிசையிற்றோன்றினுன். (கஉங)

வேறு.

தமிழுணர்ந்துபைந்தொடையன்மார்பினுன், வெயிலெழுந்துதன்விரதமுற்றபின்
பயில்பெருஞ்சனம்பாசறைப்படுத், தெயில்வளைந்தமாநகரியெய்தினுன். (கஉச)

இருமருங்கினுமிளைஞர்நால்வருந், தருமவல்லியுந்தானுமாகவே
யருமடங்கலேறனையவாண்மையான், குரவனின்புறங்கோயினண்ணினுன். ()

சிந்தையன்புறச்செல்வவாயிலோர், வந்தமைந்தர்தம்வரவுகூறவே
முந்தையேவலான்மொழியவுள்புகுந், தந்தமீளிசேவடிவணங்கினுர். (கஉசு)

தம்பிமைந்தரைத்தழுவிநம்மையின், றெம்பிகாணநல்வினையியன்றிலா
ரும்பிமாரோடுமொத்துவாழ்கநீர், நம்பியென்றுதன்னயம்விளம்பினுன். (கஉஎ)

பாவைதன்செழும்பணிவுகூறலு, மேவிவாழ்கெனுமெய்களிக்கவே
தேவிதன்னுழைச்செல்கவென்றுகொண், டேவிமைந்தரோடிவைவிளம்பினுன்.()

சுருமநீதிசேர்கல்விமந்திரம், பெருமையாண்மைதாள்பீடுசீடுபேர்
தருமம்யாவுநின்றன்மையாதலா, வருமையின்றியேயரசுசெல்லுமே. (கஉகூ)

இகலெறிந்துநீராசசூயமா, மகமுழந்தநம்வண்மைசெய்ததுந்
திசையடங்கலுந்திறைகொணர்ந்ததுந்; தொகுதிகொண்டநின்றுணைவர்கூறினுர்.

எண்டிசாமுகத்தெல்லையெங்கணும், கொண்டதாகுமுன்குருகுலத்துளோர்
துண்டியாமனுந்துணைவர்தம்மொடும், பண்டுபோலமண்பரவவைகுவீர். (கஅக)

சேணிருந்துறுஞ்சீர்செவிப்படுத், தியாணரன்புகூரினிமையன்றியே
பூணலம்பெறும்பொற்பொடுங்களைக், காணுமாறுசெங்கண்படைத்திலேன். (கஅஉ)

நேயமுண்டுபோனெஞ்சொடின்னசொற், றூயமைந்தரைச்சொல்லிநீவிர்போ
யாயையும்பணிந்தெந்தைதாண்மலர்ச், சேயபங்கயஞ்சேர்மினென்னவே. (கஅங)

இருந்தமைந்தருமேவலோடுசென், றருந்ததிக்குநேரன்னைதன்னையும்
பரிந்திறைஞ்சினர்பயிலவாழ்த்தினு, டிருந்துபூணினுள்சிறுவர்தம்மையே. (கஅச)

மூந்தவந்துதாண்முளரிகைதொழு, மந்தண்வல்லியுமைவர்மைந்தரும்
வந்துநிற்றலுமகிழ்வொடுன்னினள், குந்திசெய்தவங்கூறுமென்னவே. (கஅரு)

வேயைவென்றதோண்மின்னையங்குவைத், தியாயையும்பணிந்தெழில்கொ
டோளினர், போயகண்டமும்போற்றுகங்கையாள், சேயையன்புடன்சென்றி
றைஞ்சினர். (கஅசு)

வேந்தழைத்ததும்விதுரனேவலிற், போந்தழைத்ததும்புகலவந்ததுந்
தாந்தழைக்கவேதந்தைதந்தைமுன், றேந்தழைத்ததார்ச்செல்வர்கூறினர். (கஅஎ)

புள்ளலங்கலார்புரிவுரைத்திடக், கொள்ளைவன்றிறற்குருகுலேசனுக்
கள்ளவஞ்சர்வெங்கருவிசெய்யினு, முள்ளதுண்டெனுவுண்மைகூறினன். (கஅஅ)

தாதைதாதையைத்தாமகன்றுபின், கோதைவெஞ்சிலைக்குருவைமைந்தனைக்
கீதநான்மறைக்கிருபனைச்செழும், பாதஞ் * செய்தார்பரிவொடேகியே. (கஅகூ)

சதுரமாமறைத்தலைவர்தங்களா, லெதிர்மொழிந்தபேராசியெய்தியே
மதுரமன்றனுண்மாலைமன்னரும், விதுரன்மந்திரமீளமன்னினர். (கசo)

தமதின்மெய்யுறத்தம்மதாகவே, யமிழ்தருந்தியங்கவரிருந்தபின்
றிமிரநாசனன்செய்யமேனியன், கமலநாயகன்கடலின்மூழ்கினன். (கசக)

தினகரன்கரந்திகழ்கமண்டலம், பனிகொள்செக்கர்தம்படமதாகவே
யினியவந்தணைக்கெறியும்வேலைசேர், புனிதரொத்ததப்புன்கண்மாலையே. (கசஉ)

காய்ந்தமெய்ச்செழுங்கதிரவன்கா, மேய்ந்தவப்பதத்தெழிலெறித்தலா, லாய்ந்துபத்திகொண்டடர்பசும்பொனல், வேய்ந்ததொக்குமால்வேந்தன்மாடமே. ()

மன்குலத்துளோர்வஞ்சகஞ்செயா, ரென்குலத்துளோரென்கொலீதெனத்
தன்குலத்துளோர்தமைவிலக்கவோ, நன்குலத்துளோனுதயநண்ணினன். (கசச)

குருகுலாதிபன்கொடியநெஞ்சமே, யிருணிறைந்ததென்றியாம்வெறுக்கவோ
மரபிலாதியாமதியுமெண்ணினுட், கரியனென்னுமாகாணலானதே. (கசரு)

உண்ணிலாவுபேரொளிமழுங்கிநீள், வெண்ணிலாவினல்வெளுத்தவெங்கணுங்
கண்ணிலான்மகன்கடுமையஞ்சியிம், மண்ணிலார்வெளாவடிவமெய்தினர். (கசசு)

விந்தைவாழ்வுகூர்விறன்மிகுத்ததோண், முந்தையோதைமாமுரசுயர்த்தவன்
சிந்தைகாமுறத்தெரிவைவந்திளந், தந்தைகோயிலிற்றுனுநண்ணினள். (கசஎ)

மங்குல்சுற்றுமாமண்டபத்திடைக், கங்குலிற்றடங்கண்டுயின்றபின்
பொங்குலைப்படும்பொற்றசும்பெனச், செங்குலக்கதிர்த்திகிரிதோன்றவே. (கசஅ)

---

* நம - வணக்கம்.

பாயன்மன்னுகண்படையுணர்ந்துளம், தூயவன்பொலஞ்சுடர்பணிந்தபின்
சாயையன்னதன்றம்பிமாரொடுஞ், சியமென்னவேதிகழவைகினான். (கசகூ)

முனிவரர்க்கெலாமுதன்மையாகவே, தனதனிற்பெருந்தானமுய்த்திடும்
பனுவல்வித்தகப்பாவலர்க்கெலாங், கனமெனத்தருங்கனகமாரியே. (கரு0)

கண்டுகொண்டுதன்கழல்வணங்குமா, மண்டலேசருமாலமன்னருங்
கொண்டுவாழ்வுறக்குரகதங்குடை, தண்டுசாமரந்தந்திலங்குமே. (கருக)

பூந்தண்மாமலர்ப்பூவைகொங்கைதோ, யேந்துதோளினுனிவணிருந்துழிப்
பாந்தளங்கொடிப்பார்மகிபனைச், சேர்ந்தமன்னர்தஞ்செயல்விளம்புவாம். (கருஉ)

வேறு.

தானுமாமனுங்குறித்ததம்பிமாருமங்கர்தங்
கோனுமாசிறந்தைதந்தைகொடுமெரக்கைவிதுரனும்
வானுலாவுபுகழ்படைத்தமைந்தனுந்துரோணனு
மேனையோரும்வந்துகூடியினிதிருந்தவெல்லையே. (கருங)

மண்டபத்தினழகுகாணமன்னரைவர்தம்மைநீ
கொண்டிமைப்பின்வருகவென்றுகொற்றவன்பணிக்கவே
வண்டுசுற்றுமாலைமார்பன்வன்பிராதிகாமிவா
னண்டர்தற்பமெனவிருந்தவரசர்தம்மையணுகினான். (கருச)

சென்றியாகபதிகழற்றிருப்பதம்பணிந்துநீ
யின்றுவாய்புதைத்தரங்கனிலெபெறுஞ்சொனிதியாய்
வென்றிவீரன்மண்டபத்தின்விரிவுகாணவேண்டுநீ
யென்றுகூறியேவினனிங்கென்னையென்றியம்பினான். (கருரு)

ராயருயபன்னிதன்னையெந்தையில்லியாயொடும்
போயிருந்துவருகவென்றுபுரையிலாமனத்தினான்
சியமன்னதுனைவரோடுசென்றுபுக்குநன்றியில்
பேயிருந்ததெனவிருந்தபீடிலானையெய்தினான். (கருசு)

மன்னிருந்தபேரவைக்கண்வந்துமுந்தைவரிசையான்
முன்னிருந்ததாதைவமிசமுதல்வன்ஞானவிதுரனென்
றின்னிருந்ததலைவர்தாளிறைஞ்சிமுன்னரிட்டதோர்
மின்னிருந்தவாசனத்தின்மிதிருந்துவினவினான். (கருஎ)

இந்தமண்டபஞ்சமைந்தவினிமைதன்னையென்சொல்வேன்
முந்தைமண்டபங்களுக்குமுதன்மையானதேவரு
ளந்தமண்டபத்துமில்லையதனையன்றிமண்ணின்மே
லெந்தமண்டபத்துமில்லையிதனினுள்ளவெழிலரோ. (கருஅ)

எனவியந்தருமாசனிவிதியம்பயாளிவெஞ்
சினவிலக்கவென்னுமாறுசேரவந்தவிளைஞரு
மனுவிளங்குமுறைமையான்வணங்கிமன்னர்மன்னன்முன்
றனதனக்கிருப்பதன்னதவிசின்மீதுவைகினர். (கருகூ)

புரைகொள்பாவமேநிறைந்துபுண்ணியங்குறைந்துகி
ளரசினுழிகலம்வாழ்கினார்வாழ்வினுள்ளதுந்
தரணிமீதுபெறுகவென்றுநந்ததொக்குமானுனோ
ரரவவேறுயர்த்தவீரனன்றிருந்தபெருமையே. (கசு0)

மாயமொன்றுமெண்ணலாமனத்தின்மிக்கமாமனு
நீயுமின்றுசூதுகொண்டுநிகழ்விலாசமயர்விரோ
ஞாயவென்றியையனில்விலமுதமன்னபோனகம்
போயருந்துமளவுமிங்கிருந்துபோதுபோகவே. (கசுக)

மீதெடுத்தவஞ்சராகிவெகுளிசெய்தல்பிறர்பெருங்
கோதெடுத்துரைத்தனன்புகொண்டயிர்த்தல்கொடியவெஞ்
சூதெடுத்துவிழைதலுற்றகுள்பிழைத்தலின்னவே
தீதெடுத்தநூலின்முன்புதீயவென்றுசெப்பினார். (கசுஉ)

வாதுகொண்டுகோதல்கூறுமாமனோடுவஞ்சனைச்
சூதுகொண்டுபொருதழிந்துதோல்வியெய்தவேண்டுமோ
தாதுகொண்டுதேனிரங்குதாமமார்பநெஞ்சினீ
ரேதுகொண்டததுநுமக்களிப்பணிம்பரென்னவே. (கசுங)

ஒப்பிலாதவேள்விமன்னனுரையுணர்ந்துசகுனியுந்
தப்பிலாதகவறுருண்டதாயமெங்குமொக்குமால்
வைப்பிலாண்மையன்றிவேறுவஞ்சமில்லையுண்டெனச்
செப்பிலார்கொலிவனையாடவருகவென்றுசெப்புவார். (கசுச)

வேணுமாகில்வேணுமன்றிவிரகெனக்கழன்றுதா
னாணுமாகில்விடுதியேநடக்கவென்றுநவிலுவீர்
பூணுமாகிலினிமையோடுபொருதுமற்றிருந்தநீர்
காணுமாறுநாணுமின்றுகற்றவாறியற்றலாம். (கசுரு)

நீடுகின்றதருமநீதிநிருபகேள்விழைந்துநா
மாடுகின்றசூதில்வெற்றியழிவுநம்மிலொக்குமால்
வாடுகின்றமிடியர்போலவஞ்சமென்றுரைத்துநீ
யோடுகின்றதொட்டுகின்றவொண்பொருட்குலோபியோ. (கசுசு)

யானெறிந்தகவறுவெல்லினிசைவெனக்கிழத்திநீ
தானெறிந்தகவறுவெல்லினதினிரட்டிதருகுவன்
றேனெறிந்துதேனுகர்ந்துதேனெடுக்குமாலையோ
யானெறிந்தகொலைஞர்போலவஞ்சல்வருதியாடவே. (கசுஎ)

என்றுமாமனுற்றுரைப்பவிவைதமக்கவ்வவையில்வே
றொன்றுமாறுரைத்திடாதுதிட்டிரன்னிருக்கவும்
வென்றுமாறடர்க்கும்வாகைவிசயனும்வெகுண்டுளங்
கன்றுமாறுரைத்தனன்கொல்கன்னனென்னுமன்னனே. (கசுஅ)

போதுபோகுமாறிருந்துபொருதும்வருதியென்னவுஞ்
சூதுபோருமஞ்சியேதொலைந்துளந்துளங்குவாய்
மோதுபோரிலெங்ஙனுய்தியினைஞரோடுமுடுகுதேர்
மீதுபோயுன்னகரிதன்னின்விரைவினெய்துகென்னவே. (கசுகூ)

இல்லெடுத்தவிரகினோடுமெமையழைத்துமாயைகூர்
வல்லெடுத்தவருதலான்மறுத்தனன்மகீபனுஞ்
சொல்லெடுத்துவைதவாய்துணிப்பனென்றுகன்னன்மேல்
வில்லெடுத்தனன்பொருமல்வீரவாளிவிசயனே. (கஎ௦)

எதிலாரினெம்பிநீயிருக்கவென்றிருத்திமுன்
காதிலாரொன்றுடன்முனைந்துகண்விழிக்கவல்லபே
ரோதிலாண்மைகுன்றுமென்றுருத்தெழுந்துமாயநின்
றுதிலாடல்புரிதுமென்றுதருமனுந்தொடங்கினான். (களக)

நின்னைவெல்லினொட்டம்யாவுநீகொடுக்கநீயிவன்
றன்னைவெல்லின்யான்விரைந்துதருவனென்றுதருமனைப்
பின்னைவெல்லொணாதெனப்பிணிப்புடன்மருட்டினான்
மின்னைவெல்லும்வெய்யசோதிவேலிராசராசனே. (களஉ)

அவிர்பசும்பொன்மிளியாளியாசனத்திழிந்துபூந்
தவிசிலொன்றிடப்புகுந்துதருமன்வைகமாமனு
மவிருந்திசைப்புறத்துநன்னிலங்குறித்துநீள்
புவிபெறுங்கருத்தினோடிருந்தனன்பொருந்தவே. (களங)

கவளயானைபணையில்யாளிகால்வகுத்தபலகையிற்
பவளமானநீலமானகருவிமுன்பரப்பினார்
தவளமானகவறுகைதரித்துமெய்தரித்ததார்
துவளமானிருபர்தம்மிலாடவேதொடங்கினார். (களச)

ஈரம்வைத்தசிந்தைமன்னனிசைவெனக்கழுத்தின்முத்
தாரம்வைத்துநீயுமாறழைக்கவென்னமாமன்மேல்
வாரம்வைத்தநெஞ்சினானும்வருகவென்றுமாமணிச்
சாரம் * வைத்தவலயமொன்றுதானுமுன்னர்வைக்கவே. (களரு)

இருவருங்கவற்றினாலெறிந்தபோதெறிந்தவா
றொருவருங்குறிக்கலாவுபாயமாயிருத்தலான்
மருவரும்புயத்தலங்கன்மாமன்வெல்லமன்னருள்
வெருவருங்களிற்றினானுமேல்விருப்பமிஞ்சினான். (களசு)

வைத்தவாரமவனெடுக்கமாயவன்கொடுத்தநன்
மெய்த்தவாததேர்குறித்துமீளவும்பரப்பினான்
மொய்த்தவாசமாலைமார்பின்முடிமகீபன்மகிழ்தரப்
பொய்த்தவாடல்வல்லமீளிபொருதுவென்றிபுனையவே. (களஎ)

தேர்கொடுத்தபின்னுமாறுசெப்பியுள்ளதேர்மதக்
கார்கொடுத்துமெண்ணிலாதகவனமாக்கொடுத்துமப்
பார்கொடுத்துமரசகூர்பதங்கொடுத்துமுரியதம்
மூர்கொடுத்துமதனினுள்ளமொழிவுறுமலோடவே. (களஅ)

வெங்கிராதவனமெரித்தவிசயனுக்குவிஞ்சைய
னங்கிராமகிழ்ந்தளித்தவாடன்மாவுமளகநீள்
பொங்கிராமணஞ்சிறந்தபோகமாதர்பலருமன்
றிங்கிராகரேசனுற்றவிசைவினாலளிக்கவே. (களகூ)

யாவையுங்கொடுத்திருப்பவினைஞரோடுமெய்த்தவக்
கோவையுங்குறிக்கவென்றுகுருகுலேசன்மொழியவே
யீவையுங்குறித்துவெற்றியெய்தவெய்தவிவர்கடம்
வீவையுங்குறித்தவென்றிமேன்மையான்விளம்புவான். (கஅ0)

* சாரம் - திரவியம்.

உன்னையுங்குறித்துவன்புரைத்ததம்பிமாரினர்
தன்னையுங்குறித்திசைந்துதருகவந்துபொருகெனப்
பின்னையுங்குறிப்புருதுபொருதுகைபிழைக்கமே
லென்னையுங்குறிப்பெறுமுன்விரகினுலியம்பினன். (கஅக)

மெய்வருந்திறத்தினும்மைவெல்லுமாறுவேறலா
லைவருந்திருந்தவெங்களடிமையின்னராயினிர்
மைவருந்தடங்கண்வேள்விமாதுதன்னையொட்டிநீ
கைவருங்கவற்றினின்னமெறிகவென்றுகழறினன். (கஅஉ)

அன்னபோதிலருள்விதுரனந்தனைப்புகன்றெழா
நின்னபோதமன்றிவேறுநிருபர்தாநினைப்பரோ
வின்னபோதுமோகமக்கியற்கையன்றிதென்றுநீ
சொன்னபோதுநேயமைந்தர்சொன்னசொன்மறுப்பரோ. (கஅ௩)

திருகுநெஞ்சின்வஞ்சராகியினைஞர்தீமைசெய்தகா
லுருகுகின்றதாதைநீயுடன்படுத்திருப்பதோ
மிருகமன்றுபறவையன்றிரக்கமின்றிமேவுகின்
னருகுவந்தணைந்ததெங்களறிவிலாமையாகுமே. (கஅச)

பின்பிறந்ததம்பிமைந்தர்பீடழிந்திரங்கவே
முன்பிறந்ததமையன்மைந்தர்மொய்ம்பினுலடர்ப்பரோ
வன்பிறந்ததேனுநீதியழியநீநடத்தினு
லென்பிறந்துமுடியுமண்ணிலெண்ணில்காலமின்னுமே. (கஅரு)

மரும * மிஞ்சவிவனைவென்றவஞ்சமன்றிமற்றிவன்
றருமவஞ்சிதனையிசைந்துபொருதுமென்கைதருமமே
கருமமன்றுனக்குநாசகாலம்வந்ததாகலிற்
பெருமதஞ்சமின்றிநெஞ்சுபேருமென்றுபேசினன். (கஅசு)

விதுரனெஞ்துநீதிகூறவிழியிலாமையன்றியே
வெதிரெனுங்கொலென்னுமாறுவிழியிலானும்வைகினன்
சதுர்புரிந்தசகுனிசொல்லையெதிர்புரிந்துதருமனு
மதிரவஞ்சமுதிரவந்தவருளிலானெடாடினன். (கஅஎ)

காயமுற்றும்வஞ்சமேகலந்ததன்னகள்வன்மே
னேயமுற்றுநின்றுதானுநிகர்பிடித்ததென்னலே
மாயமுற்றகவறுமந்தமாமன்வல்லபத்திலே
தாயமுற்றிடங்கொடாதுதருமனைச்சதித்ததே. (கஅஅ)

இன்னதாயம்வேண்டுமென்றெறிந்தபோதுமற்றவன்
சொன்னதாயமேபுரண்டுசோர்விலாமல்வருதலிற்
றன்னதாயவரசுவாழ்வுதரணிமன்னனல்கினு
னன்னதாயபோதுநெஞ்சசைந்திலானசஞ்சலன். (கஅகு)

வேறு.

முரசினையுயர்த்தகோமான்மொழிந்தனமுழுதுந்தோற்றுப்
பரவுவதொன்றுமில்லாப்பான்மையோடிருந்தகாலை
விரைசெறியலங்கல்சோரமெய்குலைந்துள்ளம்வெம்பி
யரசவையிருந்தோர்தம்மிலருளினுலழிந்துநொந்தார். (ககo)

* மருமம் - இரகசியம்.

குருமாபுடையவேந்தன்கொடியனேகொடியனென்பார்
மருமகனுயிருக்கிந்தமாமனேமறலியென்பார்
தருமனித்தனைநாட்செய்ததருமமும்பொய்யோவென்பா
ருருமினுங்கொடியவீமனுருத்தினியெழுமோவென்பார். (ககூக)

பாந்தளேறுயர்த்தவேந்தன்பார்த்திலனுறவுமென்பார்
மாய்ந்தவேயறமுந்தேசுமனுநெறிவழக்குமென்பார்
பூந்தழற்பிறந்தபாவைபுண்ணியம்பொய்யாதென்பார்
சேந்தனனிருகண்பாரீர்தேவர்கோன்மதலையென்பார். (ககூஉ)

பழியுடைத்தந்தையொன்றும்பகர்கலாதிருக்குமென்பார்
விழியுடையவரையன்றேமேன்மையோர்வெறுப்பதென்பா
ரழியுமேயிவனுன்மைந்தரும்பெருஞ்செல்வமென்பார்
வழிவழியாகநிற்கும்வசையிவன்புரிந்ததென்பார். (ககூங)

இன்னனதரணிவேந்தரிருந்துழியிருந்துகூற
மன்னனுந்தம்பிதானுமாமனுமாறுவண்மைக்
கன்னனுந்தம்பினெண்ணிக்கங்கைமாமகனைநோக்கிப்
பன்னகதுவசன்கேட்டோர்பலருமெய்பனிக்கச்சொல்வான். (ககூச)

நண்ணியதருமன்செய்தபாவமோசகுனிசெய்த
புண்ணியநெறியோவந்தப்பொதுமகள்யாகசாலே
நண்ணியதவறேமற்றைநால்வருந்தகைமைகூர
வெண்ணியமதியோவெண்ணினிங்ஙனம்விளைந்ததென்றான். (ககூரு)

தகாமொழிதலைவன்கூறத்தவத்திலுயர்ந்தகோவு
நகாமரபியற்கையன்றுநம்மினும்புன்மைகூறன்
மிகாஇனிநிகழ்ந்தசெற்றம்விடுகெனச்செவியிற்சற்றும்
புகாதுளம்வெகுளிகூரப்புரிந்தனன்போதமில்லான். (ககூசு)

இரங்கிநின்றுருகுநெஞ்சினிளையதன்பிதாவைநோக்கி
யரங்கடிசமரவேலானழல்பொழியுருமிற்சொல்வா
னரங்குடியிருந்ததோளானுரிமையினெமக்குத்தோற்ற
தரங்கமுங்களிறுந்தேருந்துறைதுறைகவரச்சொற்றி. (ககூஎ)

தொல்லைமாநகருநாடுந்தோரணநாட்டச்சொற்றி
யெல்லையினிதிகளெல்லாமிம்பரேயெடுக்கச்சொற்றி
நல்வெழின்மடவார்தம்மைநம்பதியெய்தச்சொற்றி
சொல்லியவினைஞர்தாமுந்தொண்டினராகச்சொற்றி. (ககூஅ)

இவர்தமக்குரியளாகியாகபத்தினியுமான
துவரிதழ்த்தவளமூரற்சுரிகுழறன்னையின்னே
புவரலைப்புணரியாடையுலகுடைவேந்தர்காணக்
கவர்தரப்புகறியென்றான்கண்ணருள்சிறிதுமில்லான். (ககூகூ)

அறந்தருமைந்தன்றன்னையறனவாதியற்திநம்பி
திறந்தருசெல்வம்யாவுந்திமையிற்கவர்தலுற்றாய்
மறந்தருவலியுமன்றுமணந்தருவாழ்வுமன்று
சிறந்தருபுகழுமன்றுநெறிதருமதியுமன்று. (உ00)

திருத்தகமொழிந்தவெல்லாஞ்செய்தனையெனினுஞ்செவ்வி
மருத்தகுதெரியன்மாலைமாசிலாமன்னர்முன்ன
ருருத்தகுகற்பினாளையுரையலாதுரைக்குமாற்றங்
கருத்தினினினையல்கண்டாய்கடவுளர்கற்பம்வாழ்வாய். (உ0க)

விண்ணிலங்கருகித்தோன்றுமேதகுவடமீனன்றி
மண்ணிலங்குவமைசொல்லமடந்தையர்யாருமில்லாப்
பண்ணலங்கடந்தமென்சொற்பாவையைப்பழிக்கநீயின்
றெண்ணின்முன்கேட்டவார்த்தைக்கேற்றதுன்னெண்ணமென்றான். (உ0உ)

கேட்டசொல்வினவுநாககேதனன்கேட்பமீண்டும்
வாட்டமிலன்பினோடுமெனங்கனிந்துருகிவீழ
நாட்டமுநன்னீர்மல்கநாவமிழ்தூறப்பின்னுங்
கோட்டமில்சிந்தையானுங்குரிசிலுக்குரைக்கலுற்றான். (உ0ங)

தானவராகியும்மைத்தனித்தனியிறந்தோர்யாரு
மானவராகியிம்மைவந்தனரிம்பரென்றே
தானவர்பொறைபொறுமற்றாதலமென்னுஞ்செங்கண்
மானவராகவேதமலர்முனிதனக்குச்சொன்னாள். (உ0ச)

நான்முகன்றானுமேனைநாகருநாகர்கோனும்
பான்முகந்தெறியும்வேலைப்பாம்பணைப்பள்ளிகொள்ளுந்
தேன்முகங்களிக்கும்பச்சைச்செவ்விவண்டுளபமாலை
மான்முகங்கண்டுகூறவந்தவாமாலுங்கேட்டான். (உ0ரு)

மின்னிடைவிளங்குமேகமேனியானவனிமானை
நின்னிடைவந்துதோன்றுநிருபரானவரையெல்லா
முன்னிடைகடையொன்றின்றிமுற்றும்வெம்முரண்கொள்காலன்
றன்னிடைவிடுதுமென்றுசாற்றியேதளர்வுதீர்த்தான். (உ0சு)

அந்தவன்றிகிரியானுநம்மிலோரரசனாகி
வந்தவதரித்தானென்றுமண்ணெலாம்வார்த்தையான
தெந்தவல்வினையாலெவ்வாறெய்துமென்றிதற்கேசால
நொந்துகண்டுயில்பெறாதேநோதகப்புரிந்தேன்மன்னே. (உ0எ)

ஒருதிறத்தவனிமுற்றுமொருமையாற்புரக்குநீவி
ரிருதிறத்தவருநும்மிலிகலுறுமனத்திரானல்
வருதிறத்தானைவேந்தர்வகைபடக்குழூஉக்கொண்டோடிப்
பொருதிறப்பதற்கேசற்றும்புரிவிர்புரிகின்றீரே. (உ0அ)

என்றவனுரைப்பத்தானுமெறிந்துகைகைகொண்டாடி
யன்றவனிதயம்வெம்பவவமதிபலவுங்கூறி
நின்றவனொருவன்றன்னைநீநனிவிரைவினோடிச்
சென்றவணிருந்தகோலத்தெரிவையைக்கொணர்தியென்றான். (உ0கூ)

பெருந்தகையேவலோடும்பிராதிகாமியுமங்கேகி
வருந்தியமனத்தனாகிமாசறுமரபின்வல்லி
யிருந்துழியெய்துருமவிடைவழிநின்றுமீள
விரைந்தனனோடிவந்துவேந்தனுக்கேற்பச்சொன்னான். (உக0)

வேறு.

என்னைத்தோற்றுமனுநெறிகூறிசையோன்றன்னைத்தோற்றனனோ
தன்னைத்தோற்றுத்தனுமனத்தளர்வாலென்னைத்தோற்றனனோ
முன்னைத்தோற்றுத்தோற்றபொருண்முற்றுங்கவருமுறையன்றிப்
பின்னைத்தோற்றபொருள்கவரப்பெறுமோநினைக்கப்பெருதென்றாள். (உகக)

செல்வப்பாவைதிருவுள்ளமிதுவென்றந்தத்தேர்ப்பாகன்
சொல்லப்பாவிதரியாமற்றுச்சாதனனைமுகநோக்கி
யல்லற்பான்மைபெற்றழிந்தவைவர்க்கொருத்தியாகியவம்
மல்லற்பானல்விழியாளைமன்பேரவையினழையென்றான். (உகஉ)

நோன்றாள்வெங்கட்கடகளிற்றுநுழைவேலாசனுவறலுமே
யான்றார்கேட்கிற்செவிபுதைக்குமழல்கால்வெஞ்சொலறனில்லான்
றான்றாயனத்துணைவனைப்போற்றுணைக்கண்டுகிலிற்சூழ்ந்திருந்த
வின்றாளில்லத்திருந்தாளையிகலோடெய்தியிவைசொல்வான். (உகங)

தானேருதுபொருதழிந்துதலைவன்றனக்குன்பதியான
கோனேசொல்லியாவையுமுன்கொடுத்தான்கொடுத்தபின்னிசைவு
யானேயென்றும்விமன்முதலிளையோரென்றுமென்வேள்வி
மானேயென்றுங்குறித்திழந்தான்வழக்கால்வென்றேம்வருவாயே. (உகச)

பொன்னைச்சிரிக்கும்பூங்கோயில்புனல்வாவியிலென்றெங்கள்குல
மன்னைச்சிரித்தசெங்கனிவாய்மாறுதிரங்கியழுதரற்ற
மின்னைச்சிரிக்குநுண்ணிடையாய்வேந்தர்க்கெதிருன்மெய்க்கணவன்
றன்னைச்சிரிக்கவிருக்கின்றசளம்* நீகாணிற்றறியாயே. (உகரு)

தலத்துக்கியையாதைவரையுந்தழுவித்தழுவித்தனித்தனியே
நலத்துப்பொய்யேமெய்போலநடிக்குஞ்செவ்விநலனுடையாய்
குலத்துப்பிறந்தாயாமாகிற்கூசாதென்பின்போதுகெனப்
பெலத்திற்செங்கைமலர்தீண்டிப்பிடித்தான்சூழ்ச்சிமுடித்தானே. (உகசு)

சிலைவாயங்கையவன்றீண்டச்செல்லாளாகியல்லலுழந்
துலைவாயழல்போனெடிதுயிராவுள்ளந்தளராவுடனங்காக்
கொலைவாயெயினர்கொல்லுநிலக்குறித்துச்செறித்தகொடியநெடு
வலைவாயொருதானகப்பட்டமான்போன்மாமிமருங்குற்றாள். (உகஎ)

பூவார்குழலிதளர்வொடுதன்புறஞ்சேர்பொழுதுஞ்சிறிதிரங்கா
வீவாவென்றேயருகிருத்திநெடுங்கண்பொழியுநீர்துடையாண்
மேவாரல்வர்தமரழைத்தான்மேலுன்கருத்துவிளம்பிவரப்
பாவாயஞ்சாதேகென்றாள்பலபாதகரைப்பயந்தாளே. (உகஅ)

தண்டார்விடலைதாயுரைப்பத்தாய்முன்னனுகித்தாமரைக்கைச்
செண்டாலவள்பைங்குழல்பற்றித்தீண்டானுகிச்செல்கின்றான்
வண்டார்குழலுமுடன்குலையமானங்குலையமனங்குலையக்
கொண்டாரிருப்பரென்றுநெறிக்கொண்டாளந்தோகொடியாளே. (உகக)

குழுங்கனல்வாயுருமன்றித்துளிவாய்முகிலுமதிதலத்து
வீழுங்கொல்லோவுப்பாதம்விரவிற்றென்றேவெருஉக்கொள்ளத்
தாழும்பெரியகரியகுழலாரோடலையத்தழீஇக்கொண்டு
வாழுஞ்சரும்புகழன்றாற்றமன்மேவிழுத்துவருகின்றான். (உஉ0)

* சளம் - வஞ்சம்.

தழலோவென்னுங்கற்புடையதனிநாயகிதன்றாமாறுங்
குழலோவுரகக்கொடிவேந்தன்குலமோகுலைந்ததிவணென்பார்
நிழலோடுவிக்குநெருப்பன்றோநெறியொன்றில்லாநீடுபொலங்
கழலோன்மதிவெண்குடையென்பார்கையாற்கண்டகண்புடைப்பார். (உஉக)

காட்டுந்திறல்வெஞ்சிலைவிசையன்கையால்வகிர்ந்துகடிகொண்மலர்
சூட்டும்பனிச்சையிவண்புழுதித்துகளேறியதென்றழுதுணைவார்
மீட்டுந்தடாமலேகென்றுவிட்டாண்மைந்தரிட்டவினை
கேட்டுங்கொடியள்காந்தாரிகிளையோடின்றேகெடுமென்பார். (உஉஉ)

இரும்போநெஞ்சிம்மாமனிதற்கிசைந்தானுக்கவிருந்தென்பார்
பெரும்போரரசர்பெண்ணுடனேபிறந்துஞ்சிறப்பெறாரென்பார்
பொரும்போர்வீமன்பொறுத்தாலும்பொற்றேர்விசயன்பொறானென்பா
ரரும்போரரசர்தகாதென்றால்வருமோவிந்தவழிவென்பார். (உஉங)

என்னேகுடியிற்பிறந்தாருக்கிருப்பன்றிவ்வூரினியென்பார்
முன்னேயோடிமுறையிட்டான்முனியுங்கொல்லோவெமையென்பார்
பின்னேயிரங்கியழுதழுதுபேதுற்றின்னல்பெரிதுழப்பா
ரன்னேதுன்பங்களைந்தின்பமாவாயென்றேயருள்புரிவார். (உஉச)

பறைவன்களிற்றுப்பலபுரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்க்
கிறைவன்பாவையாங்காணவிவையோபடுவதென்றுரைப்பார்
பொறைவண்சிந்தைத்தருமனுக்குப்பொய்ச்சூதறிந்தும்பொரவென்ன
குறைவந்ததுதன்விதிவலியாற்குறைந்தான்யாவுங்கொடுத்தென்பார். (உஉரு)

நெடுமாநகரிற்சனமனைத்துநேயம்பெறக்கண்டிவைகூற
வடுமாமரபிற்குறத்தேடுமென்பேரவையின்முன்புக்காள்
கொடுமாமலர்க்கண்புனல்சோரக்குலைந்தேகிடந்தகுழல்சோரத்
தடுமாறுள்ளந்தனிசோரத்தலைநாளளித்ததழல்போல்வாள். (உஉசு)

நாணேமுதலாநாற்குணனுநண்ணுங்கற்புநயந்தணிந்த
பூணேயனையாளழுதரற்றிப்புன்பேரவையிற்புகுஞ்சோகங்
காணேமென்றுநிலனோக்கிக்கதிர்வேனிருபரிருந்திரங்கக்
கோணேர்பாடாயிருந்தான்குருடென்றுரைக்குங்கொடியோனே. (உஉஎ)

மேகங்குருதிபொழிந்தகல்வான்மீனும்பகலேமிகவிளங்கிப்
பூகம்பமுமுற்றுற்பாதம்போதியாவும்புரிந்தனவா
னாகம்புனைபொற்றுவசனுடனவிலாநின்றநால்வருமே
சோகம்பிறவாதிருந்தார்மற்றொழிந்தார்யாருஞ்சோகித்தார். (உஉஅ)

வீமன்கதைமேற்கைவைக்கவிசயன்சிலைமேல்விழிவைக்கத்
தாமம்புனைதோளிளையோருந்தத்தங்கருத்திற்சினமூட்டத்
தூமம்படுசெந்தழலவியச்சோனைமேகஞ்சொரிவதுபோ
னாமந்தருமனெனத்தக்கோனிளையோராறநவிலுற்றான். (உஉகூ)

தேம்போதனைத்துமெய்சாயுஞ்சிலபோதலருஞ்சிலபோது
வேம்போதங்குவாழ்வவெல்லாம்வெங்கானுடனேவேவாவோ
வாம்போதாகுமதுவன்றியாயபொருள்களம்முறையே
போம்போதனைத்தும்போமுன்னம்பொறுத்தீரின்னம்பொறுமென்றான். (உங௦)

வாருங்கண்ணீர்வளர்கொங்கைவரைமேலருவியெனவீழத்
தாருங்குழலுமின்னுடனேதலஞ்சேர்கொண்டலெனவீழக்
கூருந்துயரினுடன்வீழ்ந்துகோகோவென்றுகோச்சபையிற்
சோருங்கொடியைமுகநோக்கித்துச்சாதனன்மெய்சுடச்சொன்னான். (உஙக)

மன்வந்திருந்தசங்கத்துன்மாமனிருந்தானவருமுன்
முன்வந்திருந்தார்முன்கொண்டமுறையான்முயங்குமுடிவேந்தர்
மின்வந்தனையநுண்ணிடையாய்விழிநீர்சொரிந்துமெலியவுனக்
கென்வந்ததுகொல்பொதுமகளிர்க்கரிதோவிழிநீரெளிதென்றான். (உஙஉ)

பொல்லாவசையேபுகழ்பூணாப்புல்லன்புகலவிதற்கொன்றுஞ்
சொல்லாதிருந்தபேரவையைத்தொழுதாளழுதாள்சோர்வுற்றாண்
மல்லார்திண்டோண்மாமாவோமந்தாகினியாண்மதலாயோ
வெல்லாநெறியுமுணர்ந்தவருக்கிதுவோமண்ணிலியல்பென்றாள். (உஙங)

இன்னற்படுஞ்சொற்பாஞ்சாலியிரக்கந்தனைக்கண்டிரக்கமுறா
மன்னற்கிளையோய்தவறுரைத்தல்வழக்கோவடமீனனையாளை
யென்னக்கழறிநீயுரைத்தவெல்லாமரசற்கியம்பென்றான்
முன்னர்ப்புகலுங்குருகுலத்தோர்முதலாம்வாய்மைமொழியோனே. (உஙச)

மன்றோற்றனன்வெஞ்சூதாகில்வழக்காற்கொண்மின்மன்னவையின்
முன்றோற்றனனோவென்னையுந்தான்முன்னேயிசைந்துதனைத்தோற்ற
பின்றோற்றனனோகரியாகப்பெரியோருண்மைபேசுகென
மின்றோற்றனையநுண்ணிடையாள்விழிநீர்வெள்ளமிசைவீழ்ந்தாள். (உஙரு)

மையோடரிக்கண்மழைபொழியவாடுங்கொடியின்மொழிக்காகார்
வெய்யோனென்னத்தனக்காகார்விறல்வேல்வேந்தர்வெரூஉக்கொண்டு
பொய்யோவன்றுமெய்யாகப்புனையோவியம்போலிருந்தாரை
யையோவந்தக்கொடுமையையாமுரைக்கும்பொழுதைக்கதிபாவம். (உஙசு)

அல்லார்கூந்தல்விரித்தமயிலனையாளரற்றவதற்கொன்றுஞ்
சொல்லாதுமர்கணம்போலத்தொல்போர்வேந்தர்சூழ்ந்திருப்ப
மல்லார்தடந்தோள்விகருணனும்வாய்மைக்கடவுள்வாள்வேந்தீர்
பொல்லாநெறியிலனைவீரும்போகாவண்ணம்புகலீரே. (உஙஎ)

முறையோவென்றென்றவனிதலமுழுதுமுடையான்முடித்தேவி
நிறையோடழிந்தவினவவுநீர்நினைவற்றிருந்தீர்நினைவற்றோ
விறையோன்முனியுமெனநினைந்தோவிருந்தாலுறுதியெடுத்தியம்பல்
குறையோகண்கண்டதுநாளுங்குலத்துப்பிறந்தோர்கூறாரோ. (உஙஅ)

தன்னேரில்லாநெறித்தருமன்றனவென்றுரைக்கத்தக்கவெல்லா
முன்னேதோற்றுத்தங்களையுமுறையேதோற்றுமுடிவுற்றான்
சொன்னேருரைக்குத்தான்பிறர்க்குத்தொண்டாய்விட்டுச்சுரிகுழலைப்
பின்னேதோற்கவுரிமையினாற்பெறுமோவென்றுபேசீரோ. (உஙகூ)

என்றுமன்னர்முகநோக்கியெல்லாரிதயங்களுமகிழச்
சொன்னானவருந்தக்கோனென்றவனுக்கொருபேர்குட்டியபி
னன்றுமனத்தோடழன்மூளநயனஞ்சிவக்கநஞ்சின்வடி
வன்றானிளவன்முகநோக்கிப்பெருக்கன்குமரனறைகின்றான். (உச0)

வேறு.

இருக்கின்றதரணிபரினின்னறிவாலுயர்ந்தனையோவிராசநீதி
குருக்கொண்டுமுதிர்ந்தனையோகிளையொழிந்தால்வழக்கொருவர் குறிப்பாரற்றே
மருக்கொண்டதொடைமுடியாய்மொழிகென நின்னுடன்கேட்கவந்தாருண்டோ
வுரைக்கும்போதெவருடனுமுணர்ந்தன்றேவுரைப்பதெனவுருத்தான்மன்னே. ()

தான்படைத்தபொருளனைத்துந்தம்பியர்களுடன்றேற்றுத்தனையுந்தோற்றான்
மீன்படைத்தமதிமுகத்தாளிவன்படைத்ததனமன்றிவேறேகொல்லோ
வான்படைத்தநெடும்புரிசைமாநகருந்தனதில்லும்வழங்குமாயின்
யான்படைத்தமொழியன்றேயெங்கணுமில்லெனப்பட்டாளில்லாளன்றே. ()

மைக்கோதில்கலையுடையன்மதியுடையன்பொறையுடையன்வரிசையாகத்
தக்கோனென்றரசரெல்லாமுரைத்தபெயரிவன்றனக்கேதக்கதம்மா
மிக்கோர்மற்றுங்களைப்போல்வேறுண்டோமகிதலத்துவேந்தராகித்
தொக்கோர்யானுவன்றமொழிக்கெதிர்மொழியுண்டாமாகிற்சொல்லுவீரே.(உசங)

என்னவெகுண்டிடுகின்றவெல்லைதனிலெழுவுறழ்தோளிராசராசன்
றன்னனையகொடுங்கோபத்தம்பியையின்னும்பிதனைத்தக்கோனென்ற
மன்னவையினெதிரேயிம்மானமிலாவைவரையும்வழக்குவார்த்தை
சொன்னகிளிமொழியினையுந்துகிலுரிதியெனவுருமிற்சொன்னான்மன்னே. (உசச)

இத்தகவின்மொழிசெவியினெரிவாளியெனமூழ்கவிருந்தவேந்தர்
தத்தமனமடிந்துருகத்தருமன்முகமதிநோக்கித்தம்பிநோக்கி
வித்தகவெங்கதைநோக்கவிறல்வீமன்விசயனுந்தன்வில்லைநோக்க
வொத்தமனனுடையிளையோருருப்பமடக்கினனுண்மைக்குறுதிபோல்வான். ()

தருகதுகிலெனவெழுந்ததங்கைவன்பொடுதுச்சாதனன்சொலாமுன்
வருகவெனவரைமார்பின்வாங்காதவுத்தரியம்வாங்கியீந்தா
ரருகணுகிமடவரலையஞ்சாமற்றுகிலுரிவானடர்ந்தபோதி
லிருகைநறுமலர்குவியவெம்பெருமானிணையடிக்கேயிதயம்வைத்தாள். (உசரு)

ஆறுகியிருதடங்கணஞ்சனவெம்புனல்சோரவளகஞ்சோர
வேறுனதுகிறகைந்தகைசோரமெய்சோரவேறோர்சொல்லுங்
கூறுமற்கோவிந்தாகோவிந்தாவென்றரற்றிக்குளிர்ந்துநாவி
லூறுதவமிழ்தூறவுடல்புளகித்துள்ளமெலாமுருகினாளே. (உசஎ)

அருமறைசொல்லியநாமமாயிரமுமுரைத்தழைக்கவமரர்போற்றுந்
திருமலர்ச்செஞ்சீறடியோன்றிருச்செவியிலிவண்மொழிசென்றிசைத்தகாலை
மருமலர்மென்குழன்மானின்மனநடுங்காவகைமனத்தேவந்துதோன்றிக்
கரியமுகிலனையானும்பிறரெவர்க்குந்தெரியாமற்கருணைசெய்தான். (உசஅ)

உடுத்ததுகிலுணர்விலானுரிந்திடவுமாளாமலொன்றுக்கொன்றாங்
கடுத்தநிறம்பற்பலபெற்றாயிரமாயிரங்கோடியாடையாகக்
கொடுத்தருளவுரிந்தனபட்டிருந்தபெருந்தனிக்கூடங்கொள்ளாதோடி
யெடுத்தனர்பற்பலவீரருரிந்தோனுஞ்சலித்திருகையிளைத்துநின்றான். (உசகூ)

கங்கைமகன்முதலானகாவலர்மெய்யுறநடுங்கிக்கண்ணீர்சோரச்
செங்கைமலர்குவித்திவளேகற்பினுக்குமரபினுக்குந்தெய்வமென்று
ரங்கணகல்வானேருமானகமும்வலம்புரியுமதிரத்தங்கள்
பைங்கனகதருவின்மலர்மழைபொழிந்தகருணையினாற்பரிவுகூர்ந்தார். (உடுo)

அழுதழுதுகொடும்புலிவாயகப்பட்டமான்பிணைபோலாற்றாநின்ற
வெழுதரியமடப்பாவைதங்கண்முகங்களைநோக்கியிரங்கிவீழ்ந்த
பொழுதுமனம்புகைமூளப்பூந்தடங்கணனன்மூளப்போரின்மூளப்
பழுதுபடாவடலாண்மைப்பவனகுமரன்றடக்கைபடைமேல்வைத்தான். (உருக)

அருளாருந்தருமபதியாகாதென்றெமைப்பலகாலடக்கயாமு
மிருளால்வெம்பரிதிவடிவொளிப்பதுபோலமர்புரியாதிருக்கின்றேமான்
மருளான்மெய்ம்மயங்கியொருவலியுடையோர்தமைப்போலமதித்துநீங்கள்
பொருளாகவிருந்தனமோநூற்றுவரும்வருகவெதிர்பொருகவென்றான். (உருஉ)

கொந்தளகமலர்சொரியக்கூப்பிடுவாள்கொடுங்கற்புங்கூறைமாளா
மந்திரமுமடல்வீமன்மானமிலாதுரைக்கின்றவலியுங்காணத்
தந்தைவிழியிருள்போலத்தருமனத்தோனுந்துச்சாதனனைநோக்கிப் [டானே.
பைந்தொடியைக்கொணர்ந்தினியென்மடியின்மிசையிருத்துகெனப் பணித்திட்

என்றபொழுதருந்ததிக்குமெய்நாதகற்புடையாளிடியேறுண்ட
வன்றலைவெம்பணிபோலநடுங்கிமாயனையுமறவாளாகிப்
புன்றொழிலோன்யானிருக்கக்காட்டியதன்றொடைவழியேபுள்வாய்குத்தச்
சென்றிடுகவாருயிரென்றெவரும்வெருவுறச்சபித்தாடெய்வமன்னாள். (உருச)

அரசவையிலெனையேற்றியஞ்சாமற்றுகிறீண்டியளகந்தீண்டி
விரைசெயளியினம்படிதார்வேந்தரெதிர்தகாதனவேவிளம்புவோரைப்
பொருசமரின்முடிதுணித்துப்புலானாறுவெங்குருதிபொழியவெற்றி
முரசறையும்பொழுதல்லால்விரித்தகுழலினியெடுத்துமுடியேனென்றாள்.(உருரு)

பாஞ்சாலிக்கரசவையிற்பழுதுரைத்தோனுடலெனதுபடையாமேழி
போஞ்சாலினிணஞ்சொரியத்துணைவரொடுகுலமாளப்பொருவேன்யானே
நீஞ்சாலிவினைபழனத்திருநாட்டீர்கேண்மினெனச்செந்தீமூள
வேஞ்சாலினறுநெய்போல்வெஞ்சினத்தான்வஞ்சினமும்விளம்புவானே.(உருசு)

வண்டாருங்குழல்பிடித்துத்துகிலுரிந்தோனுடற்குருதிவாரியள்ளி
யுண்டாகக்குளிர்வதன்முன்னிக்கரத்தாற்புனலுண்ணேனொருகாலென்கைத்
தண்டால்வெம்புனலெற்றிமீதெழுந்துவிழுந்திவலைதண்ணீராகக்
கொண்டாவிபுரந்திடுவனிதுவிரதமெனக்கெனவுங்கூறினானே. (உருஎ)

பகைவன்றன்மதலையுயிர்பகைப்புலத்துக்கவர்வனெனப்பார்த்தன்சொன்னா
னகுலனுமற்றென்கரத்தாற்சௌபலநாயகனுயிர்க்குநாசமென்றான்
சகுனிதனையிமைப்பொழுதிற்சாதேவன்றுணித்திடுவேன்சமரிலென்றா
னிகனிருபரிவர்மொழிகேட்டெளிதோவிக்கொடும்பழியென்றேங்கினாரே. ()

மேகங்கள்வழங்காமல்விண்ணதிர்ந்திட்டேர்கோளும்வெயிலைச்சூழ்ந்து
பூகம்பம்பிறந்துடுவமரும்பகலேவிழுந்துடனேபொய்கைவாடி
யாகஞ்செய்நெடுஞ்சாலையின்பாலுஞ்செந்நீராயிருந்தவேந்த
ராகங்களொளிமழுங்கிற்றவதாவென்றணங்கனையாளழுதபோதே. (உருகூ)

உற்பாதம்பெரிதெனநெஞ்சுருகுவாருமென்னுமிவ்வூரென்றஞ்சி
நிற்பாரும்போம்வழிமேனினைவாரும்பலராகிநிகழ்ந்தகாலைக்
கற்பான்மிக்குயர்வேள்விக்கடன்சுமந்தமடமயிலைக்கண்ணிலாதோன்
பொற்பாதம்பணிந்தேத்திப்பாதம்புரிந்தவெல்லாம்பொறுத்தியென்றான். ()

உத்தமமாங்குலமயிலேயென்சிறுவராரியாமலுனக்குநேரே
மைத்துனராமுறையாலிவ்வழக்கலாதனசெய்தார்மதியிலாம
லெத்தனைதாழ்விவர்புரிந்தாரென்றாலுமவையொன்றுமெண்ணுநின்னே
பித்தர்மொழியெனக்கருதிமறந்தருளென்றொருகோடிபிதற்றினனே. (உசுக)

மைவரையுந்தடங்கண்ணாண்மனச்சோகம்பலமுகத்தான்மாற்றிமைந்த
ரைவரையுந்தனித்தனியேமுகங்கொண்டுகொடுங்கோபமகற்றிநீங்கள்
மெய்வரையும்பொருபுயத்தீர்வற்போரிலிழந்தவியனிலமுந்தேருங்
கைவரையும்பரிமாவுஞ்செல்வமும்யாவையுமீண்டுங்கைக்கொள்வீரே. (உசுஉ)

கோமன்றிலருந்ததியைக்கொண்டினிநீர்நில்லாமற்குருகவூரே
போமென்றுவரவழைத்துத்தழீஇக்கொண்டென்கண்மலரேபோல்வானெம்பி
யாமென்றுமவனென்றுமிரண்டில்லைவிளையாட்டென்றிருந்தேமிவ்வா
றாமென்பதெனக்கொருவருரைத்திலரால்யாமுமுதலறிந்திலேமே. (உசுங)

என்மைந்தரிவர்நீங்களவன்மைந்தரெனநினையேனிவரேயெம்பி
தன்மைந்தருங்களையேயென்மைந்தரெனவளர்த்தேன்சம்புநாட்டு
மன்மைந்தருங்களைப்போல்வேறுபடாதித்தனைநாள்வளர்ந்தாருண்டோ
வின்மைந்தர்நடக்கவெனவிடைகொடுத்தான்விரகினுக்கோர்வீடுபோல்வான். ()

படைகொடுத்தானிவணிழந்தபார்கொடுத்தானரசாளப்பண்டுபோல்வெண்
குடைகொடுத்தான்குருகுலத்தேகுலங்கொடுத்தானவருக்குக்குலத்தேகொண்ட
தடைகொடுத்தானகப்பட்டுந்தலையழிக்கநினையாமற்றானேயம்ம
விடைகொடுத்தானினிவிடுமோவயப்புலியைவாலுருவிவிடுகின்றீரே. (உசுரு)

வேறு.

யாதொருகருமமேனுமெண்ணியேதுணிகவென்றுங்
காதலிற்றுணிந்துசெய்தாலெண்ணுதல்கடனன்றென்று
மோதுநூற்புலவர்சொன்னருமக்குளவுணர்வற்றன்றே
பேதுறவடர்த்தும்பின்னையுருகிநீர்பிழைசெய்தீரே. (உசுசு)

தீயினாற்சுட்டசெம்புண்ணாறுமத்தீயிற்றீய
வாயினாற்சுட்டமாற்றமாறுமோவடுவேயன்றோ
பேயினாற்புடையுண்டாரோமறப்பரோபெரியோரென்றான்
வீயினாற்றொடுத்ததண்டார்வேந்தர்க்குவேந்தன்மாமன். (உசுஎ)

சகுனிசொன்மருகன்கேட்டுத்தம்பியுமங்கர்கோவு
முகமுகநோக்கியெண்ணியெம்பிநீமொழிகவென்றான்
றுகிலினையுரிந்தவன்கைச்சூரனுந்தருமராசன்
மகனுடன்வெகுளிதோன்றவழக்குறமொழிதலுற்றான். (உசுஅ)

சரதமென்றுண்மையாகச்சபையினீயிசைந்துதோற்ற
விரதமுங்களிறுமாவும்யாவையுமீண்டுந்தாரோஞ்
சுரதமென்கொடியுநீருந்தொண்டொழிந்தரியீராமின்
விரதமுன்னறத்துக்கென்றும்பொய்கொலோமெய்யேயன்றோ. (உசுக)

தந்தைதனருளாற்பெற்றீருரிமையுந்தம்பிமாரும்
பைந்தொடிதானுநீயும்பதிபெயர்ந்துயர்ந்தவேயின்
வெந்தழலனையகானின்வெளிப்படாதுறைமினின்றே
யிந்தமாதரணிவிட்டேகுமினெழுமினென்றான். (உஎ0)

என்றலுந்தந்தைதமைந்தனியம்பியவாய்மைகேட்டு
நின்றவாநில்லாவஞ்சநெஞ்சினனுமிமீண்டும்
வென்றிகொளரசனோடும்வெஞ்சிலைவிதுரனோடு
மொன்றியவமைச்சரோடுமுறுவனவுசாவலுற்றான். (உ௭௧)

மேல்வருகருமமென்னாவெருளியான்மிக்கவீரர்
நால்வருமெம்மனோர்கணவின்றனசிறிதுங்கேளார்
சேல்வரும்பழனநாடசெயலறிந்தெண்ணிவேத
நூல்வருமுறைசொல்லென்றானேன்சிலைநாவின்மிக்கோன். (உ௭உ)

வின்மகனுரைக்கவேலையமைச்சரும்விதூன்றானு
மன்முறைதவறினின்றேவசையும்வந்திசையுமென்றார்
கன்மனநெடுங்குன்றன்னான்கருதியக்கணத்தேமீளத்
தன்மனையாவர்நெஞ்சுஞ்சருகெனத்தழைக்கச்சொன்னான். (உ௭௩)

உன்னுணர்வுனக்கேயுள்ளதுன்பெருந்துணைவரான
கொன்னுனைவேலோர்வென்றுகொண்டனகொடுத்தலொல்லார்
பின்னுறவுரிமையாவும்பெறுதிநின்பெருமைக்கேற்ப
முன்னுளோர்பலருஞ்செய்தமுறைமையேமுன்னுகென்றான். (உ௭௪)

அரசன்மற்றுரைத்தமாற்றமந்தணனுணர்ந்துசெல்வ
முரசநிரயோத்திமுதூர்முன்னவன்கதையுங்கூறி
யுரைசெய்தபடியேயுங்களுலகினையிழந்துபின்னுள்
வரைசெறிகானில்வைகிவருவதேவழக்குமென்றான். (உ௭௫)

அரிவையோடகன்றுநீவிரைவருமடவியெய்திச்
சரர்தினமீராறங்கட்டின்னுநிர்மன்னுநாட்டி
னொருவருமறியாவண்ணமொருதினமுறைதிருங்கள்
பெருவிறலரசம்வாழ்வும்பின்னுறப்பெறுதிரென்றான். (உ௭௬)

மறைந்துறைநாளினும்மைமற்றுளோரீண்டுளாரென்
றறிந்திடின்மீண்டுமிவ்வாறரணியமடைதிரென்றான்
பிறந்தவிம்மாற்றங்கேட்டுப்பிதாமகன்முதலாயுள்ளோர்
சிறந்ததொன்றிதனினில்லையிசைந்ததேசெய்மினென்றார். (உ௭௭)

சுரிகுழலிலையகின்றதிரௌபதிசுருதிமுந்நூல்
வரபதிமொழிந்தமாற்றங்கேட்டலும்வணங்கியைவ
ரரசருமெனதுமைந்தரைவரும்யானுமீண்டு
முரிமையின்றெய்தவெஞ்சூதாடுதேவுறுதியென்றாள். (உ௭அ)

தையலங்குரைத்தமாற்றந்தருமனுங்கேட்டுநோங்கள்
கையறுதொண்டராகிக்கான்புகல்வழக்குமன்று
லையுறுதொருகாலின்னமாடுதுமருஞ்சூதென்றான்
மெய்யுறவிருந்தவேந்தர்மீளவுங்காணலுற்றார். (உ௭௯)

சத்தியவிரதன்றானுந்தன்பெருந்தேவிசொல்லப்
பத்தியால்வணங்கிமாயன்பன்னிருநாமமேத்தி
யொத்தவெண்கவறுவாங்கச்சகுனியாதொட்டமென்றான்
புத்தியாலவனும்யான்செய்புண்ணியமினைத்துமென்றான். (உ௮௦)

உருட்டியகவறுநேமியுடையவனருளினாலே
மருட்டியசகுனியெண்ணின்வழிப்படாதுருண்டகாலை
யிருட்டியவிழியான்மைந்தனிதயமுமிருண்டுசோரத்
தெருட்டியவுணர்வின்மிக்கோன்செப்பியயாவும்வென்றான். (உ௮௧)

வென்றுதன்னிளைஞரோடுமேதகுபுதல்வரோடு
மன்றலந்தெரிவையோடுமெற்றுளோர்தங்களோடு
மன்றுதன்குரவர்பொற்றாளன்புடன்வணங்கிக்கானஞ்
சென்றனனென்பமன்னோசெழுநிலமுடையகோமான். (உ௮௨)

ஒழிவுசெய்கருணைநால்வருள்ளமுமொழியவேனை
வழுவறுமன்னருள்ளமம்மரோடயர்ந்துவிம்மக்
குழவிபானுகர்தலின்றிக்கொற்றமாநகரிமாக்க
டழலெனவுயிர்த்துமாழ்கித்தனித்தனிபுலம்பலுற்றார். (உ௮௩)

நாட்டிடையெல்லைபொற்றாணறுமலர்சிவக்கவேகிக்
காட்டிடைபுகுந்தபோதுங்கலக்கமற்றுவகைகூர்ந்தான்
கூட்டிடையின்பத்துன்பக்கொழும்பயன்றுய்த்துமாறி
வீட்டிடைபுகுதும்போதுமெய்ம்மகிழ்விபுதர்போல்வான். (உ௮௪)

ஆ செய்யுள் - க,உ௫ள.

சூதுபோர்ச்சருக்கமுற்றிற்று.

---

சபாபருவம்

முற்றுப்பெற்றது.

---

மூன்றாவது

# ஆரணியபருவம்.

## அருச்சுனன்றவநிலைச்சருக்கம்.

பெருமிதவலியும்பாரும்பேணலார்கவரவின்சொற்
றருமனுந்தம்பிமாருந்தழலெழுதையலாளு
மருமகமுனிவர்முந்நான்காயிரர்சூழ்ந்துபோதக்
கருமுகில்படியுஞ்சாரற்காமியவனம்புக்காரே. (க)

ஆரமுமகிலுநாறுமருவியுஞ்சுனையுமத்த
வாரணம்பிடிகளோடுவாரிதோய்கானியாறு
மீரமுதிழலுங்காயுங்கனிகளும்யாவுமீண்டிக்
காரினம்பொழியுமந்தக்கானகத்தழகுகண்டார். (உ)

அங்கிவர்புகுந்தபின்னரங்கியின்புகையுமாறிப்
பொங்கியவோமத்தியின்புகையினுன்முகிலுண்டாகச்
சிங்கமுந்துதிக்கைமாவுஞ்சேர்ந்துடன்றிரியச்சூழ
லெங்கணுமழகுபெற்றதிமகிரிச்சாரல்போன்றே. (ங)

வேறு.

துருபனுந்திட்டத்துய்மனுஞ்சோமக, நிருபரானவர்யாவருநேர்ந்துடன்
விரவுதானைவிராடனுஞ்சுற்றமு, மருவினாரவ்வனத்திருந்தோரையே. (ச)

மற்றுமற்றுமகிபரிலன்பினு, முற்றவுற்றவுறவுடையோர்களுங்
கற்றகற்றகலைவிதமாக்களுஞ், சுற்றுமொய்த்தனர்தோமறுகேண்மையார். (ரு)

மாதவத்தின்பயனெனமாதவன், யாதவக்குலத்தேறிமையோர்பதி
யாதபத்தக்கருணிழல்போலருள், வேதவித்தகவீரனுமேவினான். (சு)

பாரிழந்தவிப்பாதகச்சூதுகேட், டருநெஞ்சினரேமுறுநோக்கினர்
பேரறன்றருபிள்ளையைப்பார்த்தருள், கூரவன்பொடிவையிவைகூறுவார். (எ)

மாயின்வல்லியைமன்னவையேற்றிய, குருகுலேசனைக்கொற்றவெஞ்சேனையோ
டிரியவேறுதமிப்பொழுதேயென, வுரமுஞ்சீற்றமுந்தோற்றவுரைசெய்வார். (அ)

தம்பிமாரைத்தனித்தனியேயுயிர், வெம்பிவீழவிரைந்துவில்வாங்கியின்
றம்பர்காணவுயிரழிப்போமெனத், தம்மைபகுடக்கருதினர்சொல்லுவார். (கூ)

வஞ்சகச்சுபலன்றருமைந்தனை, வெஞ்சமத்தினில்வீழக்கணைத்திடைச்
செஞ்சரத்தின்வழியுயிர்செல்லவே, யெஞ்சவிக்கவெழுமென்றியம்புவார். (க0)

சிதவெண்குடைவேந்தர்தந்தேர்விடுஞ், சுதன்மைந்தன்சுயோதனன்றோழனை
மாதிரங்களில்வானவர்காணவிப், போதுடற்றுவமென்னப்புகலுவார். (கக)

உந்தவுந்தவொருவர்க்கொருவர்வாய், முந்தமுந்தமுடுகுசினத்தரா
யந்தவந்தவவனிபர்யாவரு, மிந்தவிந்தவுரைகளியம்பவே. (கஉ)

கேட்டிருந்த ர்கேசவன்வாசவன், காட்டிருந்தனனென்னக்கவின்பெறுந்
தோட்டிருந்தளிதேனுகர்சோலையின், மாட்டிருந்தமகீபர்க்குரைசெய்வான். (கங)

விடுகவிந்தவெகுளியைப்பின்புற, வடுசெநுந்திறலாண்மைகடோன்றவே
வடுமனங்கொடுவஞ்சகஞ்செய்பவர், கெடுவரென்பதுகேட்டறியீர்கொலோ. (கச)

இயைந்துரைத்தவியைபின்படியினி, வியங்கிருக்கும்விபினந்தொறுமிருந்
துயர்ந்தபிற்செய்வினையையின்றுன்னுத, லயர்ந்துரைத்தலலாதிலையாவதே. (கரு)

வேறு.

கேட்டிநீமுரசகேதுகிளைஞர்தம்மிருக்கைதோறு
மீட்டியபுதல்வருள்ளோர்யாரையுமிருத்தல்செய்து
காட்டிடைநீரும்வைகிக்கடவநாள்கழித்துமீண்டு
நாட்டிடைவந்தாற்காண்டிநலனுளோர்நலன்களெல்லாம். (கசு)

அன்னையைச்சுபலன்பாவையருகுறவிருத்தியுங்க
டன்னையர்தம்மை * யாகசேனனூர்தன்னில்வைத்துப்
பின்னையும்வேண்டுவோரைப்பிறிவுறநெறியிற்போக்கி
நன்னயத்தொடுநீர்கானம்வைகுதனன்மையென்றான். (கஎ)

அச்சுதனுரைத்தமாற்றமறன்சுதன்மகிழ்ந்துகேட்டு
மெய்ச்சுதர்முதலாமற்றும்விளம்பியகிளையையெல்லா
மிச்சையின்படியேயாங்காங்கெய்துவித்திராமுண்டு
மச்சுறுகானில்வைகுமார்வமேயார்வமானான். (கஅ)

சோனைமாமுகிலின்மேனித்தோன்றலுந்துவரைபுக்கா
னேனையோர்தாமுந்தத்தமெயிலுடைநகரிபுக்கார்
ஞானயோகிகளுமோவ்வாநரேசனுந்தம்பிமாருங்
கானமேதாங்களாளுங்காசினியாகக்கொண்டார். (கசு)

அவ்வனந்தன்னில்வந்தவரசெலாமகன்றபின்னர்
வெவ்வனம்விடாதுமேவித்தவம்புரிவியாதனென்னுஞ்
செவ்வனமுனிவன்வந்தேசேயவன்சேய்களான
விவ்வனசரிதர்தம்மையினைவுடனெய்தினுனே. (உ0)

கண்டெதிர்சென்றுபோற்றிக்கண்ணினுஞ்சென்னிமீதுங்
கொண்டனரவன்றன்பாதங்குளிர்ந்தனருயிருமெய்யும்
புண்டாநுதலினனைப்பூசனைசெய்தபின்னர்
வண்டணிதாரான்செய்தவஞ்சனையனைத்துஞ்சொன்னார். (உக)

செறிந்தவர்க்கூற்றங்கோலஞ்செய்தவமுனியுமுன்னே
குறிந்தனநிகழ்ந்ததெல்லாங்கூறுதல்கொடிதுபாவம்
பிறிந்தனதாயந்தன்னிற்பெரும்பகையினிதென்றன்றே
வறிந்தவருரைத்தாரையவவாவினுக்கவதியுண்டோ. (உஉ)

துன்றினரின்னலெய்தத்துன்னலராகித்தம்மி
லொன்றினர்செறினுமுள்ளதுண்டெனவுணரத்தேற்றிக்
கன்றினர்கவலைதீர்த்தான்கண்ணுடைக்கருணைமூர்த்தி
குன்றினதுயர்ச்சியந்தக்குன்றினுக்கறியவுண்டோ. (உங)

* தனையர் - தன்னையரெனவிரிந்தது.

நீவிரேயல்விர்முன்னாணிலமுழுதாண்டநேமி
நாவிரிகீர்த்தியாளனளனெனுநாமவேந்தன்
காவிரியென்னத்தப்பாக்கருணையான்சூதிற்றோற்றுத்
தீவிரிகானஞ்சென்றகாதைநுஞ்செவிப்படாதோ. (உச)

தோத்திரமானதெய்வச்சுருதிகள்யாவுநான்காக்
கோத்தவன்பின்னுஞ்சொல்வான்குன்றவில்லவன்பாலின்று
பார்த்தனேசென்றுபாசுபதக்கணைவாங்கினல்லா
லார்த்தபைங்கழலாயெய்தாதரும்பகைமுடித்தலென்றான். (உரு)

பரிவுடன்முனிவன்மாற்றம்பணிந்துதன்றலைமேற்கொண்டு
வரிசிலைக்குலகமென்னுமகபதிமகனைநோக்கிக்
கிரிசனையுன்னிவெள்ளிக்கிரிப்புறமெய்தியார்க்கு
மரியநற்றவஞ்செய்தேனுமவனருள்பெறுதியையா. (உசு)

எனவிடைகொடுப்பமன்னிலிணையிலாவியாதன்பாத
மனனுறவிறைஞ்சியாங்கோர்மந்திரமுறையிற்பெற்று
நனிமிகுதிதியுநாளுநல்லதோர்முகூர்த்தந்தன்னிற்
சனபதமியக்கர்காட்டத்தனஞ்சயன்சேறலுற்றான். (உஎ)

வெஞ்சலமனத்தரானோர்விரகினாற்கூட்டங்கூட்டி
நஞ்சலதுவமையில்லாநவைபுரிந்தனர்களேனுஞ்
சஞ்சலமும்மைப்போலுந்தரணிபருறுதல்செய்யா
ரஞ்சலிரென்றுமீளவாரணமுனியும்போனான். (உஅ)

மரவுரிவுடையன்சென்னிவகுத்தசெஞ்சடையன்றூணிச்
சரமுடனங்கியீந்ததனுவினன்றவத்தின்மேலே
புரிதருமனத்தனெல்லாப்புண்ணியங்களுக்குந்தானே
யுரைபெறுதசரதன்றன்மகனலாதுவமையில்லான். (உகூ)

நெறியிருபுறத்துமூசிநுழையொணாநெருக்கமிக்க
செறிதருவனமுஞ்சிங்கஞ்சிந்துரஞ்செருச்செய்சாரற்
பொறைகளும்வெம்பிசாசபூதமோடியக்கர்யாரு
முறைதருகுவடுநீங்கியுத்தரமுடிவுகண்டான். (௩0)

அத்திசையிமையமென்னுமரசவெற்படைந்துமிக்க
பத்தியோடம்மைதன்னைப்பயந்தகுன்றென்றுபோற்றிச்
சத்தியவிரதன்றம்பிதபோவனந்தோறுந்தங்கண்
முத்தழல்வளர்ப்போர்பாதமுளரிகண்முடிமேற்கொண்டான். (௩௧)

சாரணரியக்கர்விச்சாதரர்முதற்பலருஞ்செஞ்சொ
லாரணப்படியேசூழவடவிகடோறும்வைகி
நாரணன்மலரோனும்பர்நாயகன்பதங்கணச்சிக்
காரணத்தவஞ்செய்வோரைக்கண்டுகண்டுவகைகூர்ந்தான். (௩௨)

அரியம்வெங்கரியுந்தம்மிலமர்புரிமுழக்கங்கேட்டுங்
கிரியினின்முழக்கங்கேட்டுக்கிராதர்போர்முழக்கங்கேட்டு
மெரிகிளர்முழக்கங்கேட்டுமெம்பிரானிமவான்றந்த
புரிகுழலோடும்வைகும்புண்ணியப்பொருப்பைச்சேர்ந்தான். (௩௩)

கைம்மலையுரிவையோடெட்செவிக்கச்சுஞ்சாத்துஞ்
செம்மலைவிழியிற்காணுன்சிந்தையாற்கண்டுபோற்றி
யம்மலைச்சாரலுறுமருந்தவம்புரிநர்கூற
விம்மலைநீங்கியாங்கண்மெய்த்தவவிரதனுனன். (ருச)

எயிலொருமூன்றுஞ்செற்றுனேந்திழையுடனேவைகுங்
கயிலையின்பெருமைதன்னைக்கட்டுரைசெய்வதெங்ஙன்
வெயிலவன்முதலோர்நாளுமேம்படவலஞ்செய்வார்க
ளயினுநல்லமுதோர்சூழ்வந்தன்புடன்போற்றுவாரே. (ருரு)

உருகியவெள்ளிபோலவுயர்முழைதோறும்வீழு
மருவிநீர்புனிதன்வேணியமருமாநதியிற்றுன்ற
வுருகியபனிவான்குன்றிலொண்பனிக்கடவுள்வந்து
மருவியதென்னத்தோன்றும்வருணமால்வரையின்றென்பால். (ருசு)

வேறு.

ஆசினுன்மறைப்படியுமெண்ணில்கோடியாகமத்தின்படியுமெழுத்தைந்துங் கூறிப், பூசினுன்வடிவமெலாம்விபூதியாலப்பூதியினைப்புரிந்தசடைப்புறத்தேசேர்த்தான், றேசினுலப்பொருப்பின்சிகரமேவுஞ்சிவனிவனேபோலுமெனத்தேவரெல்லாம், பேசினுர்வரிசிலைக்கைவிசயன்பூண்டபெருந்தவத்தினிலைசிலர்க்குப்பேசலாமோ. (ருஎ)

ஒருதாளின்மிசைநின்றுநின்றதாளினுருவின்மேலொருதாளையூன்றியொன்றுங், கருதாமன்மனமடக்கிவிசும்பினூடெங்கதிரவனைக்கவர்வான்போற்கரங்கணீட்டி, யிருதாரைநெடுந்தடங்கணிமையாதோராயிரங்கதிருந்தாமரைப்போதென்னநோக்கி, நிருதாதிபரின்மனுவாய்த்தவஞ்செய்வாரினிகரிவனுக்கார்கொலெனநிலைபெற்றுனே. (ருஅ)

தோற்றியதெம்மிடத்தேயித்தோன்றன்மாலைசூட்டியபொற்றுடியென்றுதுரங்கம்பொற்றேர், கூற்றியல்வெஞ்சிலைபாணந்தூணிநாணிகுரக்குநெடுங்கொடி முன்னங்கொடுத்தேமென்றுே, காற்றினுடன்விரைவுறச்சென்றருந்துமாறுகாண்டவநம்பசிக்களித்தகாளையென்றுே, நாற்றிசையும்வளர்த்தழற்கடவுளந்தரனுடலங்குளிர்விக்குநாரம்போன்றுன். (ருகூ)

வலப்பாகஞ்செழும்பவளச்சோதியென்னவானீலச்சோதியென்னமற்றப்பாகங், கலப்பானதிருமேனியணிந்தநீற்றுற்கதிர்முத்தின்சோதியெனமேனையீன்ற, குலப்பாவையுடன்கயிலைக்குன்றில்வாழ்விற் குன்றுடையோன்றிருக்கோலங்குறிப்பாலுன்னிப், புலப்பாடுபுறம்பொசியமார்புந்தோளும்பூரித்தானுடல்புளகம்பாரித்தானே. (சο)

கருந்துறுகல்லெனக்கருதிப்பிடியுங்கன்றுங்களிற்றினமுமுடனுரிஞ்சக்கறையானேறிப், பொருந்துமுழைப்புற்றதெனப்புயங்கமூரப்பூங்கொடிகண்மரனென்றுபாங்கேசுற்றப், பரிந்துவெயினுண்மழைநாள்பனிநாளென்றுபாராமனெடுங்காலம்பயின்றுன்மண்ணி, லருந்தவமுன்புரிந்தோரிலிவனைப்போன்மற்றுர்புரிந்தார்சிவசிவவென்றரியவாறே. (சக)

பகிரதனேமுதலானவெண்ணில்கோடிபார்த்திவருந்தவம்புரிந்தார்பைம்பொன்மேனி, யிகலவுணர்முதலானககனவாணரெத்தனைபேர்தவம்புரிந்தாரிமையோரேத்து, மகபதிதன்மதலையிவனெழுதொணுதவனப்பினுக்குவரிசிலைக்கைம்மதவேளொவ்வான், சகலகலைகளுக்குமிவன்றுனேயிங்ஙன்றவம்புரியநினைப்பதேசார்ந்தபாவம். (சஉ)

வேறு.

பன்னுக்குவாம்பரித்தேராதபனும்பணிந்துபசுபதியைநோக்கி
மன்னுக்குத்தவம்புரியுந்தனஞ்சயற்குக்கோடையினுமதியம்போன்றா
னென்னுக்குவரும்புவனம்யாவினுக்குங்கண்ணாவானிவனேயன்றோ
கண்ணுக்குப்புனைமணிப்பூண்கண்ணோட்டமென்பதெல்லாங்கருணையன்றோ. ()

வேறு.

அங்கியாலங்கியைவெதுப்பிவெம்மையைப், பொங்கியவாயுவாற்போக்கிமெய்ச்சி
தங்கியவமுதினாற்றண்ணெனும்படி, யிங்கிதத்தொடக்கினனிதயந்தன்னையே. [ரங்

ஈண்டுதன்கருத்தினோடியைந்தமாதவம், பூண்டிளமதிமுடிப்புண்ணியன்றனை, வேண்டியவாறெலாம்விருப்பொடுன்னினான், பாண்டியனுயர்குலப்பாவைகேள்வனே. (சரு)

நிரந்தரமனேகநாணினைவுவேறற, வுரந்தருபுலன்களையொடுக்கியாயுத
மிரந்தனன்வரையிடையியற்றுநற்றவம், புரந்தரனறிந்துமெய்புளகமேறவே. ()

குருவுடன்விரகுறக்கூறியீசனை, மருவுறுகொன்றைநாண்மாலைமௌலியைக்
கருமயில்பாகனைக்காண்டல்வேண்டிய, திருமகன்றவநிலைதெரியவுன்னினான். ()

அரும்பகைவலிமையாலவுணரூர்சுடும், பெரும்பிறையணிசடைப்பிஞ்ஞகன்றன
இரும்பகழிகள்பெறவெண்ணியேகொலாம், விரும்பியதித்தவம்வில்வலானரோ.()

நற்றவத்துறுதியுநரன்கருத்துநா, முற்றறிகுவமெனமுன்னுஞ்சிந்தையான்
கற்றையஞ்சடையவன்கயிலையங்கிரி, யுற்றறிவுறுவதற்குபாயமெண்ணினான். (சகூ)

தூநகையுருப்பசியரம்பைதொண்டைவாய், மேனகைதிலோத்தமையென்று வேலையின், மானெனமயிலெனவந்தமாதரீ, ரானவாறறிதிர்போயவன்றன்னெண்ணமே. (ரு0)

என்றுகொண்டிந்திரனியம்பமற்றவன், றுன்றியபேரவைத்தோற்றமிக்கவர்
குன்றிரண்டெடுப்பதோர்கொடிமருங்குலார்,சென்றனரவ்வுழிச்செய்யவாயினார்.()

காமனைநினைந்தனர்காமராசனு, மாமலர்வாளியுமதுரசாபமுந்
தேமருமலர்க்கையிற்சேர்த்திச்சேனையோ, டாமுறைபுகுந்தனனரனையஞ்சுவான்.

செந்தமிழ்வரைதருதேரன்செக்கர்வா, னந்தியானையன்மதியாதபத்திரன்
சிந்துவெம்முரசினன்செவ்விகூரவே, வந்தனன்காலமும்வசந்தமாக்கியே. (ருங)

வேறு.

கந்தனையளித்தகன்னியோர்பாகங்கலந்தமெய்க்கண்ணுதற்கெதிராய்ச்
செந்தமிழுரைத்தகுறுமுனியிருந்ததெய்வமால்வரையிடைத்தோன்றி
யிந்துவுமரவுமுறவுசெய்முடிமேலிருந்தமந்தாகினியருவி
வந்திழிபுனலுஞ்சந்தனங்கமழவந்ததுமந்தமாருதமே. (ருச)

வம்பறுமதுரப்பல்லவங்கோதிமாமகரந்தமாகந்தக்
கொம்பெலாமிருந்துகுயிலினங்கூவக்கொற்றவெஞ்சிலையினான்முன்னஞ்
சம்பராசரனைவென்றவீரனைப்பைந்தாமமாமணிமுடிசூட்டி
யெம்பிரான்முனிவுக்கஞ்சவென்பதுபோலியைந்ததுவசந்தகாலமுமே. (ருரு)

பூதமைந்தினையும்புலத்துடனொடுக்கிப்புரிசடையுடன்புருகூதன்
காதலம்புதல்வனருந்தவம்புரிதல்கண்போலிப்பனபோல
மாதிரந்தொறுஞ்செம்பல்லவச்செந்திவளர்த்துவான்மணியினைநோக்கிப்
பாதமொன்றினினின்றுயர்ந்தனவொளிகூர்பணையுடைப்பாதபங்களுமே. (ருசு)

உள்ளுறக்கலக்கமறத்தெளிந்தசலத்துயர்தலைமுழையினின் றருவி
வெள்ளமொத்தமுதங்கரையறப்பொழியவெம்மையாற்றணியுடல்குளிர்ந்து
புள்ளுடைக்கொடியோரிருவருங்காணுப்புண்ணியன்பொருப்பிடைத்தவஞ்செய்
வள்ளலொத்தனவச்சாரலைச்சூழ்ந்துவயங்குநீள்வாவியுஞ்சுனையும். (ருஎ)

நீறுபட்டிலங்குமெய்ந்நிலவொளியானெஞ்சினிலிருளினையகற்றி
மாறுபட்டிமைம்புலன்களுமொடுக்குமாதவன்வளர்த்தசெந்தழலாற்
கூறுபட்டுமையோடொருவடிவானேன்குன்றுசூழறைபொறையனைத்து
மாறுபட்டுருகிப்பெருகியோடினவாலம்மலைவெள்ளியாதலினல். (ருஅ)

அலைத்தடங்கடலிலமுதொடுற்பவித்தாங்கமரர்வாழ்பதிகுடிபுகுந்தோர்
குலைத்துமென்றெண்ணியொருவருக்கொருவர்கொடியிடைநுடங்கவந்தந்த
மலைத்தடநெருங்கப்புகுந்தனர்குயிலுமயூரமுமானுமேயனையார்
நிலைத்தவம்புரிவோனைவகைநெருப்பினடுவுறநின்றவாகண்டார். (ருகூ)

அந்தரத்தமரர்துந்துபிமுழங்கவநங்கதுந்துபியெதிர்முழங்க
வந்துபொற்சிலம்புமேகலைவிதமுமலர்க்கைவெள்வளைகளுமுழங்கப்
பந்தடித்திடுவாரம்மனையெறிவார்பயில்கழங்காடுவார்நெற்றிச்
சிந்துரத்திலகந்தீட்டுவாராகித்தனித்தனிதிசைதொறுஞ்சூழ்ந்தார். (சூ0)

குயிலொடுகூவிக்கிஞ்சுகமலர்ந்துகொஞ்சுபைங்கிளிகளையழைப்பார்
மயிலினநடிக்கத்தாமும்வண்கலாபமணியணியொளியெழநடிப்பார்
வெயில்விடுபரிதிமதியுடன்வலஞ்செய்விடாகமுழுவதுமொலிப்பக்
கயிலையங்கிரியின்சாரலோவெம்மூர்க்கடவுளாலயமெனக்களிப்பார். (சூக)

கூந்தன்மாமுகிலைக்குலைத்துடன்முடிப்பார்குங்குமங்கொங்கைமேலணிவா
ரேந்துபேரல்குற்கலைநெகிழ்த்துடுப்பாரிட்டவுத்தரியமாற்றிடுவார்
பூந்துகினனையநறுஞ்சுனைபடிவார்புழுகுசந்தனநறும்பனிநீர்
காந்திகொடெறிவார்காமவேதத்தைக்கருங்கடைக்கண்களான்மொழிவார். (சூஉ)

பண்ணுடையெழாலினின்னிசைவழியேபாடுவார்பைங்குழல்குறிப்பார்
பெண்ணுடைமடநாணகன்றபேரமளிப்பேச்செலாம்பேசிவந்தடுப்பார்
விண்ணுடையமிர்தம்பருகுவாருகிரான்மென்மலர்கொய்துமேலெறிவா
ரெண்ணுடைமடவார்புரிந்தனவிவ்வாறிங்கிதமெத்தனைகோடி. (சூங)

காவும்வண்புறவுங்கயங்களுமரும்பக்கவர்ந்தவெங்கணைகளாமைந்து
பூவும்வந்துள்ளமுறவுறப்பட்டுப்புதையவும்புலன்வழியன்றி
மேவுதன்கருத்தின்வழியிலேநின்றவிசயனையங்கிபால்வில்லு
மேவுமுன்பெற்றவிறைவனையெய்தெய்திளைத்தனணிரதிகேள்வனுமே. (சூச)

கூற்றினையுதைத்தபாதமுமுடுத்தகுஞ்சரத்துரிவையுமணிந்த
நீற்றொளிபரந்துநிலவெழுவடிவுநிலாவெயிலனலுமிழ்விழியு
மாற்றறல்பரந்தகொன்றைவார்சடையுமல்லதையாவையுங்கருதான்
மாற்றமொன்றின்றிநின்றனன்வரைபோல்வச்சிராயுதன்றிருமகனும். (சூரு)

அன்றரனிருந்தயோகினையகற்றியறிவிலாதங்கனுய்வெந்த
குன்றிதுதடங்கணாயிரமுடையோன்கூறியகூற்றினைத்தேறி
யின்றவன்மதலைபுரிதவங்குலைத்தாலென்வினைந்திடுமெனவஞ்சி
நின்றிலன்மதனனிற்குமோநெற்றிநெருப்பினுனீறுபட்டுள்ளோன். (சூசூ)

வானவர்பெருமானேவலால்வந்தவானவர்மகளிருந்தம்மா
லானனிரிடையாவையும்புரிந்துமொருபயன்பெற்றிலாசன்றூர்
கானகமுழுதும்பரிமளம்பரப்பிக்கானவண்டிமிர்தரப்புகுந்த
வேனிலுமகன்றருக்கனுங்குடபால்வெண்டிரைவேலைவாய்வீழ்ந்தான். (௬௭)

வேறு.

இந்திரன்சுதன்றனெண்ணம்யாவதென்றினிதினெண்ணி
யிந்திரசாலமாகவேவிளுரெவருமெய்தி
யிந்திரகீலந்தன்னிலிறைவனுக்குரைத்தாரந்த
விந்திரன்றானுமைந்தன்றவம்புரியிருக்கைசேர்ந்தான். (௬௮)

விருத்தமாமுனிவனாகிவிசயனைநோக்கியாது
கருத்துநீதவஞ்செய்கின்றகாரணமென்னையென்னத்
திருத்தகுசிந்தையோடுஞ்செந்தழலிடைநின்றோனு
மருத்துவானுருவமாறிவந்தவாறுணர்கலாதான். (௬௯)

மாசறுமதியமன்னவாண்முகமங்கைபாகத்
தீசன்வந்தெய்துகாறுமித்தவம்புரிவேனென்ன
வாசறுகடவுளோர்க்குமருமறைதனக்குமெட்டாத்
தேசவன்வருமோவென்றுசிரித்தனன்றேவர்கோமான். (௭௦)

சிரித்ததென்னென்னமீண்டுந்திருமகன்றன்னைநோக்கி
வருத்தமேயன்றியிந்தமாதவம்பயனின்றென்று
னுருத்திவனவனைநோக்கியுயிரிறுமளவுமிந்தக்
கருத்துநான்விடேனென்றான்கடுங்கனலூடுநின்றான். (௭௧)

மைந்தனிம்மாற்றங்கூறமனனுறமகிழ்ந்துதெய்வத்
தந்தையும்விருத்தவேடந்தனையொருகணத்தின்மாற்றி
யிந்திரனாகிமுன்னின்றிப்பெருந்தவத்தால்வந்து
பைந்தொடிபாகன்பாசுபதமுனக்குதவுமென்றான். (௭௨)

என்றுரைத்தமரர்கோமானேகியபின்னர்வெள்ளிக்
குன்றுடைப்புனிதன்பாதங்குறிப்புறுமனத்தனாகி
நின்றுநற்றவஞ்செய்கின்றநெடுந்தகைநீர்மையெல்லாஞ்
சென்றுமைக்குரியரானசேடியர்செப்பினாரே. (௭௩)

மேனைமுன்பெற்றகிள்ளைவேலையுஞ்சேலினோடு
மானையும்பொருதசெங்கண்மரகதவல்லிகேட்டுத்
தானையுங்கரியபெருத்தரியமுமாகச்சாத்த
வானையன்றுரித்தாற்கடிபணிந்தருளிச்செய்தாள். (௭௪)

வேறு.

ஆலமுண்டமுதம்பொழிதருநெடுங்கணம்பிகையருண்மொழிகேட்டு
நீலமுண்டிருண்டகண்டனுமிரங்கிநிரைவளைச்செங்கையாய்நெடிது
காலமுண்டருள்கூரறத்தின்மைந்தனுக்குங்காற்றின்மைந்தனுக்குநேரிளையான்
ஞாலமுண்டவனுக்குயிரெனச்சிறந்தோனரனெனுநாமமும்படைத்தோன். (௭௫)

ஆடியானனன்றன்மதலையர்விரகாலாடியருதிறுக்கழிந்து
காடோமுறையுங்கடனினரவரிற்கடவுளாயகன்றருகாலை
நீடுபேரமரிற்பகைவரைச்செருக்குநினைவினுநெருப்பிடைநம்மை
நாடியேயரிதிற்றவம்புரிகின்றானிதுமுன்னமேயறிவோம். (௭௬)

பருகுநீர்துறந்துகாற்றும்வெவ்வெயிலும்பாதபங்களின்சினையுதிர்ந்த
சருகுமேயொழியக்காய்கனிகிழங்குந்தானினிதருந்துதறவிர்ந்தா
னுருகுமாமனத்தைநாமுவந்திருத்தற்குறைபதியாக்கிநம்மிடத்தே
செருகினனுணர்வையாவரேயிவன்போற்செய்தவஞ்சிறந்தவரென்றான். (எஎ)

போகமாய்விரிந்தும்போகியாய்ப்பரந்தும்புலன்களின்வழிமனஞ்செலுத்தா
யோகியாயிருந்தும்யோகிகண்முதலாமுரைப்பரும்பலபொருளாயு
மேகமாய்நின்றதத்துவமறைக்குமெட்டுதற்கரியதன்வடிவிற்
பாகமாய்விளங்கும்பைந்தொடியுடனேபரிவுடன்சின்மொழிபகர்வான். (எஅ)

கேட்டிநீசெவ்வாய்க்கிளிநிகர்மொழியாய்கிரீடியைத்துணைவர்களுடனே
காட்டிலேயொதுக்கியினைஞருந்தானுங்கடியவஞ்சனையினாற்கவர்ந்த
நாட்டிலேவாழ்வோனேவலான்மூகநாமதானவனிவன்றன்னைக்
கோட்டிலேகொலைசெயேனமாய்வந்திக்குன்றிடையின்றுபுக்கனனால். (எகூ)

மற்றவன்விரைவினுடனமர்மலைந்துவாசவன்மதலையைவதைத்து
நற்றவமகற்றுமுன்னமேவிரைந்துநாமுயிர்கவருதல்வேண்டுங்
கொற்றவன்மதலைகேட்டனவரங்கள்கொடுத்தலும்வேண்டுமென்றெழுந்தான்
கற்றவர்வனைத்துத்திரிபுரமெரித்தோன்கற்றவர்கருத்தினாற்காண்போன். (அ0)

நனைமலர்சிதறித்தொழுதுமுன்னின்றநந்திமேனயனம்வைத்தருளி
வினைபடுகேழல்வேட்டைநாமின்றேவேடராயாடுதல்வேண்டு
நினைவுறவெமதுகணத்தொடிக்கணத்தேநீயுமவ்வுருக்கொளுகென்று
மனைவியுந்தானுங்கிராதர்தங்குலத்துமகிழ்நனும்வனிதையுமானார். (அக)

வேறு.

என்றபொழுதினினந்திமுந்திமுதற்கூற்றுதைத்தவிருதாள்போற்றி
வென்றிபுனைகணநாதர்க்குரைசெய்தானவர்களுமவ்வேடங்கொண்டார்
கொன்றைகமழ்முடியோனும்பிஞ்ஞகத்தைப்பின்னல்படுகுஞ்சியாக்கித்
துன்றுமயிற்பீலிநெடுங்கண்ணிதிருநெற்றியுறச்சுற்றினானே. (அஉ)

நீலமணித்திருக்கண்டநிலவெழவேபலகறைப்பூணிறையக்கட்டிக்
கோலமணிக்குழைகளினுங்குழையாகப்பிணையன்மலர்கொண்டுசாத்திச்
சேலையெனப்புலியதளுந்திருமருங்கிலுறச்சேர்த்திச்செய்யபைம்பொற்
காலிணையிற்செருப்பணிந்துசெய்யதிருவடிவுமிகக்கரியனானான். (அங)

இடக்கைமலர்வரிசிலையும்வலக்கைமலர்ப்பாணமும்வெந்நிடையேபாண
மடக்கியவெங்கொவெரித்தோலாவநாழிகையுமிகவழகுகூரக்
கடக்களிறன்றுரித்தபிரான்கண்டவர்கள்வெருவரமுன்கொண்டகோலந்
தொடக்கியுரைசெயநினைக்கிலாயிரநாவுடையோற்குஞ்சொல்லலாமோ. (அச)

வேறு.

குறைந்தசந்திரகிரணமும்பீலியுங்கொன்றையந்திருத்தாரும்
புறந்தயங்கிடவிழுந்தசெந்தனிச்சடைப்பொலிவையார்புகல்கிற்பார்
சிறந்தபைம்பொலங்கிரிமுடியடியுறத்தேவர்கோன்றிருச்செங்கை
நிறந்தருஞ்சிலைவனைவுறவழகுறநிமிர்ந்துநின்றதுபோலும். (அரு)

வேறு.

வரையரசன்றிருமடந்தைவனமுலைமேன்மணிக்குன்றிவடமுஞ்செங்கை
நிரைவளையும்புலிப்பல்லானிறந்திகழ்மங்கலப்பூணுநீலமேனி
விரையகிலினறுஞ்சாந்தும்விரித்ததழைப்பூந்துகிலும்வேடமாதர்
நிரைநிரையேதனைச்சூழநின்றவடிவழகினுக்குநிகர்வேறுண்டோ. (அசு)

ஓரனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப்
போரனந்தனைத்தேடிக்கணங்களுடன்புறப்பட்டான்புனங்களெல்லாஞ்
சேரனல்வினைகிரிக்குத்தேவதையாங்குழவியையுஞ்செங்கையேந்திப்
பாரனையுலகனைத்தும்பணிவுடனேபுகழ்ந்திடத்தன்பதிபின்வந்தாள். (அஎ)

அனந்தவேதமுமிறைவனேவலினன்ஞானிகளாயருகுசூழ
வனந்தகோடியிற்கோடிகணநாதர்வேட்டுவராயருகுபோத
வனந்தனுலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வனந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கினனடவியெல்லாம். (அஅ)

மூகதானவனிவன்மேன்முந்தியுயிர்கவருமெனுஞ்சிந்தையானப்
பாகசாதனிதவஞ்செய்பாக்கியபூமியைநோக்கிப்பரிவினோடு
மேகசாபமும்வணக்கியேகினனேகுதலுமிலங்குவெண்ணீற்
ருகனுனோக்கப்பட்டனுகியதாலருந்தவன்மேலந்தவேனம். (அகூ)

அதிர்ந்துவருகேழலைக்கண்டருந்தவத்தையழிக்குமெனவஞ்சிகாரு
முதிர்ந்தசருகுணவொழியவுணவிலான்விரைவினிற்றன்னொருவில்வாங்கி
முதிர்ந்தசினத்துடனெய்தான்முகம்புதையவக்கணைக்குமுன்னேயண்டம்
பிதிர்ந்திடவின்றுணையறிந்துவேடனதனபராங்கம்பிளக்கவெய்தான். (கூ0)

இருவருமேவியவாழியுடனேபட்டேழுருவியேனம்வீழ
வெருவருமாறடவியெலாந்தடவிவருவெஞ்சிலைக்கைவேடன்சேனை
யொருவன்முதலெய்திருக்கவவ்விலக்கைநீயெய்ததுரனேவென்று
பொருவருமாதவம்புரியும்புருகூதன்மதலையுடன்பூசலிட்டார். (கூக)

வேறு.

புராதனாகமவேதகீதபுராணரூபமொழித்துவெங்
கிராதனாகியவடிவுகொண்டகிரீசனோடுரைசெய்குவான்
விராதனாதிநிசாசரேசரைவென்றுமுச்சிகரத்தின்மே
லிராதவாறடலமர்புரிந்தவிராமனேநிகரேவினான். (கூ௨)

முன்புவிட்டவென்வாளிகேழன்முகம்பிளந்துபிறுருவநீ
பின்புவிட்டசரஞ்சிரத்திடையுருவுமாறுபிளந்ததால்
வன்பொடிப்படிபுகலுகின்றதுவன்மையோதிறல்வின்மையோ
வென்பெயர்ப்பொறியேவுபாரிதனுடலினிவிடுமேவுபார். (கூ௩)

எனக்கருந்தவமுயறலாலுதிர்சருகலாலுணவில்லையா
லுனக்குமுன்படைவேடருக்குநல்லுண்டியாமிதுகொண்டுபோ
வனக்குறும்பொறைநாடவுன்படைவலிமைகொண்டுவழக்கறச்
சினக்கில்வெங்கணைவிடுவன்யாறுயர்திசைதொறுந்தலைசிந்தவே. (கூ௪)

வேறு.

என்றமொழிசெவிப்படலுமெயினர்க்கெல்லாமிறைவனாகியவெயினனிவனை
நோக்கிப், பன்றிபெருமோகரத்தோடின்றுன்னுவிபருகியிடுமெனமிகவும்பயப்பட்
டாயோ, நின்றபெருந்தவமுயல்வோர்தாங்கள்கொண்டநிலைவொழியப்புறத்தொ
ன்றுநினைவரோசொல், பொன்றிடினுநீயறியப்பசுத்தோல்போர்த்துப்புலிப்பாய்ச்
சல்பாய்வரோபுரிவிலாதாய். (கூ௫)

மறையவனேவொருகுடைக்கீழ்வையங்காக்குமன்னவனேவைசியனேவடி
வமாதிப், பொறையுடனேதவம்புரியுமவுணர்மாக்கள்புத்தேளிர்நிருதரிவோர்புறத்
தனாரோ, நிறைவுடன்மெய்ப்பிறைபோலவடிவந்தேய்ந்துநெருப்பிடைநீநிற்கின்
றுய்வதோருண்டு, குறையுனக்கியாதனையென்றுனென்றபோதக்குருகுவாதனு
ந்தன்னைக்கூறினனே. (கூ௬)

கூறியசொற்கொண்டறிந்துவேடன்மீண்டுங்குருகுலத்தோரைவருளுங்குனிவிற்கற்றுச், சீறிவருதுருபதனைத்தேரிற்கட்டிச்சென்றுகுருதக்கிணைசெய்சிறுவனீயோ, வீறியலெங்குலத்திலொருவேடன்றன்னைவின்மைபொருதவன்றடக்கைவிரலுங்கொண்டாய், பேறறவன்றொருமுனிவன்வார்த்தைகேட்டுப்பிளந்தனைபல்வேடுவரைப்பிறைவாயம்பால். (௯௭)

கன்றிவருகனற்கடவுள்கையிற்றேருங்காண்டீவக்கார்முகமுங்கணையும்வாங்கி, யொன்றுபடக்காண்டவக்கானெரித்தநாளி லோருயிர்போற்பலயோனியுயிருமாட்டிக், குன்றுதோறுங்குன்றுதோறுமிருந்தவேடக்குழாமனைத்துநீறுபடக்கொன்றாயென்ப, ரின்றுமெனைமுகநோக்கிவன்மைவின்மையிரண்டுக்குமன்னவநீயிகழ்ந்திட்டாயே. (௯௮)

மல்லுக்கும்புயவலிக்குங் கலக்குறாத மனவலிக்குமறையுடன்போர்வாளியேவும், வில்லுக்குமுனின்மிகுத்தார்மண்மேலுண்டோவிசயனெனும்பெயர்க்குரியவிசயத்தாலே, சொல்லுக்குவிடேனின்றுநீயுநானுந்தோள்வலியுஞ்சிலைவலியுங்காண்டல்வேண்டுங், கல்லுக்குநிகர்மனத்தாயென்றானந்தக்காளையும்வில்வளைத்தொருவெங்கணைமேல்விட்டான். (௯௯)

விட்டகொடுங்கணையையொருகணையால்வேடன்விலக்கிவரிசிலைக்குரியவீரன்றன்மேற், றொட்டனனோரிரண்டுகணையவைபோய்மார்புந்தோளுமுடன்றுளைத்தனவாற்றுளைத்தபோது, கட்டழலினிடைநின்ற காளைமீளக் கடுங்கணைகளொருமூன்றுகடிதின்வாங்கி, வட்டநெடும்பீலியணிமுடியுமார்பும்வாகுவுமேயிலக்காகவலியொடெய்தான். (௧௦௦)

எய்தகணைதிருமேனியெய்துமுன்னரிறகுதுணிந்தொன்றிரண்டாயிலக்குறாமல், வெய்தின்வலியுடனெய்தான்மூன்றுவாளிவிண்ணவர்கோன்மகன்மேலும் வேறொன்றெய்தா, னைதினிவன்வினோதமுறத்தொடுத்தானென்ப தறியாமலெயினன்முடியணிந்தபீலி, கொய்தூகியறல்சிதறப்பிறையுமானுங் குலையவொருகணைகுரக்குக்கொடியோனெய்தான். (௧௦௧)

அற்போலச்சூழ்கின்றகிராதரெல்லாமவன்முடிமே லிவனெய்ததறிந்துநியி, னிற்போன்மேலெழுதலுமங்கவரையெல்லா நில்லுமெனக்கையமர்த்திநீயின்றெய்த, விற்போர்கண்டனமடடாவிற்பிடிக்கும்விரகறியோமுன்னிடத்தே வேதவிற்போர், கற்போமென்றொருகணைமற்றவன்மேல்விட்டான் கனகமலைச்சிலைவளைத்தகையினானே. (௧௦௨)

வேறு.

பீலிமுடியோன்விடுபிறைக்கணையைவேறொருபிறைக்கணையினால்விலகிவிற்
கோலிவடிவாளிமழைசிந்தினன்மழைக்கரியகொண்டலெனநின்றகுமரன்
மூலிவடிவாமெயினன்மேலவைபடாமன்முனைமண்மிசைகுளிக்கமுரணார்
வேலியிடுமாறெனவிழுந்தனவிழுந்ததனைவிசயனனிகண்டுவெகுளா. (௧௦௩)

வேணிமுடிவேடன்மிசைவேறுமொருசாயகம்விடுத்தனன்விடுத்தகணைவின்
னாணியொடுமுன்பினொடுபின்புதொடுகின்றகணைநடுவணறவெட்டுதலுமே
கோணியவிளம்பிறைமுடித்தவன்வெகுண்டுபலகோல்கள்விடவிந்திரகுமரன்
பாணியுடனேதொடைநடுங்கியயனின்றதொருபாதபமருங்கணுகினான். (௧௦௪)

கொண்டதவமேதனமெனப்புரியும்வில்லிமெய்குலைந்தயருகின்றநிலையைக்
கண்டருகுநின்றவிமவான்மகளுரைக்கமிகுகருணையொடிரங்கியவனைப்
பண்டுதவமேபுரியிலைப்பரமனத்தின்மிகுபரிவுடையனாகிவெகுளா
வெண்டிசையும்வென்றனலவித்தசிலைநாணியறவெயினர்பதியெய்தனனரோ. ()

உழுந்துருளுமெல்லைதனில்வில்லினெடுநாணறவுரத்தொடெட்டிரோடிவரிவிற்
கழுந்துகொடுமோமுடியின்மோதுமுனிழந்தயுயர்கண்ணிபடுபீலிமதியின்
கொழுந்தமுதுசோரவிடநாகர்சுடிகைத்தலைகுலைந்துமணிசிந்தநதியா
ளொழுந்துதடுமாறியகல்வானிலுறவேடனுமிளைத்தவசமுற்றனனரோ. (௧௦௬)

விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர்விரிஞ்சனரியேமுதலினோர்
மண்ணிலுறைமானவரில்யாரடிபடாதவர்மனுக்கண்முதலோர்களதலக்
கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள்கட்செவிமகிபன்முதலோ
ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதனவிருந்துழியிருந்துழியரோ. (௧௦௭)

வேதமடியுண்டனவிரிந்தபலவாகமவிதங்களடியுண்டனவொரைம்
பூதமடியுண்டனவிநாழிகைமுதற்புகல்செய்பொழுதொடுசெலிப்பில்பொருளின்
பேதமடியுண்டனபிறப்பிலியிறப்பிலிபிறங்கலரசன்றன்மகளார்
நாதனமலன்சமரவேடவடிவங்கொடுநரன்கையடியுண்டபொழுதே. (௧௦௮)

என்பொடுகொழுந்தசைநிணங்குருதியென்னுமவையீரிண்டானும்வயிரா
வன்பொடுவளர்ந்தமிருகாதிபதிகாரியெனும்வடிவழகுபெற்றமறவோ
னன்பினெடுபேரறம்வளர்த்தருளெயிற்றிமிகவஞ்சவபிராமவெயினன்
பொன்புரையுமேனியிலடித்தமைபொருதுமற்போர்புரியுமாறுகருதா. (௧௦௯)

உள்ளடிவிரற்றலைகள்புறவடிபரட்டிணுட்ணுயர்கணைக்கான்முழந்தா
டள்ளரியவூருவுயர்தாள்வரைகளொத்தகடிதடமுதரமார்புதிணிதோ [யால்
ளெள்ளிவருசெங்கையொடுமுன்கைபிடர்நெற்றியொடு சூடமெனவென்னுபடை
வள்ளலெனையாளுடையமாதவனுமாதவனுமல்லமர்தொடங்கியுறவே. (௧௧௦)

மல்லமர்தொடங்கியிவரிருவரும்வெகுண்டுபொரமாதிரமுமாநிலமுமே
லெல்லையுமதிர்ந்துசுழல்கின்றபொழுதத்திமையவின்பமயில்கேள்வன்வெகுளா
நல்லிசைபுனைந்தமணிநூபுரவிசாலவொளிநன்னுபதநான்மலரினால்
வில்லியரிலென்னுதிறல்வில்லுடையகாளைதனைவிண்ணுலகில்வீசினனரோ. ()

விண்ணவர்தம்மூர்புகுதவிண்ணவர்பிரான்மதலைவிசையுடனெழுந்துமுகில்போன்
மண்ணினிடைவீழ்தருமுன்மார்பகலமல்லதைவயங்குபுறமென்றுதெரியா
னெண்ணரியஞானவொளியாகிவெளியாகிவருமெயினர்பதியானகருணைப் [ன்.
புண்ணியன்மகிழ்ந்துருகநின்றொலியுடன்பழையபூசல்பொர வெண்ணியெதிர்வா

வெய்யகணநாதர்கணதேவர்விபுதாதியர்விரிஞ்சிசிவயோகியருஞ்
செய்யசடரோனளகையாதிபதிகின்னரர்கள்சித்தர்பலசாரணர்மணிப்
பையரவிருடிபுருகூதனிவர்சூழ்தரப்பச்சைமயில்பாதியுடனே
துய்யவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்ததுதொழுந்தகையதாகுமளவே. (௧௧௩)

கைவிலுடனேயெயினர்கோடிபலர்சூழ்வரக்கன்னிமயில்பின்னர்வரவே
தெய்வமறைஞானிகடொடர்ந்துவரவந்துபொருசெய்யசிவவேடன்முடிமேற்
சைவமுறையேயிறைவர்தன்மலரினோடறுகுசாத்தியொளிர்நான்மலரெலா
மெய்வடிவுகொண்டனையகரியதவவேடனிணைவிழிமலர்பரப்பிமகிழா. (௧௧௪)

தும்பைவகைமாலைசெறிவில்லமொடுகொன்றைமலர்சூதமறுகேகமழ்தருஞ்
செம்பவளவேணிமிசைதிங்கணிருடியருள்செம்பொன்வடமேருவனையா
னும்பர்மணியாழினெடுதம்புருவுநாரதனுமுருகியிசைபாடவருள்கூ
ரம்பையுடனேவிடையின்மீதொளிரநின்றதலையஞ்சலிசெய்தன்பொடுதொழா. ()

வேறு.

ஆடினன்களித்தனனயர்ந்துநின்றன, னோடினன்குதித்தனனுருகிமாழ்கினன்
பாடினன்பதைத்தனன்பவளமேனியை, நாடினனடுங்கினனயந்தசிந்தையான். ()

விழுந்தருவினையினின்மெலிந்துநாயினு, மழுந்தியபிறவியினயருவேன்முனஞ், செ
ழுஞ்சுடர்மணிப்பணித்திங்கண்மௌலியா, யெழுந்தருளியவிஃதென்னமாயமோ.

ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர், சோதியேகொன்றையந்தொங்கன்மௌலி
யாய், வாதியேமரகதவல்லியாளொரு, பாதியேபவளமாம்பரமரூபியே. (௧௧௮)

பையராவணிமணிப்பவளமேனியாய், செய்யவாய்மரகதச்செல்விபாகனே, யைய
னேசேவடியடைந்தவர்க்கெலா, மெய்யனேயெங்குமாய்விளங்குஞ்சோதியே. ()

முக்கணுநிலவெழமுகிழ்த்தமூரலுஞ், சக்கரவதனமுந்தயங்குவேணியு, மைக்கய
ன்மரகதவல்லிவாழ்வுறு, செக்கர்மெய்வடிவமுஞ்சிறந்துவாழியே. (௧௨௦)

அன்புறுதருமனுக்கநுசனாயினே, னன்பரம்பொருளுக்குநண்புமாயினேன், பொ
ன்புரைமேனியாய்போற்றினேனுனை, யென்பெருந்தவப்பயன்யார்பெற்றார்களே.

என்றுகொண்டிம்முறையிவணியம்பவே, மன்றலங்கொன்றையம்மாலைமௌலியா
னொன்றியதவம்புரியும்பர்தம்பிரான், றன்றிருமதலையைத்தழுவினானரோ. (௧௨௨)

தழுவினன்பெருந்துயரகற்றித்தண்ணளி, பொழிதருகண்ணினன்புரக்குஞ்சிந்தை
ய, னழிவறவொழிவறவமர்ந்தசோதியன், பழுதறுமொழிசிலபகர்ந்துதேற்றினான்.

சூதினில்யாவையுந்தோற்றுக்கானிடை, யேதிலர்போலநீரிளைத்துவாடினீர், வாது
செய்புலன்களையடக்கிமண்ணின்மே, னீதவம்புரிந்தமைநினையலாகுமோ. ()

மூகனென்றுரைக்குமம்மூகதானவன், வேகமோடேனமாய்விரைவில்வந்தன,னா
கவெங்கொடியவனவின்றவாய்மையால்,யோகுசெயுனதுயிருண்ணவெண்ணியே

வந்தவன்முந்துமுன்மங்கைதன்னுட, னிந்தவெற்புறைதருமெயினவேடமாய்ச், சு
ந்தரமரகதச்சோதிவீரனே, யந்தவல்லசுரனையம்பின்வீழ்த்தினேன். (௧௨௫)

நின்னுடனமர்செய்துநின்வின்னாணறுத், தந்நெடுவில்லினாலடியுமுண்டன, னான்
னருமல்லினாலுதையுமுண்டன, னென்னினியுன்கருத்தென்றுகூறினான். (௧௨௭)

அந்தவில்விசயனுமரன்பதம்பணிந், தெந்தைபாரதவமர்க்கிசைந்தவீரர்மெய், சிந்த
நின்பேர்பெறுதெய்வவாளியைத், தந்தருளென்றனன்றவத்தின்மேனின்றான். ()

ஐயனுமம்மையோடருள்புரிந்துபின், வெய்யபொற்றூணியும்வில்லுமந்த்ரமுந், துய்
யபாசுபதமெய்த்தொடையுமுட்டியு, மொய்யெனநிலையுடனுதவினானரோ. (௧௨௯)

பெற்றனன்விசயனும்பேயும்பூதமுஞ், சுற்றியகணங்களுஞ்சுருதியோசையும், வெ
ற்றிகொள்பெற்றமும்விழைந்துசூழவே, கற்றையஞ்சடையவன்கயிலையேகினான்.()

ஏகியபின்னராயிரங்கணாதனு, மோகரதுந்துபிமுழங்கத்தேரின்மே, னாகருமுனி
வருநண்ணிவாழ்த்தவே, வாகைகொள்விசயனைவந்துபுல்லியே. (௧௩௧)

நீபுரிதவப்பயனீடுவாழியே, சாபமுந்தூணியுஞ்சரமும்வாழியே
தீபமெய்யொளியுடன்சேர்ந்துபோர்செயு, மாபெருநீலமெய்வாழிவாழியே.(௧௩௨)

என்றுகொண்டிணையடியிறைஞ்சுமைந்தனைத், தன்றிருத்தேரின்மேற்றாழ்ந்
தகைகளா, லொன்றியவுவகையோடேற்றியும்பர்கோன், சென்றனன்றன்பெருந்
தெய்வவானமே. (௧௩௩)

ஒருபெருமாதவியூருந்தேரின்மே, லிருமாகதகிரியிருந்ததென்னவே
மருவருகற்பகமாலைமௌலியும்; விரிபுகழ்மைந்தனும்விளங்கினுமரோ. (௧௩௪)

ஆயிரம்பொலங்கிரியழித்துவானின்மேன், மாயிருமொருபுரம்வகுத்ததென்னவே
பாயிரமறைபுகழ்பரமன்றேசெனச், சேயிரும்பொன்னகர்திகழ்ந்துதோன்றுமால்.

விண்ணவர்முனிவருள்விளங்கிவாழ்தலா, னண்ணியமுடிப்பெயர்நாகம்பூணலா
லெண்ணருமகபதியிருந்தமாநகர், புண்ணியன்வடிவெனப்பொலிந்திலங்குமால்.()

மாவலிசிறைப்படவைத்ததாண்மலர், தாவியவிண்ணிடைத்தயங்குபொன்னகர்
தேவருந்தொழுகழற்றேவனுந்தியம்,பூவிருந்ததுவெனப்பொலிந்துதோன்றுமால்.

பொலிவுறுமந்நகர்புருந்துதாதையுஞ், சிலைகணைபெறுதிறற்றெய்வமைந்தனு
மெலிவுறுமின்னிடைநுடங்கமீனினும், பலராமாதரார்பரிவுகூரவே. (௧௩௮)

பருமணிவெயிலெழப்பணிலமாநிரை, தருமணிகிலவெழுத்தபணியப்பெருங்
குருமணிச்சிலம்பொலிகூருமண்டபத், தொருமணியாசனத்தோங்கிவைகினர். ()

முருகவிழ்பரிமளமொய்த்ததண்டுழாய், மரகதகிரிதிருமைத்துனன்றனைப்
பெருமிதவபிமனைப்பெற்றகாளையை,யருள்பெறுமுவகையோடன்னையெய்தினள்.

அன்னையைமின்னிடையரியபாவையைக், கன்னலையமுதொடுகலந்தசொல்லியை
யுன்னருந்தவப்பயனுற்றமைந்தனுஞ்,சென்னியையவள்பதஞ்சேர்த்துநின்றனன்.

நின்றவக்குமரனைத்தழுவிநேயமோ, டொன்றியவுவகையளுரைவழுத்தினள்
வென்றிகொளையகீவிபுதர்தம்பிரான்,றன்றிருச்செல்வமுந்தாங்குவாயென. (௧௪௨)

ஆயிரம்பதின்மடங்காகவன்னையு, மாயிரும்புதல்வனைவாழ்த்திவாழ்த்தியே
தூயசெம்பருமணிசுடருமாளிகை, யேயினளிந்திரனிதயம்போன்றுளாள். (௧௪௩)

அந்தரதுந்துபியதிரும்பேரொலி, முந்தியமறையொலிமுழங்குஞ்சங்கொலி
சிந்துரமதகரிசிறுகீடொலி, சுந்தரமுகிலொலிதூங்கத்தூங்குமால். (௧௪௪)

பத்திகொணவமணிபயின்றுசெந்துகிர்க், கொத்தொளிர்தளிருடன்குலாவுகற்பகஞ்
சித்திரவிசயவில்விசயன்சென்னிமேல், வைத்ததுமுருகவிழ்வாசமாலையே.(௧௪௫)

கிளரிசைத்தும்புருகிளருங்கற்பகத், தளையவிழ்நாண்மலர்சாத்துநாரத
னளிபயிலமுதமுண்டகமகிழ்ந்துளக், களியொடுகின்னரர்கானம்பாடவே.(௧௪௬)

சிலைபனனிகரகத்தியன்புலத்தியன், வலைபெறுவசிட்டனேழ்வசுக்களாதிய
ரகமகிழ்ந்துவகைகொளன்பினுற்றிரு, முகமலர்ந்தருமறைமுனிவர்வாழ்த்தவே. ()

செம்மணிவெயில்வருசிலம்புகொஞ்சவே, கைம்மணிவரிவளைகலந்துபொங்கவே
பெய்ம்மணிமேகலைபிறங்கியார்க்கவே, தய்ம்மணியொளியராமாதர்சூழவே.(௧௪௮)

வேறு.

இவ்வாறிவரிருவோர்களுமிணைமாமுகிலெனவே
செவ்வாளரிகிளர்கின்றதொர்செம்பொற்றவிசிடையே
மைவானகமுழுதுஞ்செழுமறையோசைவிளைக்கு
மவ்வானவர்புடைசூழ்தரவழுசெய்திருந்தார். (௧௪௯)

இருந்தாரிவர்குளிர்சாமரையிருபானுமிரட்டப்
பெருந்தாரகைமதியொத்தொளிபெறுகின்றகுடைக்கீழ்
முருந்தார்நகையரமாதரின்முதன்மைப்பெயர்புனையுஞ்
செருந்தார்குழலுடையாளரிதிருவுருவின்வந்தாள். (௧௫௦)

மானேதருவிழியாடிருமாதேவிகெழிலா
டேனேதிகழ்மொழியாள்பொருசிலையேதருநுதலா
டானேதனைநிகர்வாள்பெயர்தருநாடகமெல்லாங்
கானேசெறிதொடையானிருகண்கண்டுகளித்தான். (௧௫௧)

இந்நாடகவிதம்யாவையும்யாரேதனிபுரிவார்
மின்றுரிடைமின்னேரிழைமென்கொம்பையலாதா
ரென்றுவிழிகளியாமனமுருகாவிசையெழுதும்
பொன்றுடையவன்மைந்தன்வியப்போடுபுகழ்ந்தான். (௧௫௨)

திகழ்கின்றனவுரைதந்தைசெவிப்போதுறுமுன்னே
யிகல்கொண்டுயர்தோளாய்புதிதிந்நாடகமென்று
மகவான்பெருமிதவாழ்வுரைவானோர்முதல்யாரு
மிருகுங்குமமுலையாருடன்விடைகொண்டிடவிட்டான். (௧௫௩)

வகைகொண்டுயர்தோளாரவர்மந்தாகினியாடிச்
சிகரம்பயில்வரைபோலுயர்திருமண்டபமிசையே
யகிறுன்றியகுழலார்பலராமாதரளிக்கு
நிகரம்பயிலமுதுண்டவர்நிறைவெய்தியிருந்தார். (௧௫௪)

தருக்குங்களியமுதுண்டவர்தனிவாழ்வுறுமெல்லைச்
சுருக்குங்கணமணிநீள்வெயில்சுடர்மாளிகைவேறொன்
றிருக்கும்படிவிசயன்பெறவீந்தான்விடையதுகண்
டருக்கன்குடகடன்மாளிகையணிதேரொடடைந்தான். (௧௫௫)

மேலைத்திசைகாலைச்சுடர்வீழ்தந்திடுமுன்ன
மாலைச்சுடர்காலைத்திசைவாழ்வுற்றிடவந்தான்
சோலைத்தருவருள்வாரிதிசூழ்வான்முகடேறிப்
பாலைப்பொழிவதுபோனிலவொளிகொண்டுபரப்பா. (௧௫௬)

அந்தச்சிலைமகவான்மகனம்மாளிகையிடையே
முந்துற்றதோர்தவிசிற்கருமுகில்போலவிருந்தான்
கந்தர்ப்பன்வெகுண்டேவியகணைபட்டுளமுருகா
நொந்துற்றுமுனடனம்புரிநுண்ணேரிழையங்கண். (௧௫௭)

அக்கங்குலினிடையேமலரரிசந்தனவாச
மைக்கங்குனிகர்க்குஞ்செறிமலர்நீலமணிந்தா
ளுய்க்கும்பருமணிநீலிதவுடையாடையுடுத்தாண்
மெய்க்குந்தவவயவாளிகொள்விசயன்றுழைவந்தாள். (௧௫௮)

ஓராயிரமகல்வான்மணியொக்குந்தவிசிடையே
யீராயிரதீபங்களெறிக்குஞ்சுடரெழவே
வாராயிரமுகமாநுகர்மஞ்சேநிகர்செங்கட்
பேராயிரமுடையான்மகனெதிர்கொண்டிவைபேசும். (௧௫௯)

எந்தைப்பெயர்புனையாயுவெறும்பேர்முடியிறைவன்
றந்தைக்குயிர்சிகராகியதளவத்திருநகையாய்
கொந்துற்றெழுகுழலாய்குழனிகராகியமொழியாய்
வந்துற்றதெனெனவன்னைமலர்த்தாள்களில்வீழ்ந்தான். (௧௬௦)

இவ்வாறிவனவடாள்களிறைஞ்சிப்புறநின்றான்
மெய்வாய்மையினுயருந்தவவிபுதாதியர்மகளுஞ்
செவ்வாயிதழ்மடியாவிழிசிவவாமதிகருகா
வெவ்வாளரவுமிழுங்கவிடநேர்மொழிபகர்வாள். (கசுக)

இந்தத்தனியிரவின்கணின்னிருதோடமுழுவுறவே
வந்துற்றவெனைத்தாயர்தம்வகையிற்புகல்செய்யா
நிந்தித்தனைநீசெய்தவநெறியின்பயனெல்லாம்
வெந்துற்றருநீறுயெழவிடுவேனெனவெருளா. (கசுஉ)

நின்போலமர்புரிவாரிருநிலமன்னரினுண்டோ
வன்போடழல்வருபாவையையடைவுன்னியளித்தாய்
பொன்போலிரவிடையாடவர்புகலாமொழிபுகல்வாய்
வன்போவருணலமோபெருமிதமோவளர்புகழோ. (கசுங)

எனமன்னனைநீபேடியரியல்பாகெனவிதியா
கனைமென்குழன்மலர்மங்கையுநாணுநலமுடையா
டனிகங்குலினிடைசென்றுயர்தன்கோயில்புகுந்தா
ளனலன்றருசிலைவீரனுமஃதெய்தினனந்தோ. (கசுச)

ஆடித்திருமுகமன்னவனநசன்றருவிசயன்
பேடிப்பெயர்நாமோபெறுவோமென்றெழில்வடிவம்
வாடிப்பெரிதுளநொந்தணிமாசற்றதொர்தூசான்
மூடித்துயில்கொண்டான்மணிமுடிமன்னவர்திலகன். (கசுரு)

அக்காலையில்விசயன்றனதிடாரிருளகலச்
செக்காவியுமரவிந்தமும்வரிவண்டொடுதிகழ
மைக்காரிருள்வெள்ளம்பிலவள்ளத்திடைவடியத்
தொக்காறுயர்குணதிக்கினிலகிலந்தொழுசூரன். (கசுசு)

வேறு.

கதிருதித்தவக்காலையின்மாமறை, முதல்வர்முப்பத்துமூவருஞ்சூழ்வரப்
புதல்வனுற்றதுணரான்புரந்தரன், விதமணிப்பணிமண்டபமேவினான். (கசுஎ)

கன்பரப்பியோர்கந்தருவன்றனை, விண்புரக்குமவ்வேந்தனிருந்தபின்
மண்புரக்கும்வரிசிலைவீரனை, யெண்பெறக்கொணர்வாயெனவேவினான். (கசுஅ)

மற்றவன்றிருத்தாண்மலர்போற்றியக், கொற்றவன்றிருமுன்னர்க்குறுகியாங்
குற்றயாவுமுணர்ந்தனன்மீண்டுபோய்ச், சொற்றனன்சுரர்கோமுன்றெழுதரோ.()

சொன்னவாசகங்கேட்டசுரபதி, கன்னம்வெந்துகண்ணாயிரமும்புன
றன்னவானவர்சூழ்வரத்தானும்போ, யங்கராதிபன்றன்னையணுகினான். (கஎO)

அறுதிமைந்தனையன்பொடுறத்தழீஇக், கணிகையிட்டகடுங்கொடுஞ்சாபநீ
தணிதியஞ்சலென்றுரைநூலதையலாற், பிணியுழந்துமுன்பேர்பெறும்பெற்றியான்.

அன்னமென்னடையாயிழைதன்னுழைத், தன்னினன்சுரரோடுஞ்சுரேசன்போய்
மின்னினுண்ணிடையாளும்வெருவுற,மன்னவன்பதம்வந்துவணங்கினாள்.(கஎஉ)

வணங்குமுன்னமடநடையோதிமக், கணங்கொலென்னக்கவின்பெறுகோதையைச், கணங்கருமுலைத்தோகையைவார்குழ, லணங்கையண்டரனைவரும் போற்றியே. (கஎங)

அன்னைநீயெவர்க்காயினுமாசையி, னின்னநீர்ப்பதேவர்க்குமியல்பரோ
மன்னனாயினும்வான்பிழைசெய்தன, னென்னநாகரவட்கிதங்கூறியே. (கஎச)

காமமிக்கவுன்கட்டுரைச்சாபநோய், பூமிபொய்ப்பினும்பொய்ப்பதன்றலரோ
வேய்மலர்த்தொடையானெஞ்சில்வேண்டினா, ளாமவற்கிவ்வுருவருள்செய்திநீ. ()

என்றுவானவர்யாவருமேத்தவே, யன்றவற்கவ்வரங்கொடுத்தாளவள்
வென்றிவார்சிலைமீளியுந்தன்பெருந், துன்றுகோலஞ்சிறந்திடத்தோன்றினான். ()

ஆ செய்யுள் - க,சஙங.

அருச்சுனன்றவநிலைச்சருக்கமுற்றிற்று.

---

# நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கம்.

---

அவ்வரந்தனக்குநல்குமன்னைதாள்வணங்கும்வென்றிக்
கைவருசிலையினானைக்கடவுளர்க்கிறைவன்கொண்டு
மொய்வருசுரர்கள்சூழமுதன்மைசேர்சுதன்மையெய்தி
வெவ்வரிமுகத்தபீடம்விளங்கவீற்றிருந்தகாலை. (க)

தூண்டருதோளின்மொய்ம்பானம்வலிதொலைத்துமேன்மேன்
மூண்டெழுமவுணர்தம்மையிவனன்றிமுடிப்பார்யாரென்
றாண்டகையமரர்க்கெல்லாமவன்செயலடைவேசொல்லிக்
காண்டவமெரித்தவீரனிவனெனக்காட்டினானே. (உ)

அவ்வுரைகேட்டதேவாகமகிழ்ந்தவனுக்கன்பாற்
றிவ்வியமறையின்மிக்கதெக்கிணைபலவுஞ்செய்தார்
செவ்வியதாதைதானுஞ்சேணதித்துநீராட்டி
விவ்விரவாதவாசத்தாமமும்விழைந்தருட்டி. (ங)

ஆயிரங்கதிருந்திங்களனந்தமுமடங்கமேன்மேற்
காய்கதிர்விரிவதியார்க்குங்கருத்துறக்காணவொண்ணாச்
சேயொளிதவழ்வதாகித்திசைமுகன்றனக்குநல்கு
மாயிரங்கிரணரத்நமவுலியுங்கவித்தானன்றே. (ச)

ஆடையுங்கலனுமந்த்ரத்துடனடற்படையுநல்கி
யேடவிழலங்கலானோராசனத்திருத்தியென்றுந்
தேடுதற்கரியதூயவமுதுசெம்பொற்கலத்திற்
கூடவுண்டமரர்க்கெல்லாங்குரிசிலாஞ்சிறப்புஞ்செய்தான். (ரு)

அன்னதுநிகழ்ந்தகாலையவன்றிருத்தேவிகண்டு
துன்னியகோபச்செந்தீவிழியுகச்சிலசொற்சொன்னாள்
மன்னியபுவியில்வைகுமானுடமன்னன்வந்துன்
றன்னுடனெக்கவுண்ணத்தக்கதோவுரைத்தியென்றே. (சு)

என்றலுங்கடவுள்வேந்தனிருபுயந்துளங்கநக்கு
மன்றலந்துளபமாயோன்மைத்துனனெனக்குமைந்தன்
கொன்றையஞ்சடையானோடுமமர்புரிகுரிசிறன்னை
நன்றியின்மனிதனென்றிங்கிகழ்வதோநங்கையென்றான். (எ)

ஆங்கதுகேட்டதேவரடிபணிந்தமரர்வேந்தே
பூங்கொடிதருவோடன்றுபுவியினிற்கவர்ந்தவீரற்
கோங்குமைத்துனனேயாகிலிதனின்மற்றுறுதியுண்டோ
வீங்கிவன்புகுந்தருழ்ச்சிக்கேதுவுண்டாகுமென்றார். (௮)

தேவர்தம்முரையுந்தேவிசெப்பியவுரையுங்கேட்டுத்
நாவரும்புரவித்திண்டேர்த்தனஞ்சயன்றொழுதுசொன்னான்
யாவரும்பரவுமுன்றனுடனொராசனத்திருந்து
மேவருமுடியுஞ்சூடப்பொறுக்குமோவிமலவென்றே. (௯)

அவனுரைமகிழ்ந்துகேட்டாங்கமரருக்கதிபன்சொல்வான்
புவனமூன்றினுக்குமுன்னைப்போலொருவீரனுண்டோ
சிவனருள்படையும்பெற்றாய்செந்தழலளித்ததெய்வக்
கவனவாம்பரியுந்தேருங்கணையுங்கார்முகமும்பெற்றாய். (௧௦)

பிரமனேமுதலாவெண்ணும்பேர்பெறுந்தேவரீந்த
வரமிகுமறையுங்கொற்றவான்பெரும்படையும்பெற்றா
யருமறைமுறையேபார்க்கினமரர்மற்றுன்னினுண்டோ
இருவரும்வின்மைவீரசெப்புவதொன்றுகேளாய். (௧௧)

கற்றவர்கலைகள்யாவுங்கசடறக்கற்பித்தோர்கள்
பெற்றிடக்கொடுக்குஞ்செல்வமுண்டென்றுபெரியோர்சொல்வர்
கொற்றவவுனக்குநானுங்கூறுநற்குருவேயாகு
முற்றவாறெனக்குநீயுமொருவரந்தருகவென்றான். (௧௨)

தந்தைசொன்மகிழ்ந்துகேட்டுத்தனுவினுக்கொருவனான
மைந்தனுந்தேவர்க்கலைகயமானுடர்செய்வதுண்டோ
சிந்தையினிகழ்ந்ததொன்றுசெப்புகென்றவனுஞ்செப்ப
விந்திரன்றானுமீண்டுமின்னனபகரலுற்றான். (௧௩)

ஆழிநீரழுவத்தென்றுமுறைபவராழியானு
மூழியினுதன்றானுமுருப்பினுமுலப்பிலாதோ
ரேழிருபுவனத்துள்ளோர்யாரையுமுதருகாண்போர்
கோழியான்றனக்குந்தோலாவவுணர்முக்கோடியுண்டால். (௧௪)

தவாதபோர்வலியின்மிக்கதவத்தினர்சாபம்வல்லோர்
சவாதமேவிசியெல்லாவுலகையுந்துளக்குகிற்போர்
விவாதமேவிளைக்குஞ்சொல்லர்வெகுளியேவிளையுநெஞ்சர்
நிவாதகவசத்தரென்னும்பெயருடைக்கொடியநீசர். (௧௫)

மற்றவரெனக்குநாளும்வழிப்பகையாகிநிற்போர்
கற்றவர்வணக்கிறற்குங்கடக்கரும்வலியின்மிக்கோர்
செற்றிடநின்னையன்றிச்செகத்தினிற்சிலர்வேறுண்டோ
வெற்றிவெஞ்சிலைகொள்வீரவிவ்வரம்வேண்டிற்றென்றான். (௧௬)

செருவென்றமாற்றங்கேட்டுச்சிந்தையினுவகைபொங்க
மருவொன்றமலங்கன்மார்பும்வாகுபூதரமும்பூரித்
தருவொன்றமதனையொப்பானொருப்பட்டானுரைப்பதென்னே
திருவொன்றும்வன்மைவீரன்மறுக்குமோதேவர்கேட்டால். (௧௭)

காற்றெனக்கடியவேகச்சனலெனச்சொடியவென்று
மேற்றிசையெல்லையெல்லாம்வீதிபோயொல்லைமீள்வ
கூற்றமுமுகிலுமுட்கக்குமுறும்வெங்குரலுமேன்மேற்
சீற்றமுந்திறலுமிக்கதிக்கதிசெலாததூய. (கஅ)

ஆயிரப்பத்துவெம்போரடற்பரிபூண்டதேரு
மாயிரங்கலையின்மிக்கமாதலிதனையுநல்கிக்
காயிருங்கிரணச்செம்பொற்கவசமுங்கொடுத்துப்பின்னர்
வேயிருந்தெரியலாற்குச்சுரபதிவிடையுமீந்தான். (கசு)

விடையெனத்தொழுதுபோந்துவெஞ்சிலைவினோதவீரன்
சுடுசரத்தூணிகொற்றப்புயத்தினிற்றுதையத்தூக்கி
யிடுமணிக்கவசமெய்யிலெழிலுறப்பூணைந்துதன்னைத்
திடமுடைச்சிங்கமன்னுன்செருத்தொழிற்கோலஞ்செய்தான். (உ0)

மோதுபோர்தனக்குவேண்டுமுரட்படைபலவுங்கொள்ளாக்
கோதைவிற்றடக்கைவீரன்கொடிமணித்தேர்மேற்கொண்டு
மாதலிப்பெயராயந்தவஞ்சரெத்திசைக்கேயென்முன்
சூதனுமவனுக்கன்னோரியல்பெலாந்தோன்றச்சொன்னான். (உக)

தோயமாபுரமென்றுண்டுதொடுகடலமுவத்தோன்று
மாயமாபுரமேயொக்குமப்புரமதனில்வாழ்வோர்
தீயவரென்றுஞ்செப்பிச்சித்திரசேனன்றன்னைத்
தூயநன்னெறிகாட்டென்றருதன்றேர்தூண்டுமெல்லை. (உஉ)

மொய்திறற்கடவுளோர்முப்பத்துமுக்கோடியாலுஞ்
செய்தமர்தொலைக்கவொண்ணாத்தயித்தியர்சேனைதன்னை
யெய்தொருமனிதன்வெல்வதேழைமைத்தென்றுநக்கார்
மைதவழ்கருங்கட்செவ்வாய்வானவர்மகளிரெல்லாம். (உங)

மங்கையர்வாய்மைகேட்டுமணிக்குறுமுறுவல்செய்து
கங்கையம்பழனநாடன்கடிமதில்வாயில்செல்ல
வங்கவன்றன்னைக்கண்டவணிகழலமரரெல்லா
மங்குல்வாகனனென்றெண்ணிக்கதுமெனவந்துதொக்கார். (உச)

கார்க்கோலமேனியானைக்கண்டபினையநீங்கிப்
போர்க்கோலமிவனுக்கெவ்வாறிசைந்ததுபுகறியென்று
தேர்க்கோலஞ்செய்வான்றன்னைச்செப்பினரவனும்போற்றி
வார்க்கோலபுரத்துவைகுமவுணரைவதைத்தற்கென்முன். (உரு)

என்றவனுரைத்தமாற்றமின்புறக்கேட்டுநெஞ்சிற்
றுன்றியவுவகைதூண்டச்சுருதியாலாசிசொல்லி
வென்றுமீள்கென்றுவாழ்த்திவிரைவினில்வீரன்றன்னைச்
சென்றிடுகென்றுதேவர்தத்தமிற்சிறப்புமீந்தார். (உசு)

சம்புவன்சம்புமாலியெனும்பெயர்த்தனுசர்தம்மை
யும்பர்கோன்வதைத்தவந்நாளூர்ந்ததெவ்வுலகுமேத்துந்
தம்பையஞ்சடையான்வெற்பைத்துளக்கியசூரன்மாள
விம்பவார்சிலையிராமன்வென்றநாளூர்ந்ததித்தேர். (உஎ)

ஆதலாலித்தேர்மேல்கொண்டடல்புனையவுணருக்குப்
பேதியாக்கவசம்பெற்றுப்பிறங்குபொன்முடியும்பெற்றாய்
கோதிலாயெங்களெஞ்சிற்குறையெலாந்தீர்த்தியென்றார்
போதில்வாழயனுமொவ்வாவாய்மொழிப்புலவரெல்லாம். (உஅ)

வீரனுமுவகைதூண்டவின்னவர்மலர்த்தாள்போற்றிச்
சாரதிநடக்தேர்தூண்டத்தபனனில்விசும்பிற்சென்றான்
கார்கிறக்குன்றமொன்றைக்கனகவான்குன்றொன்றேந்திச்
சீருறப்பறந்துவானிற்றிசையுறச்செல்வதொத்தே. (உகூ)

வேறு.

நிரைகொழித்திடுஞ்சிந்துவின்குழலிற், குரகதத்தடந்தேர்போய்க்குறுகலு
மரகதக்கொண்டன்மாதலிக்கன்பினால், வீரகுறச்சிலமாற்றம்விளம்பினான். (௩௦)

இப்புரத்திலவுணரியல்பெலாஞ், செப்பெனக்குத்தெரிதரவென்றலு
மப்புரத்தவராண்மையுந்தோற்றமுஞ், செப்பலுற்றனன்றிண்டிறற்றேர்வலான். ()

ரெழித்தசொல்லினர்சீற்றவெந்தீயுக, விழித்தகண்ணினர்விண்முகிலைக்கவி
னழித்தமேனியராழ்வெம்பிலத்தையும், பழித்தகன்றபெரும்பகுவாயினர். (௩௨)

மன்னுநீருமனலுமருத்துடன், விண்ணும்வேண்டின்விரைவின்முருக்குவ
ரெண்ணெயூட்டியிருட்குழம்பாலெழில்,பண்ணியாக்கைவகுத்தன்னபான்மையார்

மற்புயாசலத்தின்வலியாலிகற், சற்பராசன்றலைச்சுமைமாற்றுவா
ரற்பவாழ்வுடையம்போருகத்தர்தங், கற்பகோடிகடையுறக்காண்குவார். (௩௪)

பாழியாடகவெற்பிற்படச்சிரங், கிழதாகக்கிளர்மூச்சடக்கிநின்
றூழிகாலுந்தவமுயன்றோங்குவா, ராழிநீருமளவிடுந்தாளினர். (௩௫)

எதிகுலமேழுமழுவிட்டியின், சாதிசக்கரந்தாங்குந்தடக்கையார்
மோதுபோரெனின்மொய்ம்புடன்முந்துவோ,ரோதமேழுமுடனுண்டுமிழுவோர்

கூருநல்லுரைகூறினுங்கூற்றுடன், கார்தொறும்மிடிசேர்ந்தன்னகாட்சியார், தேர்
தொறுஞ்செருச்செய்யுமத்தேவரைப், போர்தொறும்புறங்கண்டன்றிப்போகலார்.

மூன்றுகோடியசுரர்முகிலெனத், தோன்றுமேனியர்தோமறுமாற்றல
ரேன்றுபோர்பொரினெவ்வெவ்வுலகையுங், கீன்றுசேரக்கிழிக்குமெயிற்றினர். ()

செப்புரத்தினிற்செஞ்சடைவானவன், முப்புரத்தைமுனிந்தவந்நாளினுந்
தப்புரத்தர்சதமகன்றன்னைவென், றிப்புரத்தையிவர்கவர்ந்தாரெனு. (௩௯)

நிதிவாத்திறற்சித்திரசேனனைக், கோதிலாதகுனிசிலைவீரற்கு, மோதுபோர்தரமொ
ய்ம்புடைவஞ்சர்பாற், றூதுபோகெனப்போக்கித்தொலைவிலான். (௪௦)

விண்ணின்மீதுவிரைவுறந்தேரினை, மண்ணின்மீதுநடத்தினன்மாதலி
வண்ணலுந்தனருஞ்சிலைநாணியின், றுண்ணெனோதைதொடரத்துரத்தினன். ()

தேரினாற்பொலியுஞ்சிறுநாணொலுங், காரினாற்பொலியுங்கலந்தெங்கணும்
பாருமேற்றிசையும்பகிரண்டமுஞ், சேருநாற்றிசையுஞ்செவிடாக்கவே. (௪௨)

அந்தவோசையவுணர்செவிப்புக, முந்தவோடிமுகிமுறுவலித்
திந்திரன்போரவந்தனனென்றுதஞ், சிந்தைகன்றிவிழியுஞ்சிவந்திட்டார். (௪௩)

போயதூதனுஞ்செம்பொற்புரிசைசூழ், தோயமாபுரந்தன்னிற்றுதைந்தவம்
மாயவஞ்சர்மறுகவெம்புண்ணின்மேற், றீயையொப்பனசில்லுரைசொல்லுவான்.

ஒருகுலத்தினில்வேந்துமொவ்வாதுயர், குருகுலத்திற்குனிசிலைவீரற்குத்
தருகயுத்தந்திறலுடைத்தானவர், வருகமற்றும்வருதினிதன்றெனும். (சரு)

என்றுதூதனிசைத்ததுகேட்டலு, நன்றெனக்கைபுடைத்துநகைத்திடாக்
கன்றுநெஞ்சினர்கண்கள்செந்தீயுகத், துன்றுகோபத்துடனவர்சொல்லுவார். ()

பூசையொன்றுபுலியின்குழாத்துட, னுசைகொண்டுபொரவந்தழைப்பதே
வாசவன்பெருவாழ்வுக்கெலாமொரு, நாசம்வந்துபுகுந்ததெனுநகா. (சஎ)

வரையுளானுமலரினுளானும்வெண், டிரையுளானுஞ்செகுப்பருநம்முடன்
றரையுளான்வந்துபோர்பொரத்தக்கதோ, வுரையுளாரென்றுரையிருணரவே. ()

தனுசர்தானைதனைமதியாதொரு, மனுசன்வந்துமலையமதிப்பதோ
வனுசருங்கொலையாடலவுணரும், குனிசெயுஞ்சிலையென்றுகொதித்திட்டார். ()

செங்கணகக்கொடியவன்செல்வமுந், தங்கணுடங்கவரத்தரிப்பறப்
பொங்குகானிற்புகுஞ்சிலைவீரனே, வெங்களோடுமெதிர்க்கவந்தெய்தினன். (ருo)

என்றுகூறியிகலசுராதிபர், துன்றுசேனைக்குழாம்புடைசூழ்வரச்
சென்றுகாந்தத்திரைக்கடலார்ப்பபோ, லொன்றயாருமொருங்குசென்றுற்றனர். ()

ஆனைதேர்பரியாளெனுநால்வகைத், தானையோடுமெழுந்தனர்தானவர்
வானுமண்ணுந்திசையுமற்றெண்பெறு, மேனைலோகமுமெங்குநடுங்கவே. (ருஉ)

சங்கும்பேரியுந்தாரையுஞ்சின்னமுந், தங்கமாமுழவுந்துடியீட்டமு
மங்கண்மாமுரசும்முகவந்தத்திற், பொங்கும்வேலையொலியிற்புலம்பவே. (ருங)

சூலநேமியெழுமழுத்தோமரங், கோலும்வார்சிலைகுந்தங்கொடுங்கணை
நாலுதானைநடுவுஞ்சுடரயில், வேலும்வாளின்விதமுமிடையவே. (ருச)

மூந்துகோபவசுரர்முடுகுதே, ருந்துவீரனெருதனித்தேரினை
வந்துசூழவளைத்தார்மதுமலர்க், கொந்துசூழ்வரிவண்டின்குழாத்தினே. (ருரு)

நீலமால்வரையொன்றினெருக்கிவீழ், காலமாமுகிலென்னக்கடியவர்
கோலும்வார்சிலைக்கொண்டலன்றுன்மிசைச், சூலநேமிசுசரந்தூவினர். (ருசா)

வேறு.

அக்கார்முகவீரனுமங்கவர்தம், மைக்கார்முகிலென்னவழங்கியதின்
மெய்க்காய்கணைசாபம்விசித்துவிடா, நக்கானிவைநின்றுநவின்றனனே. (ருஎ)

திக்கோடியநுந்திறலும்புகழுந், தொக்கோடியுடற்றுபடைத்தொகையுங்
கைக்கோடியவெஞ்சிலையின்கணையான்,முக்கோடியுமின்றுமுருக்குவனல். (ருஅ)

முன்போர்தொறும்வந்துமுனைந்துவெரீஇ, வென்போகியவிண்ணுறைவீரரலே
ன், பொன்போலுநும்மேனிபொடிச்செய்திடாப், பின்போகுவனென்றிவைபே
சலுமே. (ருகூ)

தழல்வந்தருள்பாவைதடந்துகிலுங், குழலுங்கவர்தந்தடல்கூருமுமக்
கழறுன்றியகானமளித்தவரைக், கழல்வெஞ்சிலைவீரகடிந்திலையே. (கூo)

என்னுவசுரேசரிசைத்தலுமே, மன்னுகவவீரனும்வார்சிலைநாண்
டன்னுகமுறத்தழுவத்தழல்வாய், மின்னுர்கணைதூவிவெகுண்டனனே. (கூக)

பொய்த்தானவர்போரரியன்னவன்மேன், மொய்த்தார்முகில்செங்கதிர்மூடிவபோ
ல், வைத்தாரைவடிக்கணைவாண்மழுவே, லுய்த்தார்வனாமேலுருமேறெனவே. ()

என்முன்னவனென்முனெனுவெவரு, முன்முன்வாமுந்தமுருக்கினனுற்
றன்முன்னெருவீரர்தராதலமேல், வின்முன்னினிலாவிறல்வில்விசயன். (கூஉ)

ஒருதேர்கொடுவீரனுடன்றவர்தங், கரிதேர்பரியாளணிகையறமுன்
னிருதேசரைவென்றவனேரெனமேல், வருதேரணிதோறுமலைந்திடவே. (சுச)

வீரன்சரம்வஞ்சகர்மெய்ம்முழுதுங், கூரும்படிசென்றுகுளித்திடலா
லாரும்பொரவஞ்சினரப்பொழுதிற், றேருந்தினரெண்ணிறயித்தியரே. (சுரு)

என்னேயொருமானுடனுக்கெவருங், கொன்னேயடலாண்மைகொடுக்குமதோ
வின்னேயிவனுவியழித்திமையோர், முன்னேவயவாகையுமுற்றுவமால். (சுசு)

காளப்புயலென்னநிறங்கரியார், மீளப்படைகொண்டுவிரைந்துவெகுண்
டாளித்திறன்மொய்ம்பனையங்கடலால், வாளக்கிரியென்னவளைந்தெவரும். (சுஎ)

ஆர்த்தாரகல்வானமுமாழ்கடலுந், தூர்த்தார்சுடர்வெம்படைகொண்டெவருந்
தேர்த்தானவர்வானுறைதேவருமெய், வேர்த்தாரினிமேல்விளைவேதெனவே. ()

கூற்றொப்பனபல்படைகொண்டவன்மேற், சீற்றத்தொடெறிந்தனர்தீயவரு
மாற்றற்சிலைவீரனுமவ்வெலா, மாற்றிச்சரமாரிவழங்கினனால். (சுகூ)

அவன்விட்டசரங்களறுத்தணிதேர், கவனப்பரிபாகுகலக்கமுறப்
பவனத்துடனங்கிபரந்ததுபோற், றவனித்தவர்வெம்படைதூவுதலும். (எ0)

கட்டார்முடிகார்முகவீரனுமுன், கிட்டாவுலகோர்புகழ்கேழ்கிளர்சீர்
முட்டாமலரமேன்முனிவன்படையைத், தொட்டானசுரேசர்தொலைந்துகவே. ()

காற்றுய்மிகமண்டெழுக்கனலாய்க், கூற்றுயவராவிகுடித்துசெஞ்
சேற்றுலொருபாதிசிவந்ததுபா, ரேற்றுனொருபங்கெனவெங்கணுமே. (எஉ)

நூறாயிரதோணிநூறியுமே, லாறாதசினத்துடனக்கணைபோய்
மாறாயவர்மார்பமும்வாண்முகமுஞ், சீறாவெதிர்சென்றுசெறிந்ததுவே. (எந)

குருகோடியையுங்குருதிக்கடல்வா, யொருகோடிதயித்தியராருயிருண்
டருகோடியவாளியடர்ப்பதுகண், டிருகோடியுமுற்றனமற்றிவன்மேல். (எச)

வேறு.

இருண்டதுமண்ணும்விண்ணுமெல்லையெண்டிசையுமெங்கும்
புரண்டதுகுருதிவெள்ளமூழிவெங்கடலிற்பொங்கி
முரண்டருதேரோன்றன்னைமொய்த்தவெம்பனிபோன்முடித்
திரண்டதுதிருகிமீண்டெதிறலுடைத்தகுவர்சேனை. (எரு)

எங்கெங்கேயெங்கேவல்வின்மனிதனென்றெதிர்ந்தோர்யார்க்கு
மங்கங்கேயங்கேயாகியவரோடுமேபோர்செய்தான்
சங்கங்கேசெங்கைகல்லார்விடுத்தனசரும்பின்சாலங்
கோங்கங்கேயெங்கேயென்றுதனித்தனிகுடையுந்தாரான். (எசு)

கார்முகக்கொண்டலன்னுன்மிசைக்கடுங்கணைகளேவித்
தேர்முகத்தியக்கமாற்றித்திமைந்தர்வெம்போர்செய்யப்
போர்முகத்தொருவரோவ்வாப்புரிசிலைவீரன்றானுங்
கூர்முகப்பகுவாய்மாயோன்கோலிக்கமும்பகழிகோத்தான். (எஎ)

விண்ணிடத்தசனிகாள்மேல்வெகுண்டிவேதென்ன
வெண்ணுடைச்சேனைவெள்ளமெங்கணுந்தானேயாகி
வண்ணவிற்படையிராமன்வாரிதிவெள்ளம்வீத்த
பண்ணெனப்பதெத்தந்தப்பைர்தழாய்ப்பாமன்வாளி. (எஅ)

தசையும்வெம்பிணமுந்தூன்றத்தனித்தனிபெருகியெல்லாத்
திசைதொறுங்குருதிநீத்தந்திரைக்கடற்சென்றுமண்ட
வசைவிலாவவுணர்மீண்டுமெந்தரத்தொளித்துநின்று
விசயவில்விசயன்றன்மேல்வெகுண்டுவெம்படைகள்விட்டார். (எகூ)

விட்டவெம்படைகளெல்லாம்விண்ணிடைச்சுண்ணமாகக்
கட்டழகுடையவீரன்மகேந்திரக்கணையால்வீக்க
வெட்டுணப்பொழுதில்வஞ்சரெழிலியின்படைமேல்வீச
வட்டவார்சிலையினானுமண்டழற்படையான்மாற்ற. (அ0)

மண்டிமேலெழுந்திங்கெல்லாவுலகையுமடிக்குமாயச்
சண்டவாயுவின்பேர்வாளிதானவரவன்மேலேவ
வண்டமுந்துளங்கவோங்குமருவரைப்பகழிவிட்டா
னெண்டிசைமுழுதுந்தன்பேரெழுதுபோர்விசயனென்பான். (அக)

காற்றும்வெங்கனலுங்காருமிடியுங்கன்மழையுமெங்குந்
தோற்றியவிருளுமின்னுந்திசைதொறுஞ்சூழ்ந்துபொங்கக்
கூற்றும்வாய்குழறியஞ்சக்கொடியமாமாயவாளி
யாற்றல்சாலரியன்னான்மேலெறிந்தடலவுணரார்த்தார். (அஉ)

கன்மழைசொரிந்துவேகக்கனன்மழைவீசியெங்கு
மின்மழைசிந்திமிக்கவசனியின்மழைகள்வீழ்த்திச்
சென்மழைசிதறியெல்லாத்திசைதொறும்பரந்துகொற்ற
வின்மழைபொழிவான்றன்னைவளைந்ததுவெய்யமாயை. (அங)

கோதிலாவிரதம்பூண்டகுரகதக்குலாமுமுட்கிச்
சூதனுந்தடந்தேருருந்தொழின்மறந்துயங்கிவீழத்
தாதவிழலங்கலானுமற்றவன்றன்னைத்தேற்றித்
தீதிலாவமோகபாணஞ்சிந்தையாற்றொழுதுவிட்டான். (அச)

மாயவல்லிருளையெல்லாம்வான்கதிர்ச்செல்வனென்னச்
சேயவப்பகுவாய்வாளிதிசைதொறுங்கடிந்தவெல்லை
யாயவம்முறைமைதப்பாவறம்பொருளின்பமுற்றுந்
தூயவரிதயமென்னத்தொலைந்ததுசூழ்ந்தமாயை. (அரு)

வஞ்சவாளவுணர்வெம்போர்மறந்துமெய்ம்மயங்கிமீண்டு
நெஞ்சினிலறிவுதூண்டநிரைநிரைதடந்தேர்தூண்டிச்
செஞ்சரஞ்சூலம்விட்டேறெழுமழுத்திகிரிவாள
மஞ்சனக்குன்றன்னான்மேலெறிந்துடனார்த்தகாலை. (அசு)

கடுஞ்சிலைவிரைவும்வீரன்கைத்தொழில்விரைவுமேன்மேல்
விடுங்கணைவிரைவுமெண்ணில்விபுதர்க்குங்காணொணாதாற்
கொடுந்தொழிலசுரர்மெய்யிற்குளித்தசெஞ்சரமுமன்னோர்
படும்படுந்துயருமெங்குங்காணலாம்பாருளோர்க்கும். (அஎ)

ஆய்ந்தநூலறிஞர்க்கீந்தவரும்பொருளென்னமேன்மேல்
வேந்தர்கோன்பகழியொன்றுகோடியாய்விளைந்ததெங்கு
மாந்தர்கைக்கொடாதபுல்லர்வனப்பிலாச்செல்வம்போலத்
தேய்ந்ததுவஞ்சநெஞ்சத்திறலுடைத்தனுசர்சேனை. (அஅ)

படாதொழியவுணர்மீண்டும்பரிபவப்படுத்தாயெம்மை
யடாவினியுன்னையின்னேயாருயிர்குடித்துமென்னுக்
கடாமலைவயவன்மீதுகடும்படைபலவும்விட்டார்
தொடாநெடும்பகழிதன்னாற்சூரனுந்துணித்துவீழ்த்தி. (அகூ)

உரங்களுந்தோளுங்கண்ணுமுதரமுமதரத்தோடு
சிரங்களுந்தாளுநாளுஞ்செய்தவமுயன்றுபெற்ற
வரங்களுமறையுமென்மேல்வான்படைக்கலங்கள்வீசுங்
கரங்களுஞ்சரங்கள்கொண்டுகணத்திடைக்கண்டங்கண்டான். (கூ0)

அற்றனகுறைகளெல்லாமவயவத்தோடுமீண்டு
முற்றனமூன்றுகோடிசேனையுமுருத்தெழுந்த
வெற்றிவேற்குமரனன்னவிசயனுங்கைசலித்து
மற்றிதற்கென்செய்வேனென்றினைவுடன்மதிக்குமெல்லை. (கூக)

வென்றிகொள்வீரவாகைவீரவில்விசயகேளாய்
தென்றிசைமறலிபாலித்தியவஞ்சகர்முன்பெற்ற
வன்றிறற்படையுமிக்கவரமுமெய்வலியுமுண்டா
வென்றசரீரியின்னுமின்னவையுரைத்ததம்மா. (கூஉ)

வெய்யவெம்படைகட்கெல்லாம்விளிகிலர்மெய்ந்நூறுகக்
கொய்யினுமுருவமீண்டுங்கூடுவர்குறிப்பினின்று
கையினுவுடன்வாய்சென்றுகலந்திடுங்கணத்தினம்பா
லெய்திடுகென்றுவீரற்குறுதியுமிசைத்ததன்றே. (கூங)

வானிடத்தருபிசொன்னவாசகமனத்திற்கொள்ளாத்
தேனுடைத்தெரியல்வீரன்றேரினைத்திரியவோட்டிக்
கானிடைக்கடவுள்வேடன்றருங்கணைகரத்திற்கொண்டு
தானுடைத்தனுவிற்பூட்டியறுப்படச்சமைந்ததோரார். (கூச)

தானவர்சமுகத்தோடுசமர்புரிந்தாற்றுதஞ்சி
மானவன்முதுகுதந்தானென்றுவாளசுரரெல்லாம்
வேனில்வேளனையான்றன்மேல்வெகுண்டுவெங்கடலிற்பொங்கி
யானதங்கைவாய்சேர்த்தியாவலங்கொட்டியார்த்தார். (கூரு)

உரம்பட்டவஞ்சர்சேனையொருப்பட்டவுறுதிநோக்கித்
திரம்பட்டசிலைக்கைவீரன்சிலீமுகந்தெறித்தபோதச்
சரம்பட்டதனுசரங்கஞ்சங்கரன்செங்கையம்பாற்
புரம்பட்டபரிசுபட்டுப்பொடிந்தனபொடியாய்மன்னே. (கூசு)

உருத்ததமிகவுமண்டமுடைந்திடவுடன்றுபொங்கிச்
சிரித்ததநுசர்மெய்யுஞ்சிந்தையுஞ்சேரப்பற்றி
பெரித்ததநுகோடியிவணிடந்தன்னில்வந்து
தரித்ததுமீண்டுமேந்தச்சங்கரன்செங்கைவாளி. (கூஎ)

வேறு.

துவசத்தொடுதேர்களம்வீழச்சுடர்கிவாத
கவசத்தொடுமெய்கடல்வீழக்கடுமெயற்கறைத்
திவசத்திவருவரமங்கையர்வீழச்சென்று
ரவசத்துடனந்தகனூரிவசுரரெல்லாம். (கூஅ)

ஆர்த்தாரணிகூரலர்மாமழையால்விசும்பைத்
தூர்த்தார்துதித்தார்மதித்தார்நனிநுள்ளுகின்றார்
போர்த்தானவர்தஞ்செருக்காற்படுபுன்மையெல்லாந்
தீர்த்தானிவனென்றகல்வானுறைதேவரெல்லாம். (கூகூ)

கூரும்படையுங்குடையுங்கொடியுங்கொழித்துத்
தேருங்கரியும்பரியுந்திசைதோறுமுந்தி
யூருங்குருதிக்கடல்பொங்கியுவர்க்கடன்மேற்
போரும்பொரப்போயணியோடுபுகுவபோலும். (ச00)

தத்திக்குருதிக்கடல்பொங்கத்தனித்தனிநின்
றெத்திக்கினும்வெம்பிணக்குன்றமெழிலொடோங்கப்
பத்திப்படமேற்பருந்தின்குலம்பந்தர்செய்யக்
கொத்துற்றதண்டார்த்திறற்கோதண்டவீரனின்றான். (ச0க)

மின்போனுடங்கவிடைவேல்விழிநீர்ததும்பப்
பொன்போலுருவங்கருகும்படிபூழிபோர்ப்ப
வன்போடவுணர்மடமாதரரற்றுமோதை
யென்போலுமென்னினிடிபோல்வந்திசைத்ததெங்கும். (ச0உ)

இவ்வாறவுணர்மடமாதரிரங்கியேங்க
மைவாள்விழியின்வழியஞ்சனவாரிபாயத்
தெவ்வாறியபின்னருந்தீர்ந்திலதீர்ந்தவன்றே
கைவார்சிலையான்கடுங்கோபமுங்கண்சிவப்பும். (ச0ங)

அன்னார்நகரத்தழகுந்தொல்லரணுநோக்கி
மின்னாரும்வேலான்விறன்மாதலிதன்னைமீண்டு
நன்னகரூரிற்றடந்தேரைநடாத்துகென்னச்
சொன்னானவனுந்துணைதேர்நனிதூண்டுமெல்லை. (ச0ச)

செம்பொற்புரிசைதிகழ்கோபுரச்செம்பொன்மாடத்
தம்பொற்கொடிசேர்நகரந்தூரத்தொன்றுகாணு
வம்பிற்பொலிதார்த்தடந்தேர்விடுமாட்சியானை
விம்பத்திறல்வார்சிலைவீரன்வினவவன்னான். (ச0ரு)

மன்னுந்தனுசகுலமாதரில்வஞ்சநெஞ்சக்
கன்னங்கரியகுழற்காலகைகாமர்சோதிப்
பொன்னங்கொடிபோலெழில்கூர்நுண்ணிடைப்புலோமை
யென்னும்பெயராரிருவோருளரென்றுமுள்ளார். (ச0சு)

அம்மாதர்தந்தைதனைநோக்கியனந்தகாலஞ்
செம்மால்வரையிற்றவஞ்செய்தனர்செய்தநாளின்
மைம்மான்விழியார்தமக்கந்தவனசவாண
னெம்மாவிசைத்தற்கிசையாதவரங்களீந்தான். (ச0எ)

தம்மக்களாயவசுரேசரதிதிதந்த
வம்மக்கடம்மாலழியாமையுமாடகத்தான்
மும்மைப்புரம்போல்விசும்பூர்தருமொய்ம்பினிந்தச்
செம்மைப்புரமுங்கொடுத்தானத்திசைமுகத்தோன். (ச0அ)

பொன்காறுமெய்யர்பொறிகால்பொலங்குண்டலத்தர்
முன்காலனையுஞ்சமர்மோதிமுருக்குமொய்ம்பர்
மின்கால்படையர்விடங்காலும்விழியர்வெம்போர்
வன்காலகேயரெனும்பேர்திசைவைத்தவீரர். (க௦௯)

வருமுப்பொழுதுமறையந்தணரங்கைவாரி
யுருமுப்புயல்போற்கவர்வோர்முன்னுகாந்தநாதன்
பொருமுப்புரத்திறுறைதானவர்போலும்வீர
ரிருமுப்பதினாயிரம்வஞ்சகரிங்குமுண்டால். (கக௦)

தன்றேர்வலவன்மொழிகேட்டுத்தயங்குசீலக்
குன்றேயனையான்கொடும்போர்வஞ்சினங்கள்கூறி
யின்றேயிவராவியுந்தென்புலத்தேற்றிப்பின்ன
ரன்றேயினிநானமராவதிசெல்வதென்றான். (ககக)

இந்தப்புரத்தின்மிசைத்தேரினையேவுகென்னக்
கந்தற்குவமைதருதிண்டிறற்காளைகூறச்
சிந்தைக்குமுந்துந்தடந்தேரைத்தனுசர்வைகு
மந்தப்புரத்தில்விடுத்தான்மற்றவனுமாதோ. (ககஉ)

தோராவாரத்துடனேதிண்சிலைவலான்றன்
போராவாரச்சிலைநாணொலிமீதுபோக
வாராவாரத்திடிகேட்டவரவமொத்தார்
காராவாரமெனப்பொங்குமக்காலகேயர். (ககரு)

வேறு.

இந்தவோதையெறிலியேழுமுழிநாளிடித்தெழு
மந்தவோதையோவதன்றியாழிபொங்குமோதையோ
கந்தன்வானின்மீதுதேர்கடாவுகின்றவோதையோ
வெந்தவோதையென்றயிர்த்தயிர்த்துவஞ்சர்யாவரும். (கக௪)

தெழித்தரப்பியெயிறுதின்றுவைதுசெய்யகண்கட
விழித்துமீசைநுனிமுறுக்கிவெய்யவீரவாளுறை
கழித்தெழுந்துபொங்குகின்றகாளகூடமென்னவே
சொழித்தழன்றுமண்ணும்விண்ணுமின்றுகோறுநாமென. (ககரு)

ஒவொருமந்தவோதையெதிருடன்றுறுக்கியே
நாவொருநமர்களாண்மைநன்றுநன்றெனநகைத்
தாவொருமமரர்வாழ்வுபாழ்படுத்துமாயுதந்
தேவொருமெண்ணிறந்ததேர்களேறவாருமே. (ககசு)

கூனிகோடியுப்பருஞ்சரங்கள்கோடியுய்ப்பபே
ரானிகோடியுப்பவாயுகதிகொடந்தரத்தின்மேல்
வானிபோதம்வாசிகோடிகோடியுய்ப்பவாவுதே
ரோனியாகவானினெல்லைமறையவுந்திமுந்தினார். (ககஎ)

அந்தகன்போரற்குநம்மைவல்லனல்லனபயமுன்
றந்தவிந்திரன்றனக்குமொக்குமன்னதன்மைதான்
கந்தனென்னிவாதிரண்கேண்கள்வகைகளில்லமே
வெந்தவீரனம்மொடின்றெதிர்க்குமிந்தவீரனே. (ககஅ)

எண்டயங்குமெயிறுவெண்ணிலாவெறிப்பவெயின்மணிக்
குண்டலங்களழகெறிப்பமகுடகோடிகுலவிமேன்
மண்டியெங்கும்வெயிலெறிப்பவஞ்சர்தம்வனப்பெலாங்
கண்டுகண்டருச்சுனன்கருத்துநொந்துகூறுவான். (ககக)

கன்னல்வேலைவென்றவிக்கவின்படைத்தகாட்சியு
மின்னுபூண்விளங்குமார்பும்விபுதருக்குமில்லையா
லென்னபாவமிவரையாவியீடழிப்பதென்றுபோர்
மன்னர்மன்னன்முன்னுரைத்தவாய்மையுங்குறிப்புரு. (கஉ0)

வில்வலைத்துநின்றநிலவெற்பரொன்றைவிண்ணிடைச்
செல்வலைத்ததென்னவந்துதீயவஞ்சர்யாவரு
மல்வலைத்தசிகரவாகுகிரியின்மீதுமார்பினுங்
கொல்வலைத்தபகழிதூவியின்னநின்றுகூறுவார். (கஉக)

உழுவைகண்டவுழைகள்போலவோடியோடிமேருவின்
முழைதொறும்புகுந்ததேவரேவல்கொண்டுமொய்ம்புட
னிழிவில்சந்தனங்கடாவியிங்குவந்ததென்னடா
புழுவிலொன்றுமொன்றுபூதலத்துளானொருத்தனீ. (கஉஉ)

என்றுகாலகேயர்நின்றிசைத்தசொற்செவிக்கொளா
நன்றுகாலகேயர்சொன்னவாய்மைநன்றெனாநகைத்
தொன்றுகாலம்வந்ததிங்குருத்துநாளுடன்றுமைக்
கொன்றுகாலனூரிலுங்களாவியுங்கொடுக்கவே. (கஉங)

காலகேயர்விசயனின்றுகட்டுரைத்தவுறுதிகேட்
டாலகாலமெனவுருத்தழன்றுபொங்கியயின்முனைச்
சூலநேமிபாலம்வெய்யசுடுசரந்தூரத்தினார்
நீலமேனிசெம்புனீரினானிறஞ்சிவக்கவே. (கஉச)

விண்சுழன்றுதிசைசுழன்றுவேலையுஞ்சுழன்றுசூழ்
மண்சுழன்றுவரைசுழன்றுவானினின்றவானுளோர்
கண்சுழன்றுயாதினுங்கலங்குறுதகலைவலோ
ரெண்சுழன்றுமற்றுமுள்ளயாவையுஞ்சுழன்றவே. (கஉரு)

அவர்விடுத்தபடைகள்யாவுமழியவாணிடைக்கணைக்
கவர்தொடுத்துவிலகிமீளவவர்கள்காயமெங்கணும்
துவர்நிறத்தகுருதிசோர்தரச்சரந்தூரத்தினன்
றவரினுக்கிராகவன்கொலெனவருந்தனஞ்சயன். (கஉசா)

பார்த்தனெய்தவாளிமெய்படப்படப்பதைத்துமீ
தார்த்தெழுந்துநகரினூடுமெந்தாரத்தினெல்லைபோய்
வார்த்தரங்கவேலையூடுமெண்ணினூடுமறையவத்
தூர்த்தர்செய்தவஞ்சமாயைசொல்லலாகுமளவதோ. (கஉஎ)

அண்ணறேரின்முன்னதாகுமளவிறந்ததேரொடும்
விண்ணின்மீதுதிசையளக்கும்வெற்பின்மீதுபொலியுமெக்
கண்ணுமாகுமக்கணத்தின்மீளவுங்காந்திடு
மெண்ணலாவதன்றதன்றியற்றுமிந்திரசாலமே. (கஉஅ)

அந்தவஞ்சர்புரியுமாயைவகையறிந்தருச்சுனன்
சிந்தைகன்றிவிழிசிவந்துதெய்வவாகைவில்லையு
மைந்துடன்குனித்துவாளிவாயுவேகமுடன்விடுத்
தெந்தவெந்தவுலகுமப்புமாரியாலியற்றினான். (கஉகூ)

தனிதமேகமன்னதேருமொன்றுதாவில்குன்றுபோற்
குனிதருங்கடுப்பின்மிக்ககொடியவில்லுமொன்றுமேற்
கனிவுறுஞ்சரக்குழாம்விசும்பினெல்லைகண்டுபோர்
மனிதன்வின்மைநன்றுநன்றெனாமதித்துவஞ்சரே. (கஙo)

வேறு.

புருவவில்வளைவுறவிழிகனல்பொதுளக்
கருமுகிலனையவர்கடுகினர்முடுகிச்
சரமழையிடிமழைதழன்மழைசொரியாப்
பெருமழையெனநனிபிளிறினரெவரும். (கஙக)

இவருயிர்கவர்தரவிடமிதுவெனவே
நவையறுதிறலுடைநகுசரமுதையா
வவரவரகலமுமணிகிளர்கரமுந்
தவருடன்விழவிழவொருதனிபொருதான். (கஙஉ)

அவன்விடுமடுகணையடையவுநொடியிற்
பவனனதெதிர்சருகெனநனிபறியக்
கவனமொடெழுபரிரதகதிகுலையத்
துவனியொடெறிபடையெதிரெதிர்தொடவே. (கஙங)

வரிசிலைவிறலுடைமகபதிமகனு
மெரிவிழியவுணருமுறைமுறையிகலிப்
பொருதனர்ரருபதிபுதல்வனுமடுபோர்
கிருதருமெதிர்பொருமமர்நிகரெனவே. (கஙச)

இப்படைகளினுயிரழிகிலரிவரென்
றப்படைகளையொழிதரவடலுடையார்
மெய்ப்புகும்விறலதுவிடையவனருளுங்
கைப்பகழியைமனனுறநனிகருதா. (கஙரு)

முச்சிரமுடையதுமுவிருதிரடோ
ளச்சிரமுடனெதிரழல்பொழிதருக
வச்சரவனையதுநகமிறுமுனைவாய்
வச்சிரமனையதுவருதலுமகிழா. (கஙசு)

பசுபதியருளியபகழிமுன்வரலும்
விசயனுநறைவிரிமலர்கொடுபரவித்
திசைதொறுமமர்புரிதிறலுடைவடிவே
லசுரர்தம்முடலுகவடலுடன்விடவே. (கஙஎ)

அக்கணைவிசையுடனகல்வெளிமிசைபோய்
நக்கதுபிறையெயிறிளநிலவெழவே
முக்கணுமழலுகமுரனொடுமுடுகிப்
புக்கதனுசர்தமுடல்பொடிபடவே. (கஙஅ)

மாருதம்விசையுடன்வடவனல்கொளுவிக்
கார்தொறுநிரைநிரைகடிகுவததுபோற்
றேர்தொறுமமர்புரியவுணர்கடேகத்
தோரொருகணையொருநொடியினிலுறவே. (கநகூ)

மகபதியரிசிறைவரைநிகரெனவே
திசைதொறுமவுணர்கள்சிரநனிசிதறிப்
புகையொடுதெறுகனலகல்வெளிபொதுளக்
ககபடலமுமுறைகளுலினகளமே. (கசo)

ஆடினவறுகுறையலகைகளுடனின்
றேடினதிசைதொறுமுகுகுருதியினீர்
நீடினபிணமலைநிரைநிரைநெறிபோய்த்
தேடினகதிர்களுமிசைவழிசெலவே. (கசக)

மாதவமிகுதிறலசுரரைமறவிக்
கோதனமிடுமவனொருசிலைவலிகண்
டாதபனருணனிலணிகிளருயர்தேர்ச்
சூதனும்விசயனதிணையடிதொழுதான். (கசஉ)

தள்ளினர்தமதுயர்சலமினியிலதென்
றுள்ளினர்விசயனதுறுதியுமரனு
மள்ளினரமுதெனவகநனிமகிழாத்
துள்ளினரிமையவர்சுரபதிமுதலோர். (கசங)

வேறு.

தேனமர்கமலத்தோங்குந்திசைமுகன்வரத்தினாலோ
மானவன்விசயனுய்த்தவடிநெடுஞ்சரத்தினாலோ
தானவர்தானையெல்லாமடிந்தவத்தளர்வினாலோ
போனதுகரந்துவஞ்சரிரணியபுரமுமன்றே. (கசச)

வாணகைதளவம்வாங்குமவுணர்தம்மகளிர்தெய்வப்
பூணொடுகுழைகள்வாங்கப்புனைவயவாகைவாங்கு
நாணுயர்தனுவின்வாங்கிநயந்திளைப்பாறிநின்றான்
றானொடுபறம்புவாங்குஞ்சுடர்மணிக்கடகத்தோளான். (கசரு)

பார்கொண்டதசுரர்மெய்யிற்பரந்தசெங்குருதிவெள்ளங்
கார்கொண்டவிசும்புகொண்டதவர்பிணக்காயம்வானோ
ரூர்கொண்டதுரிமையோடுமவருயிர்மீண்டுமென்றாற்
றார்கொண்டவமரர்க்கெவ்வாறிவன்பகைதடிந்ததம்மா. (கசசு)

இவ்வகையசுரசேனையாவையுமிரியநூறிக்
கொய்வரும்வரிவில்வீரன்குரகதத்தேர்மேற்கொண்டான்
வைவருமுனைவேற்சித்திரசேனன்வாசவனுக்கோடி
நைவருதுயரநீங்கநவின்றனன்புரிந்தவெல்லாம். (கசஎ)

சித்திரசேனன்மாற்றஞ்செவிக்கமுதாகக்கேட்டுப்
பத்திகொள்விமானச்சோதிப்பைம்பொன்மாநகரிகோடித்
தெத்திசையவருமேனையிமையவர்குழாமுஞ்சூழ
வித்தகவிசயன்றன்னைவிபுதர்கோனெதிர்கொண்டானே. (கசஅ)

கின்னரமிதுனவின்சொற்கீதங்களினிதுபாடத்
துன்னியெங்கெங்குஞ்சோத்துந்துபிக்குழாகின்றார்ப்பப்
பன்னருமறைகடெய்வமுனிவரர்பகர்ந்துவாழ்த்த
மன்னவர்மன்னன்றன்னைவாசவன்றழுவிக்கொள்ளா. (௧௪௯)

கையுடைக்கயிலையன்னகடகரிப்பிடரின்வைத்து
மையுடைக்கொண்டல்வாகனசர்வலஞ்செய்தபோதின்
மெய்யுடைக்கலைகள்வல்லான்விஞ்சையனொருவன்கண்டு
பொய்யுடைத்தலத்தோர்க்கின்னபொறுக்குமோபுனிதவென்றான். (௧௫௦)

விஞ்சையனுரைத்தமாற்றம்விபுதர்கோன்செவியிற்சென்று
நஞ்செனப்புகுதலோடுநயனங்கள்செந்தீக்கால
நெஞ்சினிலறிவிலாதாய்நீயிதுகேட்டியென்று
மஞ்செனக்கரியமெய்யான்மனங்கனன்றினையசொல்வான். (௧௫௧)

ஆதிநாயகன்மாமாயனமரர்தந்துயருமேனைப்
பூதலமடந்தைக்குற்றபுன்மையுந்தீர்ப்பானெண்ணிச்
சீதைதன்கொழுநனானதிண்டிறலிராமன்போல
வேதநீருலகின்மீண்டுமருச்சுனனுருவங்கொண்டான். (௧௫௨)

ஆதலான்மனிதனென்றிவ்வருச்சுனன்றன்னையின்னே
நீதியாலமரர்யாருநெஞ்சினிலிகழலென்று
மாதர்கள்வீதிதோறுமலர்மழைசொரிந்துவாழ்த்தக்
கோதிலாவமரர்கோமான்கொண்டுதன்கோயில்சேர்ந்தான். (௧௫௩)

அரிமுகக்கனகபீடத்தண்ணலையிருத்தியண்ட
ரிருபுடைமருங்குநிற்பவிந்திரனிருந்தபின்னர்
மருவுபொற்றடந்தேரூருமாதலிதன்னைநோக்கிப்
புரிசிலைவிசயற்குற்றபோர்த்தொழில்புகனீயென்றான். (௧௫௪)

மற்றவன்றொழுதுபோற்றிவானவர்குழுவுக்கெல்லாங்
கொற்றவவென்றுவின்றுகூறலாந்தகைமைத்தன்று
ஒற்றெதிர்மூன்றுகோடியசுரருமுடனேசேர
விற்றதுகண்டேன்பின்னர்வில்லினாணிடியுங்கேட்டேன். (௧௫௫)

ஆயதுநிகழ்ந்தபின்னரயனருள்வரத்தினாலே
யேயவான்வலியின்மிக்கவிரணியபுரத்துளோரைத்
தீயவெம்பகழியொன்றாற்செற்றனனிமைப்பின்முற்று
மாயமோமனிதன்வில்லின்வன்மையோதெரிந்ததில்லை. (௧௫௬)

என்றகொண்டெயர்தேர்ப்பாகனிசைத்தனயாவுங்கேட்டு
வன்றிறலமரர்கோமான்மனமகிழ்ந்திருந்தபோதிற்
றன்றியவமரர்யாருந்தனித்தனிசுருதியோடும்
வென்றிபடையுமற்றும்வேண்டுவபலவுமீந்தார். (௧௫௭)

தேவர்பால்வரமுமெல்லாச்சிறப்புமின்னருளும்பெற்ற
காவலன்கடவுள்வேந்தன்கழலிணைபணிந்துபோற்றித்
தாவரும்புரவித்தானைத்தருமன்மாமதலைபொற்றாள்
மேவரவேண்டுமின்னேவிடையெனக்கருளுகென்றான். (௧௫௮)

மைந்தனங்குரைத்தமாற்றமனனுறமகிழ்ந்துகேட்டுத்
தந்தையுமின்னஞ்சின்னுட்டங்குகவிங்கென்றேத்திச்
செந்திருவனையதோற்றத்தெய்வமென்போகமாத
ரைந்தொடாயிரரும்வேறேரம்பொன்மாளிகையுமீந்தான். (கருகூ)

வரோதயமானதெய்வவான்படைமறைகள்பின்னும்
புரோசனப்பகைவற்கீந்துபுரந்தானிருந்தபின்னர்ச்
சரோருகரண்டம்விண்டாலொருமயிர்சலிக்குஞ்செங்கை
யுரோமசமுனியைநோக்கியுரைத்தனனுற்றவெல்லாம். (கசூ0)

வரிசிலைவிசயன்வந்துவான்றவம்புரிந்தவாறு
மரிவையோர்பாகனன்பாலவற்கருள்புரிந்தவாறு
மிரியவென்பகையையெல்லாமிவன்றனிதடிந்தவாறுந்
தருமனுக்குரைத்தியென்னத்தபோதனமுனியும்போனன். (கசூக)

ஆ செய்யுள் - க,ருகூச.

நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கமுற்றிற்று.

---

# புட்பயாத்திரைச்சருக்கம்.

---

மற்கொண்டவெகுத்தனையசிகரத்திண்டோள்வாளரக்கன்குலத்தோமெடியமுன்னம், விற்கொண்டசரந்தொடுத்துப்புரையில்கேள்விவிண்ணவர்தந்துயர்தீர்த்தவீரராமன், கற்கொண்டவகலியைதன்னுருவமீளக்கவின்கொள்ளக்கொடுத்ததிருக்கமலபாதஞ், சொற்கொண்டுதுதித்தெழுந்துதுள்ளிநாளுந்தொழுமவரேயெழுபிறவித்துவக்கற்றுரே. (க)

இப்பால்வெஞ்சிலைவிசயன்றுறக்கமீதிலிந்திரன்றனருகிருப்பவிமையோருரிலப்பானற்றவம்புரிந்துதழல்கூர்வேள்வியந்தணர்தங்குழாஞ்சூழவழகார்மண்ணிலொப்பாருமிலாதமடமயிலினேடுமுயர்வனத்தினிடைநாளுமொருநாள்போலத்தப்பாமலறம்வளர்க்குநீதிவேந்துந்தம்பியரும்புரிந்ததினிச்சாற்றுகிற்பாம். (உ)

விறல்விசயன்றனைப்பிரிந்தவருத்தமேன்மேல்விஞ்சவொருதஞ்சமறவெம்பியம்பொற், சிறகிழந்தபறவையெனத்துணைவரோடுந்திறல்வேந்தன்சிந்தனையுற்றிருந்தகாலைப், பொறையறிவுநிறைதருமமுடையவாய்மைப்போர்வேந்தேயஞ்சலெனப்புகழ்ந்துவாழ்த்தி, மறையொருபொன்வடிவுகொடுவந்ததென்னமாமுனியுமிமைப்பினுடன்வந்துற்றனே. (ந)

வந்தபெருங்கடவுண்முனிவரவுநோக்கிவாள்வேந்தந்தம்பியருமகிழ்ச்சிகூர்ந்து, சிந்தைவிழிமலரொடுபேருவகைபொங்கச்சென்றெதிர்போய்வணங்குதலுஞ்சிதைவிலாத, வந்தமுனிவரனுமவர்க்கன்பாற்றுன்பமணுகாதவந்தமிலாவாசிகூறிப், புந்தியுடனளித்தசெழும்புனிதகோலப்புலித்தவிசினிருந்தடைவே புகன்றுனெல்லாம்.

வாள்விசயன்புரவிசயன்றன்னைநோக்கிமன்னுதவம்புரிந்ததுவுமகிழ்ச்சிகூர்ந்தவ், வேள்விசயந்தவிர்த்தபிரானருளால்வெண்டும்விறற்படைகளளித்ததுவும்விபுதர்கோமா, னுள்விசயம்பெறக்கொடுபோயும்பரினளிர்மகுடம்புனைந்ததுவுநாளுந்தன்பொற், றேள்விசயந்தொலைத்ததிறலவுணர்சேனைசுசோத்தாற்றெலைத்ததுவுஞ்சூழ்ந்தயாவும். (ரு)

தன்னருகேயமரரெல்லாமினிதுபோற்றத்தனஞ்சயனங்கிருந்ததற்பின்றயங்குஞ்
சோதி,மன்னுமெழிற்காந்தர்ப்பமென்னுநாமவரைவழியேவருவதுவுமருவுகாத, லு
ன்னுடையபெருந்துயரந்தணியுமாறு முரைத்தருள்கவெனவும்பர்கோமானுன்பா,
லென்னைவிடுத்தனன்வந்தேனென்றனெல்லாவுலகமுடிந்திடுநாளுமீறிலாதான்.()

மாமுனிதன்மொழிகேட்டுப்புரையில்கேள்விமன்னவனுந்தம்பியரும்வருத்த
மாறிக், காமியமென்றுரைபெறுசீர்வனத்தைநீங்கிக்கடவுண்முனிதன்னோடுங்கண
த்தினொடு, நாமமதுகரதீர்த்தமுதலாவுள்ளநற்றீர்த்தமெவற்றினும்போய்நானமாடி
த், தாமமதிதவழ்சிகரத்திந்திரநீலசயிலத்தின்கனைகெழுதண்சாரல்சார்ந்தார். (௭)

அக்கிரியின்புதுமையெலாமடைவேநோக்கியங்குள்ளவருவிநறும்புனலுமா
டித், தக்கபுகழ்விசயனருந்தவம்புரிந்தசாரலிதுவென்றுதவமுனிவன்சாற்ற, மிக்
கவுவகைமிகழ்நெஞ்சராகிவிசயனைக்கண்டனர்போலவிரும்பிக்கண்டு, தொக்
கமுனிகணத்தொடும்போய்த்தசாங்கனென்னுந் தொல்லைமுனிதபோவனத்தின்
சூழல்சார்ந்தார். (௮)

அங்குள்ளதபோதனர்தம்பாதம்போற்றியவருரைக்குமாசியும்பெற்றப்பாலேகி
வெங்குள்ளகடவுணெடும்புனலும்யாறுமெப்புனலுந்தப்பாமலினிதினாடி [டிக்
வங்கமெறிகடல்கடைந்துவானோர்க்கெல்லா மருந்துவிருந்தருளியமந்தரமுங்காட்
கங்கைநதிகுதிபாயுஞ்சிகரச்சாரற்காந்தர்ப்பமெனும்வரையுங்காட்டினனே. (௯)

அந்தவுயர்கிரியினெடுஞ்சாரலேறுமருந்தவஞ்செய்முனிவரரையடைவேகா
ட்டி, யிந்தவனந்தனக்கெமையாளுடையான்குன்றமீரைம்பதியோசனையென்றெ
டுத்துக்காட்டிக், கந்தனெனவெக்கலையும்வல்லஞானக்கடவுண்முனிவிசாலயனு
லயமுங்காட்டி, யுந்துநெறிச்செங்கோலாயிதனிலோராண்டிருத்தியெனவுரோம
சனுமுரைத்திட்டானே. (௧௦)

அம்முனிவன்மொழிப்படியேவரம்பில்கேள்வியறன்மகனுந் தம்பியருமரி
வையோடு,மெம்முகமுந்தம்முகமாவிலையுங்காயுமினியகனியுடனருந்தியிருக்குநா
ளின், மைம்முகில்வாகனன்கனகமுடிமேலம்பொன்வளசமலரொன்றுதழன்மயி
ன்முன்வீழச், செம்மலரைச்செங்கண்மலர்தன்னுனேக்கிச்செய்யமலர்க்கரத்தேந்
திச்சிந்தித்தாளே. (௧௧)

இந்தமலருலகனைத்துமின்றகோலவெழின்மலரோவிரவிதிருக்கரத்தில்வகு,
மந்தமலரோவமுதிற்பிறந்தபாவையமர்ந்துறையுமணிமலரோவவனிதன்னி, லெந்
தமலருங்கருகக்கமழாநின்ற தெங்கெங்குமிதன்மணமேயென்றுபோற்றிக், கந்த
வகன்மைந்தனுக்குக்கனலோனல்குங் கனங்குழைசென்றுவகையுடன்காட்டிச்
சொல்வாள். (௧௨)

இம்மலருக்கொருமலருமவனிதன்னி லெதிரில்லையென்றிதழாயிரத்தின்மிக்
க, வம்மலரைக்கைம்மலரிற்கொடுத்திதொக்குமணிமலர்நீயெனக்கருளவேண்டுமெ
ன்னச், செம்மலையிற்றிகழ்சிகரத்தின்டோள்வீமன்றெய்வமுனிப்புங்கவன்றன்றி
ருத்தாள்போற்றி,மெய்ம்மலரைத்திருமுன்புவைத்துநின்றுவின்விஞனவனுமெதிர்
விளம்புவானே. (௧௩)

என்பலவுமியாமுரைப்பதிந்தப்பூவினியல்பினையும்பெருமையையுமியக்கர்த
ங்கண்,மன்பதியிலுளதன்றிவரம்பிலாதவானுலகிலுளதென்னின்மற்றுமுண்டோ,
வுன்பிறந்கிதகோடற்கெளிதோமாயனும்பர்பதிபுகுந்தொருபைந்தோகைக்கீந்த,
பின்பிதனைக்கண்டறிவாரில்லையென்றுபேசினன்யாவரொடும்பேச்சிலாதான். ()

இயக்கர்பதிதனிலுளதென்றிசைத்தமாற்ற மின்புறக்கேட்டொருகாலுமீறிலாத, வயக்கொடுவெஞ்சராசனமும்வன்போர்வாகைமறத்தண்டுங்கரத்தேந்திமடந்தைநெஞ்சிற், றுயக்கமறவிக்கணத்திற்றெய்வபோக சுரபிமலரளித்திடுவெனென்றுசொல்லிச், சயக்கரடமுறுதறுகட்சயிலமன்னசதாகதிமைந்தனுமிமைப்பிற்றனிசென்றானே. (கரு)

கைக்காற்றுந்தொடைக்காற்றுமூச்சுக்காற்றுங்கனகமணிவரைபோலக்கவின்கொள்சோதி, மெய்க்காற்றும்பரந்தெழுந்துவனத்திலுள்ள வெற்புநெடுந்தருவனைத்துமொடிந்துவீழ, வெக்காற்றுமுடன்றெழுந்தவுகாந்தகால மெனச்சென்றானினவனைகளெண்ணில்கோடி, செய்க்காற்றுஞ்செழுந்தரளநிலவுவீசச் சேதாம்பல்பசுன்மலருஞ்செல்வநாடன். (கசு)

இலங்கைநகர்தன்னில்விறலிராமதூதனிகலரக்கன்சோலையெலாமிறுத்தவாபோ, னிலங்குலுங்கவரைகுலுங்கவனத்தினுள்ள நெடுந்தருக்கள்யாவையும்வேருடனோக்கி, விலங்கினொடுபுள்ளினமுமடையத்தாக்கிமெய்ந்நடுங்கித்தமோறிவெம்பியுள்ளங், கலங்கிவிழக்கனமதிர்வபோலவார்த்துக்காஞ்சனப்பேரெழில்வனமுங்கடந்திட்டானே. (கஎ)

அவ்வனத்தையிகந்தநந்த காதமேகி யங்கிடைவிட்டுத்தரத்தி னப்பாலேகி, மெய்வனப்புமடல்வலியுமிகுத்தவாகை வீமனெனும்பேர்திசையின்விளக்கும் வீரன், மைவனப்பினுடன்படியுஞ்சினைக்கைவாசமலர்ப்பொழிலினொருமருங்கேமதத்தமாவின், கைவனப்புந்தழைசெவியுமருப்புஞ்சேரக்கவினளிக்குங்குலைக்கதலிக்காடுகண்டான். (கஅ)

அக்கதலிவனந்தனக்குக்காவலாகுமடலரக்கரநேகருடனடுபோர்செய்து [றித்
மிக்கதலங்குருதியினால்வெள்ளமாக்கிவெகுண்டவர்தம்மாவியையும் விண்ணிலேற்
திக்கதலமுதலாமெவ்வுலகுமேங்கச்சிங்கநாதமுஞ்செய்தான்செய்தகாலை
யுக்கதலைமணியுரகராசர்க்கென்றாலும்பர்படுந்துயரமெம்மானுரைக்கலாமோ. (ககூ)

வரைகலங்கவனங்கலங்கக்கலங்குறாதமண்கலங்கவிண்கலங்கமகரமுந்நீர்த், திரைகலங்கத்திசைகலங்கவீறிலாதசெகங்கலங்கவுகங்கலங்கச்சிந்தைதூயோ, ருரைகலங்கவுளங்கலங்கத்துளங்கிமெய்யினூன்கலங்கவிலங்கொடுபுள்ளினங்கள்யாவு, நிரைகலங்கவுலகினுயிர்படைத்ததம்மினிலைகலங்காதனவுண்டோநிகழ்த்திநம்மா.

வேறு.

அந்தவோதையப்பொழிலிடைத்தவம்புரிந்தருளு
மந்தராசலமனையதோண்மாருதிகேட்டு
விந்தமன்னதிண்புயாசலவீமனுக்கெதிர்போய்
முந்தமற்றவன்வருநெறியதனிடைமுன்னி. (உக)

வெற்பிரண்டினில்வேலைமுன்கடந்ததாணிட்டிப்
பொற்புயாசலமிரண்டையுமிருவரைபோக்கி
யற்பவாழ்வுடையரக்கன்மாநகரழலூட்டுஞ்
சிற்பவாலதிதிசையெலாஞ்சென்றுநின்றோங்க. (உஉ)

எம்பிரான்றனக்கொழியவேறியாவர்க்குந்தெரியாச்
செம்பொன்மாமணிக்குண்டலமிருபுறந்திகழ
விம்பமால்வரைமீதொருமேருவேயொக்கு
மம்பொன்மால்வரையிருந்தெனவிருந்தனனநுமான். (உந)

குனைத்தடங்கிரியனையதோள்கொட்டியார்த்துரப்பி
நகைத்துநாகமுநடுங்கிடநடந்தனனடந்து
மிகைத்தவாளரிபோல்வரும்வீமன்முன்கண்டு
திகைத்துநின்றனன்மறமையுந்திறமையுமுடையான். (௨௪)

அண்டர்தானவராக்கருமனுகுருவனத்தி
லெண்டிசாமுகமெங்கணுமிரிந்திடவார்த்து
மண்டிமேல்வருமாறுடனாடாவென்றான்
சண்டவாயுவின்றனயனைமற்றவன்றமையன். (௨௫)

தம்முனையவானரஞ்சாற்றியவுரைகேட்
டெம்முனைவந்திருந்தநீயார்கொலென்றிசைத்தான்
றெம்முனையினுஞ்செவ்விமென்போகமாமகளிர்
தம்முனையினுநாத்தவறுவடல்வீமன். (௨௬)

துன்னும்வெஞ்சிலைவலிகொலோதோளிணைவலியோ
வென்னைநீபுகலாரடாவென்பதிங்கெவனோ
வுன்னைநீயறியாநெறியுணர்விலாமனிதா
மன்னும்வாறனைக்கடந்துபோவல்லையேலென்றான். (௨௭)

உரங்கொள்வீமனம்மாருதியுரைத்தசொற்கேளா
வரங்கொள்வார்சிலையிராகவன்மாபெருந்தூதன்
றரங்கவாரிதிதாவுமென்றம்முன்வாலன்றிக்
குரங்கின்வாலிதுகடப்பதிங்கரியதோகூறாய். (௨௮)

என்றுதன்றிருத்துணைவனின்றிசைத்ததுகேட்டு
நன்றுநன்றுநீநவின்றதுநன்றெனநகையாத்
துன்றுவார்சிலைமனிதனைச்சுமந்துதோள்வருந்தும்
புன்றொழிற்சிறுகுரங்கையோவென்னொடும்புகல்வாய். (௨௯)

குரக்குநாயகனவ்வுரைகூறலுங்கேட்டுத்
தரைக்குநாயகன்றடம்புயங்குலுங்கிடநகையா
வரக்கர்நாயகனூரழலூட்டியிவ்வகிலம்
புரக்குநாயகன்றன்னையோவிழித்துநீபுகல்வாய். (௩௦)

பின்னும்வார்சிலையிராகவன்பெருமையுமனுமான்
மன்னுதோளிணைவலிமையுமாருதிசாற்ற
வன்னபோழ்தினிலகமகிழ்ந்தருளுடனோக்கி
யென்னகாரியம்வந்ததிங்கியார்கொனீயென்றான். (௩௧)

நாமமாருதியுரைத்தசொற்றம்பியுங்கேட்டு
நேமிமாநிலம்புரக்குநன்னீதிவேற்றரும
நாமநாயகற்கினியவனானுக்குமூத்தோன்
வீமன்வாயுவின்புதல்வன்யானென்றனன்விறலோன். (௩௨)

அன்னவாசகமவனுரைத்தலுமிகலனுமான்
கன்னபாரமுஞ்சிந்தையுமுந்தறக்களித்து
மின்னுவார்சிலையிராகவன்மெய்ப்பெருஞ்சீர்த்தி
சொன்னவாறுநன்றனக்கிதார்சொற்றவரென்றான். (௩௩)

வரத்தினாலருமறையினால்வார்சிலைபயிற்றும்
பரத்துவாசன்முன்பகர்தரக்கேட்டனன்பலகாற்
றிரத்தினாலுயரிராகவன்சிலைவலியென்றா
னுரத்தினாலொருவீருமொப்பிலாவுரவோன். (௩௪)

குந்திகான்முளைகூறியவாசகங்கேட்டுப்
புந்தியாலுயரஞ்சனைபுதல்வனும்புகல்வான்
சிந்துசீகரச்சிந்துமுன்கடந்துசெந்தீயா
லுந்துவாள்வலிநிருதரூரொருங்குசுட்டவனும். (௩௫)

அந்தவார்சிலையிராமனுக்கடிமையாயென்றுஞ்
சிந்தையாலவன்றிருப்பதஞ்சிந்தைசெய்பவனு
முந்தையாகியவாயுவுக்குற்பவித்தவனு
மிந்தவாழ்வுடையனுமனேயென்றனனிகலோன். (௩௬)

என்றவாசகமிருசெவிக்கமுதெனக்கேட்டுத்
துன்றுநெஞ்சினிலுவகையன்றுதித்தனன்றுள்ளி
யென்றும்யாமுயறவப்பயனிருந்தவாவென்னாச்
சென்றிறைஞ்சினன்றிரைக்கடல்கடந்தசேவடிமேல். (௩௭)

தம்பியைத்துணைத்தாழ்தடக்கைகளாலெடுத்து
வம்புசேர்மணிமால்வரைமார்புறவணைத்துப்
பம்புசெந்தழற்கானிடைப்பதமலர்சிவப்ப
வெம்பிநீதனிநடந்தவாறென்கொலென்றிசைத்தான். (௩௮)

தாயத்தாரும்வெவ்வஞ்சனைச்சகுனியுங்கூடி
மாயத்தாலொருகவறுகொண்டெங்கண்மண்கொண்டு
நேயத்தானெடுங்கானகநேர்ந்தனரென்றான்
சீயத்தாலரசிழந்திடுஞ்சிம்புளேறனையான். (௩௯)

திகந்தமெட்டினுந்தன்மணமொல்லெனச்செல்லச்
சுகந்தபுட்பமொன்றியாமுறைவனத்தினிற்றோன்றத்
தகைந்தவப்புதுமலர்தனைத்தழன்மகள்காணா
வகைந்தவித்துணைமலரெனக்கருளுதியென்றாள். (௪0)

ஆதலாலிவண்யானுமின்றணுகினனென்று
நீதியாலுயர்தம்முனைநெடுந்தகைபோற்றக்
கோதிலாதவக்குரிசிலுங்குமரனைநோக்கித்
தீதிலாயிதுகேட்கெனச்செப்புவன்மாதோ. (௪௧)

அருநிதிக்கிழவன்றனதளகைமாநகரின்
மருமிகுத்தநீண்மஞ்சனவாவியின்கரையின்
றருமலர்ப்பெருஞ்சோலையிற்றங்குமம்மலர்சென்
றுரிமையுற்றதுகோடன்மற்றும்பர்க்குமரிதால். (௪௨)

ஈறிலாவிகலரக்கரோடியக்கர்தங்காவல்
கூறும்வாசகம்பொய்ப்பவர்கூர்தவமுயலும்
பேறிலாதவர்பேரருளிலாதவர்பிறிது
மாறிலாதவர்தமக்குமங்கணுகுதலரிதால். (௪௩)

அறிவும்வாய்மையுந்தூய்மையுமன்புமின்னருளும்
பொறையுஞானமுங்கல்வியும்புரிபெருந்தவமு
நெறியுமானமும்வீரமுமின்னவாதலினூற்
பெறவுனக்கரிதாயதேதென்றனன்பெரியோன். (சச)

முன்னவன்புகலுறுதிகூர்மொழியெலாங்கேட்டுப்
பின்னவன்றொழுதிவையிவைபேசினன்பின்னு
மன்னர்மன்னவனறமுண்டுமறமுண்டுவழக்கே
யுன்னிலுன்னருளுண்டுதிண்டோளுரமுண்டால். (சரு)

தேவர்காக்கினுந்தயித்தியர்காக்கினுஞ்சிறந்த
மூவர்காக்கினுமுறைமுறைமொழிந்தமூவுலகில்
யாவர்காக்கினுமிக்கணத்தியக்கருரெய்திக்
காவின்மேற்பயில்கடிமலர்கவருவேனென்றான். (சசு)

ஆண்டவன்புகலுறுதியுமாண்மையுங்கேட்டு
நீண்டதோள்வயமாருதிநெடிதுவந்தருளிப்
பாண்டவன்றனைப்பண்புறப்பரிவினானோக்கி
வேண்டுநல்வரம்வேண்டுகவீண்டைநீயென்றான். (சஎ)

நெடியகானகநீங்கியாநெறியினோரலரைக்
கடியவெஞ்செருப்புரிபெருங்குருதிவெங்களத்தி
லடிகளாங்கெழுந்தருளிவந்தருச்சுனன்றடந்தேர்க்
கொடியின்மீதுநின்றுவந்துகூத்தாடுதிரென்றான். (சஅ)

நீட்டுமெவ்வரமவனுக்குநேர்ந்தனனனுமான்
மீட்டுநல்வரமொன்றுமுன்வேண்டினன்வீம
னீட்டுமோகிநியிலங்கைநியிட்டநாளிசைந்த
மோட்டுருத்தனைக்காட்டுகென்றிறைஞ்சினன்முதல்வன். (சகூ)

வேறு.

என்றடல்வீமனிசைத்திடுமுன்ன, மொன்றியிவ்வேழுலகங்களுமொன்றா
மன்றுளதாள்புனைவாமனனைப்போ, னின்றுநிமிர்ந்தனனித்தமுமுள்ளான். (ருo)

படியினதெல்லைபதத்தினதெல்லை, மடியினதெல்லையவ்வானினதெல்லை
யடியினதெல்லையளப்பரிதென்றான், முடியினதெல்லைமொழிந்திடலாமோ. (ருக)

அந்தரமெங்குமடக்கியமெய்யிற், சுந்தரவாலதிசுற்றியதோற்ற
முந்தியநீளுடல்வாசுகிமுன்னாண், மந்தரவெற்பைவளைத்ததுமானும். (ருஉ)

நீளகல்வானநெருங்கமருங்கே, தோள்புறவாலதிசூழ்தரநிற்போ
னாளொடுதாரகைஞாயிறுமுதலாங், கோளணிசூழ்வருகுன்றமுமொத்தான். (ருங)

இவ்வகைமுன்னமிலங்கையெரித்தான், பைவருநாகர்பணஞ்சுளியத்தின்
மெய்வகைகொண்டதுகண்டுவியந்தார், மைவகைசேரகல்வானவரெல்லாம். (ருச)

மேலளவாதவிளங்கியசொன்மெய்க், நூலளவாகியநுண்ணறிவோர்போன்
மாலளவன்றிவணங்குதலில்வான், காலளவல்லதுகண்டிலன்வீமன். (ருரு)

அருக்கனின்மும்மடியாரொளிவீச, முருக்கிளர்மேனியையூறுநோக்கா
வெருக்கொடுதோண்மிசைவீழ்ந்தனன்மீண்டு, சருக்குகவென்றுதுதித்தனன்வீமன்

இந்திரசாலமியற்றினரைப்போன், மைந்தொடுதொல்லையில்வடிவுகொள்பொழுதத்
தந்தமிலாயடியேன்பிழையெல்லாம், புந்தியுறுதுபொறுத்தருளென்றான். (ருஎ)

திருவடிதன்னிருசேவடியிற்போய், மருவடிதார்புனைமாருதிதொழவே
யருவடிவாகியகண்டமுமெங்கு, மொருவடிவானவனுற்றுரைசெய்வான். (ருஅ)

உன்னருகேபயிலும்பியரோடு, மின்னருகேபயில்வேந்தொடும்வாழ்வுற்
றென்னருகேவருகென்றனனென்றுந், தன்னருகேதமுறாததவத்தோன். (ருகூ)

அங்கவனம்மொழிகூறலுமையா, வெங்கணுநின்னுயரின்னருளுண்டே
பங்கயமாநிதிவாழ்பதியெய்தச், சங்கையினன்னெறிசாற்றுகவென்றான். (சுo)

என்றலுமிந்தவனத்தினதெல்லை, யொன்றியயோசனையோரிருநூறு
சென்றபின்யோசனைசிற்சிலசென்றான், மன்றன்மலர்ப்பொழில்வாவியின்மன்னும்

அப்பொழில்காவலரக்கரநேக, ரெப்பொழிலுந்திறைகொள்ளுமெயிற்றார்
துப்புடனேயவராவிதொலைத்தாற், செப்பியமாமலர்சென்றுறலாகும். (சுஉ)

அல்லதுநீடளகாபதிதானு, மெல்லியலும்பொழின்மேவியபோது
நல்லுறவாகியத்தொடுசென்றான், மல்லன்மலர்தருவோடுவழங்கும். (சுங)

உறுதியுமொன்னலருக்கமுமேகு, நெறியினதெல்லையினீர்மையுநெறியிற்
குறிகளும்யாவையுமன்பொடுகூறி, யறிவுடையான்விடையன்பொடளித்தான். ()

மொய்ம்புடைமாருதிதாளிணைமுன்னு, வெம்பியகானிடைமேவியபயனிங்
கெம்பெருமானுனையெய்தினனென்னு, நம்பியுநாழிகையொன்றினடந்தான். ()

அக்கணமாசு * வினைசுகன்மைந்தன், மிக்குயர்விஞ்சையர்நாட்டிடைவிட்டுத்
திக்குறைநாகர்திரண்டுதுதிக்குஞ், சக்கரநாகமதன்புடைசார்ந்தான். (சுசு)

தவாமறைவாணர்தவம்புரியுந்தன், கவானுடைநீள்குகரத்துயர்கலைசே
ருவாமதிசூழ்வருமோங்கலொடொக்குந், திவாகரமால்வரைசேர்ந்திடுமெல்லை. ()

அஞ்சனமேகமொடாலமளாவி, வஞ்சனைகொண்டுவகுத்தனமெய்யான்
குஞ்சிகள்வானினிடைக்கொடியோடிச், செஞ்சுடர்காறருகின்றசிரத்தான். (சுஅ)

குளிர்வரையொன்றியநீள்குகரம்போ, லளவில்பெரும்பகுவாயதின்மதியின்
பிளவெனலாவலையும்பிறழுந்தண், ணிளநிலவென்னவிலங்குமெயிற்றான். (சுகூ)

ஆறிருகாதமகன்றிடுதோளா, னூறிருகாதநொடிக்குணடப்பா
னேறுடையான்முதலானவரேனு, மாறுடுகாதிமலைந்திடவல்லான். (எo)

எண்டிசையுந்திறைகொண்டிகலோடும், புண்டரிகப்பெயர்நாடுபொறித்தோன்
றிண்டிறன்மாருதிசேய்வருவானைக், கண்டனனங்கழல்கான்றிடுகண்ணன். (எக)

உருத்துமுகிற்குலமுட்குடன்மட்கச், சிரித்திதழ்கவ்வியெயிற்றிணைதின்றாய்
கரித்துவசன்றனைநோக்கியரக்கன், கருத்துடனின்றிவைகட்டுரைசெய்வான். ()

யானுறைகானகமென்றிமையோருந், தானவர்தாமுமிதற்கிடைசாரார்
மானுடனீயிவண்வந்ததுசுவையா, மூனிடவோவிஃதுரைத்திடுகென்றான். (எங)

வென்றியரக்கன்விளம்புதல்கேளாக், குன்றனதோள்கள்குலுங்கநகைத்தாங்
குன்றனதாவியுமுண்டிடவந்தே, னென்றனன்முன்னமிடிம்பனைவென்றோன். ()

மற்றதுகூறமறத்தொடரக்க, னுற்றெதிரோடியுறுக்கியபோதக்
கொற்றவனுங்கதைகொண்டுடன்மண்டிப், பற்றினன்வந்தனனாவிபறிப்பான். ()

* ஆசு—விரைவு.

குன்றெடுகுன்றமர்கூறுவதேபோ, னின்றுநெடும்பொழுதாகமலைந்தும்
வன்றிறலுந்தமவாகுவின்வலியு, மொன்றுமிளைத்திலரொத்தவுரத்தார். (எசு)

எல்லையிலாவமரிங்கிவரிவ்வா, றெல்லையின்மோதியுடன்றிடுபோழ்திற்
றொல்லையிலோர்முனிசொல்லியசாப, மல்லலருபிவழங்கியதன்றே. (எஎ)

ஒன்றினுமாவியுனக்கிவனெல்கான், றுன்றிடுதோண்மிசைதோமரமேவிக்
கொன்றிடுவாயினிவாயுகுமாரா, வென்றதுவானினிடத்தசரீரி. (எஅ)

அங்கசரீரியரற்றியசாபஞ், சங்கையுறுந்தசமீரணிசேட்டுப்
பங்கயநாமநிசாசரபதிதன், றுங்கவயப்புயமேற்கதைதொட்டான். (எகூ)

தொட்டகொடுங்கதைதோளுறுமுன்னர்ப், பட்டனெநொந்துபதைத்தடல்வஞ்சன்
வட்டநெடுங்கடலூடுமெருத்தன், றிட்டபெருங்கிரியென்னவிழுந்தான். (அ0)

வேறு.

ஏற்றத்தோடிகலியிவ்வாறிடைவழியதனில்வந்து
சீற்றத்தோடெதிர்ந்தவெம்போர்த்திண்டிறலரக்கன்றன்னைப்
பாற்றுக்கும்பகுவாய்ப்பேய்க்கும்பருந்துக்கும்வருந்துகின்ற
கூற்றுக்கும்விருந்துசெய்தக்கொற்றவேற்குரிசில்போனான். (அக)

எண்டிசையமரர்போற்றுமிந்துமால்வரைசென்றெய்திப்
புண்டரீகன்றனுடுபொருக்கெனநெருக்கியப்பாற்
றெண்டிரையளித்ததெய்வச்செல்வமாநிதிகளோங்கு
மண்டர்மாநகருமொவ்வாவளகைமாநகரங்கண்டான். (அஉ)

அந்தமாநகரின்றென்பாலகல்விசும்புறநின்றோங்கும்
விந்தமாமென்னநின்றுவிளங்குதோள்வீமசேனன்
முந்தைமாருதிகண்போடுமொழிவழியெய்தியந்தக்
கந்தவான்பொழிலுநன்னீர்க்கடிமலர்த்தடமுங்கண்டான். (அங)

துயிலைக்குறுகுமெல்லையப்பொழிறுப்பிற்காப்போர்
சேயிடைப்பரந்தமார்பர்சேணிடைகடந்ததோளர்
வாயிடைப்பிறைகளென்னவளைந்தவாளெயிற்றர்வஞ்சத்
தீயிடைச்சோரிதோய்ந்துதிரண்டெனச்சுழல்செங்கண்ணர். (அச)

சூழிருட்பிழம்புகஞ்சுதோய்ந்தன்னதுவக்கருன்னி
யூழிகையொன்றினெல்லாவுலகையுநலியுமீட்டார்
வாழிமந்தரமத்தாகவாசுகிகயிறுமாயோ
ராழிநீர்கடைந்தாளுமமுதெழக்கடைந்தவீரர். (அரு)

மறத்தொடுவஞ்சமானநண்பெனவளர்த்துநாளு
மறத்தொடுபகைக்குநெஞ்சர்பிலத்தினுமகன்றவாயர்
புறத்தினின்முகத்தர்மார்பிற்புழைமுழைமூக்கரின்ன
திறத்தினர்குஞ்சிச்செந்திச்சிரத்தினர்வரத்தின்மிக்கோர். (அசு)

கரங்களாயிரத்தர்நண்ணுங்கால்களாயிரத்தர்குஞ்சிச்
சிரங்களாயிரத்தர்பூழைச்செவிகளாயிரத்தர்வென்றி
யுரங்களாயிரத்தருழிதவமுயன்றுரிமைபெற்ற
வரங்களாயிரத்தர்மிக்கமறைகளாயிரத்தர்மன்னோ. (அஎ)

வைத்தாரைவாளம்வில்வேன்மழுவெழுத்திகிரிசூலங்
கைத்தாரைபடக்கொண்டென்றுங்கண்ணிமையாதுகாப்போர்
மைத்தாரைமாரியொப்பார்மாருடாநாற்றங்கேட்டு
மொய்த்தாரக்கடவுள்வாசமொய்ம்மலர்ச்சோலையெல்லாம். (அஅ)

மண்டியெங்கெங்குமேன்மேன்மறிகடன்முகக்குநீலக்
கொண்டலிற்குழுமியார்த்துக்குறுகியகொடியநீசர்
சண்டவேகத்தினெய்துஞ்சதாகதிதனயன்றன்னைக்
கண்டனர்சூலபாசகாலனைக்கண்டதன்னார். (அகூ)

எற்றவென்பாருஞ்சூலத்தெறியவென்பாருமெய்திப்
பற்றவென்பாருமாவிபறிக்கவென்பாரும்யாக்கை
சுற்றவென்பாருஞ்சென்னிதுணிக்கவென்பாருமாகி
யுற்றனரரக்கர்நாருயிரருருத்துரைக்கலுற்றார். (கூ0)

இந்திரன்முதலாவுள்ளவிமையவர்தாமுமிந்தக்
கந்தவான்சோலைகண்ணுனேக்கவுங்கருதிநைவார்
வந்ததென்மதியிலாதமானுடாவுன்றனுவி
சிந்துமுன்செப்புகென்னத்தெழித்தனர்தீயோரெல்லாம். (கூக)

அருளிலாவரக்கரிவ்வாறகங்கரித்தரற்றுமிந்தப்
பொருளிலாவுரைகட்கெல்லாமுத்தரம்புகலானுகி
யிருளிலாமுத்தமன்னவெயிற்றரும்பிலங்கநக்கான்
றெருளிலாமதனைமுன்னமெரித்திடுஞ்சிவனைப்போல்வான். (கூஉ)

தனிதமேகம்போலார்க்குநமதுயிர்சரத்திற்சாய்த்திப்
புனிதவான்பொழிலில்வாசப்புதுமலர்கொய்யவந்தேன்
குனிதவர்கொண்டுமுன்னுங்குலங்கரிசறுத்தவீரன்
மனிதனேவானுளானேமறந்திரோவஞ்சரென்றான். (கூரு)

மாவிந்தமனையபொற்றேண்மாருதிவாய்மைகேட்டுப்
பூவிந்தவனத்தினீயோபறித்தியென்றழன்றுபொங்கி
நாவிந்தவுரைதந்தின்னுமிருப்பதோநரனுக்கென்னக்
கோவிந்தன்றடித்தகுன்றிற்கொண்டலின்குழாத்திற்சூழ்ந்தார். (கூச)

வானகமறையவீசிவான்படைக்கலங்கள்வால
சேனனேமுதலாவுள்ளசேனையின்றலைவரார்த்தார்
கானுடைத்தொடையலானுங்காலனுக்காவியன்ன
தானுடைத்தண்டமேந்திப்புகுந்தனன்சலிப்பிலாதான். (கூரு)

தண்டினலவர்கள்விட்டபடையெலாந்தகர்த்துமீள
மண்டினனுழுவைகண்டவாளுகிர்மடங்கலொப்பான்
மிண்டினருடலம்யாவுமெய்தலைதம்மினென்றக்
கிண்டினன்மூளைச்சேற்றிற்கிடத்தினன்படுத்துமன்னே. (கூகூ)

தாக்கினன்சிலரைத்தண்டாற்றடக்கையாற்சிலரைவானிற்
றூக்கினன்கரங்கினின்றுசுழற்றினன்சிலரையெற்றி
நூக்கினன்சிலரைத்தாளாறெறுக்கினன்சிலரைவாளால்
வீக்கினன்சிலரையரவிவேறிட்டான்சிலரைவீமன். (கூஎ)

பிடித்தனன்சிலரையள்ளிப்பிசைந்தனன்சிலரைமண்ணி
லடித்தனன்சிலரையங்கமகைத்தனன்சிலரையெண்ண
முடித்தனன்சிலரைப்போகமுகிழ்த்தனன்சிலரைக்கண்ட
மொடித்தனன்சிலரையஞ்சவுறுக்கினன்சிலரைமன்னோ. (௯௮)

காக்கழுந்தரணினாலுங்கனவரைந்தோளினாலும்
வரக்கொடுங்கதையினாலுமராமரப்பணையினாலு
முரக்கடுங்காலினாலுமொருக்கினாலுரைப்பதென்னோ
வாக்கரையென்றுத்பின்னைவிடுங்கொலோவனுமன்பின்னோன். (௯௯)

இப்படிக்கெதிர்ந்தசேனையாவையுமிமைக்குமுன்னந்
துப்புடன்றொலைத்துவாயுசுதனின்றவுறுநோக்கி
மைப்படிவரைகள்போல்வார்வாளெயிற்றரக்கர்பின்னுங்
கைப்படைகொண்டுநூறாயிரரொருகணத்திற்சூழ்ந்தார். (௧௦௦)

அவர்வெருண்டழன்றுமேன்மேலலைகடல்போலவார்த்துப்
பவர்கொண்டபனகமென்னச்சூழ்வரும்பரிசுபாராக்
கவர்கொண்டதொடையலானுங்கதையொழிந்திலங்குசெங்கைத்
தவர்கொண்டுநெடுநாணண்டந்தகர்தரத்தழங்கவார்த்தான். (௧௦௧)

அன்னநாணோதையெங்குமண்டமும்பொதுளத்தாக்க
மன்னுநாகங்களெட்டுமதம்புலர்ந்துயங்கிவீழத்
துன்னும்வாய்நஞ்சுகக்கிச்சுழன்றுமண்சுமக்குங்கொற்றப்
பன்னகாதிபனுமுள்ளம்பதைத்துவெம்படங்கள்சோர்ந்தான். (௧௦௨)

உரம்படச்சரங்கண்மேன்மேலுறுக்கிவேல்வீமனுந்தச்
சிரங்களிற்றோளின்மார்பிற்கண்களிற்செருகச்சென்று
கரன்படைக்குழாத்துமுன்னங்காகுத்தன்கதிர்கொள்கூர்வாய்ச்
சரம்படத்தளர்ந்ததென்னத்தளர்ந்ததத்தளர்வில்சேனை. (௧௦௩)

சக்கரஞ்சூலம்பாசந்தண்டம்வேல்கப்பணம்வாண்
முற்கரங்கணையம்விட்டேறெழுக்கொழுமுசுண்டிகுந்த
மெக்கரங்களினுமேந்தியாவருமிவன்மேலேவி
யக்கணந்தன்னின்மீண்டுமெகங்கரித்தார்த்தகாலை. (௧௦௪)

அப்படைத்தொகைகளெல்லாமறுத்தறுத்தவர்கடத்த
மெய்ப்படச்சரங்கள்சிந்திச்சிரங்கள்வெவ்வேறதாக்கி
யிப்படிக்கரக்கர்சேனையாவையுந்துணித்துமீண்டுஞ்
செப்படிப்பவரினின்றுசிரித்தனன்சிங்கம்போல்வான். (௧௦௫)

வேறு.

அந்தவயப்படையவ்வாறுதல்கண்டு
சந்தமலர்ப்பொழில்காக்குங்காவலாளர்
புந்திமயக்குறநொந்துபுகுந்தவெல்லா
முந்தியியக்கர்பிரானுக்கோடிமொழிந்தார். (௧௦௬)

எம்பெருமானிதகேட்டியென்றிறைஞ்சி
வம்பவிழ்சோலையிடத்தோர்மனிதன்வந்து
பம்பியசேனைவிடத்தேழ்மதமும்பாயு
மும்பலின்வாவிபுகுந்துழக்குகின்றான். (௧௦௭)

என்றவர்வாய்கைபுதைத்திசைத்தல்கேட்டுக்
குன்றுடனென்றுபுயங்குலுங்கநக்குக்
கன்றியசிந்தையனங்கிகால்செங்கண்ணா
னென்றியமங்குலினீடுருத்துரைத்தான். (க0அ)

தன்றுணைநின்றசங்கோடணைநோக்கி
வன்றிறல்கூரடல்வேகமனிதன்றன்னைச்
சென்றவனாவிசெகுத்தல்செய்யாதின்னே
துன்றுபுயங்கவெக்கியெய்தச்சொன்னான். (க0கூ)

அந்தவியக்கர்பிரானுமக்கணத்தில்
வந்துநிதிக்கிழவன்றன்பாதமன்னித்
துந்துபிகொட்டவளப்பில்சேனைசூழ
வுந்தியிமைப்பின்மலர்த்தண்சோலையுற்றான். (கக0)

மன்னுகுருகுலத்துமன்னர்மன்னன்
றன்னையியக்கர்குலத்திலெண்ணுந்தலைவர்
துன்னுபடைக்கடலோடும்பொங்கிச்சூழ்ந்தார்
மின்னிமுழக்கியிடிக்குமேகம்போல்வார். (ககக)

மானவரக்கர்குலத்தைவானிலேற்றி
யூனெடிராத்தமுகுக்குஞ்சோலையூடே
தானைவளைத்திடநின்றசாபவீரன்
யானையினங்கள்வளைக்கும்யாளிபோன்றான். (ககஉ)

விண்ணிலியக்கர்படைக்கலங்கள்வீசி
யெண்ணிலர்சுற்றும்வளைத்தெதிர்ந்தபோதில்
வண்ணவரிச்சிலைகோலிவாயுமைந்தன்
றுண்ணெனவுட்கவடிச்சரங்கடொட்டான். (ககஙு)

தொட்டசரங்கடுளைத்துமார்புந்தோளு
முட்டவிசும்பினதெல்லையெங்குமூடப்
பட்டதொழிந்துபடாதசேனையெல்லாங்
கெட்டனபட்டதுரைக்கவுண்டோகேட்கின். (ககச)

மன்னளகாபதிசேனைநாதன்மார்பிற்
றன்னடையாளமுறத்தண்டாலேதாக்க
மின்னிடைநாகம்வெருக்கொண்டென்னமீண்டான்
றன்னெதிர்வீரரிலாதசங்கோடணன்றான். (ககரு)

கருத்தொடுசென்றளகேசன்பாதகமலஞ்
சிரத்தினில்வைத்திவைநின்றுசெப்பலுற்றா
னுருத்திரன்மானுடவுருவங்கொண்டதன்றேல்
வரத்திவன்மானுடனல்லன்மன்னவென்றே. (ககசு)

பண்புடனீக்கணம்வேண்டுநிதிகள்பலவு
நண்பொடவற்கெதிர்சென்றுநல்காயென்னின்
விண்புகுமிப்புரம்வேந்தவென்றான்மெய்யிற்
புண்புகவுட்கியுழைக்கும்வேழம்போல்வான். (ககஎ)

கோநிலியக்கனியாவுங்கூறக்கேட்டுத்
தாதையுருத்திரசேனன்றன்னைநோக்கி
மாதர்மலர்ப்பொழிலூடுவெந்தமனித்த
னேதிலருத்தியனென்னக்கேட்டியென்றான். (௧௧௮)

தந்தையுரைத்தருள்வாய்மைதலைமேற்கொள்ளா
மைந்தனுமப்பொழிலூடுசென்றுமன்னிச்
செந்தியரக்கர்சிரங்கள்குன்றஞ்செய்து
கந்தனினிற்குமறத்தினனைக்கண்டான். (௧௧௯)

கண்டுமருத்தருள்காளைதன்னைநோக்கி
வண்டுமிடைப்பயிலாதகாவில்வந்து
மிண்டுமரக்கர்குலத்தைவீணேயாவி
கொண்டுபடுத்தனையார்நீகூறுகென்றான். (௧௨௦)

நின்னளகாபதிமைந்தர்சாபநீக்க
முன்மருதூடுதவழ்ந்தவாகைமொய்ம்பற்
கின்னருண்மைத்துனன்மண்ணில்யாரும்போற்று
மன்னவன்வீமன்மருத்தின்மைந்தனென்றான். (௧௨௧)

மாயவனற்புதனாதன்கண்ணன்வையந்
தாயவன்மைத்துனனாகினையதனிநீ
யேயவனத்தினில்வந்ததென்கொலென்றான்
றாயவனுற்றனயாவுந்தோன்றச்சொன்னான். (௧௨௨)

மற்றவனவ்வுரைகூறமகிழ்வோடந்தன்
பொற்றருகண்பின்வழங்கிப்போகென்றருளி
வெற்றியுருத்திரசேனன்மீண்டுவந்தாங்
குற்றதுதாதைதனக்குரைத்திருந்தான். (௧௨௩)

வேறு.

அன்னாற்றருப்பெற்றபின்னந்தவயமீளியக்காவினிற்
றண்ணித்திலப்பொய்கைபடிவுற்றின்னமுதன்னதண்ணீர்குடித்
தெண்ணற்றகழுதாடலதுகண்டிருந்தங்கிளைப்பாறினான்
மண்ணுக்கும்விண்ணுக்குமறலிக்குமுறவானவடிவாளினான். (௧௨௪)

இவ்வாறிவன்செய்கையிவன்வந்ததறியாமலெழில்கூர்வனத்
தவ்வாறுபயில்கின்றவருள்வாரிதானுற்றவதுகூறுவாங்
கைவார்கதைக்காளையைக்கண்ணுறச்சூழல்காணாதமுன்
செவ்வாய்மடப்பாவைநின்றானைநீகூறெனச்செப்பினான். (௧௨௫)

வானின்றுமலரொன்றுதன்முன்புமின்போலவந்துற்றதுந்
தானின்றிம்மலர்போலமலர்தேடிநீயின்றுதருகென்றதுந்
தேனின்றதொடையாளுமளகேசனகர்மீதுதனிசென்றதுங்
கானின்றகுழலாளுமன்னற்குமுன்கட்டுரைத்தாளரோ. (௧௨௬)

கருமத்தின்வடிவானமடமங்கையிவ்வாறுகழலுந்தமு
னருமைத்தவசன்மைந்தன்முன்போகவன்போமுளநொந்துளான்
மருமத்தவேறைத்தபுண்மீதுகனலுற்றதெனமாழ்கினான்
றருமத்திருவாகியெழுபாருநிலையிட்டதனியாண்மையான். (௧௨௭)

வாளிப்பரித்தேர்மணிவ்வாறுதுயரெய்திமனனஞ்செயக்
கூளிக்குழாம்வானின்மிசையுய்த்ததென்னக்கொடித்தேரின்மேற்
காளக்கருங்கொண்டல்போல்வந்துவீமன்றருங்காளைமுன்
ளுளிப்பெருங்கொற்றவெற்றித்திருத்தாதையடிமன்னினான். (கஉஅ)

மின்றாரைபடவெண்ணிலாவீசுமேகங்கொலெனவந்துமு
னின்றானைமுகநோக்கிநீதிக்கொர்வடிவாநிருபன்கூறுவா
னுன்றாதைதமியேனெடுயவாமலொருவாசமலர்கொண்டிடச்
சென்றானெனச்சிந்தைநொந்தன்புடன்பின்னுமிவைசெப்புவான். (கஉகூ)

எம்பிக்கொரிடையூறுவந்தெய்துமுன்யாமியக்கேசனார்
வம்புற்றமலர்வாவிசென்றெய்திவிரைவோடுவருவோமெனா
வெம்புற்றபைங்கானினிடைமின்னுமிளையோருமுடன்மேவவே
கம்பிக்குநெஞ்சோடவன்றேரின்மீதக்கணத்தேறினான். (கஙo)

காக்கும்பகம்பக்கடாயானைமன்னன்கருத்தோடுசென்
றரக்கன்றடந்தேரிலவனோடுகீடந்தரத்தேகினான்
பரக்கும்பெரும்புண்யமும்பாவமுந்தாவில்பகிரண்டமும்
புரக்கும்பரஞ்சோதியும்பொங்குமாமாயையும்போலவே. (கஙக)

கானெல்லைசெல்லாதுகதிரோனெடுந்தேரெனக்கங்கைசேர்
வானெல்லையுறவோடியொருநாலுகடிகைக்குள்வயமன்னுதே
ரானெல்லையில்லாதுபுகமண்டிமிகமண்டுமுதிரத்துடன்
றேனெல்லையில்லாதுகுக்கும்பெருஞ்சூழல்சென்றுற்றதே. (கஙஉ)

ஆனைக்குழாநூறுமரியேறெனப்பொங்கியளகேசன்வெஞ்
சேனைக்குழாநூறியதனோடுபயில்வாயுசிறுவன்றனைத்
தானைப்பெருங்கொற்றமன்கண்டுதானுற்றதளர்வாறினா
னேனைத்திருத்தாதையைக்கண்டுதேர்நின்றிழிந்தின்புறா. (கஙங)

மைக்காளமுகிலன்னமகனுந்தன்னடிமன்னவயவீமனுங்
கைக்கானினறைவாசமலர்கொண்டறன்காலைகழனல்கியே
முக்காலும்வலம்வந்துமுறையோடுதொழுவானைமுகநோக்கிநின்
றெக்காலுநாவந்ததிசையாதவிசையோனுமிவைகூறுவான். (கஙச)

என்னேவலாலன்றியிமையோருமெய்தாதவிக்காவினீ
மின்னேவலால்வந்துவிரகாகவினைசெய்தவிதுமென்மையோ
வுன்னேவல்புரிவாருமுளரும்பிமாறென்றுருத்தானரோ
தன்னேவலாலிந்தவுலகேழும்வலம்வந்ததனியாழியான். (கஙரு)

என்றிந்தவுரைகூறிமுனிவாறியிறையோனுமிகலோனுடன்
சென்றந்தண்மலர்வாவிபடிவுற்றுவாசத்திருத்தார்புனைந்
தன்றந்தவிடம்விட்டிமைப்போதிலத்தேரின்மிசையேறியே
மின்றந்தவிடையாளுமிளையோருமுறைகானினிடைமேவினான். (கஙசு)

மேவிப்பெருந்தெய்வமுனிபாதமலர்சென்னிமிசைவைத்துமென்
காவிக்கயற்கண்ணிணைச்சேயிதழ்ப்பாவைகளிகூரவே
வாவிச்செழுந்தாமமலர்நல்கியொல்காதுவலிகூருநல்
லாவிக்கின்னமுதானநிருதற்குவிடையன்றளித்தானரோ. (கஙஎ)

வேறு.

மின்புரைமருங்குன்மின்னும்வேந்தருமந்தக்கானி
லன்புடைமுனிவன்கூறவவன்மலர்ப்பாதம்போற்றித்
துன்பமுந்துனியுமாறிநாடொறுந்தோகைபாகன்
றன்பெருங்கதையுங்கேட்டுத்தங்கினரென்பமாதோ. (கருஅ)

ஆ. செய்யுள் - க,எருஉ.

புட்பயாத்திரைச்சருக்கமுற்றிற்று.

---

## சடாசூரன்வதைச்சருக்கம்.

---

அழுதும்வான்முறுவலரும்பியுங்களித்துமாடியும்பாடியுமகிழ்ந்துந்
தொழுதுமாதரித்தும்விழுந்துமேலெழுந்துந்துதித்திடத்தன்பதந்தந்தான்
முழுதுமாயெங்குமுச்சுடராகிமூலமாய்ஞாலமாய்விண்ணு
மெழுதொணுமறைக்குமெட்டொணுவடிவத்தெம்பிரானும்பர்நாயகனே. (க)

இந்தநீள்வனத்தின்மன்னவரிவ்வாறின்பமுற்றிருந்தவங்காளி
லந்தமாவனத்தின்குழலிற்பயிலுமருந்தவமுனிவரர்பலருந்
தந்திபெருமுழுவையாளியென்னிவற்றூற்றுமிடருழந்துமெய்தளர்ந்து
வந்துமாமகிபர்க்கபயமென்றவர்வாழ்வனத்திடைப்புகுந்துமன்னினரால். (உ)

அருந்தவமுனிவரெனைப்பலரிவ்வாறபயமென்றழூங்குசொற்கேட்டுப்
பெருந்திறலரசனவர்பதம்வணங்கிப்பேசுகநுங்குறையென்னப்
பொருந்தியகொடியவிலங்கினுற்றமக்குப்புகுந்துளயாவையும்புகன்றே
வருந்தியதுயரந்தவிர்த்திநீயென்றூர்மன்னனுமக்குறைநேர்ந்தான். (ங)

மறத்துடன்றொழுதவணங்கிமுன்னின்றவாயுவின்மதலையைநோக்கித்
திறத்தருமுனிவரிடுக்கணீயையசென்றுதீர்த்திடுகவென்றேவி
யறத்தினதருவாயகண்டமும்புரக்குமரசனுங்கிருந்துழிவந்து
புறத்தொருநிருதன்புகுந்தவஞ்சனையும்புரிந்ததும்புகலலாமளவோ. (௪)

தோளிரண்டினுநாடொறுமிரண்டந்தண்சுரும்பினைவிரும்பினன்சுமந்து
தாளிரண்டுடையதொருகருங்குன்றஞ்சரிப்பபோலகண்டமுஞ்சரிப்பான்
கோளிரண்டஞ்சிப்பிறையிரண்டகல்வான்குகையிடைப்புகுவதேபோல
வாளிரண்டன்னவெயிறிரண்டொளிகூர்வாணிலாவழங்கியவாயான். (ரு)

முருக்கிளுன்மலருங்கறுத்திடச்சிவக்குமொய்யழல்பெய்செழுங்கண்ண
னரக்கினுருக்கிக்கம்பிசெய்தென்னவவிர்பொலங்குஞ்சியன்வஞ்சத்
திருக்கிளுலறங்கள்யாவையுஞ்செகுக்குந்தியவன்றீமையேபுரிந்து
தருக்கினுலமரர்யாவரையுஞ்செகுக்குஞ்சடாசுரனெனும்பெயர்ச்சழக்கன். (சு)

அந்தணர்வடிவங்கொண்டிலங்கையில்வாழாதிவாளரக்கனைப்போலச்
செந்தழலளித்தமடமயிலிருந்தசிற்பவன்சாலையினெய்திக்
கொந்தவிழலங்கற்கொற்றவரறியாவகையொருகோண்மறைபிதற்றிப்
பைந்தொடிதனைக்கொண்டந்தரந்தன்னிற்பறந்தனன்பழியுணராதான். (எ)

அபயமென்றவளந்தரத்தின்மீதாற்றுமவ்வுரைகேட்டுமாத்திரிதன்
னுபயமைந்தரும்வார்சிலைகரத்தேந்தியுருத்தெழுந்தருமெனவோடி
யிபமெங்கிடமுன்வனத்திடுங்கொற்றத்தியாளிபோலிருபுறஞ்சூழ்ந்து
கபமுகிலென்னமின்னெனும்பெயர்வான்றனக்கெதிர்நின்றிலைவாகவில்வார். (அ)

மறையவர்வடிவங்கொண்டுவெந்தருளில்வஞ்சனீவஞ்சனையாகப்
பிறர்பெருந்தாரம்வௌவியந்தரத்திற்பெயர்வதுபெருமையோபித்தா
நெறியலாநெறிசெய்துன்குலத்தொருபோர்நிருதன்முன்பட்டதுநினையாய்
முறையலாதியன்றுன்னுயிரினைமுடிக்குமுராணுடைத்தறுகண்மாமூர்க்கா. (கூ)

என்றிவ்வாறுரைத்துச்சரத்தின்மாமாரியிருவரும்விரைவுடனேவக்
கன்றிவாளரக்கன்கனமெனவதிர்ந்துகண்சிவந்தருத்தெழுமெல்லை
யொன்றிவாழ்மறையோரருந்துயரொழித்தாங்கொருநொடிப்போழ்தினின்மீளும்
வென்றிவாள்வீமனுற்றதுநிருதன்வெகுள்வதும்விசும்பிடைக்கண்டான். (க0)

கண்டனனிரண்டுகண்களுங்கருத்துங்கனன்றுசெந்தீச்சுடர்காலக் [ள
கொண்டவெஞ்சினத்தீக்கதுவியெண்டிசையுங் குலைகுலைந்துடன்வெருஉக்கொள்
வண்டமுங்குலுங்கநகைத்தெதிர்ந்தாப்பியார்த்தனனழன்றுதோள்கொட்டி
மண்டிமேனடந்தானுகாந்தகாலத்துமருத்தெனமருத்தின்மாமைந்தன். (கக)

பகன்விறலிடிம்பன்பண்பில்புண்டரீகனிவருயிர்பறித்தளகேச
னகரிடையரக்கர்யாரையுஞ்சேரநல்லுயிரொல்லையிற்செகுத்து
வகைபடமறலியுடனுறவாக்கிவானுலகளித்தனனின்ற
சிகையினதுயிருமிக்கணத்தளிப்பன்றென்புலக்கிழவனுக்கென்றான். (கஉ)

நெடும்பணைப்பொருவின்மராமரமொன்றுநெறியிடைநேர்ந்ததங்கதனைப்
பிடுங்கினன்விசும்பிலெறிந்தவன்றன்னைப்பிளந்தனன்பிளந்தவப்பொழுதி
லடும்படைத்தடக்கையரக்கனுந்திருகியணங்கைவிட்டக்கணத்தழன்று
படும்பணைக்குன்றமொன்றுவேரோடும்பறித்தவன்மேற்படவெறிந்தான். (கங)

விட்டகுன்றினைத்தன்மேற்படாவண்ணம்விசும்பிடைப்பொடிபடக்கதையாற்
றெட்டனன்பின்னும்விசும்பினின்றவன்றன்றோளிணையொசிதரத்தாவிக்
கட்டினன்குறங்கைக்குறங்கினால்வீசிக்கம்பமுற்றகிலமுங்கலங்கக்
கிட்டினன்றலத்தின்மிசையடலரக்கன்கீழ்ப்படமேற்படவிழுந்தான். (கச)

முன்னம்வாளெயிற்றோரரக்கனைவெள்ளிமால்வரைமுனிந்ததென்றதற்குப்
பொன்னின்மால்வரையோரரக்கனைத்தானும்புவிப்படுத்தரைப்பதேபோலக்
கன்னம்வாய்நெரியக்கரங்களான்மயக்கிக்கழுத்தையும்புறத்தினிற்றிருப்பித்
துன்னுதோளிணையுந்தாளும்வன்னெஞ்சுஞ்சுளிதரத்தாளினாற்றுகைத்தான். (கரு)

விழுந்தவாளரக்கன்றருக்குநெஞ்சொடிந்துவெகுண்டிவன்றனைத்தள்ளிமீண்டு
மெழுந்துதோள்கொட்டியார்த்தழன்றுருமேறெனக்கொதித்திடுதலும்வீம
னழுந்தவெவ்விரலாற்பிடித்தவனகலத்தடிகொடுமிதித்துவெண்பிறையின்
கொழுந்துபோலெயிற்றோரிரண்டையுங்கஞ்சன்குஞ்சரமெனப்பிடுங்கினனால். ( )

புலவுகால்வயிரவாளெயிறிரண்டுமுதலொடும்போனவாணிருத
னிலவிலாநிசியுமின்னிலாவிடிகொணீலமாமுகிலையுகிர்த்தான்
குலவுதோள்வாயுகுமரன்மேன்மீளக்கொதித்தெழுந்திருகரங்கொண்டு
மலையின்மேலுருமுற்றென்னமற்றவன்றன்மார்பகஞ்சுழிதரப்புடைத்தான். (கஎ)

முட்டியால்வஞ்சமூர்க்கனுஞ்சமரமொய்ம்பனுமுறைமுறையாக
மட்டியேமுதலாவுள்ளமற்றொழிலின்வல்லனவல்லனபுரிந்து
கட்டியேகுறங்குறங்குடன்பகைப்பக்கரங்கரத்தொடுநெனிபிணங்க
வொட்டியேமுடுகியொருவருக்கொருவருரத்துடன்மோதினாரவோர். (கஅ)

முருக்கிவெஞ்சமரமிவ்வகைவெம்போர்மொய்ம்பனிடியர்முழந்தாளா
லரக்கனையகலத்தமுக்கியிட்டவன்றனவயவமியாவையுமொன்றாச்
சருக்கியந்தரத்திற்சுழற்றினனெறிந்தான்றொடுகழலிராகவன்முன்னங்
குரக்குநாயகன்முன்வீசலினாற்றெறித்தகுன்றெனச்சிந்திவீழ்ந்திடவே. (கசு)

எறிந்தவாளரக்கன்விசும்பினதெல்லையெவ்வளவவ்வளவும்போய்
மறிந்தமால்வரைபோன்மீளவும்புவிமேன்மாசுணநடுங்குறவீழ்ந்து
செறிந்தபெருடலுமாவியுஞ்சிந்தத்தென்புலத்திமைப்பினிற்சென்றா
னறந்துறந்தென்றுமடாதனசெய்தாலார்கொலோபடாதனபடாதார். (உ0)

வேறு.

வாளரவமுண்டுமிழும்வாண்மதியும்வஞ்சக்
கோளுழுவைகொள்ளவிடர்கொண்டுகுலைகுலையா
நாள்வலியினுய்ந்தமடநவ்வியுநிகர்த்தாள்
காளவிடமுண்டமுதடக்குமிருகண்ணாள். (உக)

அடாதுசெய்சடாசுரனதாவியையுமம்பொற்
படாமுலைகடாமுடையபைந்தொடியையும்போய்த்
தடாவமர்விடாதுடையதம்பியரையுங்கொண்
டிடாவிறல்கொண்மாருதியிருக்கும்வனமுற்றான். (உஉ)

உற்றபடிதம்முனிருதாடொழுதுரைத்தான்
மற்றவனுமக்குறையுமாமுனிவரோடுங்
கொற்றமிகுதம்பியரொடுங்குழுமியன்றே
நற்றபதிநாரணனதாச்சிரமநண்ணி. (உங)

அங்கவன்மலர்ப்பதம்வணங்கியருள்பெற்றுக்
கங்கைவளநாடர்கலைதேர்முனிவரோடுந்
தங்கினர்கள்சிற்சில்பகறங்கியபினப்பாற்
சிங்கமெனவெண்ணில்வரைசேர்நெறிகள்சென்றார். (உச)

ஏணில்வரைமார்பரிமையோர்புகழுமெட்டுக்
கோணுடையமாமுனிவனக்குறுகியன்னான்
மாணுடைமலர்ப்பதம்வணங்கினர்துதித்தார்
தாணுவனையானுமவர்தம்மையெதிர்கொண்டான். (உரு)

அன்பொடொருநாளெனவனந்தநெடுநாளங்
கின்பமொடிருந்தனர்களக்கதையுங்கேட்டாண்
டொன்பதுகழித்தனர்களிவ்வகையொருக்கே
பின்பவணிகழ்ந்ததொருபெற்றியுரைசெய்வாம். (உசு)

ஆ செய்யுள் - க,எருஅ.

சடாசுரன்வதைச்சருக்கமுற்றிற்று.

---

# மணிமான்வரைச்சருக்கம்.

அங்கிவரமர்ந்துறையுநாளிலணியோடும்
பொங்கியொருமாநதிபுதுப்புனல்வரப்போய்
மங்கைமுனிமங்கையர்கடங்களொடுவாசப்
பங்கயநெடுந்துறைநறும்புனல்படிந்தாள். (௧)

அப்புனலிலார்தருமணங்கமழவந்தண்
மெய்ப்பதுமநாண்மலர்மிதந்துவரமீதே
மைப்பதுமவாள்விழிமடந்தையதுகாணுக்
கைப்பதுமநாண்மலருறக்கடிதெடுத்தாள். (௨)

எடுத்தமலர்கைக்கொடொரிமைப்பின்மயிலன்னா
ளடுத்துவயமாருதியையம்மலரவன்கைக்
கொடுத்திம்மலரெங்குளதுகூறுகெனவமரிற்
றொடுத்தவயவாகைபுனைதோன்றலிவைசொல்வான். (௩)

முன்புமுன்மலர்க்குழறனக்கிம்மலர்முன்பா
லன்புடனியக்கர்பதிநின்றுமருள்செய்தே
னின்புறவிமைப்பொழுதினின்றுமிஃதளிப்பேன்
றுன்புறறழற்கடவுடந்ததொருதோகாய். (௪)

அந்தமலரிந்திரபுரத்தெனினுமின்றுன்
னந்தமில்கருங்குழறனக்கருள்கிலேனேன்
முந்தரவுயர்த்தவன்முதற்பகைமுடிக்கு
மைந்துடையவன்றெனதுவாருகிரியென்றான். (௫)

என்றினையவாசகமுரைத்திகலினென்றும்
வென்றிதருதண்டுசிலைகொண்டுவிறலோடுந்
தன்றுணைவரொன்றுமுணராதபடிதானே
சென்றனனிடிம்பனையடுந்திறலின்மிக்கான். (௬)

குன்றமொரிரண்டவையெனக்குலவுதோளான்
மன்றன்மலர்கொண்டுவருமாநதியின்வழியே
சென்றுபலயோசனைகடிங்களொடுநாளு
மென்றும்வலம்வந்தருளிரத்நகிரியெய்தி. (௭)

மரகதமணிப்பணிசெய்மாளிகைகளொருசா
ரரிமணியழுத்தியனவாலயமதொருசா
ரெரிமணியழுத்தியனவில்லின்விதமொருசார்
தருணமணிமுத்தினியலுஞ்சதனமொருசார். (௮)

கின்னரர்பயிற்றுமெழுகீதமெழுமொருசார்
மின்னனையபாவையரும்விஞ்சையருமொருசா
ரன்னநடைமங்கையருமாரணமுமொருசார்
மன்னுமலியக்கருமடந்தையருமொருசார். (௯)

சூலுடையமந்தியயர்வுற்றதுயர்தீரக்
காலுடைநெடுங்கடுவன்வார்கழைநறைத்தேன்
மாலைவரிவண்டிரியமோதிவழையிலையிற்
கோலியதன்வாயிடைகொடுத்திடுவதொருசார். (௧௦)

கடக்களுழிபாய்மதகதக்களிறுமந்தண்
மடப்பிடிகளுந்தமின்மணந்திடுவதொருசா
ரடர்த்தறுகுமாளியுமதிர்ந்துமுழைதோறும்
புடைந்தெதிர்மலைந்துமிகுபோர்புரிவதொருசார். (கக)

தண்டரளமாதிகவரத்நவொளிதானே
வெண்டிசைவிளக்கும்வரையின்புறமையெல்லாங்
கண்டுவகைகொண்டுகனிகண்ணிணைகளித்தான்
புண்டரிகவாணிருதனைப்பொருதழித்தான். (கஉ)

அக்கிரியினின்றுமிழிவுற்றளவில்செல்வ
மிக்கவளகேசனகர்வெய்தின்விரைவெய்தித்
தொக்கமணிவாயிலொருநாலுமொருதானே
புக்குவடமேற்றிசையினின்றிதுபுரிந்தான். (கங)

வேறு.

சீர்த்தாரைகளுதிரத்திசைமருவுங்கரிசிதறக்
கார்த்தாரைகள்கற்றுரைகளுருமேறுடிகெக்க
வார்த்தாழ்கடலலையக்கதிர்மணிவெள்வளைவாய்வைத்
தார்த்தானுகவந்தத்தெழுமடன்மாருதமனையான். (கச)

அந்தத்தமருஞ்சென்றுயராளகாபுரியுறைவோர்
சிந்தைத்துயருறமற்றவர்செவியிற்செறிவுறலு
மிந்தத்தொனிபுரிவானிவனெவனோவெனவெவரு
முந்திக்கரிபரிதேரிலைகொண்டேயுடன்மொய்த்தார். (கரு)

அவ்வேலையினொருவிஞ்சையனஞ்சாவலிநெஞ்சன்
வெவ்வேலையின்மிசவோதைசெய்மீளிக்கெதிர்செல்லாக்
கைவேலினனிவனுமெனக்கண்டான்வெருக்கொண்டான்
வைவேனிருதரில்வஞ்சமுமாமாயையும்வல்லான். (கசு)

இம்மானவனெழில்கூர்ரதிபதியைப்பொருமெரிகட்
கைம்மானவனருளுங்களிமயிலோனெனமுதனுண்
மைம்மான்விழிமொழியப்பொழில்வந்தோனெனக்கருதா
விம்மாநமர்க்குரையாடுதுமெனவெய்தினின்மீண்டான். (கஎ)

மேனுளொருமலர்காரணம்விறல்வாணிருதரைமேல்
வானுடர்தம்முலகத்தடன்மறலிக்கிடுமேறவோ
னூனுமுனிவினன்மீளவுமணுகுற்றனனென்னச்
சேனுபதிமணிமானுழைவந்தேயுரைசெய்தான். (கஅ)

அவன்வந்திதபகாரமுனதிவேகமொடழலாச்
சிவனன்பனதயிர்நண்பனும்விழிசெந்தழல்பொழியப்
பவனன்றருசிறுமானுடனவனோபடிமுதலாம்
புவனந்தொழுபெருமானகரிடைவந்திவைபுரிவான். (ககூ)

தம்பிக்குலமிரதத்தொகைதாகத்திரள்காலாள்
பம்பிப்பிணைவிதமோவிடப்பணியோவிடநடவா
நம்பிக்கினியுரையாடலநாமேயவனுடலங்
கம்பித்திடப்பொருதாவியுங்கவர்வோமெனக்கழறு. (உ0)

பண்ணார்படைநஞ்சேனையின்பரவைக்கதிபதியா
மெண்ணாயிரமியக்கேசருமிவன்மேலெழுகென்னத்
தண்ணார்மதிக்கவிகைத்திறற்சாலேந்திரன்முதலோர்
விண்ணாடரும்வெருவச்செருப்புரிவான்விரைவுற்றார். (௨௧)

தாமப்புரிசையின்வாயிலெழுந்தானையின்வெள்ள
நேமிக்கிரிநெரியப்புரிநெடுவெள்ளநிகர்ப்பத்
தூமக்கனல்சொரிகண்ணினரெண்ணாயிரர்தொலையாச்
சேமக்கவசியர்வீமனைத்திரையாழியிற்சூழ்ந்தார். (௨௨)

உதிக்குஞ்சுடரோராயிரமுருக்கொண்டெனவொளிகூர்
விதிக்குஞ்சமர்தொலையாவிறல்விச்சாதரர்வெள்ளங்
கொதிக்குங்கடலிடைநின்றருள்குமரன்குரைகடன்முன்
மதிக்கும்படிநெடுமாலிடுமாமந்தரமொத்தான். (௨௩)

ஊழ்வந்ததன்னெதிருந்தலுமுயர்வானுலகுறுவான்
சூழ்வந்தபெருஞ்சேனையைத்தொலையாவமர்பொருவான்
காழ்வந்தகதாபாணியுங்காணார்மனைக்கென்றும்
வீழ்வந்தகொடுஞ்சாயகம்விண்ணணில்விசித்தான். (௨௪)

அக்காலையில்விறலோணிலையறிவானுயரறிவாற்
றக்கார்புகழ்சாலேந்திரன்றன்சேனையைத்தகையாக்
கைக்கார்முகவயமாருதிதிருமுன்கடிதோடிப்
புக்கானொருதேர்மேனணியிவைநின்றுபுகன்றான். (௨௫)

சிவனோதிசைமுகனோவதிர்திரையாழியிற்றுயில்கூர்
பவனோபருவரைமார்புறப்பகிருஞ்சுடர்வடிவே
லவனோதிறனரவாகனனளகாபுரிவருவோ
னெவனோவுனதுயிர்சிந்துமுன்யார்நீயுரையென்றான். (௨௬)

என்னவவனுரையாடலுமிவனின்புறநகையா
முன்னாளொருமலர்காரணமுனைவோருயிரெல்லாம்
பொன்னாடர்தம்முலகிற்புகப்பொருதோனிகலடுபோர்
மன்னாகவமதியாவிறல்வயமாருதியென்றான். (௨௭)

மருவீசுபொலந்தாமரைமலரின்னமுமொருகாற்
றருவீரெனிலுமதாருயிர்யானுந்தருகுவனாற்
பொருவீரெனில்யமனூர்பதிபுகுவீரினியென்று
னொருவீருமுவமைக்கெதிரில்லாவிறலுரவோன். (௨௮)

வேறு.

என்றுவயமாருதியிசைத்தமொழிகேளா
வென்றிதிகழ்வாகைபுனைவிஞ்சையர்பிரானுங்
குன்றனையதோளிணைகுலுங்கநகைசெய்யாக்
கன்றினன்வெகுண்டெனல்காலுமிருகண்ணான். (௨௯)

தேனிட்டுவாசமிகுதெய்வமலரென்னே
மானுடர்கள்சூடவருவார்கண்மதியற்றோய்
கானுடையவாழ்க்கைபுரிநின்னுயிர்கணத்தென்
னூனிடறுவாளிகடமக்குணவளிப்பேன். (௩0)

மற்றிவன்வெருண்டிவையுரைத்துவருசேனைக்
கொற்றவரைகின்றுநனிகூவியெதிரேவிச்
சுற்றுமிகல்வெம்படைகவேயிகலோனைப்
பற்றுமின்விரைந்தினியெனப்பகாவுற்றான். (௩௧)

பற்றுமெனவந்தபடைவீரருயிரெல்லாங்
கொற்றமிகுவெங்கணைகுளிக்கும்வகைதொட்டே
செற்றமிகவின்றெதிர்சிரித்தனனுருத்தான்
பற்றலர்புரம்பொடிபடுத்தவனையன்னான். (௩௨)

இவ்வகைபொழிந்தவடிவாளியினியக்கர்
மெய்வழிசெழுங்குருதிவேலையிடைவீழ்ந்தா
ரவ்வளவில்விஞ்சையரநேகரதுகாணுக்
கைவரிவில்கொண்டவன்மிசைக்கணைதொடுத்தார். (௩௩)

தொடுத்தசரவார்சிலைதுணிந்துநனிமேன்மேல்
விடுத்தபடையும்பொரவெருண்டுமுனைவாய்வந்
தடுத்தவர்களோடுமெணிமார்புமிருதாளு
நடுத்தறியவெங்கணையுகைத்தனனகைத்தான். (௩௪)

மண்டுதிறல்விஞ்சையர்மடிந்தசெயல்யாவுங்
கண்டுசிலசாரணர்கறங்கனையதேர்மேற்
கொண்டுகடலென்னவருமென்னநனிகொதியாத்
தண்டுகொடெதிர்ந்தனர்கடண்டதரனோடும். (௩௫)

வார்சிலையொழிந்துவிறன்மன்னுவயவாகைப்
போர்செய்கதைகொண்டெதிர்புகுந்துபொராவுற்றான்
பார்செய்பயனன்னகிருபந்நிளவல்பார்மேற்
கார்செயுருமேறுருமுடன்கனல்வதேபோல். (௩௬)

தண்டினெடுதண்டெதிர்தகர்ப்பவெழுபொறியு
மண்டமுடியோடுமுடிமன்னவெழுபொறியுந்
திண்டிறல்வயப்பொருநர்செங்கணுமிழ்பொறியு
மண்டமுழுதும்பொதுளிமீதுபுகுமப்பால். (௩௭)

மட்டவிழலங்கன்மறவோனுடன்வயப்போர்
தட்டமர்புரிந்துதனுவுஞ்சிரமும்வேறுப்
பட்டவரெனைப்பலர்படாதவர்விடாதன்
றிட்டனர்புறந்திறலியக்கர்குலமெல்லாம். (௩௮)

தொடிக்கரமிழந்திருதிணைப்புயமிழந்தாங்
கடிப்பதமிழந்தவயவக்ஙளடைவேபோ
யிடிக்குரலின்விஞ்சையரெதிர்ந்தயரவாங்கே
கொடிக்குடரிழந்தனர்மருத்துதவுகூற்றால். (௩௯)

அன்னநிலைகண்டடவரக்கரொடியக்கர்
பின்னருமெனைப்பலர்பிறங்கலெனெக்கர்க்குங்
கன்னமதமாவிரதத்திகல்சாலான்
மன்றுதிறன்யானுடமடக்கலைவளைத்தார். (௪0)

வளைத்துவயவெம்படைகள்வீசிமறிகடல்போ
லுளைத்தொருவர்போலெவருமுருமெனவுருத்துப்
புளைத்தரதமாபுரவிபோதகமிசைப்போய்
விளைத்தனர்பெருஞ்சமரம்விஞ்சையர்களெல்லாம். (சுக)

தேரணியும்வெம்பொறியெனச்செறிபுகர்க்கைக்
காரணியும்வாயுநிகர்கற்கியணியும்போர்
பேரணிகலன்றனிபிறங்குமணிமார்பன்
றூரணியெனத்தனதுதண்டுகொடுடைத்தான். (சுஉ)

நெரிந்தனரதந்துணையுநேமியுடன்வேழஞ்
சரிந்தனநெடுங்குடரரிந்துதலைதாள்போய்
முரிந்தனபெரும்புரவிவெள்ளமுனைதோறும்
விரிந்தனருரகங்கடவுள்விஞ்சையர்கண்மன்னே. (சுங)

மீளியொருதண்டுகொடுவிண்டெதிர்வெகுண்டோர்
மூளைநிணம்வாயுகமுருக்குதலுமார்பிற்
றுளுடைமருத்தெதிர்சரிக்கும்வகையெய்தும்
பூளைவனமொத்தனர்பொரும்பொருநரெல்லாம். (சுச)

சிந்துரமணிக்கொடிகொடேர்புரவிகாலா
ளந்தகபுரத்தணுகலுற்றவொழியப்போய்த்
தந்தமபுரத்தணுகலுற்றனசயப்போர்
மந்தரவரைப்புயனுநின்றனன்மறத்தால். (சுரு)

இருவரொருநீணெறியியங்கலர்தியங்கா
வரியுழுவைகண்டுடையுமானினமதேபோல்
வெருவியுளநொந்துதிறல்விஞ்சையர்களெல்லாம்
பொருவிலளகாபுரிபுகுந்தனர்விரைந்தே. (சுசு)

இஞ்சிமதில்வாயரணம்யாவுமிகல்புரிவா
னஞ்சினர்கள்விஞ்சையரடைந்தனர்களழகார்
மஞ்சனையமேனிமணிமான்முனமடைந்தே
தஞ்சினரொழிந்தவரவற்றெருழுதுசொன்னர். (சுஎ)

அங்கிலையுணர்ந்துமணிமானுமவிர்சோதிப்
பொன்னசலமொத்துயர்புயத்துணைதுடிப்ப
மன்னுபுருவச்சிலைவளைத்துமழைமுகில்போன்
மின்னிலகநக்குருமெனத்தனிவெகுண்டான். (சுஅ)

வேறு.

வானிலவுணரைமோதிமுனைதோறும்வாகைபுனைமணிமானுமச்
சேனைமுதல்வரைவேகமுறநணிசீறியுரைபலகூறினு
ஞானிலியினுடல்வீழவமரிடையாவிகவர்தரவஞ்சிநந்
தானையரியெதிரேகுகரியினமாகிவெருவொடுசாய்வதே. (சுகூ)

என்றுதனதெதிர்நின்றவரையிகழ்வுற்றுமொழிபலசொற்றுமற்
குன்றமெனவமர்வென்றிதருவதொர்கும்பமதகரிமேல்கொளா
வொன்றுபடவுலகின்றுபொடிபடவுந்துகரிரதமுந்தெனச்
சென்றுபுடைவருநின்றபடையொடுதெண்டதரனெதிர்மண்டினன். (ரு௦)

மண்டியெதிர்வருகின்றபொருகரைவன்புபெறுபுயமுன்பனுங்
கண்டுமுகிழ்நகைகொண்டுதனதிருகண்கள்கனலுகநின்றபி
னெண்டிசையும்வலிகின்றவிமையவரொன்றினுனெளிதிகழ்குன்றினிர்
மொண்டுமுகிலெனவொன்றுபடமிசைமுசியெறிபடைவீசவே. (ருக)

வீசபடையொருகோடிவிசைபடவோடிமிசைவரவீமனும்
பாசதரனெதிர்நீலமயிலொருபாகனிகரெனவேகியா
வாசைதொறுமுகில்போலவிவபவராகமிருபிளவாவுளங்
கூசியலமருமாறுதருவளர்கோடுகொடுகனிசாடினன். (ருஉ)

ஆயபொழுதளகாதிபதியுயிராயவணிமணிமான்விறற்
சேயமெனவவன்மீதுபலபடைசிந்தியமர்செய்துமுந்தினன்
வாயுகுமாரனும்வேகமுடனவன்மார்புகிழிதரமோதினன்
காயபெலமொடுதாயமுறவொருகாயமிருகடகக்கையால். (ருங)

முன்புபெறுபுயமொய்ம்பனவன்மருமத்தின்விசைபடமொத்தலு
மென்புதசைநிணமிந்திரியம்வலியென்பவிவைநிலைசிந்தியே
துன்பமுறமனகொந்துதளர்வொடுதுத்திமணியுரகத்தின்மேல்
வன்பிறுடனுருமுற்றதெனவொளிமட்கிவெருவுடனுட்கினன். (ருச)

வேறு.

வஞ்சனைபுரியுமாமாயப்போர்க்கலாற்
றஞ்சலனிவனெனத்துணிந்துசூழ்ச்சியா
னஞ்செனவெருண்டுதன்னயனந்தியுக
விஞ்சையன்கதுமெனவிசும்பிலேறினன். (ருரு)

புகையொடுகொந்துகால்பொங்கமங்குல்கள்
வகைபடவெழுந்துமாமாரிசிந்திடச்
சிகையனல்விண்ணெலாஞ்செருக்கமண்ணெலாந்
திகள்படத்திசையெலாஞ்சூழ்ந்துதோன்றினன். (ருசு)

அப்பொழுதினிலிகலரிப்பதாகனு
முப்புரஞ்சுடுமுகினிறத்துவாளிமுன்
னெப்பறவருளுடனுதவுஞ்சோரிவா
யிப்பெரும்பகழியொன்றேவிமாற்றினன். (ருஎ)

அசைமணிக்கொடிகொடேருக்கன்றன்னெதிர்
நிசியெனப்பரந்ததுநீலமேனியான்
வசையறக்குரிசிலுக்கருளும்வாளியாற்
றிசையுறப்பரந்தமர்செய்தமாயையே. (ருஅ)

விறல்புனைவீமனும்விஞ்சைவேந்தனு
நிறைபுவிவிசும்பின்மேனின்றுபோர்செய்தா
ரெறும்வலியிராகவந்தினியவார்சிலைச்
சிறவனுமிந்திரசித்துமென்னவே. (ருகூ)

அந்தவஞ்சனையெலாமகன்றுபோனபின்
விந்தமொத்துயர்ந்ததோள்வீமசேனன்மேற்
சந்திரன்மிசைவருதழலராவெனச்
சந்தரன்வெருண்டொருசூலம்வீசினன். (சுo)

சூலமுந்தன தமேற்சூலமேவினேன்
கோலமும்பொடிபடக்கொதித்துமீளியு
மூலபங்கயமறைமுனிவன்வாளியை
யாலமுங்குளிர்வுறவழலவீசினன். (சுக)

பிரமன்வெஞ்சரம்வலிபெற்றவிஞ்சையன்
மருமமெங்கணுஞ்செறிந்துருவமாழ்கியே
யுருமின்வெங்குரலுடனெடுங்கிமண்மிசைக்
கருமுகில்வீழ்ந்தெனக்கலங்கிவீழவே. (சுஉ)

அந்தரந்தரம்புகவனந்தரம்படைத்
தந்திரத்தலைவருந்தளர்ந்துசாய்ந்தன
ருந்தினர்கரிபரியிரதமூர்புக
முந்தினதமதுயிர்கொண்டுமுந்தினர். (சுங)

விரிதிரையுவரிநீரென்னவெஞ்சினக்
கரிபரியாளெலாங்கலந்துகுத்தமெய்ச்
சுரிபெருங்குருதியின்சுழலியாற்றினின்
றரிமகனடலரிநாதஞ்செய்யவே. (சுச)

வேறு.

இத்தலைவயவீமனிகல்பொருதிவணின்று
னத்தலையுயிர்போலுமனுசனையெதிர்காணான்
மொய்த்தலைதொறுமேறுமுழுமணிமுரல்சங்கஞ்
செய்த்தலைதுயினுடன்றேவியைவினவுற்றான். (சுரு)

மன்னவன்மொழிகேளாமான்மதர்விழிமானு
நன்னதிதனிலின்றோர்நறைமலரதுகாணு
வின்னமுமொருகானீயிம்மலர்கொணர்கென்றே
னன்னவன்விசைசென்றானளகைநன்னகரென்றாள். (சுசு)

மன்றலில்குழலாடன்வாசகமெனுநஞ்சாற்
பொன்றினனெனமன்னன்புலம்பியபொழுதன்பா
லொன்றியமுனிரோமனுரையெனுமமுதாலே
துன்றியதுனிதீராச்சோகமொடுரைசெய்வான். (சுஎ)

கூற்றுவனிகர்நாகக்கொடியவன்முதலாயோர்
நூற்றுவரையும்யானேநூறிவிண்ணுலகின்மே
லேற்றுமவ்வளவும்யானின்பயநுகரேனென்
றூற்றுதியுயிரையாவம்மொழிபழுதாமோ. (சுஅ)

துனைவருகடலாடைசூழ்வருமெழுபூவோ
நனைகெழுமொருபூவோநன்றெனநகைசெய்யா
வுனையொருவனையும்யானுளனெனிறொருவேனுக்
கனைவருமுளர்யானுமாருயிருளனம்மா. (சுகூ)

முன்செய்வெவ்வினையாலோமுடிவினல்வினையாலோ
மின்செய்தகழலானவ்விசயனுமகல்வுற்றான்
பொன்செய்தமுடியானும்போயினனினிநானிங்
கென்செய்வதெனமன்னன்முனியடியிணைவீழ்ந்தான். (எ0)

அஞ்சலையுரவோனுமாருயிரழிவில்லான்
விஞ்சையொடும்வெம்போர்விளைந்தநங்கொருகோடி
வஞ்சனைமணிமானம்மாருதிவிடுமம்பாற்
றஞ்சினனவன்மேலுந்துணிவருமினிமாதோ. (எக)

இவன்மிசையிடையூறென்றெய்துறுவதன்முன்யா
னவனிதனிறுதனன்னகருறவேண்டுங்
கவரெயிறுளபேழ்வாய்க்கடோற்கசன்வருமாறிங்
கவனிபனினையென்றுனரசனுநினைவுற்றான். (எஉ)

புந்திசெய்தவன்முன்னம்புதல்வனுமொருதேர்மேல்
வந்தனன்விரைவோடும்வணங்கினனிருதாண்மே
லெந்தைசொலடிநாயேன்பணிவிடையெதுவென்றுன்
றந்தையுநிருதன்றன்றுதைதன்னிலைசொன்னான். (எங)

அக்கணமதுகேளாவவரனைவரையுங்கொண்
டிக்கணமிடையூறுமெழுமெழுமெழுமென்று
முக்கணனுயிர்நண்பன்வாழ்தருமுதூர்வாய்த்
திக்குறநெடுவானிற்சென்றனனொருதேர்மேல். (எச)

சென்றொருநொடிவேலைச்சிறுவனுமறவீம
னின்றமர்புரிவெம்போர்நிலமறுகுறுமுன்னம்
வென்றிகொளுரவோனும்வேந்தனையெதிர்கொள்ள
மன்றல்கொண்மலர்தூவிவணங்கினனிருதாண்மேல். (எரு)

சதித்தனைசதிசெய்தாய்தம்பியுமலைவாளா
வதைத்தனைமணிமான்றன்மன்னுயிர்தனைமன்னே
நிதித்தலைவனுகிஞ்சேனையுமினிநின்மேற்
கொதித்தெழுமுதனுளிற்கோபமுமுளதந்தோ. (எசு)

பொற்றொடிமொழியாலிப்போதொருபொருளாக்கிச்
செற்றனைசிவனன்பன்சேனையைநீயென்னுக்
கொற்றவனிளையான்மேற்கொதித்தனமொழிபோதக்
குற்றதையுரைசெய்வானேடினனொருதூதன். (எஎ)

அழுதழல்குதிபாயுங்கண்ணினனயிலம்பா
லுழுதுடன்முழுதெல்லாமுடனுகுசெம்புண்ணீர்
வழிதரமனமெல்லாமறுகுறவிறைபொற்று
டொழுதனனியல்பெல்லாந்துணிவுறம்வகைசொன்னான். (எஅ)

வேறு.

அழுங்கினுன்மன்னனல்லறிவுமாவியு
மழுங்கினன்வடிவமுமுடியும்வல்விடம்
விழுங்கினனெனகனிவெகுண்டுநெஞ்சுறப்
புழுங்கினனிவையிவைபுகறன்மேயினன். (எகூ)

ஒருவனுமானுடனேதை * மாநகர்
வருவனும்விறன்மணிமானெடுஞ்சமர்
பொருவனுமவனுயிர்பொன்றவென்றிடர்
தருவனுமென்பெயர்தனதனுமாம். (அ0)

* ஒதை—மதில்.

அடுப்பனுமளகையயறிவின்மானுடன்
றெடுப்பனும்பொருசாஞ்சூழ்ந்தசேனையைப்
படுப்பனுமதுகொடுபதுமந்தன்னைவந்
தெடுப்பனுமென்பெயரிராசராசனும். (அக)

இந்திரனல்லனுமீசனல்லனுஞ்
சந்திரனல்லனுந்தபனனல்லனும்
வந்தொருவலியிலாமானுடன்கொலாங்
கந்தருவரையெலாங்களத்தினூறுவான். (அஉ)

வென்றகோச்சித்தரும்விஞ்சைவேந்தரு
நின்றகின்னரரும்வாணிருதரும்புடை
துன்றுசாரணர்களுஞ்சூழ்மின்மொய்ம்பனை
யென்றுகொண்டெழுந்தனனியக்கர்தம்பிரான். (அங)

உருத்திரசேனனப்பொழுதுணர்ந்துதன்
கருத்தொடுதாதைபொற்கழல்வணங்கியே
மருத்தருள்பவன்வரலாறுமற்றவன்
றிருத்தகுதுணைவர்தஞ்செயலுங்கூறுவான். (அச)

எந்தைகேளிவனைமானுடனென்றெண்ணலை
முந்தைமுப்புரம்பொடிபடுத்தமூர்த்திதன்
சிந்தையாலைவரிந்திரரைச்சென்மென
வந்தனர்நிலமகள்வருத்தமாற்றுவான். (அரு)

தருமனென்றவனிபன்றம்பியும்மிவன்
வரிசிலைவிசயனென்றொருவன்மற்றவன்
புரிதிறலசுரரைப்பொருதங்கிந்திரன்
றிருவமருலகெலாந்திருத்திவைகினன். (அகா)

வேடமோமானுடம்வெகுண்டபோதலா
லாடவர்பெருமையையறியலாகுமோ
நாடியசிறுகுறளொன்றுநம்பகே
ணீடியமுகடுறநிமிர்ந்ததில்லையோ. (அஎ)

மற்றுளவரையெலாநடுங்கவார்பிறைக்
கற்றையஞ்சடையவன்கயிலைமாக்கிரி
யுற்றுடனெடுத்தவனுயிரும்வாழ்க்கையுஞ்
செற்றவர்மனிதரோதேவரோவையா. (அஅ)

மட்டவிழ்தொடைமணிமானையோர்முனி
யொட்டியவரிசிலைமனிதனாலுயிர்
பட்டழிகுவையெனப்பகர்ந்துசாபமன்
றிட்டதுமுணர்ந்தவற்கிரங்கலெந்தைநீ. (அகூ)

அருத்தியேதென்றவற்கருளியையவிங்
கிருத்தியேல்வாழ்வுமின்னுயிருமெய்தலாந்
திருத்தியசேனையுநீயுஞ்சென்றுமே
லுருத்தியேலுறுபயனொன்றுமில்லையால். (கூ0)

என்றிவைதிருமகளியம்பியேத்தவு
நின்றிலனெனதுயிர்நேயநண்பனைக்
கொன்றவன்றன்னுயிர்கொள்வன்யானெனாச்
சென்றனன்புட்பகத்தேரின்மீதரோ. (௯௧)

மண்ணெலாமிரதமுங்களிறும்வாசியும்
விண்ணெலாம்விமானமும்விபுதரிட்டமும்
பண்ணெலாமுரல்வனபணையின்குப்பையு
மெண்ணலாமானதோவியக்கர்சேனையே. (௯௨)

விண்டலமுறவருசேனைவேலையு
மண்டலமுறவெழுமகரவாரிபோ
லெண்டிசையுறப்பரந்தெழுந்தசேனையுங்
கண்டனன்கண்ணுறக்கருணைக்கண்ணனே. (௯௩)

உணங்கினானுடலமுமுணர்வுமாவியும்
பிணங்கினானிளைஞனைப்பேதைபங்கனோ
டிணங்கினான்புகழெலாமேத்திநெஞ்சுற
வணங்கினான்மணிமுடிமன்னர்மன்னனே. (௯௪)

அனகனேயமலனேயளகைவேந்தனே
தனதனேசங்கரன்றன்சகாயனே
புனிதனேகுபேரனேபுலத்தியன்குல
சனகனேசெல்வனேதேவதேவனே. (௯௫)

வெறுப்பதோவிளைந்ததுமிகையதாயினு
மறுப்பதோவென்மொழிமாறுகொண்டெதிர்
செறுப்பதோவிளையவர்செய்ததீமைகள்
பொறுப்பதேபெரும்புகழ்புனிதமூர்த்தியே. (௯௬)

எனவிவனிவைபகர்ந்திசையவேத்தலு
முனிவொடுவயிரமுமாறுமாறியே
மனனுறமகிழ்ந்தெதிர்கொண்டுமார்புறத்
தனதனுந்தருமனைத்தழீஇக்கொண்டானரோ. (௯௭)

கிலத்தியறன்னளிசிருபகீமதி
குலத்தியனுடன்வருகுமாரனாதலாற்
சலத்தியறருமாண்டணிந்தென்யானெனப்
புலத்தியன்மகன்மகன்புகன்றுபோற்றினான். (௯௮)

என்னகர்நின்னகரென்றுவேறில
நின்னகரிதுமுதனிக்கள்வாழ்வுறுந்
தொன்னகரெனதெனத்துணைவர்தம்மொடு
மன்னனைத்தன்னகர்கொண்டுமென்னினான். (௯௯)

திருத்தகுசிலையுடன்சிறப்புஞ்செல்வமு
மருத்தகுகற்பகவனமும்வாவியுங்
குருத்தகுமணிகளின்குழாமுங்கோயிலுங்
கருத்துறமகிழ்ந்தகன்களிப்பக்காணவே. (௧௦௦)

காட்டினன்றன்மனக்கருணைவெள்ளநீ
ராட்டினனன்கலத்தமுதமன்புட
னூட்டினனுகந்துபசரித்துச்செங்கையா
னீட்டினனுடையுநிதிகள்யாவுமே. (க0க)

அத்தினபுரிதனக்கதிபநீவர
வித்தினமென்றவப்பயனிருந்தவா
நித்தனையெனதுயிர்நேயநண்பின
லொத்தனையெனவினவயுரைசெய்தானரோ. (க0உ)

வேறு.

நெருநலிந்திரபுரத்திலிந்திரனும்யாமுநீடவையிருந்தபின்
புருநலந்திகழும்விசயனென்னவவனொருவனெய்துதலுமவனையித்
திருநலம்புதியசெம்மல்யாவனெனமற்றவன்செயலும்வெற்றியுங்
குருகுலம்பெறுகுலேசனென்பதுவுநின்றவானவர்கள்கூறினர். (க0ங)

அந்தவிண்ணுலகினின்றுநின்றுணைவனமர்சூழவரநானையே
யிந்தமண்ணுலகுநீயும்வாழ்வுபெறவிந்திரன்றனுடனெய்துமா
லெந்தமண்ணுலகுநின்னதாகுமிடருற்றிரங்கலெனமகிழ்வினிற்
கந்தவண்ணமலருங்கொடுத்துவிடைநல்கினனளகைகாவலன். (க0ச)

ஐயநின்னையறியாமனின்னகரிலணுகினன்சிறுவனுதலிற்
செய்ததீமைகள்பொறுத்தியொன்றுநனிதிருவுளத்திடைகொளேலென
மொய்கொடாமமுடியுறவணங்கிமுடிமன்னர்மன்னனிளையோரொடு
மைதவழ்ந்துலவுமாடநீள்புரிசைஞாயில்வாயிறனிலெய்தினன். (க0ரு)

மாசிலாதமுடிமன்னர்மன்னனுடன்வந்தமாமுனிவரர்க்கெலா
மேசிலாவகையினெண்ணிரண்டுவகையாயபூசைகளியற்றியே
காசிலாமணியுமாடையுங்கலனுநல்கமல்கவளர்செல்வனுக்
காசிகூறியுடனேதபோவனமடங்கினரவரடங்கவே. (க0சு)

குந்திமைந்தரொருநால்வரும்புதியகொடிமருங்குன்மடவல்லியுஞ்
சிந்தையன்புடையமுனியும்வாணிருதசேகரன்றனதுதேரின்மேற்
பந்திபந்திபதினுயிரம்பதின்மடங்குகூளிகள்பரிக்கவா
னுந்திமுன்பயிலுநந்திசேனன்வனமொருநொடிப்பொழுதிலெய்தினர். (க0எ)

எய்தியந்தமுனிசெய்யதாண்மலர்மனஞ்செய்தன்புடனிறைஞ்சியே
செய்தியாவுமவனுக்குநண்பொடுரைசெய்தருசூழ்வரவிருந்தபின்
வெய்தின்வந்தடலரக்கர்நாயகன்விபத்தினுக்குதவியானதுங்
கொய்திலங்குவடிவாளினன்விறலும்யாவுமேன்மையொடுகூறினன். (க0அ)

வெங்காரவின்முழைவாய்புகுந்தலறிவேழமூலமெனவிரைவினிற்
பொங்கராவணைதுறந்துவந்தெதிர்புரந்தபுண்ணியனையொக்கவே
தங்காரபதநெருங்குதொங்கலணிதாமவேலடலரக்கனி
யங்காரகமணியாரமார்பநினதையனுருயிரளித்தியே. (க0கூ)

தொடைகொடுத்தளகைநாதனன்றுதவுதுகில்கொடுத்துமதிமுத்தவெண்
குடைகொடுத்துநவமணிகொடுத்தமரிலென்றும்வென்றிதருகொற்றவெம்
படைகொடுத்தடலரக்கனுக்குயர்பதங்கொடுத்துமிகுபரிவுடன்
விடைகொடுத்தனனனந்தாஞ்சமரவீரவாகைபுனைவேலினன். (கக0)

வணங்கியன்புடன்மகிழ்ந்துமன்னரைவலம்புரிந்துமனனஞ்செயா
நிணங்கமழ்ந்தொழுகிவழியவாளெயிறுநிலவெழும்புகைகொள்வாயினுன்
றுணங்கைகொண்டலகைகோடிவானின்மிசைதுள்ளியூருமிரதத்தின்மே
லிணங்கிமீளவும்விநாழிகைப்பொழுதினில்விடிம்பவனமெய்தினான். (கககூ)

வேறு.

அப்பொழுதுவானுலகமநனினிடைநின்று
மைப்பொலியுமேனிவிசயன்வனமடைந்தான்
செப்பரியவைவர்களுந்தேவியுடனேயவ்
வொப்பரியதெய்வவனமொன்றினருறைந்தார். (ககஉ)

ஆ செய்யுள் - ச,அஎ0.

மணிமான்வதைச்சருக்கமுற்றிற்று.

---

# துருவாசமுனிச்சருக்கம்.

சாபத்தாலுஞ்சாபமொழிதன்னால்வளருந்தவத்தாலுங்
கோபத்தாலும்பேர்படைத்தகொடியமுனிவன்றுருவாசன்
றீபத்தான்மெய்வகுத்தனையான்றிகழ்பன்முனிவர்புடைசூழ
வாபத்தால்வந்தடைந்தவர்போலடைந்தானந்தவடவியின்வாய். (க)

அருமாதவப்பேருனதெமக்கம்மாவென்னச்செம்மாந்
துருமாமரபோரைவருந்தங்குஞ்சித்தலைமேலடிவைத்தெம்
பெருமானிங்கேயெழுந்தருளப்பெற்றேமென்னப்பெரிதுவந்தங்
கருமாமுனியைப்பூசித்தாரவனும்புகன்றானசியரோ. (உ)

இட்டதவிசின்மிசையிருத்தியெரிகான்வந்தவிளைப்பாற்றித்
தொட்டகழற்காலுகிட்டிரன்கைதொழுதுதுதிப்பத்துருவாசன்
வட்டமணித்தோரவனுச்சவானத்தடைந்தான்யாமருந்தப்
பட்டவுணவிங்கமுதுசெயப்பருவமிதுவென்றுரைசெய்தான். (ஙூ)

மூத்தோன்குளித்துவருகவெனமுனிவருடனம்முனிதடத்துப்
போய்த்தோய்வதற்காங்கெழுந்தருளப்புரைசைக்களிற்றுமுரசுயர்த்தோன்
வாய்த்தோன்வரவுக்கென்புரிவோமதியீரெனத்தன்றம்பியர்க்கும்
வேய்த்தோன்வேள்விமடந்தைக்குமுரைத்தாங்கவரைவினவினனால். (ச)

மேவாருரைக்கவிவன்வந்ததல்லாற்பிறிதுவேறில்லை
யாவாவிதற்கின்றென்செய்வேமாமாருகாமெழுந்து
கோவானவனும்பலபடையுங்குன்றச்சென்றுபொருதிமைப்பிற்
சாவாந்தபதறுதியினியென்றான்வன்றுட்சமீரணியே. (ரு)

சுருதிக்கடவுளனையானைச்சுனைநீர்படிந்துவரச்சொல்லிக்
கருதிப்பிறநாம்புரியுமதுகடனேவென்றான்கழல்விசயன்
மருதிற்கிடைபோமவன்விரைந்துவருமாறழைமினெனமொழிந்தா
னெருதிற்கிறும்வெம்பரியேற்றுக்கோத்தோரில்வாவுரவோனே. (சு)

யாதேயாகவிந்தவிபத்தேகும்பொழுதைக்கிசையளிக
டேதேயென்னும்பசுந்தளபத்திருமாறன்னைச்சிந்தியுமிப்
போதேவருமிக்கவன்வந்தாற்போமிக்கவலையெனப்புகன்றான்
சாதேவனுமக்கவனிசைத்தசொல்லுக்கிசைந்தான்றருமனுமே. (எ)

என்னேயென்னேயாதவன்வாளிடையுங்கடந்தான்முனிவன்வரு
முன்னேநுகர்ந்தாஞ்சாகபலமூலம்பலபேர்முனிவரொடுங்
கொன்னேமுனியுமுனிக்கினியென்கொல்லோபுரிவதெனநின்ற
மின்னேரிடையாணெடுங்கிலிளைவதென்னேவெனப்பயந்தாள். (அ)

தப்போதாமற்றம்பியர்க்குந்தருமக்கொடிக்குமிதமாக
வப்போதுணரும்படியுணர்ந்தாணசோதைமகனையறத்தின்மக
னெப்போதியாவரெவ்விடத்திலெம்மைநினைப்பாரெனநின்ற
வொப்போதரியானுதிட்டிரன்றனுளப்போதிடைவந்துதித்தானே. (கூ)

திருக்கண்கருணைபொழியவருந்திருமாலவரைத்தேற்றிமுத
லருக்கனுதவும்பாண்டத்தினன்னமுளதோவெனவினவ
முருக்கினிதழைக்கருக்குவிக்குமுறுவற்செவ்வாய்த்திரௌபதியு
மிருக்குமுறையோரன்னங்கண்டெடுத்தாள்கொடுத்தாளிறைவன்கை. (க0)

அந்தவன்னஞ்சதுர்மறையுமன்னமாகியருள்செய்தோன்
முந்தவுலகமுழுதுண்டமுளரிமிசழினிடைவைத்தான்
வந்துசுனையில்வந்தனைசெய்மறையோரெவரும்வாரிதிமுன்
றந்தவமுதுண்டவர்போலத்தாபந்தணிந்துதண்ணென்றார். (கக)

உதரங்குளிர்ந்துவடிவுகுளிர்ந்துள்ளங்குளிர்ந்துமறைநாறு
மதரங்குளிர்ந்துகண்குளிர்ந்தாங்கருமாமுனிவனதிசயித்து
மதரஞ்சனக்கட்டிருவாழுமார்போன்மாயாவல்லபத்தா
லிதரங்கடந்தானுதிட்டிரனென்றிவன்பான்மீண்டுமெய்தினனால். (கஉ)

உண்டோமுண்டோமும்பருக்குமுதவாவோதக்கடலமுதங்
கண்டோமுன்னுளெவ்வுலகுங்காணுமுகுந்தன்கழலிணைகள்
வண்டோலிடுந்தார்ப்பேரறத்தின்மகனேயுன்னையரசென்று
கொண்டோரல்லாலெதிர்ந்தோரில்யாரேவாழ்வார்குவலயத்தில். (கங)

னென்னற்புயங்ககேதனன்றன்னிலயந்தன்னிற்றீம்பாலுங்
கன்னற்கட்டிமுதற்பலதீங்கனிநெய்யுடனேயினிதருந்தி
யின்னற்பசிதீர்பொழுதத்திலென்பால்வரங்கொள்கெனவினவ
முன்னர்ப்பலவுமுரையாமலொன்றேமொழிந்தான்முடிவேந்தன். (கச)

எம்மிற்றுய்த்தவோதனம்போலெம்மோடிகலிவனம்புகுந்தோர்
தம்மிற்சென்றுநாளைநுகரிதுவேயெனக்குத்தரும்வரமென்
றும்மிற்செல்வமுடையவர்போலுரைத்தானதனுலுயர்ந்தோர்க
டம்மிற்சிறந்தோய்வந்தனம்யாமென்றுனந்தத்தவமுனியே. (கரு)

பரங்கொண்டுலகமுழுதுமிசைபரப்பிப்புரப்பான்பாண்டுவெனு
முரங்கொண்டுயர்ந்தோனளித்தருளுமுரவோய்நீயிங்குனக்கான
வரங்கொண்டிடுகவெனமுனியைவணங்கிப்பகைத்தோர்மாற்றங்க
டிரங்கொண்டொன்றுங்கொள்ளாதியென்றுன்வளையாச்செங்கோலான். (கசு)

அன்னேன்மொழிகேட்டம்முனியுமடைந்தான்றன்பேருந்தவக்கான்
முன்னேனனமுகுந்தனுந்தன்முந்நீர்த்துவரைநகர்புக்கான்
பின்னேர்வணங்கப்பேரழலிற்பிறந்தாண்மகிழப்பேரருட்குத்
தன்னேடொருவர்நிகரில்லானிருந்தானந்தத்தனிவனத்தே. (கஎ)

ஆ செய்யுள் - க,அஅஎ.

துருவாசமுனிச்சருக்கமுற்றிற்று.

---

# பழம்பொருந்துசருக்கம்.

அந்நெவணத்திற்சென்றுளகன்றபினமித்திரன்பே
ரென்றுமாமுனிவற்கென்றேயாவருமருகுசெல்லா
நன்னலமிருத்தநெல்லிநறுங்கனியொன்றுகண்டாள்
கன்னலும்புளிக்குமின்சொற்கயிரவங்கருகும்வாயாள். (க)

இக்கனியெனக்குநீநல்கென்றுவில்லிறுத்துக்கொண்ட
மைக்கனிக்களவுமானும்வடிவுடைவிசயனோடு
மெய்க்கனிவுடைமைதோன்றவிளம்பினாள்வீசுதென்றன்
முக்கனிகமழுஞ்சோலைமுகிறவழ்நாடன்பாவை. (உ)

சோமகர்க்கரசன்பாவைசொல்லுமுன்வில்லுவாங்கி
மாமுனிக்குணவாய்நின்றமதுரவாமலகந்தன்னை
யேமுறைதொடுத்துவீழ்த்தியீதலுமாங்கட்கண்டோ
ரேமுறக்காணிலிப்போதென்படுமிறுத்தோனென்றார். (ங)

கண்டவம்முனிவர்சொல்லக்கடவுளர்கோமான்மைந்தன்
கொண்டவக்கனியைமூத்தகொற்றவன்றிருமுன்வைத்து
மண்டழற்பாவைசொல்லான்மதியிலேனெய்தேனென்றான்
றிண்டிறற்றேவர்க்காகத்திமைந்தராவிகொண்டான். (ச)

காடுறைவாழ்க்கையெய்திக்காய்கனிமூலந்தின்று
நீடுறுகாலம்போக்கிநீங்கலாதிருக்குமெம்மை
நாடொறுமிடையூறன்றிநண்ணுவதில்லையாயி
னேடுறுதாராய்செய்வதென்கொலென்றியம்பினானே. (ரு)

அவ்வுரைவீமன்கேட்டாங்கமித்திரன்வந்தபோதே
யிவ்வுரைகேட்கினம்மையெரியெழச்சபித்தறிண்ணம்
வெவ்வுரையுரையாமுன்னமெய்ம்முனிதன்னைப்போற்றிச்
செவ்வுரைகூறினம்மைச்சீறுமோசீறல்செய்யான். (சா)

பொறுத்திடுமேலிடாவைம்புலத்தினனுதலாலே
மறுத்திடானையநின்றன்மாசிலாவாய்மையென்ன
நிறுத்திடுந்தலையோடொப்பானினைவிளுக்கிசையத்தெவ்வைச்
செறுத்திடுவிசயன்மீளச்செப்பினன்செப்பமாக. (எ)

செய்தவனினிதுமாந்தத்தேவர்நாளொன்றுக்கொன்றாங்
கைதவமில்லாநெல்லிக்கனியினைக்கருதுருமு
மெய்தவன்றன்னையன்றியாரையுமிடான்வெஞ்சாப
மெய்தவருதசொல்லாய்வெருவுதலென்கொலென்றான். (அ)

வேந்தனம்மாற்றங்கேட்டுவில்வலான்றன்னைநோக்கி
யேந்திழைசொல்லவோராதினியவிக்கனியின்றீர்ந்தாய்
மாந்தரின்மடங்கலொப்பாய்வருத்தநீயுழக்கயாமோ
பேர்ந்துபோய்ப்பிழைப்போமென்றான்பிதாவினுங்கருணைமிக்கான். (கூ)

அம்முனிவந்தபாவத்ததனிலுங்கொடிதிக்கானத்
திம்முனியுணவுகொண்டதெனவெரீஇகுலவன்றாலும்
வெம்முனிவகற்றிநாமுமேம்படவேண்டினின்னந்
தெம்முனிதிசிரியானைச்சிந்தனைசெய்தியென்றான். (க0)

விளைதவமுனிவன்கண்டுவெருளுமுனவன்றாள்போற்றிக்
கிளைபடுநெல்லிவாசக்கேழுறுகனிமுன்வைத்தா
னுளைவுறமுனியானம்மையுறுதிமற்றிதுவேயென்னா
விளையவன்றானுந்தம்முனிவனைவினாக்கேற்பச்சொன்னான். (கக)

பெண்மதிகேளாரென்றும்பெரியவரெனக்கொண்டிந்த
மண்மொழிவார்த்தைபொய்யோவருத்தமீருற்றவெல்லா
மெண்மிகவெண்ணின்முன்னமென்பொருட்டன்றோவென்று
கண்மலரருவிசோரக்கனற்பிறந்தாளுஞ்சொன்னாள். (கஉ)

தம்பியர்தாமும்வேள்வித்தையலுமுரைத்தமாற்றங்
கிம்புரிநெடுங்கோட்டம்பொற்கிரிவல்லோன்கேட்டபின்னர்
வெம்பரிநகுலன்சொல்லேவிதியெனக்கருதியப்போ
தெம்பெருமானையுன்னவிவனெதிரவனும்வந்தான். (கங)

வேறு.

கண்டிருகண்ணுமிதயமுங்களிப்பக்கட்செவிப்பேரணைமறந்து
வண்டுவரையின்வாழ்தண்டுழாய்மாலைமாதவன்வருதலுமெதிர்கொண்
டண்டருமிறைஞ்சற்கரியதாளிறைஞ்சியாங்குறுமிடரினையவற்குத்
திண்டிறலறத்தின்றிருமகனுரைப்பத்திருச்செவிசாத்தினான்செப்பும். (கச)

திண்மையாலுயர்ந்தநீவிரைவிருமித்தீயிடைப்பிறந்தசேயிழையு [றும்
முண்மையானெஞ்சினிகழ்ந்தபட்டாங்கீண்டுரைத்திடக் கோட்டின்மீண்டோன்
வண்மையாலுயர்ந்தீரென்றுசெம்பவளவாய்மலர்ந்தருளினான்மாயோன்
றண்மையார்கருணைத்தராபதிமுதலோர்சாற்றுவார்தம்மனத்தியல்பே. (கரு)

வெல்லுகவறமுமெய்ம்மையும்பொறையுமேகமேனியனும்வெல்லாமற்
செல்லுகபாவம்பொய்மொழிகோபந்தயித்தியர்குலமெனத்தெளிவுற்
றல்லும்வெம்பகலுமென்மனநிகழுமலகையாமன்னையைமுன்னங்
கொல்லுதல்புரிந்தோயென்றனன்முரசங்கோட்டியகொற்றவெங்கொடியோன்.!)

பிறர்மனையவரைப்பெற்றதாயெனவும்பிறர்பொருளெட்டியேயெனவும்
பிறர்வசையுரைத்தல்பெருமையன்றெனவும்பிறர்துயரென்றுயரெனவு
மிறுதியேவரினுமென்மனக்கிடக்கையெம்பிரானிவையெனவுரைத்தான்
மறலியுமடியுமாறுமல்லியற்கைவலிமைகூர்வாயுவின்மைந்தன். (கஎ)

ஊனமேயானவூனிடையிருக்குமுயிரினைத்துறந்துமொண்பூணு
மானமேபுரப்பதவனிமேலெவர்க்கும்வரிசையுந்தோற்றமுமரபு
ஞானமேயானதிருவடிவுடையாய்ஞாலமுள்ளளவுநிற்றலினா
லீனமேயுயிருக்கியற்கையாதலினாலென்றனன்வீமனுக்கிளையோன். (கஅ)

குலமிகவுடையரெழின்மிகவுடையர்குறைவில்செல்வமுமிகவுடையர்
நலமிகவுடையரென்னினுங்கல்விஞானமற்பமுமிலாதவரை
வலமிகுதிகிரிச்செங்கையாய்முருக்கின்மணமிலாமலரெனமதிப்பேன்
சலமிகுபுவியிலென்றனன்வாகைத்தார்புனைதாரைமாவல்லான். (ககூ)

ஒருமொழியன்னைவரம்பிலாஞானமுற்பவ்காரணனென்றுந்
தருமமேதுணைவன்கருணையேதோழன்சாந்தமேநலனுறுதார
மரியதிண்பொறையேமைந்தன்மற்றிந்தவறுவருமல்லதாருறவென்
றிருவரிவிழியோன்மொழிந்தனன்றன்பேரிதயமாமலர்க்கிடையெடுத்தே. (உ௦)

ஐம்புலன்களும்போலவரும்பதிகளாகவுமின்னம்வேறொருவ
னெம்பெருங்கொழுநனுவதற்குருகுமிறைவனேயெனதுபேரிதய
மம்புவிதனிற்பெண்பிறந்தவரெவர்க்குமாடவரிலாமையினல்லா
னம்புதற்குளதோவென்றனள்வசிட்டனல்லறமனைவியேயனையாள். (உக)

அறுவருமிவ்வாறுண்மையையுரைத்தாராதலானிரைகிரைப்படியே
மறுவணிதுளபமார்பனுங்கேட்டான்மாமுனிக்கோதனமான
நிறைசுவையமுதநெல்லியின்கனியுநின்றகொம்பணைந்ததாலென்றும்
பெறுமுறைபெறுமேயுள்ளவாறுரைத்தாற்பெரியவர்பேசும்வாசகமே. (உஉ)

மூளைத்தெழுகமலந்தரும்பெனவரும்புமுகிழ்முலைப்பொதுவியர்மலர்க்கை
வளைத்தழும்பகலாமரகதமலைபோல்வடிவழகுடையவெம்மாயோ
னுளைத்தெழுதரங்கப்பாற்கடன்மறவாதுறையும்வண்டுவரையைநோக்கி
யிளைத்தவரின்னலொழித்துமீண்டகன்றுனிவருமீண்டிறைஞ்சியாங்கிருந்தார். ()

ஆ. செய்யுள் - க,கூகஂ.

பழம்பொருந்துசருக்கமுற்றிற்று.

---

## நச்சுப்பொய்கைச்சருக்கம்.

---

சேயபங்கயச்சிறுவிரலங்கையிற்றிரட்டியநறுவெண்ணெ
யாயர்மங்கையரிடவிடவமுதுசெய்தாடியதிருக்கூத்து
நேயமுங்குறுமுறுவலும்புரிந்துபார்த்தருளியநெடுங்கண்ணு
மாயவன்றிருவடிவுமழகுமென்மனத்தைவிட்டகலாவே. (க)

வண்டுசெங்கியமதுத்துளிமுகில்பொழிமழைத்துளியொடுஞ்சேர்ந்து
கண்டுசெந்தையுநயனமுமுருகுபைங்கானிடைக்கழிகேள்வி
விண்டுசெந்தனென்றொருமுனியருந்தவவிபினமேவினராகிக்
கொண்டுசெந்தனையறவிருந்தனர்குலக்குந்திமுன்பயந்தோரே. (உ)

ஆண்மெற்றவரடைதருகாலையிலரவவெங்கொடியோனு
மூண்டழற்பொறிகன்றியமனத்தினர்மூவருமுடன்முன்னி
மீண்டுமிப்புவிவேண்டுவரிருக்கினும்விரகுடன்முற்கோலிப்
பாண்டுபுத்திரர்க்கோறுமென்றருளிலாப்பாவியர்துணிந்தாரே. (௩)

காளமாமுனிதனைக்கொடுவருகெனக்கலந்தீற்றொளிகூருந்
தூளமாமுனியொருவனுடறிவிலாச்சுயோதனனுரைசெய்ய
வாளமாகிவமுழுதுடைமன்னனில்வந்தனன்விரைவிற்போய்
மீளமாமறைவேள்விகூர்முனியொடும்விடுத்தமாமுனியம்மா. (௪)

ஒருமுனிக்குலங்களுக்குமுன்செய்கலாவுயர்வுடையுபசாரம்
பெருமுனிக்களித்திறைஞ்சிநீபுரிதவப்பெருமையால்வளர்கின்ற
திருகிலப்பரப்பெங்குமென்னுனையேயென்னைநீயிடேற்றத்
திருவுளத்தருள்செய்குகவெனவவன்சேவடிகளில்வீழ்ந்தான். (௫)

நன்கலாவிதமனைத்தையுந்தெரிக்குநன்னூவுடைமுனியென்னை
யென்கொலாமிவணழைத்ததின்றெனவவனிருந்தமாமனைநோக்கத்
தன்கலாமனந்தோன்றவச்சகுனியத்தவமுனிவனைப்போற்றி
மின்குலாவருவேணியாய்நீயிவன்வெம்பகைகளைகென்றான். (௬)

கொடுத்துமாநிலத்தின்னிசைவளர்க்குமக்கொடியபாவியுனமவர்
விடுத்தபாரினம்வேண்டுவரிருக்கினவ்வேந்தரைவிண்ணேற்றக்
கடுத்தவோமம்வஞ்சகங்களாலியற்றுதியாயினிவ்வெழுபாருங்
கொடுத்திரீநிலைபெறவரவெழுதியகொடியவன்றனக்கென்றான். (எ)

கன்னன்வாசகங்கேட்டபோதிரண்டுநன்கன்னமுநெருப்புற்ற
தென்னவேவவைம்புலன்களுநெஞ்சமுமிடியின்வாயரவொத்தான்
பின்னையாதவனுரைப்பதுதவங்களும்பெருந்தகைமையும்பொன்றி
முன்னரேமெழுபிறப்பினல்வினைகளுமுடிந்தவின்றெனமுன்னி. (அ)

எண்வகைப்பெருந்திசையினுகினதுபேரிசையிலாத்திசையில்லை
மண்ணனைத்துமின்றனிக்குடைநிழலேமனுமுறைமையின்வாழுங்
கண்ணலுற்றதிக்கருமநீயெக்குறைகண்டுவெங்கழற்காலாய்
விண்ணகத்துநானேற்றுதல்புரியினும்வீவரோவீவில்லார். (கூ)

தொடங்கியான்புரிதீவினையென்னையேசுடுவதல்லதுகொற்ற
மடங்கல்போல்பவர்தங்கண்மேற்செல்லுமோமாயவனிருக்கின்றா
னிடங்கொள்பாரகம்பெறுவதற்கென்னுநின்னிச்சையின்படியேகி
விடங்களாலுயிரொழிப்பவர்க்கொத்துநான்வீவதேமெய்யென்றான். (கo)

அசைவிலாமனத்தருந்தவமுனிவனையனைவரும்பணிந்தேத்தி
யிசையுமாறுசெய்தோமவான்பொருள்களுக்கியாவும்வேண்டுவனல்கத்
திசையெலாமுகமுடையவனிகர்தவச்செல்வனுஞ்சென்றான்வெவ்
வசையினான்மிகுகொடியகோலரசனுமகிழ்ந்துதன்மனைபுக்கான். (கக)

போனமாமுனிதன்றபோவனத்தொருபுடையிடைநெடுங்கள்ளிக்
கானமானதுபுகுந்துபாரிடங்களுங்கழுகினங்களுந்துன்றி
யானையோடிடநரிதுரந்திடுநிலத்தெரிவெயிற்கழைமுத்தம்
வானெலாநெடுந்தாரகைபோலெழுமால்வரைப்புறஞ்சார்ந்தான். (கஉ)

அண்டர்யாவருமானுடமுனிவருமகலிடந்தனின்மற்றுங்
கண்டகண்டவர்யாவரும்வெருவரக்கடும்பலிபலநல்கி
யுண்டியால்வளர்ந்தாரழல்கோளகையூடுறும்படியோம
குண்டமெவ்வளவவ்வளவிந்தனங்கொடுந்தருக்களிற்சேர்த்தான். (கங)

மிக்கமந்திரயாமளமுதலியவேதமந்திரந்தம்மிற்
றக்கமந்திரந்தெரிந்துகொண்டாசறுசடங்குமுந்தப்பாமற்
றொக்கமந்திரமொன்றினுக்கோரெழுசுருவையினறுநெய்வார்த்
தொக்கமந்திரமனைத்தினுங்கொடுமைகூரோமமும்புரிந்தானே. (கச)

தன்றனிச்சையினன்றியேழ்கடலுடைத்தராதலந்தனையாளு
மன்றனிச்சையிற்புரியுமவ்வேள்வியில்வந்துறுபெரும்பூதஞ்
சென்றெயிற்றிளநிலவெழத்துணைவிழிதீயெழவெயில்வாய்கார்க்
குன்றெனப்பொலிந்தெழுந்ததுமுனிவனுங்கூசிமெய்குலைந்திட்டான். (கரு)

வேறு.

இப்பாலிவ்வாறோமஞ்செய்திவனிப்பூதமினிதெழுப்ப
வப்பாலிருந்தவனசரிதரைவர்க்கமைந்தவாறுரைப்பா
முப்பாலினுக்குமுதற்பாலாய்மும்மைப்புவனங்களுங்காக்குந்
தப்பாவாய்மையறக்கடவுளறிந்தானெண்ணந்தப்புவிப்பான். (கசு)

தன்மைந்தனுமத்தம்பியருஞ்சரியாகின்றதபோவனத்து
நன்மைந்தரிலோர்முனிமைந்தனன்றூடன்பூணசினத்தை *
வின்மைந்தரையுமறியாமல்விரைந்துள்புகுந்துவிசைத்தகல்வான்
றென்மைந்தனைப் † போலொருமழைகொண்டோடிற்றென்றூற்சொலவுண்டோ.()

மறைவாய்ச்சிறுவன்கலைத்தோலைமான்கொண்டோடிவானிடையிற்
பொறைவாய்ப்புகுந்ததபயமெனப்புகுந்தாங்கழுதுபுலம்புதலு
நறைவாய்த்தொடையலறன்மகனுமிளையவீரர்நால்வருந்த
துறைவாய்ச்சிலையோடம்பேந்தித்தொடர்ந்தாரதனைச்சூழ்புலிபோல். (கஅ)

அகப்பட்டதுபோன்முன்னிற்குமருகெய்தலுங்கூராசுகம்போன்
மிகப்பட்டோடுந்தோன்றாமல்வெளிக்கேயொளிக்கும்விழியிணைக்கு
முகப்பட்டிடுமீண்டைவருந்தம்முரண்டோள்வன்மைதளர்வளவுந்
தகைப்பட்டொழிந்தாரதிலாசையொழிந்தாரிந்திரசாலமெனு. (கசு)

தடங்கானகமும்வானகமுஞ்சாரற்பொருப்புந்தாழ்வரையு
மடங்காவரும்போஞ்சூழ்போதுமப்போதந்தமான்கன்று
தொடங்காவிவரையிளைப்பித்ததொழிலைச்சொல்லினொருநாவுக்
கடங்காதின்னுமாயிரமுண்டானாலதற்குமடங்காதே. (உ0)

கானிடைவர்க்குத்தலைதெரியாக்கானங்கருத்துமிகக்கலங்கிப்
பானியத்துக்கைவருமெய்பதையாநிற்பரெனவறிந்து
தூநீர்நச்சுச்சுனையாயச்சுனைசூழ்வரவோர்தொன்மரமா
யானியவனென்றெண்ணமெல்லாமானேனிருந்தானே. (உக)

வேறு.

தருமனுந்தம்பிமாருந்தாலுவும்புலர்ந்துதாகத்
திருமயமனத்தராகியுடறளர்ந்தயருமாக்க
னெரியுறுகானம்போல்வானிளவலைநோக்கியின்னே
மருவரும்புனல்கொண்டோடிவருதிநீவிரைவினென்றான். (உஉ)

அக்கணத்தினிற்சாதேவனடவிகடோறுந்தேடி
யெக்கணுங்காணானாகியென்றுதோய்குன்றேன்றேறி
மிக்கவண்சிதைவாசவிரிசுனையொன்றுகாணப்
புக்கனன்பருகலுற்றான்பொலிவறப்புலர்ந்தநாவான். (உங)

செழும்புனலுதரந்தன்னிற்சேருமுனவிபொன்றி
விழுந்தமையறிவுறாதுமீளவுகுலன்றன்னை
யழுங்கினனேவச்சென்றானவனுமப்பரிசின்மாய்ந்தா
னெழும்படைவிசயன்றன்னையேவினனவனும்போனான். (உச)

தம்பியர்கெட்டதன்மைகண்டுமெத்தலைவன்மேன்மேல்
வெம்புறுகொடியதாகமிகுதியால்விரைந்துவாரிப்
பைம்புனலருந்தியவ்வாறிறந்தனன்பரிதாபத்தோ
டெம்பியரென்செய்தாரென்றிறைவனுமினைந்துசோர்ந்தான். (உரு)

விமனக்கவனைத்தேற்றிமெலிவுறுசோகத்தோடு
மீமமொத்தெரியுங்கானமெங்கணுந்திரிந்தங்கெய்திச்
சாமுறைத்தம்பிமாரைக்கண்டருந்தடத்துநீரை
யாமெனக்கருதாதாலமாகுமென்றகத்திற்கொண்டான். (உசு)

* அசினம்—மான்றேல். † வான்மைந்தன்—வாயு.

பின்னவர்மூவர்சேரப்பிணங்களாய்க்கிடத்தல்கண்ட
மன்னவன்றனக்குத்தாகமாறுமோவளர்ந்துமேன்மே
லென்னவன்பட்டானென்பதியம்புதற்கெட்டுமோமுன்
சொன்னவன்ருனுமிந்தச்சோகமோதொருக்கமாட்டான். (உஎ)

குசையுடைப்புரவித்திண்டேர்க்குரக்குவெம்பதாகையானை
யசைவில்பொற்சயிலமன்னவாண்டகைமனத்தினானைத்
திசையனைத்தினுந்தன்னுமங்கீட்டியசிலையின்வெம்போர்
விசையனைத்தன்கண்ணீரான்மெய்குளிப்பாட்டினானே. (உஅ)

நற்றுணைச்சிறுவனோடுநகுலனைநோக்கியந்தோ
வெற்றுணையிழந்தேனென்னுமென்செய்வதினிநானென்னு
முற்றுணவனுமக்கானின்முடிந்திடுமொழியவேறோர்
பிற்றுணைகாண்கலாதேன்யாரொடுபேசுவேனே. (உகூ)

மணிமுரசுயர்த்தோனீண்டுவருதலுங்கூடும்வந்தா
லணிதருநச்சுத்தோயமருந்தவுங்கூடுமென்னுப்
பணியுடன்செய்வான்போலப்பருமணலேட்டிற்கையாற்
றுணிவுறவெழுதியந்தத்தோயமேதானுந்துய்த்தான். (௩0)

பொருப்பினும்வலியகொற்றப்புயமுடைவீமனென்ரு
லருப்புடையறலினஞ்சமஞ்சுமோவாலமென்னு
முருப்பினையறிந்தும்வாரியுண்டுதன்னுயிரும்வீந்தா
னெருப்பினுஞ்சொல்லினுவேங்கினைப்பினுநெஞ்சம்வேமால். (௩க)

ஆருயிர்பொன்றுங்காலையமுதமும்விடமாமென்று
பாருளோருரைக்குமாற்றம்பழுதறப்பலித்தகாலை
மாருதிமுதலாவுள்ளமன்னவர்நால்வர்தம்மோ
டோருயிரானமற்றையொருவனேயொருவனானன். (௩உ)

கட்புலனுகவேறோர்யோனியுங்காண்கலாத
வெட்புலந்தன்னிற்சோகமிஞ்சவேதாகம்விஞ்சி
யுட்புலனழிந்துபின்போமுள்ளமோடுயெங்கிவீழ்ந்தா
னட்புலந்தவரான்முன்னங்கானகாண்ணினானே. (௩௩)

ஈங்கிவருயங்கிவீந்தவெல்லையிலெரிசெய்யோமத்
தாங்கவனெழுந்தபூதமம்முனிதன்னைநோக்கிப்
பாங்குடன்புரியுமேவல்பணித்தருளென்னநெஞ்சிற்
றீங்கிலாமுனியும்பூதவரசுடன்செப்புவானே. (௩ச)

நின்றிடாதிமைப்பிற்குந்திமைந்தராய்நெடியகானிற்
றுன்றிடாவைகும்வேந்துந்துணைவருமிருந்தசூழற்
சென்றிடாவொன்றுமையைந்துசெயற்கையாமுடலைச்சோக்
கொன்றிடாவருதியென்றுகூறியவுறுதிகேளா. (௩ரு)

ஐம்பெரும்பூதமொக்குமப்பெரும்பூதஞ்சாதிச்
செம்பொனினொளிருமேனித்தெய்வமாமுனியைநோக்கி
வெம்புகானுறைவோரின்றென்விழிக்கிலக்கல்லரானு
லெம்பிரானினையேகொல்வனெனத்தொழுதேகிற்றன்றே. (௩சு)

காட்டுறுகோடைவெப்பங்களைருவான்கரியமேக
மோட்டருக்கொண்டுமின்னுன்முளைத்தெழுமெயிறுதாங்கித்
தோட்டிணைப்புடைகொண்டெங்குஞ்குறைபோன்மரங்கள்வீழ்த்திக்
காட்டுறைவாழ்க்கையானைக்கண்ணுறக்கண்டதன்றே. (௩௭)

அந்தணன்சொன்னவேந்தரைவரிலறனுல்வந்த
மைந்தன்மற்றிவனேயாவிமாய்ந்ததோர்வடிவணுகிச்
சந்தனதருவிற்சார்ந்துசாய்முடித்தலையனுகி
மந்திரமறந்தவிஞ்சைமாக்களின்வடிவுசோர்ந்தான். (௩௮)

சிறந்தமெய்ந்நிழல்போற்சூழுந்துணைவருஞ்சோரவிட்டுத்
துறந்தனர்போலும்யாண்டுந்துப்பிலாவெப்பந்தன்னு
லிறந்தனனிவனுமற்றிங்கென்செய்வேனென்றென்றெண்ணி
நிறைந்தநீர்ச்சுனையின்மற்றைநிருபர்நால்வரையுங்காணு. (௩௯)

பச்செனும்புனலான்மிக்கபங்கயச்சுனையுங்கொல்லு
நச்சுவெஞ்சுனையேபோலுநால்வருஞ்சோரமாண்டா
ரிச்சுனையருந்திப்போலுமென்னினைந்தேதுசெய்தார்
நிச்சயங்கொடிதுகெட்டேனிந்தநிட்டூரமென்னே. (௪0)

காவலன்வார்த்தைகேட்டுக்காளமாமுனிவனென்னு
நாவலனேமத்தியினம்மையுற்பவித்துவிட்டான்
மேவலர்கொல்லுமுன்னேவீந்தனரிந்தப்பாவங்
கேவலமல்லவென்றுகிளர்சினமூண்டுமீண்டே. (௪௧)

காலங்கண்மூன்றுமெண்ணுங்கடவுணீகலக்கமெய்தி
ஞாலங்கோணசையினில்லாநயனிதன்மகன்சொற்கேட்டுச்
சீலங்கொள்வாய்மையாய்செந்தீயெழுகானிற்சின்னி
ராலங்கொல்பான்மையரையார்கொல்வானருளிச்செய்தாய். (௪௨)

பூண்டவெள்ளரவத்தோடுபுனைமதிவேணியார்க்குத்
தாண்டவநடனஞ்செய்யத்தக்கதோர்தழல்வெங்கானிற்
பாண்டவர்தம்மைக்கொல்லப்பணித்தனையொருகாலாவி
மாண்டவர்பின்னும்பின்னுமாள்வரோமதியிலாதாய். (௪௩)

நீயிதற்கிலக்கமாகிநின்றனையென்றுகோபத்
தீயெழப்பொடிக்குங்கண்ணுஞ்சிரிப்பெழுமெயிறுமாகி
மூவிலைச்சூலந்தன்னுன்முனிதலைதுணிந்துவீழ
வேவலிற்பழுதில்பூதமிவனையேயெறிந்ததன்றே. (௪௪)

எறிந்ததமீண்டுமோமவெரியிடையொளிக்கக்கானிற்
செறிந்தமாமுனிவர்யாருந்தேவரோடிரங்கியார்ப்ப
வறிந்தவரவனியாளுமரசனைவெறுக்கத்தம்மிற்
பிறிந்தவர்மீண்டுமாவிபெற்றவாபேசக்கேண்மோ. (௪௫)

வேறு.

மூச்சறப்புலர்ந்தயங்கியமுரசவெங்கொடியோன்
மாச்சினைத்தடஞ்சந்தனமகீருகநிழலில்
வீச்சறப்பயிறென்றலான்மெய்யுயிரெய்தி
நாச்சுவைப்பஞானநன்மந்திரவிலா. (௪௬)

தனைப்பயந்தநற்றருமதேவதைதிருவருளால்
வினைப்பயன்களாலுறுதுயர்யாவையும்வீட்டிச்
சுனைப்பெரும்புனற்றாகமுமடிக்கடிதோன்ற
நினைப்புமெய்தியத்தம்பியர்தம்மையுநினைந்தான். (சஎ)

ஆனதன்மனவலியுடனாண்டுநின்றெழுந்து
கானகத்திடைநீங்கியவறன்றருகாளை
போனதம்பியர்சேவடிச்சுவட்டினிற்போயத்
தூநிறப்புனலுண்டுவீழ்துணைவரைக்கண்டான். (சஅ)

ஊறிலாமைகண்டெற்றினரில்லெனவுணர்ந்து
மாறிலாதவரெங்ஙனமாருயிர்மாய்ந்தார்
சேறிலாதவெஞ்சுரத்திடைச்செழும்புனனுகரும்
பேறிலாமையினிறந்தனர்போலுமிப்பெரியோர். (சகூ)

அண்டகோளகையனையதோராதபத்திரத்தான்
மண்டலங்களீரொன்பதும்புரந்திடவல்லான்
சண்டமாருதியெழுதியதாழ்மணலெழுத்தைக்
கண்டுநஞ்சமிக்கயத்தறலென்பதுகண்டான். (ருo)

வெஞ்சமஞ்செயவருவர்கொன்மீண்டுமென்றருளில்
வஞ்சகன்செய்தவஞ்சனையிதுவெனமதித்து
நஞ்சநீர்கொடுதானுந்தன்னாவினைநனைக்கு
நெஞ்சனாகியந்நிறைபுனற்கயத்திடைநேர்ந்தான். (ருக)

திருந்துநல்வரைச்செங்கையாலள்ளியநீரை
யருந்துமவ்வயினகல்விசும்பிடையசரீரி
கருந்தடம்புனனஞ்சிதுநுகர்வதுகருதேல்
விருந்தர்நால்வருமென்மொழிகேட்டிலர்வெய்யோர். (ருஉ)

உன்னையான்வினவுரைதனக்குத்தரமுரைத்துப்
பின்னைநீநுகர்பெறாதுபெற்றனையவிப்புனலை
யன்னைபோலுயிரனைத்தையும்புரந்திடுமரசே
யென்னையோபெருந்தாகம்விஞ்சிடினுமின்றெனவே. (ருங)

பெருநலம்பெறுமகனையப்பேரறக்கடவு
ளிருவிசும்பினிலருவமாயியம்பியமாற்றந்
திருவுளந்தனிற்கொண்டுதன்செங்கைநீர்வீழ்த்திப்
பொருவிலாமகன்புகலுவபுகறிநீயென்றான். (ருச)

சொல்லுநூல்களிற்பெரியதேதரியமெய்ச்சுருதி
யில்லறத்தினுக்குரியதேதென்னுடையில்லான்
மல்லன்மாலையின்மணமுளதேதுவண்சாதி
நல்லமாதவமேதுதங்குலம்புரிநடையே. (ருரு)

முனிகுலந்தொழுகடவுள்யார்மொய்துழாய்முகுந்த
னனைமணங்கமழ்குழலினர்க்கியற்கையாததுநாண்
தனமிகுந்தவர்க்கேதரண்டகைபெறுதான
மினியதேதிருசெவிக்கிளங்குதலையரின்சொல். (ருசு)

சிற்பதேதுகொனிடிசையொன்றுமேமிற்குங்
கற்பதேதுகொல்கசடறக்கற்பதேகல்வி
யற்பமாவதேதனைத்தினுமயற்காத்தேற்றல்
சிற்பமாமிவைசெப்பெனச்செப்பினன்சிறுவன். (ருஎ)

இவ்வகைப்பலவினவலுமியம்பியமகனை
யவ்வயிற்பெரிதுவந்துகண்ணிலுக்கிலக்காகிச்
செவ்வயிற்பொலஞ்சிலம்பெனச்சேர்ந்துமெய்தழுவி
வெவ்வயிற்புரிவிரகெலாம்விளம்பினன்மாதோ. (ருஅ)

வேறு.

அறப்பெருங்கடவுளென்றறிந்துதாதையைச்
சிறப்புடன்சேவடிசென்னிசேர்த்திய
மறப்பெரும்புதல்வனைமகிழ்ந்துநம்பிய
ிறப்பினையொழிப்பதற்கேதுவுண்டெனு. (ருகூ)

நச்சுநீர்குடித்துயிர்நீத்தநால்வரி
னுச்சமாமன்புடையொருவன்றன்னைநீ
யிச்சையானிம்மறையியம்பியெண்ணியோ
ரச்சமற்றழையெனவருள்செய்தானரோ. (சுO)

தாதைகூறியமறைதனைக்கொண்டேசுத
னேதமுற்றிடாவகையினையதம்பியை
யூதைவந்துள்புகவுணர்ச்சிநல்கினன்
வேதமுநிகரிலாவிரதவாய்மையான். (சுக)

கண்டுநின்றறப்பெருங்கடவுள்வாயுவின்
திண்டிறன்மாமகன்றேவர்கோமகன்
மண்டழல்விடத்தினுன்மடியமாமருத்
தண்டர்நல்கிளவலையழைத்ததென்னென்றான். (சுஉ)

குந்திரமிலாமொழிக்குந்திக்கியாளுரு
புத்திரனுளனெனப்புரிந்துநல்கினுய்
மத்திரிக்கொருமகவில்லைவல்லவர்
சித்திரம்வருத்தெனத்திகழுமேனியாய். (சுஙு)

என்றுதன்றந்தையோடியம்பத்தந்தையு
மன்றலந்தொடைமுடிமைந்தனுக்கமர்
வென்றிமேறைகளும்வில்லொடெஃகம்வே
லென்றபல்படைகளும்யாவுநல்கினன். (சுச)

கருதலனழைத்ததுங்காளமாமுனி
புரிதழல்வளர்த்ததும்பூதம்வந்தது
மருகிவர்நச்சுநீருந்திமாய்ந்ததும்
விரிசினத்துடனதுமீண்டுபோனதும். (சுரு)

முனிவனைக்கொன்றதுமுனிவன்வாய்மையிற்
றனிவனத்துழையினைத்தொடர்ந்துபோயதுந்
தனிவனத்திடைவிடத்தடாகஞ்செய்ததூ
மினிமையிற்புத்திரர்க்கியாவுங்கூறினன். (சுசு)

நன்பெருவனஞ்செறிநாளகன்றது
பின்பிறரறிவுறுப்பெற்றிபெற்றுநீர்
துன்புறுதிருமெனச்சொல்லியேகினு
னன்பினலருள்புரிந்தரியதாதையே. (சுஎ)

தம்பியரனைவருந்தத்தமாவிபெற்
றும்பரிற்றலைவனுமுரியதந்தையை
வம்பவிழ்மலரடிவணங்கிநெஞ்சுட
னம்பகமலர்ந்துதம்மடவியெய்தினர். (சுஅ)

நீதறக்கானிடைச்செறிந்தவைவரும்
பேதுறத்தொடர்ந்தொருபிணைபின்போனது
மேதமுற்றிறந்ததுமிறந்துமீண்டது
மாழ்துயர்த்திரௌபதிக்கறியக்கூறினர். (சுகூ)

ஆ செய்யுள் - க,கூஎகூ.
நச்சுப்பொய்கைச்சருக்கமுற்றிற்று.

---

## ஆ ர ணி ய ப ரு வ ம்
முற்றுப்பெற்றது.

---

உ

நான்காவது

# விராடபருவம்.

## நாடுகரந்துறைசருக்கம்.

அங்கையினேமிசங்குவாடண்டொடடற்சாரசனந்தரித்தருள்வோன்
சங்கையின்மறைகளாயிரங்களுக்குஞ்சாற்றுதற்கரியதத்துவத்தோன்
கங்கையினறலுங்காளியன்முடியுங்காளிந்திக்கரையுமேகமழும்
பங்கயமலர்களிரவுநன்பகலும்பணிந்துபாடுதுமவன்புகழே. (க)

அரவவெங்கொடியோனேவலின்படியேயைவருமாறிரண்டாண்டு
துருபதனளித்தபாவையுந்தாமுஞ்சுருதிமாமுனிகணம்பலவும்
பரிவுடன்மலரும்பலங்களுங்கிழங்கும்பாசடைகளுமினிதருந்தி
யொருபகல்போலக்கழித்தனரறிவுமோங்கியபுலன்களுமுடையோர். (உ)

தொல்லறக்கடவுளருளுடனளித்ததோன்றறன்றுணைவரைநோக்கிக்
கல்லமர்கிரியுங்கானமுமிடமாக்கழித்தனமொழிந்தனகால
மெல்லையோராண்டுமியாவருமுணராதிருப்பதற்காமிடம்யாதோ
சொல்லுமினென்றானென்றலுந்தொழுதுசுரபதிமகனிவைசொல்வான். (ங)

நீதியும்விளைவுந்தருமமுநிறைந்துநிதிகண்மற்றியாவையுநெருங்கி
யாதியின்மனுநூல்வழியினிற்புரப்பானவனியைமனுகுலத்தரசன்
மாதிரமுழுதுமவன்பெரும்புகழேவழங்குவதமரும்வேள்வி
வேதியர்பலருமுறைவதுமவனேவிராடர்கோன்மச்சநாடையா. (ச)

ஆங்கவனகரியெய்திமற்றின்றேயைவருமணியுருக்கரந்து
நீங்கறவுறைவதல்லதுவேறோர்சேர்விடமிலதெனச்செப்பத்
தேங்கியவருளுக்கிருப்பிடமானசிந்தையான்சிந்தையாற்றுணிந்து
பாங்குறையரசர்யாரையுந்தத்தம்பதிகளேசெல்கெனப்பகர்ந்தான். (ரு)

முனிவராயுள்ளதபோவனத்தவரைமுடியுறத்தனித்தனிவணங்கிக்
கனிவுறுமன்பாலென்றுநாளும்மைக்காண்பதென்றவர்மனங்களிப்ப
வினியனவுரைகள்பயிற்றியாவரையுமேகுவித்திற்றைநாளிரவிற்
றினகரனெழுமுன்செல்வமச்செல்வந்திகழ்தருநகர்க்கெனச்செப்பா. (சு)

கல்செறிகுறும்புஞ்சாரலங்கிரியுங்கடிகமழ்முல்லையும்புறவு
மல்குநீர்ப்பண்ணைமருதமுங்கடந்தவன்னியிற்பிறந்தமாமயிலும்
வில்செறிதடக்கையினருந்தாமும்விராடர்கோன்றனிக்குடைநிழலிற்
பல்குமாக்கள்வாழ்வுகூர்தருநாடடைந்தனன்பாண்டவர்தலைவன். (எ)

தராதலமுழுதுமுடையகோமகனுந்தம்பியர்நால்வருந்திருவு
மிராவிடைவிரைவினுறிடைக்கடந்தோரெண்ணமுமிருக்கையும்வாய்ப்பக்
கராமுலாவருபைந்தடமும்வண்காவுங்கனகவான்புரிசையுஞ்சூழ்ந்த
விராடன்மாநகரியெல்லைபுக்கொருபான்மயானபூமியினிடைவிரவா. (௮)

யாமளமறையால்யாவரும்பணிவானெழுவகைத்தாயரிலொருத்தி
சாமளவடிவோடந்நகர்வாழ்வாள்சங்குதண்டங்கையிற்றரிப்பாள்
கோமளவல்லிக்கொடிநிகர்காளிகோயிலின்முன்னரோர்வன்னி
நாமளவிடுதற்கரியபல்கிளையானலம்பெறுபாதவநண்ணு. (௯)

தத்தமபடையுங்கவசமுமனைத்துந்தனித்தனியைவருந்தரித்த
மெய்த்திறலுடையயாவுமத்தருவின்கோடரத்தொளித்தொருவிரகால்
வைத்தனராகியாவருமுணராவகையருமறைகளும்பயிற்றி
முத்தலைவடிவேற்காளியைவணங்கிமுன்னினார்புரிதொழின்முற்றும். (௧௦)

தம்பியர்வணங்கித்தனதுதாளிணையிற்றங்கவோர்தாபதவடிவு
மும்பரும்வியப்பக்கங்கனென்றுரைக்குமொருதிருநாமமுந்தரித்து
வெம்பரிதியினுஞ்செம்மைகூர்வடிவம்வெண்புரிநூலொடுவிளங்க
வைம்புலன்மகிழச்சென்றுகண்டிறைவந்தடிதொழவாசியுமுரைத்தான். (௧௧)

யாரையாநீவிரெங்குநின்றிவண்மற்றெழுந்தருளியதெனவினவப்
பாரையாளுடையவுதிட்டிரன்பாங்காய்ப்பயின்றனனவன்பெருவனத்திற்
சேருநாளுடன்போய்த்திரிந்தனனின்பாற்சிலபகல்வைகுமாறெண்ணி
வீரவார்கழலாய்வந்தனனென்றான்வேள்வியாற்கேள்வியான்மிக்கோன். (௧௨)

மன்முனிமொழிந்தவாய்மைகேட்டந்தமனுகுலமன்னனுமகிழ்ந்து
தன்மனநெகிழ்ந்தநெகிழ்ச்சியுமுணர்வுந்தகைமையுமுவகையிற்றோன்ற
வென்மனைவயினின்றெய்தியபயன்யானேழெழுபிறப்பினும்புரிந்த
நன்மையின்விளைவேவேண்டுநாளீண்டுநண்ணுதிரெனநனிநவின்றான். (௧௩)

தண்டினுக்கொருவன்புயவலிக்கொருவன்றனுவினுக்கொருவனென்றுரைக்குந்
திண்டிறற்பவனகுமரனுஞ்சின்னாள்சென்றபின்றெள்ளமுதனைய
வுண்டியைக்குறித்துக்கற்றதன்கல்வியுரிமையைக்குறித்தடுதொழிற்கு
மண்டலத்தரசேயொருவன்யான்வீமன்மடையனென்றரசவைவந்தான். (௧௪)

வந்துதன்றம்முன்மலரடிமுன்னிமலர்க்கையான்முடியின்மேல்வணங்கி
யைந்துபல்வகையிற்கறிகளும்வெவ்வேறறுசுவைமாறுமாறமைப்பேன்
வெந்திறன்மல்லும்புரிதொழிலுடையேன்விருதுடைப்பலாயனனென்பே
ரிந்திரனுலகுதன்னிலுமெண்ணிலென்றொழிற்கெதிரிலையென்றான். (௧௫)

என்றபோதவனைவிராடனுமகிழ்வுற்றிருகையுஞ்சென்னிமேலிருத்திப்
பொன்றிகழ்மணிப்பூண்மென்றுகில்பலவும்புரவிபோதகங்களும்வழங்கி
யின்றுதொட்டெமக்குமெய்ப்பெருஞ்சுற்றத்தொருவனீயென்றடுதொழிற்கு
நின்றவரெவர்க்குந்தலைவனாமுரிமைநிலைபெறவழங்கினன்மாதோ. (௧௬)

நீடியசிலைக்கைத்தேவர்கோன்மதலைநிருத்தநல்லரங்கினின்முன்னாள்
வாடியமருங்குற்பணைத்தபூண்கொங்கைவாட்டடங்கண்கள்வார்குழைமே
லோடியவதனத்துருப்பசிபணியாலுறுவதற்கோரியாண்டமைந்த
பேடியின்வடிவந்தரித்தனனுண்மைக்கிமையவரெவரினும்பெரியோன். (௧௭)

வாயுவின்மதலைசென்றுகண்டதற்பின்மற்றைநாளொற்றைவெண்கவிகைச்
சேயொளிமகுடச்சென்னியானிருந்தபேரவைசிறப்புறச்சென்று
தூயவெண்புரிநூன்முனிதிருக்கழலிலொருபுடைதோய்தரத்தலைசாய்த்
தேயவெஞ்சிலைக்கையருச்சுனன்கோயிலிருப்பதோர்பேடிநானென்றான். (௧௮)

நாதமுமியலுமேதருநடநூனவிறருமரங்கினுக்குரியேன்
பேதையர்தமக்குநடம்பயிற்றுவிப்பேன்பெயர்பிருகந்நளையென்ப
வாதிபநினதுசெல்வமாநகரிலிருப்பதற்கெண்ணிவந்தடைந்தேன்
வேதமுமுலகுமுள்ளநாளளவும்விளங்குகநின்மரபென்றான். (௧௯)

வித்தகனெனவெக்கலைகளும்பயின்றவிராடனும்பேடிதன்மொழிகேட்
டித்திறமுடையார்வேலைசூழுலகினில்லையென்றினிதுரைத்தருளி
யத்தகவுடையான்மகிழ்வுறக்கலனுமாடையும்வேண்டுவவழங்கி
யுத்தரைதனக்குப்பாங்கிநீயென்றாங்குரியதன்மகளுழைவிடுத்தான். (௨௦)

பின்னருஞ்சின்னாளகன்றபினகுலன்பேரழகினுக்குவேளனையான்
மின்னுடைவடிவேல்வேந்தர்கோன்விராடன்வெம்பரியேறுமுன்றிலின்வாய்
மன்னியதொழில்கூர்கம்பியுங்கயிறுமத்திகையுடன்கரத்தேந்தி
யுன்னயமுதலாம்புரவிநூலறிவோனுளநிகழ்தருக்கொடுசென்றான். (௨௧)

சென்றவன்றன்மேற்புரவிமேலிருந்தோன்செழுந்தடங்கண்மலர்பரப்பி
வன்றொழிற்புரவிவான்றொழிற்குரியோயெவ்வயினின்றுவந்தனைநீ
யென்றலுமவனுமியம்பினன்விசயற்கிளையவனகுலனென்றெல்லாக்
குன்றினுந்தன்பேரெழுதினோனவன்றன்கொற்றம்யார்கூறுதற்குரியார். (௨௨)

மற்றவன்றனதுவாசிமந்துரைக்குத் * தலைவராய்வாழுமாக்களில்யா
னுற்றவனொருவன்வாம்பரிவடிவுமுரைதருசுழிகளுமொளியும்
பற்றியதிறனுங்கந்தமுங்குரலும்பல்வகைக்கதிகளும்பிறந்த
சொற்றருசிலனுமாயுவுமுணர்வேன்றுயருறுபிணிகளுந்தவிர்ப்பேன். (௨௩)

மண்டலம்வீதிகோணமேமுதலாம்வாசிகளூர்தொழில்வல்லேன்
திண்டிறற்றடந்தேர்பூண்பதற்குரியசெயலுடைப்பரிகளுந்தெரிவேன்
வண்டிமிரலங்கன்மாலையாய்பாண்டுமைந்தர்போய்வனம்புகுந்ததற்பி
னண்டியுமிழந்தேனுறுதியுமிழந்தேனுன்புகழ்கேட்டுவந்துற்றேன். (௨௪)

என்னவப்புரவியேற்றுநாயகன்வந்தியம்பியவின்மொழிகேட்டு
மன்னவர்க்கெல்லாமொதுங்குநீணிழலாய்வயங்குமாமதிக்குடைமன்னன்
முன்னவர்க்குள்ளவரிசைகள்யாவுமும்மடங்காகவேவழங்கி
யங்கர்த்தாங்கமவையனைத்தினுக்குமதிபதியெனும்பதங்கொடுத்தான். (௨௫)

கிளைபடுபுரவிபுரந்திடுந்தாமக்கிரந்தியாம்பெயர்புனைநகுலற்
கிளையவனந்தகோபன்மைந்தனைப்போலிடையர்தங்கோலமதெய்தித்
தளைபடுகுழையிலொருகுழையணிந்துதோளிலோர்தொடித்தடிதழுவி
விளைபுகழ்விராடன்வேத்தவையதனைவேறொருநாளையினடைந்தான். (௨௬)

ஆர்கொணீயென்னவறன்மகனுடனோராசனத்திருந்தபூபதியைச்
சீருறவேறோர்விரகினால்வணங்கிச்செப்பினனன்னசாதேவன்
பார்கொளநினைந்தசுயோதனன்விடுப்பப்படர்வனம்புகுந்தபாண்டவரிற்
றேர்கொள்வேலினையோன்றனதுகோபாலன்றந்திரிபாலன்யானென்றான். (௨௭)

* மந்துரை—குதிரைப்பந்தி.

ஆங்கவலிவ்வாறுரைத்தலுமவனையருகுறவருகெனவழைத்துப்
பாங்குறத்தக்கவழக்கமும்வழங்கிப்பல்வகைநிரைசளுநீயே
யீங்குமப்படியேபுரத்தியென்றுரைத்தானிவனுமவ்வரசனேவலினுற்
றீங்கறக்கைக்கொண்டவ்வவர்க்கெல்லாந்தகைபெறுஞ்செம்மலாயினனே. (உஅ)

வேறு.

ஓமமகவாரழலினூடொருவுயிர்க்கு
மாமயிறிரெள்பதியும்வண்ணமகளாகித்
தேமருவுதார்முடிவிராடனிருதோள்சேர்
கோமகளைநாடியவள்கோயிலிடைபுக்காள். (உகூ)

மதுமலரின்வாழ்திருவும்வந்துதொழவுரியா
ளெதுமலினளாகியொருநுண்ணிடைநடந்தாள்
பதுமவிழியாயெனலும்வாயிலவர்பால்போன்
மதுரமொழியாளழைமின்வாணுதலையென்றாள். (௩0)

வந்தவளிருந்தவண்மருங்கணையும்வேலை
யந்தணுபசாரமுடனருகுறவிருத்திச்
சந்தொடகில்பூவிலைகடகவுடன்வழங்கி
யெந்தநகரீருரைமின்யாமுணரவென்றாள். (௩க)

தான்விரதமாயைபுரிசகுனிபொருசூதாற்
கான்விரதமாகவுறைகாவலர்கள்கோயின்
மான்விரதநோக்கியர்மருங்குறவிருந்தேன்
யான்விரதசாரணியெனும்பெயரினாளே. (௩உ)

பூசுவனசுற்றுவனபூண்பனமுடிப்ப
தேசொடுவனப்புநனிதிகழும்வகையணிவேன்
வாசவனெடொத்தமனுகுலவரசன்மனைவி
யேசறவுனக்கெனுவையாகுவதெனெண்ணம். (௩௩)

எந்தைமனையிற்பயிலிளம்பருவநாளிற்
கந்தருவர்காவல்புரிகற்புடையளானே
னிந்துநுதலாய்மனிதர்யார்முகமுநோக்கேன்
வந்தனனின்மாளிகையின்வைகும்வகையென்றாள். (௩ச)

வண்ணமகள்கூறியவைமகிழ்வினொடுகேட்டுத்
துண்ணெனவெரீஇயினள்சுதேட்டிணைவிரும்பி
விண்ணவர்கள்பாவையரின்மேவுதியெனக்குக்
கண்ணிணையுநீயுனதுகாவலெனதுயிரும். (௩௫)

அன்னையெனுமாறுநெறியானமுறைகூறி
யென்னருகிருத்தியெனவெரியின்வருமின்னு
மின்னனையநுண்ணிடைவிராடபதிதேவிக்
கென்னலமுநாடொறுமியற்றினளிருந்தாள். (௩கூ)

மைவருதடங்கண்மடமானுமதிமரபோ
ரைவருமறைந்தனர்களாயுறையுநாளின்
மெய்வருவழாமொழிவிராடபதிதிருநா
டெய்வருபெருந்திருவொடோங்கியதையன்றே. (௩எ)

குருக்களவனூரினிடைகுருகிலனெடொப்புற்
றிருக்குழம்வழிமாமழையுமெய்வினைவும்விஞ்சித்
தருக்கினுடன்யானைமுதருணைகளும்விஞ்சிச்
செருக்குமுடன்விஞ்சியதுசெப்பவரிதம்மா. (௩௮)

ஆ செய்யுள் - ௨,௦கஎ.

நாடுகரந்துறைசருக்கமுற்றிற்று.

---

# மற்போர்ச்சருக்கம்.

---

அல்லினுக்கிந்துவென்னவாங்கவருறையுநாளில்
வில்லினுக்கிராமனென்னவேலினுக்கிளையோனென்னச்
சொல்லினுக்குததிதோய்கைத்தொன்முனியென்னவன்போர்
மல்லினுக்கொருவன்யானேவாசவனென்றுவந்தான். (க)

அண்டமாமுகடோடொத்தசென்னியனவனிமுற்றுங்
கொண்டமாமேருவொத்தகுங்குமக்கடகத்தோளான்
சண்டமாருதத்தோடொத்தவலியினன்றந்தியெட்டின்
கண்டமார்முகத்தினீண்டகையெனத்திரண்டகாலான். (௨)

ஆயிரமல்லர்தன்னையணிநிழலென்னச்சூழப்
பாயிரும்புரவித்திண்டேர்மிசைவரும்பரிதிபோல
மாயிருஞாலந்தன்னின்மற்றிவற்கெதிரின்றென்னச்
சேயிருந்தடக்கைவேந்தன்றிருந்தவையதனைச்சேர்ந்தான். (௩)

மன்னனைவணங்கிநின்றுவலியுடைமல்லின்போருக்
கென்னலதில்லையிந்தவெழுகடல்வட்டத்தென்றான்
சொன்னவில்வேலினானுங்கொடுப்பனகொடுத்துமுன்னந்
தன்றுழைவருமல்லர்தங்களைநோக்கினானே. (௪)

அந்தமற்றெழிலின்மிக்கோரநேகர்நீடசனியொப்பார்
வந்தமற்றிவன்றன்னைவருதிநீயெம்மொடென்று
முந்தமற்கலைநூல்சொன்னமுறைமையினரசன்காணச்
சந்தமற்சமருஞ்செய்தார்தனித்தனியொருவராக. (௫)

தத்தியுந்தோளுந்தோளுந்தாக்கியுஞ்சென்னிகொண்டு
மோத்தியும்பற்பல்சாரிமுடுகியும்வயிரக்கையாற்
குத்தியுங்காலுங்காலுங்கோத்துமற்கூறுதோன்ற
வொத்தியும்பாறையென்னவுரனுடனுரக்கள்சேர்த்தும். (௬)

ஒரோருமல்லாகவொருதனிமல்லன்றன்னோ
டாரமருடற்றிமல்லரனைவருமழிந்தபின்னர்
வீரரில்வீரனைவென்றிவேல்விராடன்மெச்சித்
தேரின்மேல்வந்தமல்லன்றனக்கேவரச்சிறப்புஞ்செய்தான். (௭)

அன்றுபோய்மற்றைநாளினரசனோடேறத்தின்மைந்தன்
வென்றமாமல்லன்றன்னைவெல்லுதற்குரியமல்ல
னின்றுகின்மடையர்தம்மிற்பலாயனனென்போன்றன்னை
யன்றிவேறில்லையென்றானரசனுமழைமினென்றான். (அ)

பைம்பொன்மாமேருவெற்பின்பராரையைச்சோதிநேமி
விம்பமாய்வளைந்ததென்னவிளங்குபொற்கச்சைசேர்த்துத்
தம்பமாமென்னத்தக்கதண்டொடுதரணிவீழா
வும்பராரமுதமுண்டவுரவினன்விரைவின்வந்தான். (கூ)

கதையுடைக்காளைவந்துகடுந்திறன்மல்லன்றன்னோ
டுதையமோடத்தமென்னுமோங்கலோரிரண்டுசேர்ந்து
துதைவுறப்பொருவதேபோற்றோள்புடைத்துருமினார்த்துப்
பதயுகத்தாலுந்தத்தம்பாணிகளாலுஞ்சேர்ந்தார். (க0)

உதைத்தனர்வீசிவன்போடுரங்கொடுகரங்களெற்றிப்
புதைத்தனர்விரல்கண்மெய்யிற்புருவமுமூக்கும்வாயிற்
சிதைத்தனர்புயங்களென்னுஞ்சிலம்புகடாக்கத்தாக்கப்
பதைத்தனரோடியோடிப்பற்றினர்மீளமீள. (கக)

கற்றனகாய*மெல்லாங்கண்டிகண்களிக்கக்காட்டி
யுற்றனர்நின்றபோதினுதையின்புதல்வனூரு
மற்றவன்மருங்குபற்றவன்கரமிடறுபற்றச்
செற்றனனிடிம்பன்றன்னைச்செற்றவெங்கொற்றத்தோளான். (கஉ)

தேர்மிசைவந்தமல்லன்சிதைந்தபேருறுப்பினோடும்
பார்மிசைகிடக்கநின்றுபணைப்புயங்கொட்டியார்த்தான்
சீர்மிகுமல்லன்றன்னைச்சிறப்புறத்தழுவியெல்லாப்
போர்முகங்களுக்குநின்னைப்போல்பவரில்லையென்றான். (கங)

மன்னவர்க்களிக்கத்தக்கவரிசைகளனைத்துநல்கி
முன்னவனுகிவைகுமுனிமனங்களிக்குமாறு
தன்னருகணுகவைத்துத்தலத்தெதிரில்லையிந்த
வின்னமுதடுவோற்கென்றானியற்றிறல்விராடன்றானே. (கச)

ஆ செய்யுள் - உ,0௲க.
மற்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# கீசகன்வதைச்சருக்கம்.

அன்னநாளினின்மன்னவன்றேவியாமன்னமென்னடையாரமுதன்னசொற்
சொன்னசாயற்சுதேட்டிணைதன்றிருத்துணைவர்நூற்றொருநால்வரிற்றோற்றமு
மன்னுமாண்மையுந்தேசுஞ்சிறந்துளான்வருதினிக்குத்தலைவன்முன்றோன்றிய
கன்னல்வேளனையான்றன்றுணைவியைக்காணவந்தனன்காண்டகுமேனியான்.()

---

* காயம்—இலக்கு.

தம்பியைப்பெருந்தையலைநூபுரத்தாளின்வீழ்ந்துதகவுடன்மீடனு
மம்பரத்தவர்கற்பகக்காகரந்தவந்தப்புரத்தகன்காவினில்
வெம்புகர்க்களிற்றைவர்தந்தேவியாம்விரதசாரணிமென்மலர்கொய்திளங் [கினள்.
கொம்பொடொத்திடைசோரப்பணைந்தபொற் கொங்கையாளிவன்முன்னர்க்குறு

இயற்கையானகவினுடைப்பாவையையிறைவன்றேவிக்கிளையவன்கண்டனன்
செயற்கையாநலங்கண்டிலன்யார்கொலித்தெரிவையென்றுதன் சிந்தையினோக்கி
னன், மயற்கையாலழிந்தானைம்புலன்களும்வழக்கொழிந்துமதிமருண்டானிணைக்
கயற்கையானக்கயற்றடங்கண்ணியைக்கண்டகாட்சியிற்காமுகனாகியே. (௩)

அருகுநின்றமகளிரைமற்றிவளார்கொலென்னவறியான்வினவினன்
வரிநெடுங்கண்மகளிருமாதரார்வண்ணமாமகளென்றனர்மையலா
லருகுநின்றவக்காளையுநாணமுற்றொடுங்கிநின்றவுயர்தவப்பாவைத
னிருபதங்களில்வீழ்ந்தெனதாவிநீயென்றுமீளவுமெத்தனைகூறினன். (௪)

கூறுகின்றமொழிகளுக்குத்தரங்கொடாதுநின்றதோர்கொம்பரின்வாய்மறைந்
தேறுகின்றபழிகளும்பாவமுமிம்மைதானுமறுமையும்பார்த்திலை
மாறுகின்றிலைசொல்லத்தகாதபுன்மாற்றமின்னமுமன்னுயிர்யாவும்வந்
தாறுகின்றகுடைநிழல்வேந்தனுக்கழிவுசெய்தியறிவிலிபோலுநீ. (௫)

மாரசாயகத்தாலுயிர்மாளினும்வசையிலாதமரபின்வந்தோர்பிறர்
தாரமானவர்தம்முகம்பார்ப்பரோதக்கவர்க்குத்தகவிவையேகொலாஞ்
சோரனாதலிற்சொற்றுயினித்தவிர்சுரேசரைவர்தங்காவலென்றுளிணை
வீரபோவென்னருகுறிலாவிபோம்விழித்திமைக்குமுன்னென்றுவிளம்பினள். ()

பேதையிப்படிக்கூறவுங்காதலனேய்பெருகுசிந்தையன்பின்னையுமன்புறு
வாதரத்தெனதாருயிர்போகினுமமையுமென்றவளம்புயச்சீறடி
மீதுநெற்றிபடத்தொழுதான்வடிவேற்கணாளும்வெகுண்டுவிரைவினிற்
றாதுளங்கனிவாய்முத்தவாணகைச்சுதேட்டிணைப்பெயராளுழைத்துன்னினள். ()

நடுங்குமெய்யினள்பேதுறுநெஞ்சினளாறுநீர்மையளாவினுணீரிலா, தொடுங்கு
மென்மையடன்மையினாற்புனலுகுத்தகண்ணினளோவியம்போன்றுளாள், கடுங்
கண்யானைப்பிடரிருந்திந்நிலங்காக்கும்வெண்குடைக்காவலன்றேவிகே, டொடுங்
கழற்கழலானின்றுணைவனெற்சுட்டியாயிரஞ்சொல்லலசொல்லினன். (௮)

விரதசாரணியென்பதுந்தேவரென்மெய்புரக்கும்விரதமுமிங்குனக்
கிரதமாகவரமலைக்கெய்தமுனியம்பினேனெனையாவருமிச்சியார்
சுரதமாமெகளிரைத்தேடிநின்றுணைவன்வேட்கையுஞ்சோகமுமாற்றிடு
சரதமாகநினையாதொழிநெறிதப்பிலாருயிர்தப்புமென்றோதினள். (௯)

கேகயங்களெனுமெழிற்சாயலாள்கிளந்தவாசகங்கேட்டிடியேறுறு
நாகமென்னநடுங்கியப்பூங்கொடிநயனநீர்துடைத்துற்றதுநன்றெனா
வேகமுற்றமனத்தொடுதம்பியைமிகமுனிந்துதன்வீடணுகாவகை
யேகுகென்றனளென்றலுஞ்சோகமோடேகினானறம்பாவமென்றெண்ணலான். ()

சென்றுதன்மனைபுக்கபின்மன்மதன்செருவினொந்தழிசிந்தையனாய்மலர்
மன்றல்மெல்லணைவீழும்வெம்பாலையால்வருத்ததோவிம்மலரணைதானெனுந்
தென்றறன்னையுந்தீயெனுந்திங்களைத்தினகரன்கொலென்றேங்குஞ்செயலழிந்
தன்றவன்கருப்புவிற்பட்டபாடவனையல்லதையார்படுவார்களே. (௧௧)

பாவிதன்மனைச்சேடியரானவர்பலரும்வந்தபடியுடைமன்னவன்
றேவிதன்னைவணங்கியக்காமுகன்சிந்தைநோயுஞ்செயலும்புகன்றெழிற்
காவியங்கண்ணவனைத்தனதுகண்காணினுந்தணியுங்கடுங்காதலு
மாவியும்பெறுமெய்யனுகானினதாணையென்றனராதரமாற்றுவார். (௧௨)

பாசகாரிகளாமைம்புலன்களும்பரிவுகூரப்பரிந்துயர்ந்தோர்புகல்
வாசகாதிகள்கற்றுந்தெளிந்திலைமதனவேதத்தின்மார்க்கமும்பார்த்திலை
நாசகாலம்வரும்பொழுதாண்மையுஞானமுங்கெடுமோகநுந்தார்முடிக்
கீசகாவென்றழுதனளம்மொழிகேட்டபோதக்கிளிகிகர்மென்சொலாள். (௧௩)

ஆகுலத்தொடுநெஞ்சந்தளர்ந்துதன்னருகினின்றவருந்தகியேநிகர்
மீகுலக்கொடிதன்னிருதாண்மிசைவீழ்ந்துநின்றன்விழியருளுண்டெனிற்
கோகுலத்திலுயர்ந்தவென்காதலன்கோலுநீதியுங்குன்றுவெனதுரை
நீகுலைக்கிலனைத்துமின்றேகெடுநேரிழாயிதுநெஞ்சுறக்கேட்டியால். (௧௪)

இளையனுதலினென்னினியோன்மனத்தெண்ணமின்றியிகன்மதனம்பினு
லளையுமேனியனுகிநின்மெய்ந்நலமாதரித்தின்றடாதுசெய்சீர்மையால்
விளையுமேகொடுவெம்பழியிப்பழிவிளைவுருமல்விரகினைக்காதனேய்
களையுமாறெண்ணினுங்கவலுவியுங்காத்துநின்பெருங்கற்பையுங்காக்குமால். (௧௫)

எண்ணுகின்றனன்யானுன்றுநீமறுதெனதுவாய்மையெதிர்கொண்டிளையவ [ய்
னண்ணுமில்லிடைச்சென்றிந்தாண்மலர்நறைகொண்மாலையை நல்கினைமீளுவா
கண்ணினின்னுருக்காணினுமற்றவன்கன்னமின்புறக்கட்டுரைகேட்பினும்
வண்ணமாமகளேயுயிர்நிற்குமீவாழியேகிவருகெனவாழ்த்தினள். (௧௬)

மொழியலாதமொழியைச்சுதேட்டினைமொழிந்தபோதுமுதுக்குறைவுள்ளவப்
பழியிலாமொழிப்பாவைவெம்பாதகம்பகர்தியென்னைவெருதொழிபாவைநீ
யழிவிலாதபெருங்கிளைக்கல்லல்கூரழிவுவந்ததறிந்திலையென்றுதன்
விழிகளாரஞ்சொரியக்கொடுத்தபூவேரிமாலைகொண்டேகினன்மின்னனுள். (௧௭)

ஆண்டுவந்ததுருபதன்மாமகளடைந்தநாட்டொட்டமரரொரைவரே
நீண்டலன்றியொருவருமென்னைமெய்தீண்டுவாரிலையென்றென்றுசெப்பவு
நீண்டசெங்கைத்தரணிபன்காதலிநினைவிலாமனெறியற்றதம்பிபான்
மீண்டுமெவ்வழியேகென்றுரைப்பதேவிதியையாவர்விலக்கவல்லார்களே. (௧௮)

வேறு.

மாதவள்கீசகன்மனையிலேகவற்
போதகலவுமவன்புலம்பல்போகவும்
பாதமில்வன்றிறற்பாகனூர்ந்ததே
ராதபனுதயவெற்பணுகினனரோ. (௧௯)

தருக்கியகாமுகன்றகாதுசொல்லவே
யுருக்கிளர்சாயலோடுளமழிந்துபோய்
முருக்கிதழ்வல்லிதன்முளரிச்செங்கையா
லருக்கனையிறைஞ்சினளழிவில்கற்பினள். (உ0)

துரங்கமோரேழுடன்சோதிகூர்மணிக்
கரங்களோராயிரக்கவினத்தோன்றினய்
வரங்கொள்வேனின்னையான்மரபுபொன்றுமென்
றிரங்குறுமென்னகத்திடரைநீக்குவாய். (உ௧)

என்றுகொண்டென்றிணைப்பணிந்துமன்றலாற்
கன்றியகீசகக்காலன்முன்புபோய்
மன்றலந்தொடையலும்வழங்கிமெய்வெரீஇ
நின்றனளாணிலைநின்றகற்பினாள். (௨௨)

காமருகுளிரிபைங்கதலிமெல்லடை
தாமரைவலையம்வண்டாதருமல
ராமுறையணைத்துமெல்லமளிமேல்விரித்
திமவல்லெரியின்மேலென்னவைகினான். (௨௩)

சாந்தொடுதண்பனிநீருந்தாமமு
மேந்தியகரத்தினரேழைமார்பலர்
காந்தியகனன்மிசைகாட்டுநெய்யென
வேந்தனதுடலகம்வெதும்பவீசினார். (௨௪)

தாக்கியகாமநோய்தழைக்கவன்புற
நோக்கியதிசையெலாங்காணுநோக்கினான்
பாக்கியநெஞ்சுறப்பலித்ததென்னவே
நீக்கியமடந்தைமுனிற்றல்கண்டுளான். (௨௫)

வந்தனளென்னுடைமாதவப்பயன்
வந்தனளென்னுடைவழிபடுந்தெய்வம்
வந்தனளென்னுடையாவிவாழ்வுற
வந்தனளென்னுடைவண்ணமங்கையே. (௨௬)

வருகநீயருகுறமதுரவாசகந்
தருகநீயிருசெவிதழைக்கவுள்ளநின்
றருகநீதழுவுகவுடலந்தேமுறப்
பருகநீவழங்குகபவளவாயெனா. (௨௭)

கிடந்தவனெழுந்தொருகேடுவந்துரு
மடந்தையைத்தழுவுவான்வந்துசார்தலும்
விடந்திகழ்விழியினாளோடவேட்கையாற்
றொடர்ந்தனனறிவிலாச்சோரன்றானுமே. (௨௮)

ஓடியமடக்கொடியுலகுகாவலன்
சூடியமணிமுடிதுலங்குகோயிலின்
வாடியகொடியெனவந்துவீழ்ந்தன
னீடியவேத்தவைநிருபர்காணவே. (௨௯)

தொழுந்தகைமனுகுலத்தோன்றல்கண்ணெதிர்
விழுந்தழுந்தெரிவையைவேட்கைநோயினா
லழுந்தியகாமுகனச்சமின்றியே
செழுந்துணைக்கைத்தலந்தீண்டவுன்னினான். (௩௦)

உன்னுமவ்வளவையினருளியோன்றடைப்
பொன்னெடுந்தேரவன்புகலமற்றொரு
வன்னெடுங்கிங்கரன்குறைமாருத
மென்னவந்தடித்தபடெடுத்துவீசினான். (௩௧)

கண்டனனிருந்தமன்காவல்வேந்தனு
மெண்டருநெறிமுறையிடாறுகீசகன்
றிண்டிறல்வலிமையுஞ்செயலுஞ்சிந்தையிற்
கொண்டொருவாய்மையுங்கூறவஞ்சினான். (௩௨.)

அடுதொழிற்பலாயனனழுதமின்னையுங்
கடுமையிற்பின்றொடர்காளைதன்னையும்
படருறக்கண்டுதன்பாங்கர்நின்றதோர்
விடவியைப்பிடுங்குவான்வெகுண்டுநோக்கினான். (௩௩)

கனிட்டனதெண்ணமக்கங்கனுங்கிய
முனித்தகையுணர்ந்தவன்முகத்தைநோக்கியித்
தனிப்பெருமாமரந்தழல்கொளுந்திடா
துனக்கடுமிந்தனமன்றென்றோதினான். (௩௪)

நீண்டுதறகாதெனச்செம்மையொன்றிலான்
வேண்டியசெய்வதுவேத்துநீதியோ
வாண்டகையிதற்குநீயல்லவாமெனு
வீண்டொருமொழிகொடாதிருப்பதென்கொலோ. (௩௫)

அன்புடைத்தேவிதன்னருகுதோழியாய்
நின்பெருங்கோயிலினீடுவைகினே
னென்பெருவினையினாலின்றுன்மைத்துனன்
றன்புயவலியினாற்றழுவவுன்னினான். (௩௬)

பெருந்தகையன்றிதுபேசலன்றிநீ
யிருந்தனையுனக்கரசெங்ஙன்செல்வது
வருந்தினர்வருத்தநீமாற்றலாயெனி
லருந்திறலரசநின்னாணையொன்றுமே. (௩௭)

எனவிவள்புலம்பிமெய்யேய்ந்தபூழியுங்
கனதனநனைத்திடுங்கண்ணினீருமாய்
மனமிகமறுகிடமன்னன்றேவிபா
லினைவுடனெய்திவீழ்ந்தேங்கிவிம்மினாள். (௩௮)

பூதலமாண்மையாற்புரக்குமன்னவர்
தீதொழில்புரிஞரைத்தெண்டியாரெனி
னீதியுஞ்செல்வமுநிலைபெறுங்கொலோ
வேதிலர்தமரெனவிரண்டுபார்ப்பரோ. (௩௯)

யாருமில்லொருத்திநின்னில்லில்வைகினு
வார்வமுற்றவள்வயினன்புகூர்வது
வீரமோதருமமோவிருப்பமோவிவை
பூரியரலாதவர்புரிதல்போதுமோ. (௪0)

கீசகனுயினுங்கேடுசெய்தன
னாசைநோய்மன்பதையனைத்தினுக்குமுன்
டேசிதுநினக்குமென்றிருந்தவேந்தொடும்
வாசகம்பலசொனான்மறைவலாளுமே. (௪௧)

முன்றுறமுனிவரன்மொழிந்தவாய்மையு
மின்னலோடமுதவனிசைத்தவாய்மையுங்
கன்னறுமொழியர்கடக்கருத்தழிந்துபோய்
மன்னனுந்தன்றிருமனையிலெய்தினான். (௪௨)

கண்ணெருப்பெழவிருளகந்நெருப்பெழ
வுண்ணெருப்பெழத்தனதுடனெருப்பெழ
மண்ணெருப்பெழவெழுமடையிலெய்தினான்
றின்னெருப்பினுமிகுசினங்கொள்வீமனே. (௪௩)

வேறு.

பன்னிருவரினாடொறுங்கனகபெருப்பதம்வலம்வருந்தேரோன்
மின்னிகர்மருங்குல்விரதசாரணிபால்விளைவுறுதுயரமதுணர்ந்து
தன்னொருமரபிற்றோன்றலைவெறு[illegible]னிப்பெருந்தேர்குடபொருப்பின்
சென்னியினுருளவுருட்டியத்திசையுஞ்சிவப்புறத்தானுமெய்சிவந்தான். (௪௪)

குந்திதன்புதல்வரைவருஞ்சோகமுதிர்ந்திடவிதயமுங்கொதித்தார்
வெந்திறல்வடிவேல்விராடனுந்தனதுவேந்தியல்பொன்றலின்வெறுத்தான்
செந்திருவனையசுதேட்டிணையென்னுந்தெரிவையுந்தெருமரலுழந்தா
ளந்தமாநகரிலனைவருநைந்தாரார்கொலோவாகுலமுறாதார். (௪௫)

அனைவருந்துயின்றுகக்குறும்பானுளானபினமுதகண்ணீரோ
டினைவருதையல்கண்கணீர்மல்கவிறைமகன்மடைப்பள்ளியெய்தி
நினைவருசெற்றமுடித்திடவல்லார்நீயலதில்லையிக்கங்குற்
கனைவருகழலாய்புரிவதியாதென்றுள்காளையுங்கனன்றிவைசொல்வான். (௪௬)

பொறையெனப்படுவதாடவர்தமக்குப்பூணெனப்புகலினும்பொருந்தார்
முறையறப்புரிந்தாலக்கணத்தவர்தம்முடித்தலைதுணிப்பதேமுழுப்பூ
ணறைமலர்க்குழலார்தமக்குமெய்யகலாநாணமேநலஞ்செய்பூணெனினு
நிறையுடைப்பெரும்பூணமளிவாய்நாணநிகழ்வுறுநிகழ்ச்சியேயன்றோ. (௪௭)

அரசவைப்புறத்திற்சௌபலன்சூதிலழிந்தநாளினுமெமையடக்கி
முரசவெங்கொடியோன்றேசழித்தனனாலின்றுமம்முறைமையேமொழிந்தான்
புரசைவெங்களிற்றின்மத்தகம்பிளக்கும்பொருகிர்மடங்கல்போலின்னே
துரிசறப்பொருதுகீசகனுடலந்துணிப்பன்யான்றுணைவரோடென்றான். (௪௮)

மருத்தின்மாமதலைவார்த்தைகேட்டந்தமருச்சகன்மடக்கொடியுரைப்பா
னுரைத்தநாளெல்லாஞ்சிலபகலொழியவொழிந்தனவொழிவிலாவரவோ
யருத்தியோடொருவரறிவுறாவண்ணமிருந்தசேரழிவுறுமென்னுங்
கருத்தினின்றம்முற்குண்மையிற்றடுத்தான்காலமுந்தேயமுமுணர்வான். (௪௯)

பாயும்வெஞ்சிறகிற்கலுழன்முன்பட்டபாந்தள்போற்கீசகன்பதைப்பக்
காயுமதிந்தக்கங்குலிற்கடனன்றொருபகலிருபகல்கழிந்தா
னேயமோடின்றவந்தகந்தருவர்நேர்படமலைந்தனரென்னுந்
தூயசொல்வினையப்பொருவதேயுறுதியென்னவத்திரௌபதிசொன்னாள். (௫0)

ஐயெனவிவனுந்தன்னைமுன்பயந்தவாரழலனையகற்புடைய
னையறன்மொழியைத்தானுமுட்கொண்டதெருசெயல்விருகுடன்சாற்றி
வெய்யதன்சினமுந்தன்புயவலிபோன்மேலுறமேலுறவளர
செய்யுறுகனலிற்பொங்கியக்கங்குலிற்றிருள்வேந்தனுக்கிளையோன். (௫௧)

அன்றைநாளிரவிற்றன் பரிதாபமாறியவறிவுடைக்கொடியு
மற்றைநாளந்தச்சுதேட்டிணைகோயின்மன்னவன்மைத்துனன்வரலுங்
கற்றைவார்குழலிற்பூழியுங்கண்ணீர்கலந்தவான்கொங்கையுஞ்சுமந்தாங்
கொற்றைமென்கொடிபோனின்றனளவனுமுளங்கவரவனிலைகண்டான். (௫௨)

வேறு.

கலைமதிகண்டகாந்தக்கல்லெனவுருகிச்சிந்தை
தலைமகனல்லான்வஞ்சந்தனக்கொருவடிவமானே
னிலைபெறுகற்பினுளைநேருறநோக்கிப்பின்னு
முலைவுறுகாதன்மிஞ்சவுரனழிந்துரைக்கலுற்றான். (௫௩)

மன்னவன்வாழ்வுமிந்தவளநகர்வாழ்வுமெல்லா
மென்னதுவலிகொண்டென்பதின்றுனக்கேற்பக்கண்டா
யுன்னைமெய்காக்குந்தேவருறுதியுமுரனுங்கண்டா
யென்னைகொல்லினியுன்னெண்ணென்றிருகரங்கூப்பினானே. (௫௪)

கருத்தினிமுடியுமென்றுகடுங்கனன்முகத்திற்றோன்று
திருத்தகுபாவையந்தத்தீயவன்றன்னைநோக்கி
வருத்தமீயுறவுமுன்னர்மறுத்தனன்மரபினானுஞ்
சரித்திரத்தானுங்கொண்டதவவிரதத்தினாலும். (௫௫)

கந்தருவருமற்றென்னைக்காப்பதுமறந்தார்போலு
மிந்திரனெனினுமாதரெளிமையினெருப்பட்டெய்தார்
புந்தியிலொன்றுங்கொள்ளேலாரிருட்பொழுதிலின்று
சந்தணிகுவவுத்தோளாய்தனித்துநீவருதியென்றாள். (௫௬)

அக்கொடியுரைத்தமாற்றமவன்செவிக்கமுதமாகிப்
புக்குயிர்கிறுத்திமெய்யும்புளகெழவிளகிநெஞ்ச
மிக்கதோர்வேட்கைகூரவிடுத்தலின்வேந்தன்கோயிற்
கொக்கின்மேற்குயில்கள்கூவுங்குளிர்பொழிற்குறியுஞ்சொன்னாள். (௫௭)

குருட்டியன்மதியினானைக்கோதிலாவறிவின்மிக்காண்
மருட்டினளாகியந்தவளர்தடம்பொழிலினோர்சா
ரிருட்டிடைநிலவுகாட்டுமின்பமண்டபத்தில்வம்மி
னுருட்டடந்தேரோயென்றாளவனுமஃதொருப்பட்டானே. (௫௮)

குறியவன்றனக்குநேர்ந்தகொடியவெங்கொலைவேற்கண்ணா
டறிபொருகளிற்றினன்னசமீரணன்மகனையெய்திச்
செறிவொடக்காளையோடுசெப்பியயாவுஞ்செப்பிப்
பிறிதொருகருத்துமின்றிப்பெரும்பகல்போக்கினாளே. (௫௯)

எல்லையெண்டிசையும்போனவிருளெலாமீண்டுதுன்ற
வெல்லையின்றலைவனானவிரவியுங்குடவெற்பெய்த
மெல்லையில்காதலோனுமிடையிருளிடையேயந்த
வெல்லையைநோக்கிச்சென்றான்யமன்றிசையென்னமன்னோ. (௬0)

வடுவறத்தெவ்வர்போருமன்னவனுணவுங்கையா
லடுதொழிற்குரியசெம்பொன்வரையிரண்டனையதோளா
னுடுமுகத்தின்மைவானமொளியறவிருண்டகங்கு
னடுவுறப்பொழுதிற்செவ்விநவ்வியர்கோலங்கொண்டான். (௬௧)

அங்கியிற்றோன்றுநாளாயணியுடனள்ளிக்கொள்ளப்
பொங்கியவிருளின்முன்னம்புகன்றவப்பொங்கருமே
தங்கியகனகமாடந்தன்னிடைப்புகுந்துசான்ற
விங்கிதத்துடனேநோக்கியிருந்தனனிமைப்பிலாதான். (சுஉ)

அணங்கனையாயலாளையப்புறங்காந்துவைத்து
மணங்கமலழங்கன்மார்பன்மண்டபத்திருந்தகாலைப்
பிணங்கலணிந்ததன்னபேரெழிற்பெற்றியானெஞ்
சுணங்காப்புலரவந்தவ்வுயர்பொழிலூடுசேர்ந்தான். (சுங)

வேறு.

சாந்திரன்மெழுகியதவளமாளிகை
யேய்ந்தபொற்றூணிடையிலங்குமின்னெனச்
சேர்ந்துறைபெண்ணுருக்கண்டுசெந்தையிற்
கூர்ந்தபோரார்வமோடிறைஞ்சிக்கூறுவான். (சுச)

என்பெருந்தவப்பயனென்றறிந்திலேன்
மின்புரைமருங்குலாய்வேட்கைவிஞ்சலாற்
புன்பிழைசெய்தனன்பொறுத்திநீயென
வன்புடன்சிலம்பணியடியில்வீழ்ந்துமேல். (சுரு)

பைங்குலக்குரும்பையைப்பழித்தகொங்கையாய்
மங்குலைப்புழுகளைவைத்தகூந்தலாய்
கங்குலிற்கால்வழிகாணவந்தநின்
றிங்குலப்புறுமெனதாவியீயவோ. (சுசு)

கிஞ்சுகமலர்ந்துநின்கிள்ளைவாய்மையா
லஞ்சலென்றோருரையளித்தல்காண்கிலே
னஞ்சனவிழிக்கடைநயந்தபார்வைகொண்
டெஞ்சுமென்னுயிரினையெடுப்பதென்றுநீ. (சுஎ)

வழிபடுதெய்வமுமற்றுமுற்றுநீ
விழிபடுபிறர்முகமென்றுநோக்கலேன்
கழிபடருற்றதென்காமநோயென
மொழிபலகூறினன்முகம்புகுந்துளான். (சுஅ)

கீசகனிம்முறைகிளந்தபற்பல
வாசகங்கேட்டலுமலங்கொணெஞ்சுடைப்
பூசகர்பூசைகொள்ளாதபுன்பவ
நாசகக்கடவுள்போனகைத்துநோக்கியே. (சுகூ)

பெண்ணுடையுருக்கொளும்பெற்றமாமகன்
கண்ணுடைப்பொறியெழுகனலின்வந்திட
மண்ணுடைக்காவலன்மைத்துனன்றனை
யெண்ணுடைக்கைகளாலிருகைபற்றினன். (எ0)

பற்றினன்பற்றியபாணியாலெழச்
சுற்றினன்கரங்கெனத்துணைமொன்றினோ
டெற்றினன்சென்னியையெடுத்ததன்வினை
முற்றினனெடும்பெருமூச்சனுகியே. (எக)

வீமனைப்பிடித்தகைவிலக்கிமற்றவன்
மாமுகத்திருகையுமாறிமோதினான்
நீமுகத்தவனையச்செம்மன்மீளவுஞ்
சாமுகத்தவனெனத்தள்ளிவீழ்த்தினான். (எஉ)

ஓரொருகுத்தெரியுருமுவீழ்ந்தென
மேருவோடொத்ததோள்வீமன்குத்தலு
மீரிடத்தினும்விலாவெலும்புநெக்கன
கூருகிர்த்தலைகளாற்குருதிகக்கவே. (எங)

கேளொடுகெடுதருகீசகன்கழற்
றாளொடுதாளுறத்தாக்கிமற்கெழு
தோளொடுதோளுறத்தோய்ந்துகன்னல்வில்
வேளொடுவருநலம்விஞ்சமேவினான். (எச)

தாழ்வரைத்தடக்கையாற்றையலாளெதிர்
காழ்வரப்பொருதிறற்காளைதன்னையுஞ்
சூழ்வரச்சுறையிற்சுற்றிப்பார்மிசை
வீழ்வரப்புடைத்தனன்மிடலில்விஞ்சினான். (எரு)

விழுந்தவன்மீளவும்வெய்துயிர்த்தன
னெழுந்துதன்பகைவனதிருண்டகுஞ்சியை
யழுந்தவல்விரல்களாற்சுற்றியாய்மரக்
கழுந்தெனப்புடைத்தனன்கைகள்சேப்பவே. (எசு)

புடைத்தனனவனிவன்புடைத்தகைகளை
விடைத்தனனகற்றிமெய்ம்மேவுபூதியுந்
துடைத்தனனாகியத்தோன்றல்வாயினை
யுடைத்தனனொருகையாலொருகைபற்றியே. (எஎ)

வீரமும்வலிமையும்விரகுமொத்தவர்
தீரமுந்தெளிவுநாஞ்செப்பற்பாலவோ
நேரமுஞ்சென்றதுநிசையெனுமிகு
சூரமுஞ்செற்றமுமுடையதோன்றலே. (எஅ)

மன்னவன்மைத்துனன்மார்பொடிந்திடச்
சென்னியுந்தாள்களுஞ்சேரவொன்றிடத்
தன்னிருசெங்கையாற்றுக்கிவான்றசை
துன்னியமலையெனச்சுருக்கினானரோ. (எகூ)

மாற்றினனவன்பெருமையலாவியைக்
கூற்றினார்கைக்கொளக்கொடுத்துத்தன்சின
மாற்றினனத்திறலார்கொல்வல்லவர்
காற்றினல்வருதிறற்காளையல்லதே. (அ0)

பண்ணியவினைகளின்பயனலாதுதா
மெண்ணியகருமமற்றியாவரெய்தினார்
திண்ணியகீசகன்செய்ததிங்கவன்
புண்ணியமானதாற்புகல்வதென்கொலாம். (அக)

செங்கைகாலுடலொடுசென்னிதுன்றிட
வங்கையாலடக்கினின்றநேகமாயிரம்
வெங்கையானையின்மிடல்வீமன்வெற்பன
கொங்கையாடன்னையுங்கூவினனரோ. (௮௨)

பூங்கொடியனையவள்புறவடிப்புறத்
தோங்கியகீசகனுடற்பிழம்பினை
நீங்கியவாய்மைகணிகழ்ந்ததென்னவே
பாங்கினில்வைத்தடற்பவனன்மைந்தனே. (௮௩)

விடுங்குழைமராமரமொன்றுவேருடன்
பிடுங்கினன்கைகளாற்பிசைந்துநீயெழச்
சுடுங்கொலென்றஞ்சிலன்சுவாலைசெய்தன
னெடுங்கணாள்கண்டுதன்றுயரநீங்கவே. (௮௪)

வேறு.

தோட்டுமென்மலர்ச்சோலையினோதையு
மோட்டுவன்காமுட்டியினோதையு
மாட்டுவண்சுதைமண்டபத்தோதையுங்
கேட்டுணர்ந்தனர்கீசகன்றம்பிமார். (௮௫)

தொய்யிலாதிசுதேட்டிணைக்கொப்பனை
கையிலாழகேறக்கவின்செயுந்
தையலாள்பொருட்டாகத்தனக்குறு
மையலான்மிகவாடிவருந்தினான். (௮௬)

வண்டருந்தமலர்க்குழல்வல்லியைக்
கண்டகாவிலிக்கங்குற்பொழுதிடைச்
சண்டவேகக்களிறன்னதன்மையான்
கொண்டமாலிற்குறுகினன்போலுமால். (௮௭)

நாவிவாசந்துளிமதுச்சோலையி
லேவலாலியற்றுமெழிற்பாவைமெய்
காவலாகியகந்தருவப்பெயர்த்
தேவரால்வெஞ்செருவுளதானதோ. (௮௮)

அழிந்தகீசகனன்றிமற்றுண்டென
மொழிந்ததம்பியர்நூற்றொருமூவருங்
கழிந்ததீயுமிழ்கண்ணினராயுயி
ரொழிந்துபோதுமென்றுன்னினரோடினார். (௮௯)

நகரியெங்கும்வெருவரநள்ளிரு
ளகருமாறுபன்னூறொளித்தீபமோ
டகருநாறுதண்காவிலரும்பக
லிகருமென்னநெருங்கினர்நாடினார். (௯௦)

சுதைநிலாவொளிரும்மண்டபத்திடைச்
சிதையுமெய்யொடுஞ்செம்பொற்சிலம்பெனக்
கதைவலான்வெட்கெடுங்கொடுங்கைகளால்
வதைசெய்தம்முன்வடிவுகண்டார்களே. (௯௧)

பழுதுடைப்பெரும்பாதகன்மாண்டமை
தொழுதுரைத்துச்சுதேட்டிணைதன்னொடு
மழுதரற்றியயலறியாவகை
யெழுதழற்கணிடுவதற்கெண்ணினர். (கூஉ)

எண்ணிலாமனத்தெம்முனையெண்ணுடை
விண்ணுளார்சிலர்வீத்ததற்கேதுவாம்
வண்ணமாமகடன்னையும்வன்னியா
லண்ணலோடுமடுதுமென்றார்களே. (கூங.)

சொல்லுமாடவர்சொல்லினராயினுங்
கொல்லுமோகனமுன்பெற்றகோதையை
மல்லன்மாலையினார்வந்துபற்றலு
மல்லல்கூரவரற்றினளாலவள். (கூச)

வெருவருங்கருங்கங்குலில்வெங்கொலை
நிருபரென்னைநெருப்பிடைவீழ்த்துவான்
கருதினார்கண்மெய்காக்குங்கடவுள்காள்
வருதிரென்றுகண்வார்புனல்சோரவே. (கூரு)

மடைப்பெரும்பள்ளியெய்தியமாருதி
கிடைப்பதன்றிக்கிளர்பெரும்போரெனத்
தொடைப்பெரும்பவனத்தனல்சோர்தரப்
புடைப்பவோடினன்போர்மதமாவனான். (கூசு)

அகப்பொழிற்கண்டவம்மரம்யாவையு
மிகப்பிடுங்கினன்வேரொடுங்கோட்டொடு
முகப்புடைத்தனனோடத்தொடங்கினர்
தகச்செயாமதிக்கீசகன்றம்பிமார். (கூஎ)

போனபோனதிசைதொறும்போய்த்தொடர்ந்
தானவானவனெக்கவக்கோட்டினான்
மானமும்மவராவியும்வாங்கினு
னேனையோர்களுந்தம்முனைடெய்தினர். (கூஅ)

துவன்றகற்புடைத்தோகையைவிட்டுமுன்
னுவன்றகீசகர்நூற்றொருமூவரு
மவன்றன்வாகுவினலழிவுண்டபின்
கவன்றதாலக்கடிநகரெங்குமே. (கூகூ)

கற்கும்யாழுடைக்கந்தருவர்க்கெதிர்
நிற்பரோவுடனேர்பொரமானவர்
கிற்குமைந்துடைக்கீசகர்யாவருந்
தற்கினன்மடிந்தார்தகவொன்றிலார். (௪00)

என்றுமாநகர்யாவுநடுங்கிடத்
துன்றுகங்குலிற்சோரார்தம்மாருயிர்
பொன்றுவித்தபொருநனும்பூவையுஞ்
சென்றுதத்தமசேர்விடநண்ணினர். (௪0க)

கரியகங்குல்கனையிருட்போர்வையோ
டரியவந்தவிருள்வலிதன்னினும்
புரியினன்றுபுரிந்தவப்போரும்வன்
கிரியின்மன்றுங்கிளர்விளக்கானதே. (௧௦௨)

புலியினும்பெரும்போரிற்றனித்தனி
வலியராகியமைத்துனர்யாரையும்
பலியிடுங்கந்தருவரைப்பார்க்கவே
மெலிவுழந்தனன்விற்கைவிராடனே. (௧௦௩)

காண்டருந்தமவேடங்கரந்துறை
யாண்டுசென்றதினிச்சிலநாளென
மீண்டுதோன்றுதுமென்றுவிரதராம்
பாண்டுமைந்தரும்பாண்மையினண்ணினார். (௧௦௪)

ஆ. செய்யுள் - ௨,௧௩௫.

கீசகன்வதைச்சருக்கமுற்றிற்று.

---

# நிரைமீட்சிச்சருக்கம்.

---

தொழுவார்தம்வினைநீரமுற்கோலமாய்வேலைசூழ்பாரெயிற்
றழுவானைநன்றுமமொன்றாயினுங்கற்றோருருவோதினார்
வழுவாதசராசரராகபுள்ளாகமாவாகபுன்
புழுவாகவொன்றிற்பிறந்தாலுநாகிற்புகார்காணுமே. (௧)

மூதாரழற்பாலைவனமுந்தடஞ்சாரன்முதகுன்றமுஞ்
சூதாடியழிவுற்றடைந்தோர்கள்சரிதங்கள்சொன்னேமினிப்
பாதாரவிந்தத்துமருவார்விழக்கண்டுபோராளும்வெங்
கோதார்மனத்தோன்விராடன்றனிரைகொண்டகோள்கூறுவாம். (௨)

ஈராறுமொன்றுஞ்சுரர்க்குள்ளநாள்சென்றவினிநம்முடன்
பாராளவருமுன்னரடலைவருதுறைநாடுபோர்மின்களென்
றோராயிரங்கோடியொற்றாள்விடுத்தானவ்வொற்றாள்களும்
வாராழிசூழெல்லையுறவோடிவிரைவின்கண்வந்தார்களே. (௩)

காடென்றுமலையென்றுநதியென்றுகடலென்றுகடவாவடைசூழ்
நாடென்றுநகரென்றுநாடாததிசையில்லைநாடோறும்யாந்
தோடென்றுதாதென்றுதெரியாதுமதுமாரிசொரிமாலையாய்
நீடென்றுவலமேவுமவனிக்குளவரில்லைநின்பாதமே. (௪)

முன்னொற்றையிருசங்கமுடனூதவெதிர்சென்றுமுனைவெல்லுமா
மன்னொற்றரிதுகூறமந்தாகினிமைந்தன்மகன்மைந்தனுக்
குன்னொற்றருணர்தற்குவருமோவறன்காளையுறைநாகோர்
நின்னொற்றமறையுண்டுவிலைவண்டெனத்தேடும்விரகோதினன். (௫)

ஒற்றுளிலொருவன் பணிந்தென் றுமெவ்வாழ்வுமுண் டாகியே
விற்றுனவெம்போர்விராடன் றன்வளநாடுமேம்பட்டதான்
மற்றுழ்புயக்கீசகன்றுனுமொருவன் ணமகள்காரணத்
திற்றுனெனுஞ்சொல்லுமுண் டென் றுநிருபற்கெடுத்தோதினுன். (சு)

வண்டார்விராடன்றன்வளநாடுதண்டான்மலைந்தேதொறுக்
கொண்டாலவன்சூழலிற்சூழும்வினயங்குறிப்போரிருப்
புண்டாகினிரைமீளுமின்றுகின்மீளாதென்னுட்கோளிதென்
றெண்டாழுமிதயத்துநிருபற்குரைத்தானிரவிமைந்தனே. (எ)

தக்கோர்தகுஞ்சொற்கள்கேளாததுரியோதனன்சொல்லினுன்
மிக்கோர்மிலைச்சுஞ்செழுந்தாமவிறல்வெட்சிமிலைதோளினுன்
றிக்கோதையெழவிம்மமுரசங்களரசானதிரிகத்தர்கோ
னக்குரோணிபடையோடுபோயானடித்தானவன்சார்பிலே. (அ)

கரைகாணவரிதானகடலொத்தவெஞ்சேனைசூழவுந்
தரைகாவல்பெறுதோளினுண்மைப்பெருங்கேளிர்தற்சூழவும்
விரைகாலுமலரோடையெனுமாறிருக்கும்விராடற்குநன்
னிரைகாவனின்றோர்பணிந்தோதினுர்தெவ்வர்நிரைகொண்டதே. (கூ)

செருமிக்கபடையோடுசெதியாகமதியாதுதிரிகத்தர்கோ
னிருமிக்கவொட்டாதவென்பூமிதனில்வந்துநிரைகொள்வதே
பருமிக்கமதயானைதேர்வாசியாளின்னபண்செய்யுமென்
றுருமிக்கமுகில்போலுரைத்தானெரக்குரோணியுளதானையான். (கo)

ஒண்மேளிவானம்புதைக்கப்பல்லியசாலமொலிபட்டிடத்
திண்டேயணியாகநிரைகொண்டவெஞ்சேனைசென்றெய்தினுன்
ஞெண்டேரும்வயறோறும்வளைநித்திலஞ்சிந்திநிலவூரவே
வண்தேமலருந்தடம்பொய்கைசூழ்மச்சவளநாடனே. (கக)

உட்பேடியாய்வைகும்விற்காளையல்லாதவொருநால்வரு
நட்பேறுபூபாலனுடனேகினுர்போர்நலங்காணவே
கொட்பேறிநிரைகொண்டவெஞ்சேனையுஞ்செல்கொடுஞ்சேனையும்
பெட்பேறியமர்செய்யமுன்னிட்டகுருசேனைபின்னிட்டதே. (கஉ)

மெய்க்கொண்டபுண்ணேடுதன்சேனைநில்லாமல்வென்னிட்டபின்
கைக்கொண்டநிரையைக்கடத்திப்பொலம்பொற்கழற்காலினுன்
செய்க்கொண்டகழுநீரலங்கற்கரந்தைத்திருத்தாமன்மேன்
மைக்கொண்டலெனவில்வளைத்தாறுபத்தம்புமழைசிந்தினுன். (கங)

மாமச்சவுடல்புன்புலான்மாறிவண்காவிமணநாறுமக்
கோமச்சவளநாடனுங்கொற்றவரிவிற்குனித்தைந்துசெந்
தாமச்சரங்கொண்டுதேர்பாகுகொடிவாசிதனுவுந்துணித்
தாமச்சமுறமற்றவன்கோலமார்பத்துமம்பேவினுன். (கச)

தனைத்தேரழித்தோனைநிரைகொண்டுபோகின்றதனுவீரனுந்
துனைத்தேரும்வேறுென்றுமேல்கொண்டுநாலைந்துதொடையேவியே
வினைத்தேரும்வயமாவும்வெம்பாகும்விழவெய்துவின்னுணினுன்
முனைத்தேர்முகத்திற்பிணித்தானவன்சேனைமுகமாறவே. (கரு)

வேறு.

திண்டிறற்சிலைவிராடனைத்தேரொடும்பிணித்துக்
கொண்டுபோதலுங்குருகுலக்கோமகமுனிவன்
கண்டுதன்றிருத்தம்பியைக்கடைக்கணித்தருள
மண்டுதீயெனவெழுந்தனன்மடைத்தொழில்வல்லான். (கசு)

உடற்றினின்றதோரேறதையோடேறதையாந்தரதை
நகத்தினுயர்நகங்களைநருக்குமாபோலத்
திகத்தபூபதிதேரினைவேறொருதேராற்
றகர்த்துவில்லொடுமகப்படுத்தினனவன்றனையும். (கஎ)

வீரியந்தனக்கொருவனும்விராடனையொருபொற்
றேரிலேறுகென்றேற்றியத்தேரினிற்றிகத்தன்
சோரிபாய்தடந்தோள்களைவடத்தினாற்றுவக்கி
மூரியேறெனமீண்டனன்முறிந்ததச்சேனை. (கஅ)

பொருமுகத்தினிற்பகைவனைப்புயமுறப்பிணித்து
வெருமுகத்தினில்விடுகொள்வீமனைவிராடன்
செருமுகத்தினிலெனக்குநீசெய்தபேருதவிக்
கொருமுகத்தினுமில்லைகைம்மாறெனவுரைத்தான். (கக)

சேவலானெனத்தயித்தியனனையவத்திகத்தர்
காவலானையக்கான்மகன்பிணித்தமைகண்டு
மாவலான்வயமாப்பதினாயிரம்வாரக்
கோவலானவன்கொண்டகோமீளவுங்கொண்டான். (உ௦)

துன்னலன்றனைத்தோளுறத்துவக்கிமுன்றந்த
பன்றுநான்மடைப்பலாயனற்கண்டுபோவித்தாங்
கன்னகாலையிலருக்கனைத்தேரொடுமணைத்து
மன்றுதன்றிசைவன்சிறைப்படுத்தினன்வருணன். (உக)

கங்கனென்றுதன்னருகிருந்தருளியகடவுட்
செங்கமாமுனிசொற்படிதோள்வடநெகிழ்த்துச்
சிங்கமன்னவத்திகத்தனைச்செல்கெனவிடுத்தா
னங்கமாமதிலயோத்திமன்றேருமொன்றளித்தே. (உஉ)

போரணிப்படையொடுமவன்போனபின்றனது
தோணிப்பெருஞ்சேனையைரவிகுலதிலகன்
போணிப்படவருத்துமற்றியாரினும்பெரியோ
னீரணிப்படைவருமெனக்கங்குலங்கிருந்தான். (உஙு)

கேட்டவெம்படைகெட்டமைசுயோதனன்கேளா
முட்டவெண்டிசாமுகங்களும்பேரிகைமுழங்கத்
தொட்டபைங்கடற்சூரியன்றோன்றுமுன்றோன்றி
வட்டமாமதில்விராடனூர்வடாதுறவளைந்தான். (உச)

வளையகாடெலாமன்னவன்வருதினிபரப்பி
விளையுநன்பெருவிளைவெலாம்வெங்கனல்கொளுத்தி
யளையுமாமணியானிரைகவர்தலுமாய
குளையவேடிவர்தூர்புகுந்தத்தாற்குரைப்பார். (உரு)

குடநிறைப்பனகுவிமுலைக்கோநிரைமீட்பான்
றிடனுடைப்புயமன்னவன்றென்றிசைச்சென்றான்
வடதிசைப்புலமுழுவதுமாசுணக்கொடியோ
னடல்வயப்படையாழியிற்பரந்ததையன்றே. (௨௬)

நாட்டிலுள்ளனபலன்களுங்கவர்ந்தனர்நறுந்தண்
காட்டிலுள்ளனசுரபியின்கணங்களுங்கவர்ந்தார்
கூட்டிலுள்ளுறைகலுழனின்குஞ்சுபோலினிநீ
வீட்டிலுள்ளுறைகின்றதென்வேந்தன்மாமதலாய். (௨௭)

என்றபோதிலப்புதல்வனைப்பரிவுடனீன்றா
ணின்றமங்கையர்தங்களைநிரைநிரைநோக்கிச்
சென்றகாவலன்வருந்துணைசெங்கையிற்படைகொண்
டொன்றவேகிநம்மெயிற்புறங்காமினென்றுரைத்தாள். (௨௮)

உரைத்தவன்னையைக்கதுமெனவுத்தரன்வணங்கி
நரைத்தவோதிநின்றகுமொழிநன்றெனநகையா
வரைத்தவாரமுமாரமுமாலையுமணிந்தென்
வரைத்தடம்புயம்வளர்த்ததுமகளிர்போர்பொரவோ. (௨௯)

கனைகடற்படையுடனிரைக்கணங்கவர்ந்தவரை
முனைபடப்பொருதிமைக்குமுன்முதுகுகண்டிடுவேன்
வினைமுகத்தினையறிந்துதேர்விசையுடன்விடவென்
னினைவொடொப்பதோர்சாரதிநேர்ந்திலனென்றான். (௩0)

உத்தரன்புகலுறுதிகேட்டொப்பனைக்குரியாள்
கொத்தரம்பொருகூரயிற்குமரனைக்குறுகி
வித்தரம்பெறுதேர்விடும்விசயனுக்கிவளென்
றத்தரம்பெறுபேடியைக்காட்டினளன்றே. (௩௧)

நாடிவாசியினல்லனநான்கவைபூட்டித்
தேடியாயுதஞ்சிலைமுதற்றெரிந்தவைகொண்டு
கோடிகோடிபைங்கோதையர்சூழீஇயினர்வாழ்த்தப்
பேடிதேர்விடச்சென்றனன்சுதேட்டிணைபிள்ளை. (௩௨)

விலங்கன்மாமதில்களும்புறவீதியுங்கடந்தாங்
கிலங்குநேமியொன்றுடையதேரென்னலாந்தேர்மேற்
றுலங்குபேரொளியருக்கனிலுருத்தெழுதோற்றத்
தலங்கலுத்தரனுத்தரதிசையைவந்தடைந்தான். (௩௩)

விண்கொளாமதிமேன்மைகொண்மீனினமென்ன
மண்கொளாவிறன்மன்னுடைவரம்பில்வான்படையை
யெண்கொளாமனத்திராகவன்றிருக்குலத்திளைஞன்
கண்கொளாவகைபுகுந்துதன்கண்ணுறக்கண்டான். (௩௪)

கைந்நடுங்கவுங்கானடுங்கவுங்கருத்தழிந்து
மெய்ந்நடுங்கவுநாப்புலர்ந்துயிர்ப்புமேல்விஞ்சிச்
சொன்னடுங்கவுஞ்சுடர்முடிநடுங்கவுஞ்சோர்ந்தான்
மைந்நெடுங்களிற்றானுடைவிராடர்கோன்மைந்தன். (௩௫)

அஞ்சலசஞ்ஞிபகைவரையாருயிரடுநெ
ருஞ்சவென்றிவையிரண்டலாற்றுணிவுவேறுண்டோ
வெஞ்சமந்தனில்வந்துபுண்படாநினியீண்டால்
வஞ்சநெஞ்சுடைவஞ்சியரென்சொலார்மறவோய். (௩௬)

நிலையுமுட்டியுநிலைபெறநின்றுநேர்படத்தின்
மிலைவளைத்துவெஞ்சிலிமுகஞ்சிற்சிலதொடுத்து
மலைவிலக்கெனயாரையுமலைந்திடுமலைந்தா
லிலைாடற்புவியாசரிலாரெதிர்நிற்பார். (௩௭)

துண்டுமாவிவைசொரிமதக்களிறிவை துரங்கம்
பூண்டதேரிவைபதாதிமற்றிவையெனப்புகல
வீண்டுநின்றவையாவையுமியாவெனத்தெரியா
மீண்டுபோவதேயுறுதியென்றனனிகல்வீரன். (௩௮)

வெயர்த்தமேனியைநறும்பனிநீரினால்விளக்கி
யயர்த்துநீமுதுகிடாதொழியிமைப்பொழுதையா
வுயர்த்தபல்கொடிப்பகைஞரைத்தனித்தனியோட்டிப்
பெயர்த்துநல்குவேனிரையுமென்றுரைத்தனள்பேடி. (௩௯)

கொடித்தடந்தனித்தேரினின்றுலகத்துமுன்குறியா
வடித்தலம்பிடரடித்திடவோடலுமவனைத்
தொடித்தடம்புயமிரண்டையுந்தொடர்ந்துபோய்த்துவக்கிப்
பிடித்துவந்தொருகொடியினிற்றேருடன்பிணித்தான். (௪0)

பிணித்ததேரினைப்பெற்றமும்பிற்படக்கடாவித்
திணித்தரும்பெரும்பொதும்பரிற்சேர்த்தியசிலையுந்
துணித்தமேவலர்முடியுகுசோரிதோய்தொடையுங்
கணித்தவெல்லையிற்கொண்டுமீண்டமர்க்களங்கலந்தான். (௪௧)

எரிப்புறத்தருத்தருபடையாவெனவினவக்
கிரிப்புறப்பெருங்கானுறைகிரீடியவென்னத்
தெரிப்புறப்புகலெவ்வயிற்சேர்ந்தனனவனென்
றரிப்புறத்தடங்கண்ணியைக்கேட்டனனவனும். (௪௨)

கிரீடியென்குளனென்றெனக்கேட்டநீகேண்மோ
விருடியாகிநின்றுதையோராசனத்திருக்கும்
புருடனிப்பதிபுகுந்தநாள்வந்துடன்புகுந்தோ
ரரிடமானதன்விதியினாற்பேடியுமானான். (௪௩)

யாண்டுசென்றிலதின்னமுமீரிருகடிகை
வேண்டுமாவினியீண்டையவ்விசயனுந்தோன்று
மீண்டுபோகவிவிடுவிடுவிரைபரித்தடந்தேர்
தூண்டுகீயெனத்தோளிலத்துவக்கையும்விடுத்தான். (௪௪)

அறிந்துநாள்விழுந்தெழுந்தபின்னுங்கவனருளாற்
செறிந்தமால்பெறுஞ்சிறப்பையச்சிறுவனும்பெற்றுப்
பிறிந்தபற்பலபோரணிநால்வகைப்படையு
முறிந்துபோகவத்தேர்விடுதொழிலினின்றுண்டான். (௪௫)

ஓடினானுமித்தேர்விரைந்தூர்பவனம்மா
பேடிநாமுதலையுறும்பெருந்தகையென்று
நாடினார்பலர்நந்தியாவத்தநாண்மாலை
சூடினானெடுஞ்சேனையிற்றுரோணனேமுதலோர். (௪௬)

பேடியென்றுதன்பெண்மையையாண்மையாற்பிறர்கொண்
டாடவந்தவெஞ்சாபமுந்தொடிக்கையிலாக்கிக்
கோடியம்புகளோரொருதொடையினிற்கோத்து
வீடுவிப்பனீயஞ்சிடாவிடுகதேரென்றான். (௪௭)

என்றபோதிவன்றேரினையிமைப்பினிற்செலுத்தச்
சென்றுபோர்முனைச்சிலைவிடுசிலீமுகங்களினாற்
கொன்றபோர்மன்னரீறிலர்குருகுலத்தவராய்
நின்றபோர்முடிமன்னருஞ்சுளித்துளநெளித்தார். (௪௮)

அன்றுபோலலனருச்சுனனம்பிகாபதிபாற்
றுன்றுபோர்புரிதவத்தினாற்சுடுகணைபலபெற்
றன்றுபோரினாலவுணரையமரருக்காக
வென்றுபோனகநுகர்ந்துபொற்றருமலர்வேய்ந்தான். (௪௯)

தன்னிலத்தினிற்குறுமுயறந்தியின்வலிதென்
றிந்நிலத்தினிற்பழமொழியறிதிநீயிறைவ
வெந்நிலத்தினுமுனக்கெளிதாயினுமிவர்நந்
நன்னிலத்தினில்வரவமர்தொடங்குதனன்றால். (௫0)

என்றுகூறினன்விதுரனுமேனையங்கருகு
நின்றவீடுமன்றுரோணனுநினைவிதுவென்றா
ரன்றுநாகவெங்கொடியவன்கொடியநெஞ்சழன்றான்
குன்றமாயினுநீறெழுமருகுறக்குறுகின். (௫௧)

தேருமங்கொருதேர்தனித்தேரின்மேனின்று
வீரவெஞ்சிலைவளைத்தகைவீரனும்பேடி
யாருநெஞ்சழிந்தஞ்சுவதென்கொலென்றிசைத்தான்
சூரன்மாமகனாகியசூரரிற்சூரன். (௫௨)

கொண்டகோநிரைகோவலர்கொண்டுமுன்போகத்
தண்டுநிற்கெனத்தம்பியரனைவருந்தானுந்
திண்டிறற்பெரும்பேடியைத்தேர்மிசைக்கண்டு
மிண்டுவீரெனக்கூறியேசுயோதனன்மீண்டான். (௫௩)

மானமாமுடிமன்னரைவிலங்கிவல்விரைந்து
கோநிரைக்குலங்கொண்டுபோங்கோநிரைதுரந்து
போனபேடிவெம்பூசலும்பொழுதுறப்பொருது
ஆநிறத்திளங்கன்றுடைத்தொறுக்களுமீட்டான். (௫௪)

முந்தவான்றொறுமீட்டலுமுற்கவர்பொதுவர்
வெந்தநெய்யெனவாரவமடங்கினர்மிகவு
மந்தநெய்யினிற்பாற்றுளியுகுத்தெனவார்த்தார்
வந்தமச்சர்கோமகனொடும்வந்தகோபாலர். (௫௫)

பாலெடுத்தபொற்குடங்கர்மடியினபருவச்
சூலெடுத்தநல்வயிற்றினமழவிடைதொடர்வ
கோலெடுத்திளங்கோவலர்கூவினர்துரப்ப
வாலெடுத்தனதுள்ளிமீண்டோடினவனமே. (ருசு)

கடிகைநாலுடன்சென்றபின்கடைசிவந்தகன்ற
நெடியகண்ணியன்றிட்டவெஞ்சாபமுநீங்கக்
கொடியின்மீதெழுமனுமனைக்குறிக்கவக்கொடியு
முடிகொடன்றனியிரதமுமுன்வரக்கண்டான். (ருஎ)

உரியதேரினைமீதுகொண்டுத்தரன்செலுத்தக்
கரியமேனியன்செய்யதாமரைத்தடங்கண்ணன்
புரியவாங்கியசிலையினனின்றனன்பொலம்பொற்
கிரியின்மீதெழுமரகதகிரியெனக்கிளர்ந்தே. (ருஅ)

படங்குறும்பனிபுதைத்தலிற்பரிதிதன்னுருவ
மொடுங்குமாறெனவொளித்ததன்பேருருவொழித்து
நெடுங்கொடுங்கணைகிருபன்வெஞ்சேனையின்வேந்தர்
நடுங்குமாறுமுன்றோன்றினனரனெனுநாமன். (ருகூ)

செருச்செய்வான்வருசேனைவெண்டிரையையுங்கடப்பான்
பருச்சிலம்பினின்றுகைதருபாவனைபோல
வருச்செழுஞ்சுடரெறிப்பநின்றுலாவினனுண்மைக்
கருச்சனன்றடந்தேர்க்கொடியாடையிலனுமன். (சு0)

மருமிருந்தொடைத்தடம்புயமகபதிமதலை
பெருமிதம்படவலைத்தவிற்பிறங்குநாணொலியாற்
செருமியெங்கணுங்கரிபரிதேர்மிசைநின்றோ
ருருமின்வெங்குரல்கேட்டகோணாகரோடொத்தார். (சுக)

குறித்தசங்கொலிசிங்கநாதத்தொலிகுனிவிற்
செறித்தநாணொலிசெவிப்படச்சிந்தனைகலங்கிப்
பொறித்தபாவையினுத்தரன்பொறிமயக்குற்று
மறித்தும்வீழ்ந்தனன்மாவிடுதொழிலையுமறந்தே. (சுஉ)

தாழ்ந்தவாடையினுயர்கொடித்தண்டுடைத்தேர்மேல்
வீழ்ந்தபாகனைமீளவும்விரகுறத்தேற்றிச்
சூழ்ந்ததன்பெருந்துணைவனைச்சூதினுற்றுறந்து
வாழ்ந்தமன்னன்மேலேவினன்வரிசிலைவல்லான். (சுந)

மச்சநாடன்மாமதலையுமன்னவன்மொழியா
லச்சமற்றிருந்தளவுகோலருணனிற்கொள்ள
வச்சவானிடைப்பகலவனூர்ந்ததேர்பூண்ட
பச்சைவாசியினோடினசுவேதவெம்பரிமா. (சுச)

உரவினும்வடமேருவைக்கொடுமுடியொடித்து
விரவியென்பெருந்தாதைநின்றாதையைவென்றான்
பரிவினின்னையான்வெல்வனென்றவனிபன்பதாகை
யரவமற்றிவன்பதாகையிலனுமன்வந்தடுத்தான். (சுரு)

வட்டமாகவில்வளைத்தெதிர்மண்டலநிலையாய்த்
தொட்டவாளியானடிமுதன்முடியுறத்துணிப்புண்
டிட்டமாமணிக்கவசமும்பிளந்தெதிருள்ளார்
பட்டொழிந்தனரொழிந்தவர்யாவர்புண்படாதார். (௬௬)

வேகவற்றியநதியனவிதநடைப்புரவி
பாகவற்றினைத்தலையறமலைந்துபாழ்படுத்தி
மாகவற்றினிற்பொய்த்தருதாடியவஞ்ச
நாகவற்றியபுன்மொழிநிருபனைநகைத்தான். (௬எ)

பாரும்வாசியுவமைந்ததோர்தேர்மிசைப்பாய்ந்து
மாகுருகுழவுந்தப்பியவரிநிறமாபோ
லேகுகின்றபேரிராசராசனையெதிர்தகைந்து
கோகுதட்டிதெனஞ்சயனிவையிவைகூறும். (௬அ)

வே று.

கார்முகங்கைத்தலத்திருப்பக்கைம்மிகு, போர்முகந்தன்னினிபுறந்தந்தேகினு
ஊர்முகக்களிற்றின்மேலுலாவும்வீதியின், வார்முகக்கனதனமாதரென்சொல்வார்.

இருபுறஞ்சாமரமிரட்டத்திங்கள்போ, லொருகுடைநிழற்றவிவ்வுலகநின்னதா
மருவலர்கைதொழவாழுகின்றநீ, பொருமுனைகாண்டலும்போதல்போதுமோ. ()

உன்பெருந்துணைவரோடென்னையோர்கணத், தென்பெருங்கணைகளுக்கிரைகளாக்குவேன், வன்பெருங்கொடிமிசைமடங்கலேற்றினன், றன்பெரும்வஞ்சினந்தப்புமேகோலாம். (எக)

எங்களைக்கானில்விட்டிரவியேகவெண், டிங்களைப்போனெடுந்திகிரியோச்சினீர்
சங்களைபயில்வளநாடன்றண்டினு, லுங்களைக்களப்பலியூட்டுகோளையே. (எஉ)

இரவலரிளையவரேத்துநாவலர், விரவியதூதுவர்விருத்தர்வேதிய
ரரிவையர்வெஞ்சமரஞ்சுவோர்பெருங், குரவரென்றிவர்களைக்கோறல்பாவமே. ()

பற்பலவுரையிவன்பகருமெல்வையிற், சொற்பயினுன்மறைத்துவசன்வீமன்
கற்பகநிகர்கொடைக்கன்னனுதியோர், மற்புயநிருபனைவந்துகூடினர். (எச)

மின்னுடன்மின்மினிவெகுளுமாறுபோற், றன்னுடனிகரிலாத்தடக்கைவண்மையான், மன்னுடனிகல்வதுவார்த்தையன்றினி, யென்னுடன்மலைதிநீயென்றுகூறினன். (எரு)

சரக்குமும்மதம்பொழிகாய்களிற்றைவிட், டெக்கொடுவரியின்மேலோடும்யாளிபோ
னிரக்குமந்நிருபனுநிற்கவந்துபோ, ரிரக்குமக்கன்னன்மேலிரதமேவினன். (எ௬)

இரதமுமிரதமுமெதிர்ந்தபோதிரு, குரதுரகதங்களுங்குமுறியார்த்தன
வுரைதருபாகருமுடன்றுகூவினர், விரைதனுவளைத்தனர்வீரர்தாமுமே. (எஎ)

இருவருமெதிரெதிரேவும்வாளியால், வெருவருமிருளுறவிசும்புதூர்ந்தது
பொருவருமமர்நெடும்போதுதாக்கியு, மொருவருமிளைத்திலருவமைவேறிலார். ()

மற்றொருதொடையினிற்சுவேதவாகனன், முற்றொருகணத்திடைமூன்றுகோல்விட, விற்றொருகணத்திடையிவுளிபாகுதே, ரற்றொருவினனடலாண்மையர்கர்கோன். (எ௯)

ஒருவியிட்டோடிமற்றொரோர்தேர்மிசை, மருவியிட்டெதிருறவந்துமோதியு
முருவியிட்டனகணையொன்றுபோற்பல, வெருவியிட்டனனவன்மீளமீளவே. ()

இம்முறைவந்தவந்தெதிர்ந்துவெஞ்சமர், மும்முறைமுறிதலுமுனிவன்மாமக
னம்முறைமுதுகிடுமெருக்கன்மைந்தனைத், தெம்முறைமையிற்சிலவார்த்தைசெப்பு
வான். (அக)

நேருமொன்றொருவனைதேரிலாளுமிவ், யொருமஞ்சுதிரெனவிகழ்ந்துரைத்தநீ
போருடைத்தோடுதல்போதுமோகுருந், தாருடன்பொலிதருதாமமார்பனே. (அஉ)

சொல்லலாமிருந்துழிச்சொன்னசொற்படி, வெல்லலாமென்பதுவிதிக்குங்கூடு
மோ, மல்லலாளியைப்பலவளைந்துகொள்ளினுங், கொல்லலாயிருக்குமோகுஞ்சர
ங்களால். (அங)

கொழுதமம்பினுமிகக்கொடியகூற்றினை, பழுதறுநாவினன்பகரும்வேலை
யின், முழுதுணர்முனியையுமுந்தைதன்னையுந், தொழுதுபற்குனன்சிலதொடைக
ளேவினன். (அச)

தாளிணையிறைஞ்சியதனஞ்சயன்றொடும், வாளிகண்டுளமிகமகிழ்ச்சிகூரவு
மிளிமையுடையவவ்வீரன்மீதெழுந், தூளிசெய்தேரினைத்துரோணனூக்கினன். ()

வேறு.

உந்துதேர்முனியையந்தவுதிட்டிரனிளவனேக்கிச்
சிந்தையிலன்புகூரச்சேவடிபணிந்துபோற்றி
யந்தணராசேயுன்றனருளினலடவிநீங்கி
வந்தனமென்றுசிற்சில்வாசகமியம்புவானே. (அரு)

யாதுமொன்றறியாவென்னையிவனலாதில்லையென்றிந்த
மேதினிமதிக்குமாறுவின்முதற்படைகள்யாவுங்
நீதறத்தந்தவுண்மைத்தெய்வநீயென்றுற்பஞ்ச
பாதகந்தன்னிலொன்றுன்பதயுகம்பிழைப்பதையா. (அஎ)

மன்றொருழநின்றமாசுணமுயர்த்தகோவை
மின்றொழுருமேறென்னவெகுண்டுயிர்கவர்வதல்லா
லின்றெமக்கிருபனேநின்மகனேமுந்தை
தன்றொடும்புரியேன்வெம்போர்தக்கதோசாதம்பாவம். (அஅ)

அம்முனிதன்னேடிவ்வாறருச்சுனன்புகலவல்விற்
கைம்முனிவனுஞ்செஞ்சோற்றுக்கடன்கழித்திடுதல்வேண்டுந்
தெம்முனைமதியாவீராதேவர்தம்பகையைவென்ற
வெம்முனைகாணுமாறுவில்வளைத்திடுகவென்றான். (அகூ)

குருவுமக்குருவைத்தப்பாக்குருகுவக்கோவுந்தங்க
ளருவரைத்தோளினுணியறைதாப்பிறைவில்வாங்கிக்
கருவிர்த்தெழுந்தகாலமழைமுகில்கொண்டென்ன
வொருவருக்கொருவர்வாளியோரொருகோடியெய்தார். (கூ0)

அதிரதர்தம்மையெண்ணிலணிவிரன்முடக்கவொட்டா
முதிர்சிலைமுனியும்வீரமுனிவிலாமுகனும்விட்ட
கதிர்முனைப்பவனவேகக்கணைக்கோடிம்பகழியாவு
மெதிரெதிர்கோத்ததல்லாற்பட்டிலவிருவர்மேலும். (கூக)

வண்டுதான்முரலுங்கஞ்சமாலையான்பயிற்றுவித்துப்
பண்டுதான்கண்டகூற்றிற்பதின்மடங்குயர்ந்தபண்பான்
மிண்டுதானவரைவென்றவிறலுடைவிசயன்வின்மை
கண்டுதானவன்றனோடுகெற்பதற்குன்னினானே. (௯௨)

ஏறுதேர்முரியவேதமெழுதியதுவசம்வீழத்
தாறுபாய்புரவிநான்குஞ்சாரதிதலையுஞ்சிந்தக்
கூறுபோர்நாணியிற்றுக்குனிசிலைதுணியப்பின்னை
நாறுகோனொடுப்பவெள்கியாரியன்முதுகிட்டானே. (௯௩)

தந்தைபோரழிந்துபோன்சாபலம் * கண்டுவெம்பி
யிந்திரன்மதலையோடுமெதிர்த்தனனிவுளித்தாமா
முந்துறவிருவர்வில்லுமுரண்படக்குனித்தபோரி
னந்தணன்கணையான்மன்னன்வில்லினாணற்றதன்றே. (௯௪)

மந்தரமனையதோளான்மற்றொருவரிவில்வாங்கி
யிந்தவெம்பகழிக்கெல்லாமீடறானிவனென்றெண்ணிச்
சந்திரமவுலிதந்தசாயகந்தொடுத்தலோடு
நொந்தினியென்செய்வோமென்றார்புகநோக்கினானே. (௯௫)

கிருபனுமவனைக்கண்டுகெட்டனன்கேடிலாத
நிருபர்கள்பலருமோதிநேர்பொருதாவிமாய்ந்தார்
பொருபடைச்சேனையாவும்புக்குழியாவர்கண்டா
ரொருபரியொற்றையாழித்தேரவனச்சமானான். (௯௬)

வென்னிடுமளவினின்றவீடுமன்விதுரன்வண்டு
தென்னிடுமலங்கன்மாலைச்சுயோதனன்சிந்துராயன்
றுன்னிடுநிருபர்சூழச்சூழ்திசைநான்கும்வந்து
முன்னுறுதேரோன்றன்னைமுனையுறவளைந்துகொண்டார். (௯௭)

இவர்பெருந்தேரின்மேலோனொருவனேயிலக்கதாகத்
தவருடன்குனித்தநேகசாயகந்தொடுத்தகாலைக்
கவுரிபங்காளன்றன்னைக்கண்ணுறக்கண்டகாளை
பவுரிவந்தொன்றுந்தன்மேற்படாமல்வெம்பகழிகோத்தான். (௯௮)

குடதிசைமகவான்வாளிகுணதிசைவருணன்வாளி
வடதிசைமறலிவாளிதென்றிசைமதியின் † வாளி
யடலுறவிளைமப்பினேவியவரவர்மார்புந்தோளும்
படருறப்படைகணீறுபடப்படப்பரப்பினானே. (௯௯)

கோகனநாக ‡ வேகக்கொடியவன்சேனையாவு
மோகனக்கணையொன்றேவிமுடியடிபடிக்கண்வீழ்த்தான்
றுகனக்கடவுடந்தடமணிப்பொலந்தேர்வெள்ளை
வாகனக்குரிசில்வின்மைவல்லபமிருந்தவாறே. (௧00)

இத்தரையிடங்கொளாமலிறந்தனர்போலவீழ்ந்த
மத்தரைமயிர்கொய்தென்னமணிக்கொடித்தூசுந்தூசு
முத்தரைவண்டற்பாவைக்குடுத்ததற்கென்றுகொய்தா
னுத்தரைமவுலித்திங்களமுதகப்புடைத்தவில்லான். (௧0௧)

---

* சாபலம்—நிலையின்மை, நடுக்கம். † மதி—குபேரன்.
‡ கோகனநாகம்—கண்ணைக் காதாகவுடைய நாகம்.

விழுந்தவர்கெடும்போதாகமெய்யுணர்வெய்திமெல்ல
வழுந்தியபசுநிரையோமெரிபடுகவசந்தோடு
மெழுந்தனம்பிரதம்யானையிவுளியினெறியேறித்
தொழுந்தகுதெய்வமன்னருரனைத்துதித்துமீண்டார். (௧0௨)

கொடிமதிற்பாகைவேந்தன்கொங்கர்கோன்புரவிக்காலால்
வடதிசையரசர்தங்கண்மாமணிமகுடம்போல
வடலுடைவிசயனெற்றையம்பினன்மீண்டுஞ்சென்று
படவரவுயர்த்தகோவைப்பன்னினன்மகுடபங்கம். (௧0௩)

வல்லினிலழிந்துநின்முன்மன்னவைதன்னினன்று
சொல்லியகாலஞ்செல்லாமுன்னிவர்தோற்றஞ்செய்தார்
புல்லியகானினின்னம்போகநீபுகறியென்று
வெல்படைவேந்தன்சொல்லவீடுமன்மீண்டுஞ்சொல்வான். (௧0௪)

செங்கெலேகன்னல்காட்டச்சேர்ந்தயற்செறுவினின்ற
கன்னலேமுருகாட்டுங்கக்கைநீர்நாடகேண்மோ
வின்னலேயுழந்தோர்காலமிந்துவினியக்கந்தன்று
னென்னலேசென்றதென்றுநெஞ்சினிலழுக்கிலாதான். (௧0௫)

அரவினையுயர்த்தகோமானவ்வுரைகேட்டபோழ்தே
பரவையினிரவிகண்டபனிமதிபோலமாழ்கி
வரவரவழிந்துமென்றுமாபெருஞ்சேனையோடு
மிரவிடையாருந்துஞ்சவெயில்வளநகரிபுக்கான். (௧0௬)

வேந்தனைமுதுகுகண்டவெந்திறல்வீரன்மீண்டு
போந்துமுன்னெடுத்தவன்னிப்பொதும்பரின்புறத்துவந்து
வாய்ந்தவாயுதங்கள்யாவும்வைத்தெழில்வடிவமாற்றி
யார்ந்தவெண்ணிப்பேடியாயினனென்பமாதோ. (௧0௭)

இவ்வெயிலெறிக்கும்பைம்பொனிலங்குதேர்மீண்டுமேகக்
கைவ்வெயிலெறிக்கும்பைம்பூட்காளைதன்றேரிலேறி
வெவ்வெயிலாறும்வண்ணம்விரைந்துபோய்விராடன்மூதூ
ரவ்வெயில்சூழ்ந்தகாவினமர்ந்தனனரசரேறே. (௧0௮)

ஆறியபசுந்தண்காவினசைவொரீஇயிருந்தவீர
னேறியகானிற்பல்யாண்டிருந்தபினேனையாண்டு
மாறியவடிவத்தோடிவ்வளநகர்வைகினேமென்
றூறியவமுதச்சொல்லாலுத்தரற்குரைசெய்தானே. (௧0௯)

பேடிதேர்செலுத்தச்சென்றபிள்ளையும்பெரும்போர்வென்று
கோடிதேர்முதுகுகண்டுகோநிரைமீட்டானென்றென்
றோடிநீர்சொன்மினென்றுதூதரையோடவிட்டா
னிடுநீர்பாக்குங்கக்கைநாடுடைநிருபர்கோமான். (௧௧0)

இங்கிவனிவ்வாறுய்ப்பமுற்பகலேயாங்கட்
கங்குலிற்சேனையோடுங்கன்படையின்றிவைகிச்
செங்கதிரெழுந்தபின்னர்த்தென்றிசைப்பூசல்வென்ற
வெங்கழல்விராடன்றானுமீண்டுதன்னகரிபுக்கான். (௧௧௧)

நடம்பதியடைந்தகாலைத்தன் மனையடைந்தபேடி
இடம்படுநெடுந்தேரூர்த்திருமகன் சென்றசெய்கை
விடம்படுவெகுளிவேற்கட்சுதேட்டிணைவிளம்பக்கேட்டாய்
குடம்புயிரின்றிவீழ்ந்ததென் னுமாறுருகிவீழ்ந்தான். (ககஉ)

சந்தனவளாறும்வாசத்தண்பனிநீரும்வீசி
வெந்திறல்வேந்தன்றன்னைமென்மையாலிருந்துதேற்றி
மைந்தனிப்பொழுதேவென்றுவருகுவன்பொற்றேரூர்ந்தா
னந்தமெய்ப்பேடியாகிலென்றனனந்தணாளன். (ககங)

அறன்மகன்வாய்மைதேறியரசனுமிருந்தவெல்லை
மறனுடையுரககேதுவன்சமரழிந்தவாறு
முறமலைந்தொருதன்றேர்கொண்டுத்தரன்வென்றவாறுந்
தொறுநிரைமீட்டவாறுந்தூதர்போய்த்தொழுதுசொன்னார். (ககச)

சீதளவமுதவாரிசெவிகளிற்செறிந்ததென்னத்
தூதர்வந்துரைத்தசொல்லாற்சோகமுந்துனியுமாறித்
தாதையன்றேதுசெய்தான்றனையொழிந்துள்ளசேனை
யாதிபரெவருமெய்தியண்ணலையெதிர்கொள்கென்றான். (ககரு)

சோரர்தங்கருவைத்தங்கள்கருவெனத்தோளிலேந்தி
யார்வமுற்றுருகுநெஞ்சினறிவிலார்தம்மைப்போல
வீரன்வெஞ்சமரம்வெல்லவிராடனுத்தரன்வென்றானப்
போரினையென்னுமேனிபுளகெழப்பூரித்தானே. (ககசு)

பூழிகளடக்கிச்செம்பொற்பூரணகும்பம்வைத்து
வாழையுங்கமுகுநாட்டிமணியொளித்தீபமேற்றிச்
சூழவன்பதாகைகட்டித்தோரணம்பலவுநாட்டி
யேழுயர்மாடமூதூரெங்கணுங்கோடித்தாரே. (ககஎ)

மகன்வருமளவும்வெஞ்சூதாடுதும்வருகவென்றாங்
ககமிகமகிழ்ந்துவேந்தனந்தணன்றன்னோடாட
மிகமுனியடுத்துவெல்லவென்றியுத்தரன்முன்மேவா
ரிகலழிந்தென்னவிப்போரழிதிநீயெந்தையென்றான். (ககஅ)

என்றவன்மொழிந்தபோதிலெண்ணில்வெஞ்சேனையோடு
வன்றிறலுரககேதுவலியழிந்துடைந்துபோக
வென்றவன்பேடியேதன்மெய்ந்நடுங்காமற்போரி
னின்றுநின்சிறுவன்வெல்லவல்லனோநிருபரேறே. (ககக)

பிருகந்நளையென்றோதும்பேடியைப்பேடியென்று
கருதனீயவனேமுன்னங்காண்டவமெரித்தகாளை
யொருதனித்தடம்பொற்றேரூர்ந்தும்பருக்காகவும்ப
ரரிகளையரிதின்வென்றானென்றனனந்தணாளன். (கஉ0)

கோடியின்கோடியானகுருக்கடஞ்சேனைதன்னை
யோடியென்புதல்வன்றானேயொருதனிபொருதுவென்று
நீடியநிரையுமீட்டுமீண்டனனென்னநீயப்
பேடியைவிறல்கொண்டாடிப்பேசுதிபிரமமூர்த்தி. (கஉக)

புன்னவையானமாற்றம்புகன்றனரெனினுங்கேட்டாங்
கின்னவைநன்றுநன்றென்றிதம்படமொழிவதல்லான்
மன்னவையிருந்தாளும்வழிபடுமாந்தர்மன்னர்
சொன்னவைமறுத்துமாறுசொல்வரோகருதிவல்லாய். (கஉஉ)

என்னவுமிடங்கொடாமலெதிருறவிருடியீண்டுங்
கன்னன்விற்றுரோணன்மைந்தன்காங்கேயன்முதலினோரை
மன்னவவெல்லரின்செய்வல்லனோவந்துசொன்னாற்
பின்னைநீதெளிதியென்றான்பீடுடைப்பேடிதன்னை. (கஉங)

கொடுவிலாண்மையினாலின்றென்குமரன்வென்றிடவுஞ்சற்று
நடுவிலாதவரிற்பல்காலென்கொனீநவில்வதென்னாக்
கடுவிலாடரவிற்பொங்கிக்கவற்றினாலெறிந்துநக்கான்
வடுவிலாமுனியைமன்னன்வடுப்படுமாறுமன்னோ. (கஉச)

எற்றியகவறுநெற்றியெதிருறவிருந்தகங்க
னெற்றியிற்சென்றுவாசநிறைத்தருங்குமத்தின்சேற்றாற்
பற்றியதிலகம்போலப்படுதலும்பாங்கர்நின்ற
வற்றியவோடையன்னவனப்பினான்மருண்டுகண்டாள். (கஉரு)

பல்கியகிளையுந்தேசம்பார்த்திவன்வாழ்வுந்தாங்க
எல்கியநகருமின்றேயழியுமென்றஞ்சியேகோ
னல்கியநேயமேகொணயனநீர்மல்கமல்க
மல்கியகுருதிதன்னைமாற்றினாள்வண்ணமாதே. (கஉசு)

கண்ணினீர்மல்கவண்ணக்காரிகைகலையாலந்த
வண்ணமாமுனிவன்சோரிமாற்றியகாலையுற்
றெண்ணமுஞ்செயலும்வேறாயென்செய்தோமென்செய்தோமென்
றண்ணலுந்தன்னைநொந்தாங்கருஞ்சினம்பாவியென்றான். (கஉஎ)

ஆயிடையத்தக்குன்றுக்காதபனணியனாகச்
சேயிடையெதிர்கொள்கொற்றச்சேனைமன்னவர்கள்சூழ
வீயிடைவரிவண்டார்க்கும்வியன்பெருங்காவுநீங்கிப்
போயிடைநெருக்கிவேந்தன்புதல்வனப்புரத்தைச்சேர்ந்தான். (கஉஅ)

பரந்தவெம்படைகண்மின்னப்பல்லியம்பலவுமார்ப்பத்
தரந்தமும்மதமும்பாயுந்திக்கைவாரணங்கள்சூழப்
புரந்தரனகரிற்காளப்புயல்வருமாறுபோல
வரந்தருபேடிதன்றேரூரவேவீதியுற்றான். (கஉகூ)

வென்றுமீள்குமரன்றன்னைவீதிகடோறுமாதர்
சென்றெதிர்கொண்டுநன்னீராசனமெடுத்துவாழ்த்தக்
குன்றெறிந்தவனைக்கண்டகுன்றவில்லியைப்போன்முந்தச்
சென்றுதன்பிதாவுந்தேர்மேற்சிக்கெனத்தழீஇக்கொண்டானே. (கஙo)

தழுவியவரசன்றாளிற்றலையுறவீழ்ந்துவேந்தர்
குழுவிடைக்கொண்டுபோகக்கோயிலிற்புகுந்தபின்னர்ப்
பழுதறவாய்மைவேதபண்டிதன்பாதம்போற்றிச்
செழுமலர்வதனநோக்கித்திருநுதல்வடுவுங்கண்டான். (கஙக)

திகழ்ந்தநின்னுதலினூறுசெய்தவர்யார்கொலென்று
நிகழ்ந்தமைதந்தைகூறநெஞ்சினுற்றந்தைதன்னை
யிகழ்ந்தமைநுவலும்போதைக்கெல்லையின்றிவனைப்போல
வகழ்ந்தநீராடைஞாலத்தார்கொலோவமைவின்மிக்கோர். (௧௩௨)

செறுப்பதுபெருமையன்றுசிறியவர்செய்ததீமை
பொறுப்பதேபெருமையென்றுபூசுரன்பாதம்போற்றி
வெறுப்பதுவிளைத்ததாதைவீழ்ந்தபின்றானும்வீழ்ந்து
மறுப்பதுபுரியாஞானிமனத்துனியகற்றினானே. (௧௩௩)

ஆன்றமைந்தடங்குகேள்வியண்ணலுமவனைப்பெற்ற
தோன்றலும்பின்னர்ச்சென்றுசுதேட்டிணைகோயிலெய்த
வீன்றவப்பொழுதினோகையெண்மடங்காகவீசச்
சான்றதன்மகனைக்கண்டுமகிழ்ந்தனடவத்தின்மிக்காள். (௧௩௪)

ஓடியுத்தரன்றேருரவொருமுனையாகத்தன்னை
நாடியுத்தரிக்கமாட்டாநராதிபர்பதாகைத்தூசுங்
கோடியுத்தரியப்பட்டுங்குழமகன்றனக்குநல்கிப்
பேடியுத்தரைதன்னோடும்பெற்றதாய்பின்புநின்றாள். (௧௩௫)

தந்தையுந்தானுமாங்குத்தனித்திருந்தடையலாரை
முந்தியவமரிற்சென்றுமுனைந்துபோர்விளைத்தவாறும்
வந்தவர்சாய்ந்தவாறுமணிநிரைமீட்டவாறுஞ்
சுந்தரகிரிகள்போலுந்தோளினான்றோன்றச்சொல்வான். (௧௩௬)

வேறு.

உருப்பசிவெஞ்சாபத்தாற்பேடியானவுருவமொழித்தருச்சுனனுமுருவங்கொண்டு, பொருப்பனையகவித்துவசத்தேர்மேல்வண்ணப்பொருசிலைதன்கரத்தேந்திப்புகுந்தபோது, செருப்புரவியிரவியெதிர்திமிரம்போலத்திறலரியேற்றெதிர்கரியின்றிறங்கள்போல, நெருப்பெதிர்ந்தபதங்கம்போலழிந்தாரையநிரைநிரைபோயணியாகிநின்றவேந்தர். (௧௩௭)

அருகுவிடாதுனக்குயிர்நண்பாகிநீதியறமுரைப்போனறத்தின்மகனாகவேண்டு
மருமலருமான்மதமுந்துறந்தகூந்தல்வண்ணமகள்பாஞ்சாலன்கன்னிபோலும்[ற்ற
வெருவருமற்போர்கடந்தமடையன்றன்னைவீமனெனவயிர்க்கின்றேன் வேந்தேம
விருவரினுமாவலானகுலன்றானேயின்னிரையின்காவலாளிளையகோவே. ()

ஆளையேயடுங்களிற்றார்தம்மையாருமறியாமலிந்நகர்க்கணடங்கிநின்றார்
நாளையேவெளிப்படுவர்நெருநலேதந்நாளுள்ளகழிந்தனவானயந்துகேண்மோ
வேளையேயனையவெழிற்றோகைவாகைவேளையேயனையவிறல்விசயனென்னுங்
காளையேயடியேனுக்கிளையகாதற்கன்னிகைக்குவரனென்றுகருதவாயே. (௧௩௯)

மகனிவைமற்றுரைத்தளவிற்றாதைகேட்டுமனநடுங்கியிருடியுடன்மகிழ்ச்சிகூர்ந்தான், பகலமரிலேறியமெய்ப்பராகமாறப்பகலோனும்புனல்படிவான்பரவைசேர்ந்தான், நகவுடையபாண்டவரும்வண்ணமாதுந்தனித்தெண்ணிப்பராகாயசரிதர்போலப், புகலரியபழையதமவடிவங்கொண்டார்போனபகலவனுதயப்பொருப்பின்மீண்டான். (௧௪௦)

ஆ செய்யுள் - ௨,௨௭௫.

நிரைமீட்சிச்சருக்கமுற்றிற்று.

---

# வெளிப்பாட்டுச்சருக்கம்.

எக்கடலுமெக்கிரியுமெவ்வுலகுமுலகிற்
றக்கபலயோனிகள்சராசரமனைத்து
மிக்கவிதியால்விதிசெய்விதியினைவிதிக்குஞ்
செக்கமலநாபிமுகில்சேவடிதுதிப்பாம். (௧)

அருக்கனடிகைதொழுதனந்தாமருக்க
னுருக்கருகவேயருணவுருவழகெறிப்பத்
திருக்கிளர்நலம்பெறுசெழுந்தெரிவையோடுங்
குருக்குலம்விளங்கவருகோமகனிருந்தான். (௨)

காற்றின்மகனுங்கடவுளாதிதிருமகனு
மாற்றருமிராயுமறைவானவர்மகாரு
மேற்றமுறையாலடியிறைஞ்சியிசையோடுந்
தோற்றமுறுமாதருஞ்சூழ்ந்தாவிருந்தார். (௩)

தன்னிகர்நிற்பவரிலாததனுவல்லோ
னென்னைதிருநெற்றியிலிருத்தவடுவென்றான்
மின்னையும்வெறுத்தொளிருமேதகுநிறத்தாள்
பின்னையவனுக்குநிகழ்பெற்றியுரைசெய்தாள். (௪)

உரைத்தபொழுதிப்பொழுதிவ்வூரெரிகொளுத்தித்
தரைத்தலைவனைத்தலைதடிந்திடுவலென்று
விரைத்தடவரைப்புயன்வெகுண்டுவிலெடுத்தா
னிரைத்துவருகான்மகனுமெரிவிழிசிவந்தான். (௫)

ஒன்றுதவிசெய்யினுமவ்வுதவிமறவாமற்
பின்றையவர்செய்பிழைபொறுத்திடுவர்பெரியோர்
நன்றிபலவாகவொருநவைபுரிவரேனுங்
கன்றிவெதன்றிமுதுகையவர்நினையாரே. (௬)

அனறுமுறுகானகமகன்றுநெடுநாளங்
கினைவுவழுவாமலிவனிழலிலிருந்தோஞ்
சினமிருதவிற்றவறுசெய்தனனெனப்போய்
முனிதல்பழுதாகுமெனமுன்னவன்மொழிந்தான். (௭)

குந்தியின்வந்தமருகுருகுலம்விளக்கு
மைந்தரசமன்றுதனகன்கடையிருக்கச்
சிந்தனையொடெந்திறைகொள்செல்வநிதியோடு
மைந்தனொடுமெய்தியவர்மலரடியின்வீழ்ந்தான். (௮)

விராடனைநறுங்குவளைமாலைவியன்மார்பிற்
றாரபதியெழுந்தெதிர்தழீஇயினனிருத்திப்
பாரவருபெரும்புகழ்படைத்தவருனைப்போ
லாரின்முடிமேலுலகிலார்கொலுளரென்றான். (௯)

அறைமுரசயர்த்தவனையவனானியையா
பொறையுடையவர்க்கலதுபுகழ்புனைதலுண்டோ
வறிவுமுதனற்குணமடாதவரிடத்திற்
குறைதிருவுளத்தினிடைகொண்டருளலென்றான். (௧0)

இந்நகரிலெய்தியபினெத்துயருமெய்தா
தெந்நகரியென்னநெடுநாளினிதிருந்தேஞ்
செந்நெல்வயலூடுமுதுசேலுகளுநாடா
நின்னினுமுயர்ந்ததமர்நீயறியவுண்டோ. (௧௧)

நின்புதல்வருந்திறல்வருதினியுநீயு
மென்புயமெனச்சமரிலென்னருகுநின்றால்
வன்பினெடுவெஞ்சமர்செய்மன்னர்படையாவுந்
தென்புலமடைந்திடமலைப்பலிதுதிண்ணம். (௧௨)

எனமுரசுயர்த்தவனியம்புதலுமகிழா
மனனிடாகற்றினனம்மச்சவளநாடன்
றனயனுநமக்குறுதிதக்கதெனவெண்ணு
மினிமையொடறத்தின்மகனுக்கிவையிசைப்பான். (௧௩)

எத்தரையுநீழல்செய்தனிக்கவிகையெந்தா
யித்தரையுநின்னதுநின்னேவலினர்யாமும்
பத்தரையொடீரரைகொள்பல்படையுநினவே
யுத்தரையும்வில்விசயனுக்குரியளென்றான். (௧௪)

வில்விசயனுத்தரன்விளம்புதலும்வீரங்
கல்விசெய்கலைத்திறன்வனப்புடையகாளா
யில்விசயமெய்க்குணனின்மிக்கவிளையாளென்
றெல்விசயமுற்றசுதனுக்குரியளென்றான். (௧௫)

வேறு.

விசயன்றெருக்குத்துநயமாகவிராடனெஞ்சுக்
கிசையும்படிசொற்றவரோடுமிருந்தபின்னர்
வசையின்றிவாழுந்தமராகியமன்னர்க்கெல்லாத்
திசையுந்தமதுசெயறூதரிற்செப்பிவிட்டார். (௧௬)

வெளிநின்றமாற்றம்வெளியானபின்வெண்டயிர்த்தண்
டுளிநின்றமேனித்துளவோன்றன்றுணைவரோடு
மளிநின்றநெஞ்சிற்குருமைந்தருவரோடுந்
தெளிநின்றவேற்கைச்சிவேதன்னொடும்வந்துசேர்ந்தான். (௧௭)

கண்டான்மகிழ்ந்தானறன்மைந்தனைக்கைதழீஇயுங்
கொண்டானவன்றனிளையோர்கைகுவித்துவீழ்ந்தா
ரெண்டானவனேடியைந்தெண்ணிப்புவனமேழு
முண்டானுரைத்தானுரைத்தக்கவுரைகளெல்லாம். (௧௮)

சிவன்றன்னைநோக்கிச்சிவேதன்றவஞ்செய்தவாறு
மவன்றனருளாற்பலவாயுதம்பெற்றவாறு
மிவன்றன்பகைசெற்றதும்யாவுமியம்பியுள்ளங்
கவன்றன்புறுமல்விராடன்றன்கவற்சிதீர்த்தான். (௧௯)

தெம்மைந்தரென்னுங்களபங்களைச்சிங்கசாப
வெம்மைந்தின்வேறற்கமைந்தோரொருவீரரான
தம்மைந்தரைக்கண்டுருகுந்தந்தையர்கடாளி
லம்மைந்தரும்வீழ்ந்துடன்வைகினரார்வமிக்கே. (௨௦)

பாஞ்சாலர்போசகுலமன்னவர்பாண்டிவேந்தர்
வாஞ்சாமனத்தின்வயமந்திரர்மாகதேயர்
புஞ்சாபவெற்றிக்கொடிக்கோளர்பொன்னிநாடர்
தாஞ்சால்புடனப்பதிவந்தனர்தானையோடும். (௨௧)

வந்தோரகையோடுமிருபாதம்வணங்கிவைகுந்
கந்தோடடர்கைக்கடுங்கோபக்களிற்றுவேந்த
ரந்தோநெடுநாளகன்கானிலடைந்திரென்று
கொந்தோரையாற்றிறுவல்வானந்நதிகொள்வேலான். (௨௨)

தேனிற்குளித்தசிறையம்புயச்சேக்கையன்னம்
வானிற்பறந்துபுலர்த்தும்புனன்மச்சநாடன்
வேனிற்சிலைவேள்விராடன்புரமேயவன்றே
கானிற்றிரிந்தபரிதாபங்கழிந்ததென்றான். (௨௩)

பன்னுக்குரல்கிப்பறையாலகப்பட்டமான்போன்
மன்னுக்கிறைவன்மொழிதேறிமகன்செய்வஞ்ச
வென்னுக்கழிந்தேனினிச்செய்வதென்யாருநீவிர்
கன்னுக்கிமைபோலிருந்தீர்கலைகண்களாக. (௨௪)

அரசர்க்கடைவேயவையின்கணவையினைத்து
முரசக்கொடியோனயமாகமொழிந்தபோது
விரைதுற்றுதார்ச்சல்லியன்முன்புவிளைந்தவெல்லாம்
பரகற்றகன்றான்பிழைகொன்றபகடுபோல்வான். (௨௫)

ஈரடக்கடவெங்களியானைகவனமான்றேர்
துரகப்பதாதிப்படைதம்மொடுஞ்சூழ்ச்சியாக
விரிற்புகுந்தநெறியின்கண்விருந்துசெய்த
வுரகக்கொடியோற்கரும்போரிலுதவிசெய்வான். (௨௬)

நஞ்சோசொலுமமரின்கணமர்களென்று
நெஞ்சோடியைந்ததுணையென்றுநினைத்தல்செய்யார்
செஞ்சோறுசாலவலிதென்றுமன்செப்பும்வார்த்தை
வெஞ்சோதிவேலானிலையிட்டனன்மீண்டுமீண்டும். (௨௭)

ஓமஞ்செய்தீயிற்பொரிசிந்தவிணுற்றவாசத்
தாமம்புடைசூழ்புவிவேந்தர்தொடையல்சூழக்
காமன்றிருமைத்துனற்கன்பொடக்கன்னிதன்னை
மாமன்றலங்கேபுரிவித்தனன்மச்சர்கோமான். (௨௮)

முன்னிச்சமருக்கொருப்பட்டமுடிமபேர்
சன்னிக்குவேண்டுங்கடனனபலிகணல்கி
வன்னிப்பொதும்பர்வயின்வைத்தவயக்குசோதி
மின்னிற்றிகழ்வெம்படையாவையுமீண்டுகொண்டார். (௨௯)

சேயோன்விழவிழைவோடுசிறந்தபின்னர்
மாயோனுமாயாக்குருமைந்தருமன்னர்யாரும்
போயோரைவிதியுபலாவிபுகுந்ததங்க
ளாயோதனத்துக்குறுநீர்மைகளாயலுற்றார். (௩௦)

ஆகச் செய்யுள் - ௨,௬௦௫.

வெளிப்பாட்டுச்சருக்கமுற்றிற்று.

---

விராடபருவம்

முற்றுப்பெற்றது.

---

ஐந்தாவது

# உத்தியோகபருவம்.

## உலூகன்றூதுசருக்கம்.

மீனமாகியுங்கமடமதாகியுமேருவையெடுக்குந்தா
ளேனமாகியுநரவரியாகியுமெண்ணருங்குறளாயுங்
கூனல்வாய்மழுத்தரித்தகோவாகியுமரக்கரைக்கொலைசெய்த
வானநாயகனுகியுநின்றமான்மலரடிமறவேனே. (க)

வல்லினுலவன்கொண்டமண்மீளவும்வல்லினுற்கொளலன்றி
வில்லினுலமர்மலேந்துகொள்ளுதுமெனல்வேத்துநீதியதன்முற்
சொல்லினுலொருதூதினிலறியலாஞ்சுயோதனனிீனவென்று
கல்லினுல்வருகன்முகில்விலக்கியகரியமாமுகில்சொன்னுன்: (உ)

உரியவம்புவியுதிட்டிரன்றனயவனூற்றவர்பலர்காணப்
பரியவன்பெருஞ்சூதினல்வென்றுபல்லாண்டடிப்படவாண்டான்
றிரியவன்புடன்வாங்குதற்கெண்ணுமித்தீமதிகொடிதென்று
கரியவன்புகல்கட்டுரைகேட்டபின்காமபாலனுஞ்சொன்னுன். (ங)

இளேயசாத்தகிதமையனேமிகக்கரிதிதயமாயினுநாவில்
விளேயுமாற்றநின்திருவடிவினுமிகவெள்ளேயாகியதென்ன
வுளேயவார்த்தைகளுரைத்தனனுரைத்தலுமுற்றவரிடுக்கண்கள்
களேயுமாப்புயலிருவருமொழிமினுங்கட்டுரையினியென்முன். (ச)

பேருலூகமும்பிணேயுநல்கியபெரும்பிறப்புடைப்பரித்திண்டேர்க்
காருலூகலங்கரடிக்களிறுடைக்கண்ணிலாவரசன்பாற்
சீருலூகனேத்தூதுசென்றிவர்மனஞ்செப்பிமீள்கெனப்போக்கி
யோருலூகலமுடன்றவழ்ந்தவன்றனதூர்புகுந்தனனன்றே. (ரு)

இந்தவந்தணனியிசைத்தனவெலாமியல்புடனினிதாக
வந்தவந்தனேடுரைத்தபினவனினதவனிதந்திலனுகின்
முந்தவந்தண்மாமுரசகேதனதிருமுகம்வரவிடுகென்று
வந்தவந்தமன்னவர்களுந்தத்தமாநகரடைந்தனர்மன்னே. (சு)

அரசர்போனபின்மால்பணிதவறுருதம்முனிதனேநோக்கி
முரசகேதனனியெழுந்தருள்கெனமுனிவனேத்தொழுதேத்தி
விரைசெய்தார்புனேவிடுமனெந்தைமெய்விதுரன்வேதியர்கோவைப்
பரிசினேமடியென்றுபின்னுரியசொற்பணித்தருளெனப்போந்தான். (எ)

போனநான்மறைப்புரோகிதனைத்திருபுரிபுகுந்தெரிபைம்பொன்
மானவார்கழற்றிருதராட்டிரனெனுமன்னவைதனிலெய்த
ஞானமாமுனிவரவுகண்டெதிர்கொளாநயந்திருபதம்போற்றி
யானமாமணியாசனத்திருத்தினனரவவெங்கொடியோனே. (அ)

விந்தமன்னதோள்வீடுமன்முதலியோர்விழைவுடன்றொழுதேத்தி
வந்தவாறுரைத்தருள்கெனமுனிவனும்வான்முறையடைவாக
வந்தணுகியகந்தடர்கடகளிற்றரசனுமவன்றந்த
மைந்தர்யாவருங்கன்னனுஞ்சகுனியுமனங்கனன்றிடச்சொல்வான். (௯)

ஆண்டுபன்னிரண்டடவியுற்றொருவருமறிவுறாவகைமற்றோ
ராண்டுமன்னியபாண்டுவின்மதலையரைவரும்வெளிப்பட்டா
ராண்டுமன்னர்முன்சூதுபோர்பொருதழிந்திடுதலினதிர்கொண்
டாண்டுவெந்தபார்நும்மொழிப்படியவர்க்களித்திரோவளியீரோ. (க0)

முன்னரும்பொருதளதுநீர்சூதுபோர்மோதுபோர்கருதாம
லின்னமும்பொரவேண்டுமேற்பொருதிடுமிலஞ்சியிற்பொலஞ்செங்கா
லன்னமுங்கிளிமயில்களுமுடன்விளையாடுநெல்வளநாட்டீர்
பின்னமும்பிறவாதினிப்பண்டுபோற்பீடுறும்பெருவாழ்வும். (கக)

அன்றியேயவருடன்மலைகுவமெனவழிவினைக்கருதாமல்
வென்றியேநினைந்தெதிர்த்திரேலுங்களால்வெல்லுதலரிதம்மா
கன்றியேயடல்வீமனும்விசயனுங்களம்புகிலனைவீரும்
பொன்றியேவிடுகின்றிர்நீர்முனிவர்சொற்பொய்க்குமோபொய்யாதே. (கஉ)

என்றுபூசுரனியம்பலுங்குங்குமமெழிலுறுமிணைமேருக்
குன்றுபூசியதனையபொற்றடம்புயக்குருகுலவயவேந்த
னின்றுபூசைபோலிருந்துழியுரைக்குமீதிகலதன்றிருவர்க்குந்
துன்றுபூசலிற்காணலாமாண்மையுந்தோள்வலிமையுமென்றான். (கங)

கல்விதூயநெஞ்சிலாதவச்சுயோதனன்கழறியமொழிகேட்டு
வில்விதூரனிவ்வேதியன்மொழிப்படிமேதினிவழங்காமற்
புல்விதூடகரினு *முணர்விலாதவர்புகலும்வாசகங்கேட்கிற்
செல்விதூரியனாய்விடுஞ்சுற்றமுஞ்சேனையுங்கெடுமென்றான். (கச)

திரத்தவாய்மைநீதவறிமற்றவருடன்சேனையுந்திறலுங்கொண்
டேத்தவாளமருடற்றலோபெரும்பிழையுடன்றனையாமாகிற்
சாத்தவாய்தொறுஞ்சோரிகக்கிடவிடுந்தனஞ்சயன்றனுவென்று
பாத்தவாசனும்பகர்ந்தனன்கிருபனும்பகர்ந்ததேபகர்ந்திட்டான். (கரு)

காமென்றுநின்புதல்வருக்குறுதிசெய்காலமோகழிந்தன்று
ராமென்னவகோடாமல்வெஞ்சமர்பொரநாடினையெனினுனைக்
கோமென்றுவிலருச்சுனற்கெதிரெவர்குனிக்கவல்லவரென்று
வீமென்றிருத்தனயனொடுறுதிகள்வெகுண்டுரைத்தனனன்றே. (கசு)

முன்னமேயுகிரிழந்தவெம்புலியெனமுரணழிமுனிமைந்தன்
றன்னைமற்றவனிடத்துநீகற்றவெஞ்சரத்தின்வென்றமையல்லா
லென்னசேவகங்கொண்டியாரையுமிகழ்ந்துரைப்பதுவென்று
கன்னனுக்கிறக்கங்கெயன்றன்னொடுகண்சிவந்துரைசெய்தான். (கஎ)

* விதூடகர்—இகழ்வோர்.

தூமவெங்கனற்ருேன்றியதோகையத்தொடையல்சூட்டியநாளி
ஞமவெஞ்சிலைநாணெடுத்தனையடாநரனெடும்போர்செய்தாய்
தாபவெண்குடைநிருபனையந்தரசரிதர்கொண்டேகாமல்
வீமன்வெஞ்சிறைமீட்டநாளினுந்திறல்வினைபுரிமுனைவென்ருய். (கஅ)

ஒருதன்மாநெடுந்தேரினையறிவுருவுத்தரன்விரைந்தூர
நெருநலானிரைகவர்தருமுகத்தினுநின்றனைநெடும்போது
மருநருவுமிழ்துழாயவன்றேர்விடமலையுநாள்வயவாளி
வெருநர்மேல்விடாவிசயனைநீயலால்வெல்லவல்லவருண்டோ. (ககூ)

கங்கைமாமகனிவையிவைபுகலவுங்கன்னனைக்கசிந்துட்கொண்
டங்கைகொட்டிநக்கிருந்தவந்தணனையுமவமதித்தெமதேபார்
தங்கள்கானகந்தமதெனப்புகன்றனன்சர்ப்பகேதனனந்தப்
பங்கயாசனமுனிவனுமீண்டுபோய்ப்பாண்டவர்க்கவைசொன்னுன். (உ௦)

ஆங்கவர்க்கிவனவணிகழ்ந்தனவெலாமருந்தகையுடன்சொல்லி
யீங்குவந்தெழில்யாதவற்கியம்பனும்யாதவன்மகிழ்வுற்று
வாங்குவெஞ்சிலைவிசயனைவிரைவினில்வரவிடுகெனமீள
வோங்குமாதவனூகனைப்போக்கினனவனும்வந்துரைசெய்தான். (உக)

ஆ செய்யுள் - உ,௩உகூ.

உலூகன்றூதுசருக்கமுற்றிற்று.

---

# வாசுதேவனைப்படைத்துணையழைத்த சருக்கம்.

அராவணைதுறந்துபோந்தன்றசோதைகண்களிப்பநீடு
தராதலம்விளங்கவெண்ணெய்த்தாழிசூழ்தரநின்ருடிக்
குராமணங்கமழுங்கூந்தற்கோவியர்குரவைகொண்ட
புராதனன்றனையேயேத்தும்புனிதர்தாள்போற்றிசெய்வாம். (க)

புரோகிதன்றூதுவந்துபோனபின்புயங்ககேது
விரோசனன்சுதனைக்கங்காசுதனெடும்வெகுளிமாற்றித்
துரோணனைமுதலாமிக்கதொன்மதியமைச்சரோடுஞ்
சரோருகசதனமென்னத்தனித்திருந்தெண்ணினுனே. (உ)

தேயமெங்கெங்குஞ்செங்கோல்செலுத்துமத்திகிரிவேந்த
ராயவர்தம்மைக்கூட்டவடைவினிற்றூதுபோக்கிக்
காயமுமுயிருமாகிப்பொருடொறுங்கலந்துநின்ற
மாயவன்றன்னைக்கூட்டவளர்மதிற்றுவரைசேர்ந்தான். (௩)

மாடநீள்வீதிமூதூர்வயங்குமாமதிலின்ருேற்ற
மேடவிழ்துளபமாலங்கிருந்தனனென்றுகேட்டுச்
சேடன்வந்தனந்தகோடிசெங்கதிர்மணியின்பத்திச்
சூடிகாமகுடத்தோடுஞ்சூழ்ந்ததோர்தோற்றம்போலும். (௪)

கார்க்கடல்வண்ணன்றன்பாற்கண்டுயிலொழிந்துபோந்து
மேற்கடற்றுவரைமூதூர்மேவரும்விரகுநோக்கிப்
போர்க்கடற்பொறிகள்யாவும்பொறித்தவப்புரிசைதன்னைப்
பாற்கடல்வளைத்ததொக்கும்பன்மலரகழியம்மா. (௫)

ஈண்டுநீவரினுமெங்களொழினுடையெழிலிவண்ணன்
பாண்டவர்தங்கட்கல்லாற்படைத்துணையாகமாட்டான்
மீண்டுபோகென்றென்றந்தவியன்மதிற்கொடிகடோறுங்
காண்டருபதாகையாடைகைகளாற்றடுப்பபோன்ற. (௬

அருள்குடியிருக்குங்கண்ணனவதரித்தனனென்றெண்ணித்
தரணியின்மீதுவந்துதன்னுடைச்சோதிவைகும்
பரமமாஞானபோகப்பதிகுடியிருந்ததன்ன
திருநகர்வீதிபுக்கான்சித்தசித்துணர்விலாதான். (௭)

வந்தமையறிந்துகொற்றவாயிலோர்தம்மைநோக்கி
யந்தன்மாமதலைவந்தாலறிவியாதழைமினென்று
சந்திரனொடுங்கிற்பத்தபனனேசரிக்குமாறு
பந்தனையிலாதான்யோகத்துயில்வரப்பள்ளிகொண்டான். (௮)

பொற்புடைப்புனிதன்கோயிற்புறத்தினிலனிகநிற்பச்
சற்பவெம்பதாகைவேந்தன்றடையறத்தனிசென்றெய்தி
யுற்பலவண்ணன்பள்ளியுணர்தருகாறுமிட்ட
சிற்பவண்டவிசினேறித்திருமுடிப்பக்கஞ்சேர்ந்தான். (௯)

வந்திலன்விசயனென்றுவான்றுயில்புரிந்தவண்ணல்
சிந்தனைசெய்யும்வேலைச்சிந்தையிற்கடியதேரோன்
பந்தனையறுக்கும்பாதபங்கயம்பணிந்துநிற்ப
முந்துறவிழித்துநோக்கிமுகமலர்ந்தருள்செய்தானே. (௧0)

நின்றவனிருந்தவேந்தன்வரவினைநிகழ்த்தநேமிப்
பொன்றிகழ்படையோனந்தப்பொய்த்துயிற்பாயனீங்கி
மன்றலர்தொடையல்மார்பன்வரவெமக்குரைசெயாதென்
னென்றுரநெருங்கப்புல்லியின்சொலாலுவகைசெய்தான். (௧௧)

இருவிரும்வந்தவாறென்னியம்புதிரென்றுவாச
மருவிரிதளபமாலைமரகதவண்ணன்கேட்பச்
செருவினியெமக்குவெம்போர்செய்துணையாகவேண்டும்
பொருவிலோயென்றுகொண்டவ்விருவரும்புகன்றகாலை. (௧௨)

உற்றமருதவிசெய்வானுதிட்டிரன்றனக்குமுன்னே
சொற்றனமாங்கணிக்குந்துயிலுணர்பொழுதத்தின்று
விற்றிறல்விசயன்முந்தவிழிக்கிலக்கானானென்று
பற்றறத்துணிந்துசொன்னான்பாண்டவர்சகாயனானான். (௧௩)

முடைகமழ்முல்லைமாலைமுடியவன்றன்னைப்போரிற்
படையெடாதொழிமினென்றுபன்னகதுவசன்வேண்ட
நெடியமாமுகிலுநேர்ந்தநினக்கினிவிசயபோரி
லெப்படையின்றிச்செய்யுமாண்மையேன்வலைத்தியென்றான். (௧௪)

செருமலியாழியங்கைச்செழுஞ்சுடர்நின்றென்றேரிற்
பொருபரிதூண்டினிந்தப்பூதலத்தரசரொன்றோ
வெருவருமியக்கர்விண்ணோர்விஞ்சையரெனினுமென்கை
வரிசிலைகுழையவாங்கிமணித்தலைதுமிப்பனென்றான். (௧௫)

அடர்சிலைவிசையனிவ்வாறிசைத்தலுமமலன்வஞ்சப்
படவரவுயர்த்தவென்றிப்பார்த்திவன்றன்னைநோக்கி
நடையுடைப்புரவித்திண்டேர்நானிவற்கூர்வதன்றி
மிடைபடையேவிநும்மோடமர்செயேன்வேந்தவென்றான். (௧௬)

எம்மையேயொழியவுள்ளயாதவக்குலத்துளோர்க
டம்மையுமெம்முனைதாலகேதுவையுஞ்சேரச்
செம்மையோடுதவியாகக்கொண்டுநீசெல்கவென்று
மும்மையுமுணர்ந்தநாதன்முன்னுறப்பின்னுஞ்சொன்னான். (௧௭)

கிருதவன்மாவக்குரோணிகிளர்படையோடுநின்பால்
வருவனென்றுரைத்துவேண்டுமதுரவாய்மைகளுங்கூறி
மருதுபோழ்ந்திட்டசெங்கண்மாயவன்விடுப்பவேகிக்
கருதலான்வினயமொன்றுங்கண்ணன்முன்னோனைக்கண்டான். (௧௮)

கண்ணனங்கருளிச்செய்தகட்டுரைப்படியேசங்க
வண்ணனுக்கிளவல்சொன்னமாற்றமுமரசன்சாற்றி
யெண்ணருந்தொகைகொள்சேனையாதவகுமரரோடே
யண்ணலேவருகென்றோதியத்தினாபுரிபுக்கானே. (௧௯)

கூறியவேகநாகக்கொடியவனகன்றபின்னர்த்
தேறியவிசயனோடுஞ்செழும்புனற்றுவரைநீங்கி
யாறிருநாமத்தோனுமையிருநாமத்தோனு
மூறியகருணைநெஞ்சினுதிட்டிரனிருக்கைபுக்கார். (௨௦)

ஆ செய்யுள் - ௨,௩௪௬.

வாசுதேவனைப்படைத்துணையழைத்தசருக்கமுற்றிற்று.

---

## சஞ்சயன்றூதுசருக்கம்.

ஒருதலத்திடையவதரித்தணிபொதுவர்சிற்குடிலுறைவதோர்
மரகதப்புயறனையெடுத்தொருமகவெனத்தனதிறுதியா
லரிதுபற்றியவலகைசெற்றிடவணிமுலைப்பயனுகர்வுறு
மருதிடைத்தவழ்பொருவில்வித்தகன்மலரடிக்கண்வழுத்துவாம். (௧)

நஞ்சநாகமுயர்த்தமீளிதனகர்புகுந்துழிநண்பறக்
கஞ்சமாமனைவென்றவன்செயல்கண்ணிலானொடுரைத்தபின்
வஞ்சமைந்தரொடுயவிமீளவுமண்கொடாதகுறிப்பினன்
சஞ்சயன்றனைவருகவென்றிருதாள்பணிந்திவைசாற்றுவான். (௨)

குருகுலத்தரசர்க்குறுந்தொழில்கூறுநற்குருவாதலா
லிருகுலத்தினுமுற்பவித்தவரென்றுநின்சொன்மறுத்திடார்
பெருகுலக்கனலன்னபிள்ளைகள்பேசுகின்றபிணக்கறுத்
தொருகுலத்தவருதிருப்புவியாளுமாறினியுட்கொளாய். (௩)

அறத்தின்மைந்தனுமிளைஞரும்புவியாசையற்றகலடவியின்
புறத்திருந்துதவஞ்செயும்படிபுரிவுரைத்தருள்போயெனச்
செறுத்திடுந்திருதராட்டிரன்றனசிந்தையொப்பனசெப்பினான்
மறுத்திலன்பெருமுனியுமற்றவர்பாடிவீடுறமன்னினான். (௪)

சென்றவம்முனிசெலவறிந்தெதிர்சென்றுதத்தமசென்னிதா
ளொன்றவைத்துவணங்கியாசியுரைக்குமெய்ப்பயனுற்றபின்
மன்றலந்துளவோனுநல்லறன்மைந்தனுந்திறலநுசருந்
துன்றுபொற்றவிசினிலிருத்தவிருந்துசில்லுரைசொல்லுவான். (௫)

புடவியாளுதல்விட்டுநன்னெறிபுரியுமாதவர்தம்மினீ
ரடவியாளவும்வல்லிராயினிராதலானலமானதே
மடவியார்நிலையற்றசெல்வமகிழ்ந்துவாழ்தினமாறினால்
விடவியாரழலுற்றெனப்பெருநரகிலாழ்வுறவீழ்வரால். (௬)

உற்றயோனிகடம்மிலுற்பவியாமன்மானுடவுற்பவம்
பெற்றவாமுதலரிதுமற்றதுபெறினுமாயைசெய்பெருமயக்
கற்றஞானிகளாய்விளங்குதலரிதுவீடுறுமறிவுபின்
பற்றுமாறிலீதிங்குனக்கிவைபண்பினோடுபலித்தவே. (௭)

நிகந்தவெல்லையுறப்பெரும்புவிசெல்லநேமிசெலுத்துநும்
மகந்தையோடமராடவெண்ணிலவ்வரவகேதனனுங்களோ
கெந்துவாழவொருப்படானினியுற்றதாயமுமுரிமையு
மிகந்துமாதவமுயறலேகடனீதிலாவுலகெய்தவே. (௮)

பாராசரன்குலமாகினும்பெறுபயனிறுக்கிலர்பாரிலே
துராசரன்பிலரென்சொலின்றுசுயோதனாதியர்கைக்கொளார்
சராசரங்களனைத்துமாகியசுகனையேநிகர்தன்மையாய்
நிராசர்நின்னளவிற்குறித்தவையுறுதியென்றினிநீகொள்வாய். (௯)

பாரிலாசையுநின்னிராசபதத்திலாசையுமன்றுவெம்
போரிலாசையுநேயமங்கையர்போகமன்பொடுபுதிதனுஞ்
சீரிலாசையும்விட்டுநன்னெறிசேரவுன்னுதிநீயெனத்
தூரிலாசையறத்துறந்தருள்சுருதிமாமுனிசொல்லவே. (௧௦)

செம்மையல்லதவிரிலாதுதெரிந்தமேதகுசிந்தையான்
மும்மையுந்தெரிமுனியுரைத்தசொன்முன்னியொண்குறுமுறுவல்செய்
திம்மையேவசைநிற்கவீடுறவெண்ணிநீபுகலென்னினும்
வெம்மையேழ்நரகுந்தனித்தனிவீழ்வதேநலமிகவுமே. (௧௧)

கன்னறத்தினினீர்மைதன்னைவிளங்குமாறுநிகழ்த்தினு
மன்னறத்தினைவிட்டுநல்லறமன்னரானவர்முயல்வரோ
வென்னறத்தினினின்றதெவ்வரையிருவிசும்பினிலேற்றினாற்
பின்னறத்தினினினைவுகூருமெனக்கனன்றிவைபேசினான். (௧௨)

முனியுமப்பெருமுரசுயர்த்தவனும்புகன்றனமுன்னிநா
மினியுரைப்பதுகடனெனத்துணைவிழிசிவப்பெழவெழிலியின்
றனிதமுற்றனவுருமின்வெஞ்சினமூளமற்றிவைசாற்றுவான்
கனியெனத்தினகரனைவவ்வியகடவுண்மாருதிதுணைவனே. (௧௩)

எமக்குநீபிரமப்பெருக்குருவெங்களோடெதிராகுவார்
தமக்குமொக்குமொருமைழயிலேயருள்சாரவோதுதறக்கதோ
வமர்க்குநென்னலுலூகநாமனுடைறுதியிட்டனனரவினஞ்
சுமக்குமேதினியாளுவோர்வினைவேறுபட்டதுசொல்வரோ. (௧௪)

இடக்கணுகவலக்கணுகவிரண்டுமொக்குமெனுமலே
பிடர்க்கனேமதியானகண்ணிலிபெற்றியல்லனபேசினுன்
கடற்பெரும்படைகூடிநாளையணிந்தவெய்யகளத்தினு
னடற்கடுங்கதையாலடித்திடுமெதிசயந்தனையையகேள். (௧௫)

உவந்துநீமொழிதவமருந்தவமல்லவொன்னலருடனுகுஞ்
சிவந்தசோரியின்மூழ்கிமாழ்குசிரங்கள்போய்நடமாமெக்
கவந்தகானகமேவியூடுறுதீயவெவ்வினைகளைவதே
தவந்தனிற்றலையானவீடுறுதவமெமக்கிதுசாலுமே. (௧௬)

போரதாகியபூமிசாலையின்வேலைசூழ்தருபூமியின்
பாரமானசுயோதனுதியரென்னுநூறுபசுப்படுத்
தீரமானதயாமனத்தொடிராயசூயமகஞ்செயும்
வீரமாமுனிதன்னையுங்களவேள்வியும்புரிவிப்பனே. (௧௭)

நேமியானிவைசொன்னவீரனைநிற்கவென்றுநிறுத்தியுட்
காமியாதமுனிக்குநல்லுரைகட்டுரைத்தனனிவர்களிப்
பூமியாளுதலவர்களுக்கமருலகமேறுதல்புரிதவம்
யாமியாதமுரைத்துமென்பயனீயெழுந்தருளென்னவே. (௧௮)

இருந்தபேரவைவிட்டுமெற்றவரிதயமிப்படியெனநினைந்
தருந்தவக்கடன்மீளவத்தினபுரியடைந்தவனிபனுடன்
பரிந்தறன்றருகானைசொற்றதும்வீமனின்றுபகர்ந்ததுங்
குருந்தொசித்தருண்முகிலுரைத்ததுமுண்மையாம்வகைகூறினுன். (௧௯)

ஆ செய்யுள் - ௨,௩௬௬.

சஞ்சயன்றூதுசருக்கமுற்றிற்று.

---

# கிருட்டிணன்றூதுசருக்கம்.

பேர்படைத்தவிசயனுடன்மும்மைநெடும்பிறவியினும்பிரியானுகிச்
சீர்படைத்தகேண்மையினுற்றேருர்தற்கிசைந்தருளுஞ்செங்கண்மாலைப்
பார்படைத்தசுயோதனற்குப்படையெடேனமரிலெனப்பணித்தகோவைக்
கார்படைத்தசிறத்தோனைக்கைதொழுவார்பிறவாழிக்கரைகண்டாரே. (௧)

ஞானமன்பொடினிதுரைத்தஞானமுனியகன்றதற்பின்சாமபேத
தானதண்டமெனநிருபர்தருமமுறைமையிற்புகலுந்தருதிநோக்கித்
தூநறுந்தண்டுளவோனைத்தூதுவிடுவதந்தெவ்வனிச்சுனைகடோறு
மேனலந்தண்கிரிப்பெருந்தேனிறைக்குமெழிற்குருநாடனியம்புவானே. (௨)

செஞ்சொன்முனிசஞ்சயனுமொருமுறைத்தருமமுன்சென்றகாலை
யஞ்சொன்முனிபுரோகிதனுக்கவனிசைத்தகருமமுமீயறிதியன்றே
நஞ்சுதலைமிகவருந்திரன்மருந்துமந்திரமும்விரைந்துநாடா
தெஞ்சினர்தங்களைப்போலவிருக்குமதோயார்மனத்துமிருக்குஞ்சோதி. (௩)

அருஞ்சமரம்புரியும்வகையவருரைத்தாராலுமறமொன்றின்றிப்
பெருஞ்சமரம்விளைக்குமதுகடனன்றென்றருள்வெள்ளம்பெருகக்கூறும்
பொருஞ்சமரநெடுமுரசப்பூங்கொடியோன்றனைநோக்கிப்புயப்போர்வாண
னிருஞ்சமரந்தொலைத்தபிரானினியுரையுமுடனிருத்தியம்புவானே. (௪)

செய்வாரவினைமுகளுந்திருநாடுபெறுகிலைவோசென்றுமீளப்
பைவாயருங்கானிற்பயின்றுதிரிதரகிலைவோபகைத்தபோரி
லுய்வாரெனவிரைவினுருத்தெழுந்துபொரகிலைவோவுண்மையாக
வைவாரமவனிபர்க்குகிலைவேதென்றருள்புரிந்தானமரர்கோமான். (௫)

வயிரமெனுங்கடுநெருப்பைமிகமூட்டிவளர்க்கினுயர்வரைக்காடென்னச்
செயிரமரில்வெருளிபொரச்சேரவிருநிறத்தேமுஞ்சென்றுமாள்வோங்
கயிரவமுந்தாமரையுங்கமழ்பழனக்குருநாட்டிற்கலந்துவாழ
வுயிரனையாய்சந்துபடவுரைத்தருளென்றுனறத்தினுருவம்போல்வான். (௬)

அரவுயர்த்தோனுடன்மறுகுநாடிநீர்வென்றவந்நாளவன்முன்சொன்ன
விரதமொழிதவிராமல்வெங்கானம்போய்மீண்டீர்வெய்யோனுங்கள்
குருநிலத்திற்பாதியினிக்கொடாதிருந்தாலாங்கவனைக்கொன்றுபோரி
லிருநிலத்தையாளவினித்துணிவதேகடனென்றானெம்பிரானே. (௭)

குரவரையுங்கிளைஞரையுங்குலத்துரியதுணைவரையுங்கொன்றுபோர்வென்
றரவநெடுங்கடலாடையவனியெலாந்தனியாளுமரசுதன்னிற்
கரவுறையுமனத்தாதைமுனிக்குரைத்தமொழிப்படியேகானந்தோறு
மிரவுபகற்பலமூலசாகநுகர்ந்துயிர்வாழ்தலினிதன்றே. (௮)

கோதிலானிந்தமொழிகூறுதலுமாமாயன்கூறலுற்றான்
மோதமருக்கிளைத்தநீர்மொய்த்தபெருங்கானகத்தேமுடுகிச்சென்றாற்
பூதலத்தோரேசாரோபுகன்றபெருவஞ்சினமும்பொய்த்திடாதோ
நீதியோவெனவுரைத்தானங்கதற்குநெகிழ்தருமனிகழ்த்தலுற்றான். (௯)

நீதூதாடந்தருளியெமதுநிலைவர்க்குரைத்தாலினிவின்வண்ணந்
தாதுதியவிமுராலுந்தண்பதியுந்தாயமுந்தான்றராளுகின்
மீதுறவளைக்குலமும்வலம்புரியுமிகமுழக்கவெய்யகாலன்
மாதுதர்மனக்களிக்கப்பொருதெனினும்பெறுவனிதவசையுமன்றே. (௰)

முந்தூர்வெம்பணிக்கொடியோன்முதூரினடந்தழுவர்முன்றிறேறு
கந்தூரும்புனலுட்டின்றிறம்வேண்டோடொன்றநல்காணுகி
லைந்தூர்வேண்டவைபிலெனிலைந்நிலம்வேண்டவைமறுத்தாலடுபோர்வேண்டு
மெந்தூர்த்திலைசுறத்சிந்தாத்தின்மறப்போசித்தசெங்கண்மாலே. (௧௧)

மூத்தோன்மற்றிவையுரைப்பவிளையோன்வெஞ்சினமனத்தின்மூளமூள
நாத்தோமிலுரைபதறக்கதுமெனவுற்றெழுந்திறைஞ்சினாலமெல்லாம்
பூத்தோனேபூந்தவிசிற்பூவைபுணர்மணிமார்பாபுன்மையாவுந்
தீர்த்தோனேயூனமிலான்மானமிலாதுரைப்பதற்கென்செய்வதென்றான். (௧௨)

விரிகுழற்பைந்தொடிநாணிவேத்தவையின்முறையிடுநாள்வெகுளேலென்று
மரபினுக்குமக்குமுலகுள்ளளவுந்தீராதவசையேகண்டா
யெரிதழற்கானகமகன்றுமின்னமும்வெம்பகைமுடிக்கவிளையாநின்று
யரவுயர்த்தோன்கொடுமையினுமுரசுயர்த்தோயுனதருளுக்கஞ்சினேனே. (௧௩)

கானுளவுனைவிடுத்தகண்ணிலாவருளிலிதன்காதன்மைந்தன்
றானாளுந்தரணியெல்லாமொருகுடைக்கீழ்நீயாளத்தருவனின்றே
மேனாணம்முரிமையறக்கவர்ந்தபெருந்துணைவனுனைவெறாதவண்ணம்
வானாளவானவர்கோன்றன்பதமற்றவன்றனக்கேவழங்குவேனே. (௧௪)

போர்முடித்தானமர்பொருதுபுலம்புறுசொற்பாஞ்சாலிபூந்தண்கூந்தற்
கார்முடித்தானிளையோர்முன்கழறியவஞ்சினமுடித்தான்கடவுட்கங்கை
நீர்முடித்தானிரவொழித்தநீயறியவசையின்றிநிலைநின்றோங்கும்
பேர்முடித்தானிப்படியேயார்முடித்தாரிவனுடனேபிறப்பதேநான். (௧௫)

அணிந்துவருஞ்சமரிலெதிர்ந்தரவுயர்த்தோனுடனரசருடலமெல்லாந்
துணிந்திரண்டுபடப்பொருதுதொல்லையுலகரசாளத்துணிவதல்லாற்
றணிந்தறமுங்கிளையுறவுங்கொண்டாடித்தானின்னந்தனித்தூதேவிப்
பணிந்திரந்துபுவிபெற்றுண்டிருப்பதற்கேதுணிகின்றான்பட்டபாடே. (௧௬)

பரிவுடன்மற்றிவைகூறும்பவனகுமாரனைமலர்க்கைபணித்துநோக்கிக்
குருகுலத்தோர்போரேறேகுற்றமதுபார்க்குங்காற்சுற்றமில்லை
யொருகுலத்திற்பிறந்தார்களுடன்வாழும்வாழ்வினைப்போலுறுதியுண்டோ (௧௭)
விருவருக்கும்வசையன்றோவிருநிலங்காரணமாகவெதிர்ப்பதென்றான்.

உரிமையுடன்றம்பியரன்றுணர்வறியாமையினவைக்கணுரைத்தமாற்றம்
பரிபவமோகேட்டோர்க்குப்பரிபவமென்பதுபிறராற்பட்டாலன்றோ
கருதிலதுமற்றெவர்க்குமொவ்வாதோகண்மலரிற்கைபடாதோ
பொருதொழிலுங்கடைநிலத்திற்கிடந்ததேயெனமொழிந்தான்புகழேபூண்பான்.()

சூடுகின்றதுழாய்முடியோன்சுரருடனேமுனிவர்களுஞ்சுருதிநான்குந்
தேடுகின்றபதஞ்சிவப்பத்திருநாடுபெறத்தூதுசெல்லவேண்டாம்
வாடுகின்றமடப்பாவைதன்வரமுமென்வரமும்வழுவாவண்ணங் (௧௯)
கோடுகின்றமொழியவன்பாலெனைத்தூதுவிடுகவினிக்கொற்றவேந்தே.

மலைகண்டதெனவெண்கைம்மறத்தண்டின்வலிகண்டுமகவான்மைந்தன்
சிலைகண்டுமிருவர்பொருந்திறல்கண்டுமெமக்காகத்திருமானின்ற
நிலைகண்டுமிவள்விரித்தகுழல்கண்டுமிமைப்பொழுதினேரார்தம்மைக் (௨0)
கொலைகண்டுமகிழாமலவன்குடைக்கீழுயிர்வாழக்குறிக்கின்றாயே.

வெம்புயவீமனும்வெகுண்டுமீண்டுமிவையெடுத்துரைப்பமேகமேனிப்
பைம்பொனெடுந்தனித்திகிரிப்பரந்தாமன்கருணையுடன்பரிந்துநோக்கி
யம்புவியின்முன்பிறந்தோரரசுநெறிமுறையுரைத்தாலதுகேளாமற் (௨௧)
றம்பியருமறுப்பரோதலைவவினிக்கடுங்கோபந்தணிகவென்றான்.

மைக்காலமுகிலூர்திவானவர்கோன்றிருமதலைவணங்கிநின்று
முக்காலங்களுமுணருமுகுந்தனுக்குமுதல்வனுக்குமொழிவான்மன்னே
வக்காலம்பொறுத்தவெலாமமையாமலின்னமிருந்தறமேசொன்னா
லெக்காலம்பகைமுடித்துத்திரௌபதியுங்குழன்முடிக்கவிருக்கின்றாளே. (௨௨)

தேவராயினும்பழையதயித்தியராயினுமற்றுஞ்செப்புகின்றோர்
யாவராயினுமெதிர்த்தோருயிருணவென்றிருப்பதுவேயென்கைவாளி
மூவராயவர்களுக்கு * முதல்வனாகியமூர்த்திமுகிலேயொப்பாக
மீவராதுகளும்வயற்குருநாடென்னிவனவன்பால்வேண்டுமோறே. (௨௩)

தீண்டாதகற்புடையசெழுந்திருவைத்துகிலுரியச்செயலொன்றின்றி
நீண்டானேகரியானேவிமலாவென்றரற்றினளாய்நின்றுசோர
மாண்டார்போலதுகண்டுமென்னவையில்யாமிருந்தமாசுதீர
வேண்டாமோவேண்டுவதுமேம்படுநல்லறமேயோவேந்தர்வேந்தே. (௨௪)

பொன்றுருந்திகிரியினான்போனாலும்பொறைவேந்தன்புகன்றவெல்லாஞ்
சொன்னாலுமவன்கேளான்விதிவலியாற்கெடுமதிகண்டோன்றூதன்றே
யெந்நாளுமுவர்நிலத்தினென்முளைவித்திடினும்விளைவெய்திடாது
பன்னாகந்தனக்கமிர்தங்கொடுத்தாலும்விடமொழியப்பயன்கொடாதே. (௨௫)

பார்த்தனிவைபுகன்றிறைவன்பணித்தருளவிருந்ததற்பின்பரிவினோடுந்
நீர்த்தனிருபதமிறைஞ்சித்தருமனையுங்கைதொழுதுசினங்கொள்வேலா
னீத்தநெடுங்கடலெழுபாடலைவர்பெறுவரெனுநிகழ்ச்சிபொய்யோ
கோத்தருமந்தனிலாண்மைகூறுதோகூறுகநீகொற்றவேந்தே. (௨௬)

கேவலக்நீர்வலியபகைகெடக்கமுதற்கிளர்மழைக்குக்கிரியொன்றேந்து
கோவலன்போயுரைத்தாலுங்குருநாடுமரசுமவன்கொடுக்கமாட்டா
னாவலம்பூதலத்தரசர்காடிரந்தோமெனநம்மைநகையாவண்ணங்
காவலன்றன்படைவலியுமெமதுதடம்புயவலியுங்காணலாமே. (௨௭)

அன்னநடையரம்பைதனையவுணர்கவர்ந்திடவிமையோரரசுக்காக
முன்னமவருடன்பொருதுசிறைமீட்டானங்குலத்துமுதல்வனன்றோ
மன்னவையில்யாங்காணமடவரலைத்துகிலுரிந்தவலியோன்றன்பா
லின்னமிரந்தவன்குடைக்கீழிருந்தக்காலம்மையுலகென்சொலாதே. (௨௮)

கானெறிபோய்க்கரந்துறைந்துகடவநாட்கழித்ததற்பின்கானநீங்கி
யீனமிலாவகைவந்தார்நந்தனைவரெனச்சிறிதுமிரங்கானுநின்
மானகரும்வனநாடுமுரிமையுந்தன்மொழிப்படியேவழங்கானுகிற்
றானறியாதவன்பிறர்போய்க்கற்பித்தாலறிவனோதரணிவேந்தே. (௨௯)

நகுலனிவையுரைத்ததற்பினன்றெனக்கையமைத்தருளிநகுலன்சொல்லு
மிகல்விசயன்றன்மொழியுந்திறல்வீமனியம்பியதும்யாவுங்கேட்டோம்
புலரியவுணர்வுடையோய்புகழுடையோய்திறலுடையோய்ப்பொலியென்ன
முகிலனையதிருமேனிமுகுந்தனுக்குமனமுருகமொழிகின்றானே. (௩௰)

---

* இங்கே மூவரென்றது விட்டுணுவின் வியூகர்களாகிய சங்கருடணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்னு மூவரையுமென்க. இவர்களுக்கும் படைப்புமுதலியவற்றில் அதிகாரப்பொதுமையாற் பிரமா முதலிய பெயரெய்தும். இது வாயுசங்கிதைமுதலியன வல்லார்வாய்க் கேட்டுணர்க.

சிந்தித்தபடிநீயுஞ்சென்றாலென்னொழிந்தாலென்செறிந்தநூறு
மைந்தர்க்குண்முதல்வனிலம்வழங்காமலிருந்தாலென்வழங்கினாலென்
கொந்துற்றகுழலிவளுமுடித்தாலென்விரித்தாலென்குறித்தசெய்கை
யந்தத்தின்முடியும்வகையடியேற்குத்தெரியுமோவாதிமூர்த்தி. (௩௧)

முருகவிழ்க்கும்பசுந்துளபமுடியோனேயன்றலகைமுலைப்பாலுண்டு
மருதிடைச்சென்றுயர்சகடம்விழவுதைத்துப்பொதுவர்மனைவளர்ந்தமாலே
யொருவருக்குந்தெரியாதிங்குன்மாயையானறிவேனுண்மையாகத்
திருவுளத்துக்கருத்தேதுவோவதுவெனக்குங்கருத்தென்றான்றெய்வமன்னன். ()

இவ்வண்ணஞ்சாதேவனியம்புதலுநகைத்தருளியிகலோர்சொன்ன
வவ்வண்ணம்புகலாமல்விரகுரைத்தானிவனென்னவவனோடாங்கோர்
பைவண்ணமணிக்கூடந்தனிலெய்திப்பாரதப்போர்பயிலாவண்ண
முய்வண்ணஞ்சொல்லுகநீயுபாயமெனத்தொழுதுரைப்பானுரங்கொள்வேலான்.()

வேறு.

நீபாரதவமரில்யாவரையுநீறாக்கிப்
பூபாரந்தீர்க்கப்புரிந்தாய்புயல்வண்ணா
கோபாலாபோரேறேகோவிந்தாநீயன்றி
மாபாரதமகற்றமற்றார்கொல்வல்லாரே. (௩௪)

பாராளக்கன்னனிகற்பார்த்தனைமுன்கொன்றணங்கின்
காரார்குழல்களைந்துகாலிற்றளைபூட்டி
நேராகக்கைப்பிடித்துநின்னையும்யான்கட்டுவனேல்
வாராமற்காக்கலாமாபாரதமென்றான். (௩௫)

முன்னநீகூறியவையெல்லாமுடித்தாலு
மென்னைநீகட்டுமாறெவ்வாறெனமாய
னுன்னைநீதானுமுணராதாயுன்வடிவந்
தன்னைநீகாட்டத்தளைந்திடுவன்யானென்றான். (௩௬)

மாயவனுமன்பன்மனமறிவான்கட்டுகவென்
றாயவடிவுபதினாறாயிரங்கொண்டான்
றூயவனுமூலமாந்தோற்றமுணர்ந்தெவ்வுலகுந்
தாயவடியிணைகடன்கருத்தினாற்பிணித்தான். (௩௭)

நீதேவனென்றறிந்துநெஞ்சாற்றளைக்கட்டுஞ்
சாதேவன்கண்களிக்கத்தானேயாய்முன்னின்றான்
பூதேவருங்கனகப்பூங்காநிழல்வைகு
மாதேவருந்தேடிக்காணாமலரடியோன். (௩௮)

அன்பாலின்றென்னையறிந்தேபிணித்தமைநன்
றென்பாதந்தன்னையினிவிடுகவென்றுரைப்ப
வன்பாரதப்போரில்வந்தடைந்தேமைவரையு
நின்பார்வையாற்காக்கவேண்டுநெடுமாலே. (௩௯)

என்றென்றிறைஞ்சியிருதாமரைத்தாளி
லொன்றுங்கதிர்முடியாற்கோமென் *றுரைத்தருளி
யின்றிங்கிருவேமுமிப்போதுரைத்தமொழி
யொன்றும்பிறரறியவோதாதொழிகென்றான். (௪௦)

---

* ஓம், ஆம் என்பன உடன்பாட்டையுணர்த்தும் வடமொழியவ்வியயங்கள்.

ஆண்டிருந்தவவைகீங்கியறிவுடையோரிருவோரும்
பாண்டவர்கண்முன்னெய்திப்பழுதில்புகழ்ப்பாஞ்சாலி
நீண்டகருங்குழல்சோரநின்றானைமுகநோக்கி
யீண்டவரிலிவையோனுஞ்சந்துமிகவினிதென்றான். (சக)

தருமனுக்குங்கருத்திதுவேதமருடன்போர்புரியாம
லிருநிலத்திலுடன்வாழ்தலெனக்குநினைவென்றுரைத்தான்
வரிமலர்க்கண்புனல்சோரமலர்மறந்தகுழல்சோர
விரைமலர்ச்செஞ்சேவடிக்கீழ்வீழ்ந்தழுதாண்மின்னனையாள். (சஉ)

சாலக்கனகன்றனிமைந்தனைமுனிந்த
காலத்தவனறைந்தகற்றூணிடைவந்தாய்
மூலப்பெரிட்டழைத்தமும்மதமால்யானைக்கு
நீலக்கிரிபோன்முன்னின்றநெடுமாலே. (சங)

கற்றைக்குழல்பிடித்துக்கண்ணிலான்பெற்றெடுத்தோன்
பற்றித்துகிலுரியப்பாண்டவரும்பார்த்திருந்தார்
கொற்றத்தனித்திகிரிக்கோவிந்தாநீயன்றி
யற்றைக்குமென்மானமார்வேறுகாத்தாரே. (சச)

மன்றிலழைத்தெனக்குமாசளித்தமன்னவன்பாற்
சென்றுதமக்கைக்றூர்திறல்வீரர்பெற்றிருந்தா
லன்றுவிரித்தவருங்கூந்தல்வல்வினையே
னென்றுமுடிப்பதினியெம்பெருமானென்றழுதாள். (சரு)

தண்டிருந்தவிவன்கரத்திற்றனுவிருந்ததவன்கரத்தில்
வண்டிருந்தபூங்குழன்மேன்மாசிருந்ததெனவிருந்தாள்
கண்டிருந்தெல்லீருங்கருதலர்பாலூர்வேண்டி
யுண்டிருந்துவாழ்வதற்கேயுரைக்கின்றீருரையீரே. (சசு)

சண்டமுகிலுருமனையசராசந்தன்றனக்கஞ்சி
வண்டுவரையாளுகவடமதுரைகைவிட்ட
திண்டிறன்மாதவன்மதியோதிகழ்தருமன்றன்மதியோ
பண்டெவர்கருத்தறிந்துபார்போய்வேண்டுவதென்றான். (சஎ)

சாந்தமிகின்றிவையுரைப்பச்சடைக்குழலாளழுதாற்றக்
கோத்தருமன்முதலாயகுலவேந்தரைவரையும்
பார்த்தருளியருள்பொழியும்பங்கயக்கணெடுமாலு
மேத்தரியபெருங்கற்பினிளையாளுக்கிவையுரைப்பான். (சஅ)

தோல்லாண்மைப்பாண்டவர்க்குத்தூதுபோய்மீண்டதற்பி
னல்லாயுன்பைங்கூந்தலுனேமுடிக்கின்றே
னெல்லாருங்காணவினிவிரிப்பதென்னரிய
புல்லார்தமந்தப்புரமாதர்பூங்குழலே. (சகூ)

மைக்குழலாய்கேளாய்மருவாருடற்புலத்தப்
புக்குழலாருங்கொழுவாம்போர்வாளபிமன்னுத்
தொக்குழலும்வெங்கோன்மைத்தோல்வேந்தர்தங்குலமு
மிக்குழலுஞ்சோமுடியாதிரானென்றான். (ருo)

பெண்ணீர்மைகுன்றாப்பெருந்திருவின்செங்கமலக்
கண்ணீர்துடைத்திருதன்கண்ணிற்கருணையெனுந்
தெண்ணீரினாற்பொருந்தத்தேற்றினான்சாற்றுகின்ற
மண்ணீரனலனிலம்வான்வடிவாமாமாயன். (௫௧)

துன்றுபிணியோர்துறந்தோரடங்காதோர்
கன்றுசினமனத்தோர்கல்லாதவரிளையோ
ரொன்றுமுறைமையுணராதவர்மகளி
ரென்றுமிவர்மந்தனத்தினெய்தப்பெறுதாரே. (௫௨)

என்னக்கழறியிருந்தோருரைதவிர்த்து
நின்னொப்பவரில்லாய்நீயேகௌவுரைப்ப
மன்னர்க்குமன்னவன்பான்மாயோனுந்தூதாகிப்
பொன்னூற்றநேமிப்பொருபரித்தேர்மேற்கொண்டான். (௫௩)

சங்குமணிமுரசுஞ்சல்லரியுந்தாரைகளு
மெங்குமுழங்கவெழில்வெண்குடைநிழற்றப்
பொங்குகவரிபுடையிரட்டவெண்ணிலா
வங்கமொருநான்குமவனிபருந்தற்சூழ. (௫௪)

கல்வரையும்பாலைக்கடுஞ்சுரமுங்கான்யாறு
நல்வரையுநீர்நாநொளிரண்டிற்சென்றருளித்
தொல்வரையகோபுரமுநீண்மதிலுஞ்சூழ்ந்திலங்கு
மல்வரையதோளான்வளமாநகர்கண்டான். (௫௫)

வே று.

மேவுசெந்துகிர்த்திரளுமாமரகதவிதமுங்
கோவைவெண்கதிர்த்தரளமுநிரைநிரைகுயிற்றித்
தாவும்வெம்பரித்தேரினான்றனக்கெதிர்சமைத்த
காவணங்களிற்றோன்றினபச்சிளங்கமுகம். (௫௬)

வம்புலாமகில்சந்தனம்வருக்கைமாகந்தஞ்
சம்பகந்தமாலம்பலதிசைதொறுந்தயங்க
வும்பர்நாயகன்வரவுகண்டுளங்களிகூர்ந்து
தும்பிபாடினதோகைநின்றாடினசோலை. (௫௭)

அணிகொடத்தினபுரியெனுமணங்குசெந்திருவின்
கணவனுக்கெதிர்காட்டுகீராசனங்கடுப்ப
மணமிகுத்தசெந்தாமரைமலருடன்சிறந்த
புணரியிற்பெரும்புனலையுங்கொள்வனபொய்கை. (௫௮)

நடந்தநாயகன்கோலமாய்வேலைசூழ்ஞால
மிடந்தநாளிடையதவழியாகவந்தெழுந்து
படர்ந்தபாதலகங்கையப்படர்மதில்சூழ்ந்து
கிடந்ததாமெனச்சிறந்ததுதாழ்புனற்கிடங்கு. (௫௯)

அடிநிலத்திலேபடிவனவிடிமுகிலனைத்து
முடிநிலத்தினுக்குபெதத்தினுமுடிவில்லை
நெடியசக்கரப்பொருப்பையுநிகரிலாவிதற்கோர்
படிவகுத்ததாமெனும்படிபார்ந்ததுபுரிசை. (௬0)

பகலிருக்கமிம்பரிதின்கதிர்பரப்பாம
விகலியெங்கணுமெறிந்துகால்பொருதலினேத்திப்
புகறுமின்றமந்தாமணித்தரங்கமேபோல
வகல்விசும்பிடைமிடைவனநெடுங்கொடியாடை. (௬௧)

புயங்கபூமியோபுரந்தரற்கமைத்தபொன்னுலகோ
தயங்குசெல்வநீடளகையோநிகரெனுந்தாத்த
வியங்குகார்முகில்வரையினின்றெழுவனபோல
வயங்குகாரகிலெனும்புகையுயிர்ப்பனமாடம். (௬௨)

மன்னர்வேழமுஞ்சேனையுமெதிரெதிர்மயங்கப்
பின்னுமுன்னுமெம்மருங்கினும்பெயரிடம்பெறுமற்
றுன்னிநின்றவரேகுமினேகுமினென்னு
மென்னுமோசையேயுள்ளனவீதிகளெல்லாம். (௬௩)

வரையெலாம்பலவனமெலாங்கடலெலாம்விளைந்த
தரையெலாம்படுபொருளெலாந்தனித்தனிகுவித்த
நிரையெலாங்கவராவணநீர்மையைப்புலவோ
ருரையெலாந்தொடுத்துரைப்பினுமுவமைவேறுள்தோ. (௬௪)

விரவுகான்மலரினும்பலவீரரின்விதங்கள்
பரவைவெண்மணலினும்பலபுரவியின்பந்தி
யிரவில்வானமீனினும்பலயானையினீட்ட
நிரைகொள்கார்த்துளியினும்பலதேரணிநிலையே. (௬௫)

ஆசிலாமறையர்தணாலயமொருபான்
மாசிலாமுடிமன்னவர்மாளிகையொருபாற்
காசிலாமதியமைச்சர்தங்கடிமனையொருபாற்
பேசிலாவளவணிகர்தம்பேரிடமொருபால். (௬௬)

மங்கலந்திகழ்மனையெலாம்வலம்புரியோசை
திங்கடோய்நெடுந்தலமெலாஞ்செழுஞ்சிலம்போசை
யங்கண்மாநகரனைத்துமும்முரசதிரோசை
யெங்கணுங்கடவுளரிடந்தொறுமுழவோசை. (௬௭)

முன்றிலின்கணின்றிடம்பெறுவரசர்மாமுடிக
ளொன்றொடொன்றறைந்தெற்றிமேலொளிர்பொறிசிதறிச்
சென்றுசென்றுறுதிசைதொறுந்திகழ்ந்ததுசெம்பொற்
குன்றெனும்படிகுருகுலநாயகன்கோயில். (௬௮)

என்றிசைக்குசல்லொளிநிமிரெளின்மணிமகுடக்
குன்றிசைக்கும்வண்கோபுரநிரைகள்குறுகித்
தென்றிசைக்குளிர்செண்பகமலர்தொறுஞ்சிறைத்தே
னின்றிசைக்கும்வண்சோலைவாயமர்ந்தனனெமோல். (௬௯)

அன்றதூதகொண்டிலங்கைநிவிளைத்தவரைவர்க்
கின்றதூதவந்தெயிற்புறத்திறுத்தனனென்றுத்
தன்றதூதவண்டினமுரறொடையலான்றனக்குச்
சென்றதூதவரியம்பினர்சேவடிவணங்கி. (௭௦)

தொல்லைநாயகன்வந்தனனென்றலுஞ்சுரும்பார்
மல்லன்மாலையானேவலான்மாநகர்மாக்க
ளெல்லைநீண்மதில்வட்டம்யோசனையெழுநூறுஞ்
செல்வமாநகர்த்தெருவினையொப்பனைசெய்தார். (௭௧)

மின்னுமாமுகிற்பல்லியவிதங்கண்முன்முழங்க
மன்னர்மன்னவனெழுந்தனன்மாலெதிர்கொள்வா
னென்னைநீயவற்கெதிர்செல்வதென்றுதன்மருகன்
றன்னைவன்பொடுதகைந்தனன்கொடுமைகூர்சகுனி. (௭௨)

சீர்வலம்புரிதிகிரிசேர்செங்கையான்றனக்குக்
கார்வலம்புரிகோயிலுங்காட்சியுமமைத்துப்
போர்வலம்புரிகிருபருமிளைஞரும்போற்றத்
தார்வலம்புரியவனிருந்தனன்பொலந்தவிசின். (௭௩)

தொல்பகிரதிமைந்தனுந்துரோணனுஞ்சுதனும்
வில்விதூரனுங்கிருபனுமுதலியவேந்தர்
மல்குமுவிருபத்துநூறாயிரமகிபர்
செல்வநாயகற்கியோசனையிரண்டெதிர்சென்றார். (௭௪)

வந்துவந்திருமருங்கினுமன்னவர்வணங்கப்
பைந்துழாய்முடிப்பரமனுங்கண்மலர்பரப்பி
யந்தமாநகர்புகுந்தபினரசனிற்புகாமற்
புந்திகூருள்விதுரன்வாழ்வளமனைபுகுந்தான். (௭௫)

வேந்தர்யாரையும்விடைகொடுத்தகன்றபின்விமலன்
வாய்ந்தமாளிகைநடுவணோர்மண்டபங்குறுகி
யாய்ந்துவல்லவர்நவமணியழுத்தியவரியே
றேந்துமாசனமிடப்பொலிந்ததன்மிசையிருந்தான். (௭௬)

இருந்துவந்தருளிறைவனையிறைஞ்சினனிறைஞ்சிப்
பெருந்துவந்தனைப்பிறப்பையுமிறப்பையும்பிரித்தான்
மருந்துவந்தனையமரருக்கருளியமாயோன்
விருந்துவந்தனனென்றுளமுருகியவிதுரன். (௭௭)

கோடுகொண்டகைக்குரிசிலையலர்ந்தகோகனதக்
காடுகண்டெனக்கண்டுதன்கண்ணிணைகளியாத்
தோடுகொண்டதார்விதுரனிப்பிறப்பையுந்தொலைத்தான்
வீடுகண்டவர்க்கியம்பவும்வேண்டுமோவேண்டா. (௭௮)

உள்ளினனுணர்ந்துள்ளமுமுருகினனெழுந்து
துள்ளினன்விழுந்திணையடிசூடினன்றுயரைத்
தள்ளினன்மலர்த்தடக்கையாற்றத்துவவமுதை
யள்ளினனெனக்கண்களாலருந்தினனளியோன். (௭௯)

முன்னமேதயின்றருளியமுதுபயோததியோ
பன்னகாதிபப்பாயலோபச்சையாலிலையோ
சொன்னநால்வகைச்சுருதியோகருதிநீயெய்தற்
கென்னமாதவஞ்செய்ததிச்சிறுகுடிலென்றான். (௮௦)

மும்மையாகியபுவனங்கண்முழுதையுமருந்த
மெம்மையாளுடைநாயகன்விருந்தினுக்கிசைந்தா
னம்மவென்றனனறுநூறாயிரமடையர்
தம்மைநோக்கினனவர்களும்விரைவுடன்சமைத்தார். (அக)

வந்தகொற்றவேல்வரிசிலையவர்க்கும்வாளவர்க்குங்
கந்தடர்ப்பணைகரிக்கும்வெங்கவனவாம்பரிக்கு
மைந்துபத்துநூறாயிரமாசர்க்குமெவர்க்கு
மிந்திரற்குமெய்தாவமுதெனும்படியியற்ற. (அஉ)

அமைத்தவாசநன்னீர்கொடுமஞ்சனமாடிச்
சமைத்தபல்கறியடிசிறம்விருப்பிறலருந்தி
யுமைக்குநாயகனிரவொழித்தருளினானுதல
விமைப்பிலாரமுதருந்தியவியல்பெனவிருந்தார். (அங)

வாசநீரும்வன்சுண்ணமுமுறைமுறைவழங்கப்
பூசறுத்தழிப் * பூசினார்குடினார்புனைந்தார்
வீசசாமரமிரட்டவெண்மதிக்குடைநிழற்றக்
கேசவன்மணிக்கேசரித்தவிசிடைக்கிவர்ந்தான். (அச)

ஞானகஞ்சுகவிதுரன்வாழ்மனையினாயகனும்
போனகம்பரிவுடனுகர்ந்திருந்தவப்பொழுதிற்
றானுமேருவுக்கப்புறத்தவ்வமுதருந்தப்
பானுவும்பெருங்குடதிசைப்பரவையிற்படிந்தான். (அரு)

கருதியந்தணர்யாவருந்தங்கடன்கழிப்பச்
சுருதியென்னும்வெஞ்சாபமேலம்புகைதொடுத்துப்
பருதிதன்பெரும்பகைவர்மேல்விடுத்தலிற்பரந்த
குருதியாமெனசிவந்தெழச்சிவந்ததுகுடபால். (அசு)

தரங்கவாரிதிப்புறத்தெதிர்மலைந்தவெஞ்சமரி
னரங்கொள்கூர்நெடும்படைகளாலுடன்றமந்தேகர்
தரங்கமேழுடைக்கடவுளர்நிரைநிரைதணித்த
கரங்கள்போன்றனகரைதொறும்வளர்துகிர்க்காடு. (அஎ)

நீதியிற்புகல்பகலெலாநிராமகளிர்
மீதுறைத்தெழும்வெவ்வெயில்படாவகைவிரித்துப்
போதபுங்கதென்றினம்படச்சுருக்கியபூம்பட்
டாதபத்திரம்போன்றனதாமரையடவி. (அஅ)

கலந்தமங்கலமுழவுவெண்சங்கொடுகறங்க
மிலைந்தபூங்குழல்வனிதையர்மெய்விளக்கெடுப்பக்
கலந்ததாமரைத்தடமெலாங்குவிந்ததுகண்டு
மலர்ந்ததாமரைவாவிபோன்றதுநகர்வட்டம். (அகூ)

உரகபுங்கவன்மணிமுடியொப்பனநிப
மிருமருங்கினுமாயிரமாயிரமேந்த
வரிசமைந்தபோராசனத்தழகுடனிருந்த
புரவலன்றனைப்புண்ணியவிதுரனும்போற்றி. (கூ0)

* பூசறுத்தல்—கழுவல்.

பொங்கராவணைபொலிவறப்போந்தபின்பொதுவர்
தங்கள்பாடியில்வளர்ந்துமாமருதிடைத்தவழ்ந்து
கங்கைமாநதிகால்வழிசருணையங்கடலே
யிங்குநீதனிநடந்தவாறுரைத்தருளென்றான். (கூக)

தோட்டுவந்துசெந்தேனுசர்சுரும்புசூழ்தொடையாய்
காட்டுவந்துமுன்றிரிந்துதங்கடவநாட்கழித்து
நாட்டுவந்தபேரரவர்க்குநற்குருநாடு
கேட்டுவந்தனமென்றனன்விதுரனுங்கேட்டான். (கூஉ)

முழக்கினனுயர்முரசுயர்த்தவன்றனக்குரிமை
வழக்கினலறிந்தடலரவுயர்த்தகோன்வழங்கான்
றழக்கினலிருதிசையினுமுரசெழச்சமரி
லுழக்கினலலதுணர்வனேவென்றவனுரைத்தான். (கூங)

வாளைவாவியிலுகண்டெழவளரிளங்கமுகின்
பாளைவாயளிமுரன்றெழும்பழனநாடுடையா
னாளைவாழ்வவர்க்களித்திலனெனிலெதிர்நடந்து
மூளைவாயுகமுடிப்பர்வெம்போரெனமொழிந்தான். (கூச)

விரைந்துபாய்பரிமன்னவரிதம்படமெலிவுற்
றிரந்துவேண்டினுங்கிளைஞருக்கொருபொருளீயார்
பரந்தபோரினிலெதிர்த்தவர்படப்படப்பகழி
துரந்தபோதவர்க்குதவுவர்சொன்னவையெல்லாம். (கூரு)

என்றுபாரினிலியற்கையும்விதுரனுக்கியம்பி
வென்றுபோர்செழுநேமியான்விடைகொடுத்தருளிக்
குன்றுபோற்புயக்காவலர்கொடுந்துடிசுறங்க
மன்றனுண்மலர்ப்பாயலின்மீதுகண்வளர்ந்தான். (கூசு)

குளிருமாமதிமுகத்தொளிர்குமுதவாய்மலர்த்தித்
தளவவாணகைபரப்பிவண்சததளமலர்க்கை
யளவிலேகுவித்தளியொடுமகன்றிலாமையினுற்
களிகொடோள்விலைக்கணிகையைப்போன்றதக்கங்குல். (கூஎ)

அளைந்தவாரிருட்கடல்பொருதொருபுடையண்டம்
பிளந்ததாமெனக்கரும்படாம்பீறியதென்ன
வளைந்தவேழ்கடல்வற்றமேல்வடவையின்முகத்திக்
கிளர்ந்ததாமெனக்கிளர்ந்தனவிரவியின்கிரணம். (கூஅ)

இகலும்வாளரவுயர்த்தவனிருந்ததொல்பதியி
லகிலநாயகனெருதனிநடந்தவாறறிந்து
மகரவாரிதியகன்றுமாமருங்குறவணைந்த
திகிரிபோலவந்தெழுந்தனனிரவிகீழ்த்திசையில். (கூகூ)

வே று.

சோதிவானநதிமைந்தனும்பழையசுருதியாலுயர்துரோணனு
மாதியாகவுயிரினும்வியப்புறவளித்தமன்னவரநேகரு
நீதியாறுவகையைந்துபத்தொடறுபத்தோராயிரவர்கிருபருந்
தீதிலாததிறலக்குரோணிபதிஞென்றுபெற்றமிகுசேனையும். (௪00)

தொக்கவெண்கவரியாலவட்டமிரைசொட்டை * வாள்பரிசைதுகிலுடன்
கைக்களாசியிவைகொண்டேவிவருகன்னிமங்கையர்களனைவரு
மிக்கவேதியர்கள்வல்லபல்கலைவிதத்திலுள்ளவர்கள்யாவருந்
தக்கதம்பியரும்வந்தருழுவயர் தரணிமேனிருபர்தம்பிரான். (௧0௧)

திரைகதிர்க்கனகநீள்சுவர்ப்பவளவுத்திரத்திடைநிரைத்தவொண்
பருமணிக்கிரணபற்பராகவயிரத்துலாமிசைபரப்பிவெண்
டரளவர்க்கவயிடூரியப்புதியகோமளப்பலகைதைத்துமா
மரகதத்திரளொருகோடிதூணிரையமைத்தமண்டபமருங்கரோ. (௧0௨)

முட்டநித்திலநிரைத்தபந்தரிணைகைத்தசிரரிமுகத்தகால்
வட்டமெத்தைகொடமைத்தபீடமிசைவாசவன்கொலெனவைகினான்
பட்டவர்த்தனருமகுடவர்த்தனரும்வந்துசேவடிபணிந்தபி
னிட்டபொற்றவிசின்முறைமையாலினிதிருக்கவென்றவரையேவியே. (௧0௩)

காவன்மன்னவர்முகங்கடோறுமிருகண்பரப்பியமர்கருதுவோ
ரேவலின்கண்வருதூதனுமிடையனின்றுநம்மவையிலெய்தினு
லோவலின்றியெதிர்சென்றுகண்டுதொழுதுறவுகூறிலினியுங்களூர்
நீவலஞ்செயவடர்ப்பனென்றுநனிசீறினான்முறைமைமாறினான். (௧0௪)

இந்தவண்ணமுரைசெய்துமன்னருமிராசராசனுமிருக்கவே
தந்தவண்ணனுடன்வந்தவண்ணலொளிதங்குகண்டுயிலுணர்ந்தபின்
கந்தவண்ணமலர்கொண்டுகைதொழுதுகாலையிற்பலகடன்கழித்
திந்தவண்ணமுனிருந்தபேரவையிலேயினனிசைகொள்வேயினான். (௧0௫)

துன்றுகங்கைமகனுந்துரோணனொடுசுதனுநீதிபுனைவிதுரனு
மன்னர்மன்னனையொழிந்தமன்னவரும்வந்துசேவடிவணங்கினர்
கன்னனுந்தலைகவிழ்ந்திருந்தனனழன்றுளஞ்சகுனிகருகினான்
முன்னநின்றவர்களிட்டபீடமிசைமொய்தழாய்முகிலுமெய்தினான். (௧0௬)

முன்னகங்குடைகவித்தகாளமுகின்முன்னிருந்தபின்முகங்கொடா
தென்னகத்தினையொழித்துநென்னலிடையிந்தமாநகரிலெய்தியும்
பொன்னகங்கொள்புயவிதுரனில்லிடைபுகுந்ததென்கொலிதுபுகலெனப்
பன்னகத்தனையுயர்த்தகோவுமுரைபகரமாலுமெதிர்பகருவான். (௧0௭)

என்னினின்னிலொருபேதமில்லையிதுவென்னினின்னிலதுவென்னினு
மின்னின்மின்னிலகுவிறனெடும்படைவிதுரன்வந்தெதிர்விளம்பினு
னுன்னிலின்னமுளதொன்றுபஞ்சவருமைக்கவந்ததொருதூதன்யா
னின்னிலின்னடிசிலுண்டுநின்னுடன்வெறுக்கவென்னுவதுநீதியோ. (௧0௮)

அரவமல்கியபதாகையாய்மதியமைச்சராயரசழிப்பினுங்
குரவர்நல்லுரைமறுக்கினும்பிறர்புரிந்தநன்றியதுகொல்லினு
மொருவர்வாழ்மனையிலுண்டுபின்னுமவருடனழன்றுபொரவுன்னினு
மிரவியுள்ளளவுமதியமுள்ளளவுமிவர்களேநரகிலெய்துவார். (௧0௯)

தோரண்மலர்மடந்தைகேள்வனிவைசெப்பவுந்தெரியவொப்பிலா
நாதநாயகன்முகத்தில்வைத்தவிருநயனனுமிகநகைசெயாத்
தூதனுவெருதன்மைசொல்லுகெனமன்னர்மன்னனிதுசொன்னபின்
வேதநாறுமலருந்திவண்டுளபவிரைசெய்தாரவனுமுரைசெய்வான். (௧௧0)

* சொட்டை—வளைதடி.

சூதினாலரசிழந்துநின்றுணைவர்சொன்னசொல்லும்வழுவாதுபோ
யேதிலார்களெனநொந்துதண்ணிழலிலாதகானினிடையெய்தியுந்
தீதிலாவகைகுறித்தநாள்பலகழித்துவந்தனர்செகத்தினிற்
சோதிலாதகுருகுலமகீபவவருரிமைநண்பொடுகொடுத்தியே. (௧௧௧)

சொல்லவாவுரகதுவசநின்னுரியதுணைவர்தங்களையழைத்துநீ
வல்லவாறுசிலநாடளித்தவர்கடம்முடன்கெழுமிவாழ்தியே
னல்லவாய்மைநிலையுடையையென்றரசர்நாடொறும்புகழ்வர்நண்புகொண்
டல்லவாமெனமறுத்தியேலறமுமாண்மையும்புகழுமல்லவே. (௧௧௨)

என்றுகேசவனியம்பவங்கெதிரிராசராசனுமியம்புவா
னன்றுசூதுபொருதுரிமையாவையுமிழந்துபோயினர்களைவரு
மின்றுநீவிரகின்மீளவுங்கவரவெண்ணினனவரிலெளியனோ
சென்றுகானிலவரின்னமுந்திரிவதுறுதியென்றுநனிசீறியே. (௧௧௩)

நீவெறுக்கிலெனிருந்தமன்னவர்திகைக்கிலென்பலநினைக்கிலென்
போய்நகைக்கிலெனுரைத்தவுண்மைமொழிபொய்த்ததென்றமரர்புகலிலென்
வேய்மலர்த்தொடையலைவரென்னுடன்மிகைத்துவெஞ்சமர்விளைக்கிலென்
னீயிருக்குமிடமெனினுமிப்புவியில்யானவர்க்கரசினிக்கொடேன். (௧௧௪)

கார்வழங்குருமெனச்சினத்தினொடுகண்ணிலான்மதலைகழறவும்
பார்வழங்கநினைவில்லையேலவனிபாதியாயினும்வழங்குவாய்
தார்வழங்குதடமார்பவென்னவதுதானுமன்னவன்மறுக்கவைந்
தூர்வழங்கெனவுற்றிரந்தனனிவ்வுலகெலாமுதவுமுந்தியான். (௧௧௫)

மாடளிக்குலநெருங்குபைந்துளபமாலையாய்மகரவேலைசூழ்
நாடளித்திடவுமைந்துபேருடையநகரளித்திடவும்வேண்டுமோ
காடளிக்கவதனிடைதிரிந்துறைகரந்துபோயினர்கள்காணவோர்
வீடளிக்கினும்வெறுப்பரோவிதனைவிடுகவென்றெதிர்விளம்பினான். (௧௧௬)

தந்தைகாதலுறுதன்மைகண்டிளையதாய்பயந்தவிருதம்பியர்க்
கிந்தவாழ்வுமரசுங்கொடுத்தவனுநின்குலத்தொருவனிங்குளான்
முந்தமாநிலமனைத்தினுக்குமுயர்முறைமையாலுரியவரசருக்
கைந்துமாநகருநீகொடாதொழியினென்னதாகுமுனதரசியல். (௧௧௭)

ஒருகுலத்தினிலிரண்டுமன்னவருடன்பிறந்துரிமையெய்தினு
மிருகுலத்தவருமொக்கவாழ்வுறுதலெக்குலத்தினுமியற்கையே
பொருகுலக்களிறுவளர்திசைக்கண்மிகுபுகழ்பரப்பியெழுபுவிபெறுங்
குருகுலத்தவரியற்கைநன்றெனமொழிந்தனன்கரியகோவலன். (௧௧௮)

பேரராவணைதுறந்தமாயனிவைபேசவன்பினொடுபின்னையுஞ்
சேரராவினையுயர்த்தகோவும்விழிதீயெனும்படிசெயிர்த்துளே
போரராநிருபன்மணிநெடுஞ்சுடிகையாயிரங்கொடுபொறுத்தபார்
வீரரானவரதல்லவோவுரிமைவேண்டுமோவெனவிளம்பினான். (௧௧௯)

பொய்வளர்ந்தமொழிமன்னன்மற்றிவைபுகன்றபின்புயவலியினா
லைவர்தங்களரசுங்கொடாமலடலாண்மைகொண்டெதிரடர்த்தியே
மெய்விளங்கவருகுருநிலத்தினிடைவந்துவெஞ்சமர்விளைக்கவே
கைவழங்குகெனநின்றதூணிடையறைந்துரைக்குமினவகாவலன். (௧௨௰)

புன்பிறப்புடையபொதுவர்தங்களொடுபுறவிலாளிறைபுரந்திடு
முன்பிறப்புமுறாவோடுகோவியருளைப்பிணித்தமறந்தநீ
மன்பிறப்பிலுயர்குருகுலத்தவர்தம்வாய்மைதானுமொருமாசிலா
வென்பிறப்புமுணராமலோசபையிலிந்தவாசகமியம்பினய். (௧௨௧)

ஏவிலங்குசிலையவர்வந்தநுமில்யானயர்ந்தெளிதிருப்பனே
கோவிலங்குபொரவஞ்சமோகாடருஞ்சரங்கள்பகைகொண்டகான்
மேவிலங்குமுன்மலைத்தல்கையறையவேண்டுமென்றதுநின்மேன்மையோ
ராவிலங்குமெனவெண்ணியோமிகவுநன்றுநன்றரசர்ஞாயமே. (௧௨௨)

அளிவருங்குழல்பிடித்துமன்னவையிலேவருக்குமரியாளைநா
ளெளிவருந்துகிலுரிந்தபோதருகிருந்துகண்டவர்களல்லவோ
துளிவரும்புனல்பரிந்தருந்தியிடுசோறுமின்றுயிர்சுமந்துதோ
ளெளிவரும்படியிருந்தபாவியருமின்றுமானநிலையுணர்வரோ. (௧௨௩)

அன்னையானவருமிருவராமுதலளித்ததந்தையர்களைவராம்
பின்னையாசைகொடுகுருகுலத்துரிமைபெறுவராமொருபிறப்பிலோர்
மின்னையாமிவர்களைவரும்பரிவினொடுதளித்தனிவிரும்புவா
ரென்னையாமவரொடொருகுலத்தரசனென்பதம்மவிவையென்சொலாம். (௧௨௪)

ஞாலமுற்றுமுடையவன்மொழிந்திடநகைத்துவண்டுவரைநாதனுஞ்
சாலமுற்றுமினியவர்கருத்தெனநினைந்துபேரவைதணந்துபோய்க்
கோலமுற்றசிலைவிதுரன்வாழ்வுபெறுகோயில்சென்றுநனிகுறுகினன்
சீலமற்றவர்சினத்தபோதுமொருநீதிலாதவர்செயிர்ப்பரோ. (௧௨௫)

கரிந்துமாலைசருகாகவும்புதியகமலவாண்முகம்வெயர்க்கவுந்
திருந்துகண்ணிணைசிவக்கவுங்கொடியசெய்யவாயிதழ்துடிக்கவு
மிருந்தபேரவையினெடிதுயிர்த்திடுமிராசராசனவனுக்கிவன்
விருந்துசெய்தவுறவென்கொலென்றரசரெதிர்விதுரனைவிளம்புவான். (௧௨௬)

வன்பிறுலவனிவெளவவென்றுகொலென்மனையிலுண்டியைமறுத்தவன்
றன்பதாகினியொடினிதருந்தும்வகைதன்னிலின்னமுதியற்றினு
னென்பிதாவொடுபிறந்துமின்றளவுமென்கையோதனமருந்தியு
மன்புதானுடையனல்லனென்பகைதனக்குமுற்றபகையல்லவோ. (௧௨௭)

முதல்விழைந்தொருவனுடனியைந்தபொருள்பற்றியின்புறமுயங்கினு
மதிகமென்றபொருளொருவன்வேறுதரினவனையேயொழியவறிவரோ
போதமடந்தையர்தமக்குமண்ணிலிதுபுதுமையல்லவவர்புதல்வனும்
விதுரனின்றவனொடுறவுகொண்டதோர்வியப்பையென்சொலிவெறுப்பதே. ()

இன்னவாறிவனுரைத்தபோதவனெழுந்திருந்துவசையென்னைநீ
சொன்னவாய்குருதிசோரவாள்கொடுதுளைத்துநின்முடிதுணிப்பன்யான்
மன்னவாகுருகுலத்திலேயொருவன்மைந்தனுருவிளாவெளவினு
னென்னவானவர்நகைப்பரேயெனையுரைத்தநாவுடனிருத்தியோ. (௧௨௯)

ஈண்டவர்க்குதவியாயதுனெனவிசைப்பவற்குலகமெங்கணு
நீண்டவற்குதவியாயினேனெனநினைத்துநீயெனையடர்த்தியே
மாண்டவர்க்குதவியாயபோரமுமிசையுமாண்மையும்வளர்த்திடும்
பாண்டவர்க்குதவியாகிலென்னைமுடிமன்னரானவர்பழிப்பரோ. (௧௩0)

சொல்லிரண்டுபுகலேனினிச்சமரினின்றுவெங்கணைதொடேனென
வில்லிரண்டினுமுயர்ந்தவில்லதனைவேறிரண்டுபடவெட்டினான்
மல்லிரண்டினையுமிருவராகிமுன்மலைந்தகாளமுகில்வந்துதன்
னில்லிரண்டுதினம்வைகுதற்குலகிலெண்ணிலாததவமெய்தினான். (கருக)

அந்தவில்லினைமுறித்தவில்லிதனதாலயம்புகுதவச்சுதன்
சந்தவில்லுமரன்வில்லுமொப்பதொருதாமவில்லினைமுறிப்பதே
முந்தவில்லியரிலெண்ணும்வில்லுடையவிசயன்வந்தமரின்முடுகினு
லெந்தவில்லியெதிர்நிற்கும்வில்லியினியென்றுகாவலரிரங்கினர். (கருஉ)

காரணைத்தும்விடுதாரையன்னபலகணைகளேவியமர்கருதும்வில்
வீரனைப்பழுதுரைத்தநீபகையையெங்ஙனேதனிகொல்வெல்லுவாய்
பாரனைத்துமினியைவராளும்வகைபண்ணுவித்தனையழிந்ததுன்
பேரனைத்துமெனவுள்ளழிந்துசிலபேசினானுயர்பிதாமகன். (கருங)

பிதாமகன்பரிவுடன்முனிந்துசிலபேசநாசமுறுபேரனும்
விதார * மொய்ம்பனும்விதுரனல்லதுவில்வல்லவீரர்பிறரில்லையோ
வுதாரசீலனுயரங்கர்கோன்வரிவிலொன்றுமேயமையுமுற்றெழும்
பதாதியோடமரிலைவரும்படமலைந்திடப்பரணிபாடவே. (கருச)

நீயிருக்கநெடுவிற்கையாசிரியனவனிருக்கநிகரற்றவன்
சேயிருக்கவிறன்மன்னரிப்படிதிரண்டிருக்கவெதிர்சென்றுநீள்
வேயிருக்குமிதழிடையனுக்குநல்விருந்துசெய்தவன்வெறுக்கிலென்
போயிருக்கிலென்முறிக்கிலென்சிலைமலைந்துநம்மொடெவர்போர்செய்வார். ()

என்றுகூறவிறலங்கர்பூபதியும்யானிருக்கவிகல்விசயனைச்
சென்றுசீறியுயிர்கொள்ளவல்லவர்கள்யாவரென்றுநனிசெப்புவீர்
கன்றினல்விளவெறிந்தகள்வனிவனின்றுதேர்நனிகடாவினு
மன்றுபோரினிடைகாணலாகுமெனதாடல்வெஞ்சிலையினாண்மையே. (கருசு)

அம்பரத்தவருடன்றுசீறினுமொரம்பிலேயழிவர்திண்ணம்யான்
வெம்பணிப்பசழியேவிலாவியுடன்மீளுவானமரில்விசயனோ
விம்பரிற்புகலவிருதளத்தினுமெனக்குநேரொருவரில்லையென்
றும்பர்கற்பகமுநாணவண்மையிலுயர்ந்தவீரனிவையுரைசெய்தான். (கருஎ)

திசையனைத்தினும்வளைந்ததானவரையிரவிவந்ததொருதிசையின்வாய்
நிசியெனப்பொருதுவானவர்க்கரசளித்துவந்தவிறனிர்மையான்
விசயனுக்குநிகர்நீகொலோகடவுள்வெண்மதிக்குநிகர்வெள்ளியோ
வசைவில்விற்றொழிலும்வல்லையோவெனவொரசைவிலாதவனறைந்தனன். ()

அவன்மொழிந்தமொழிதன்செவிப்படலுமருகிருந்தமுதருந்துநீ
யிவனுடன்சிலர்பகைக்கின்மற்றவர்தமிசையுமாண்மையுமியம்புவாய்
புவனமொன்றுபடவரினுமென்றனொடுபொருவராயினெதிர்பொரவிடாய்
சிவனுமென்கணையையஞ்சுமென்றுநனிசீறினனிரவிசிறுவனே. (கருகூ)

இரவிமைந்தனொடுகங்கைமைந்தனெதிர்வாய்மையொன்றையுமிசைத்திலன்
பொரவறிந்திடுதுமன்றுவெஞ்சமரிலென்றெழுந்துதனிபோயினு
னரவவெங்கொடியுயர்த்தகோவுமிகலரசருக்குவிடைநல்கினான்
விரவுபைந்துளபமாலையான்விதுரன்மனையிலுற்றதுவிளம்புவாம். (கசுo)

* விதாரம்—போர்.

வேறு.

பொருசிலைமுறித்தவீரன்கோயிலிற்புகுந்தநேமிக்
குரிசிலைவணங்கியாங்கணிருப்பவக்குரிசினோக்கி
யிருசிலையுண்டென்றிந்தவிருநிலத்தியம்பும்வில்லி
னொருசிலைமுறித்தசிற்றமென்கொலோவுரைசெயென்றான். (க௪க)

ஆவதுகருதானுமிலமைச்சர்சொற்கேளானுமில்
லீவதுகுறியானுமில்லிலேவதுமுணரானுமி
னோவதுகாவானுமிலவனுக்காகடந்துபோரிற்
சாவதுபழுதென்றன்றோசகத்துளோர்சாற்றுகின்றார். (க௪உ)

செல்வம்வந்துற்றகாலைத்தெய்வமுஞ்சிறிதுபேணார்
சொல்வனவறிந்துசொல்லார்சுற்றமுந்துணையுநோக்கார்
வெல்வதேநினைவதல்லால்வெம்பகைவலிதென்றெண்ணார்
வல்வினைவிளைவுமோரார்மண்ணின்மேல்வாழுமாந்தர். (க௪௩)

நினைக்கவுந்தொழவுமெட்டாநீயெழுந்தருளப்பெற்றுந்
தனக்கிதுதருதியென்றுதமருடன்வாழவென்னான்
மனக்கடுங்கனலினான்றன்மனத்தினாலுரைத்தபுன்சொ
லெனக்கிசையாமல்யானுமிருஞ்சிலையிறுத்ததென்றான். (க௪௪)

மாயனுமகிழ்ந்துநோக்கிமாசணமுயர்த்தமன்னன்
போயருஞ்சேனையோடுபோர்க்களங்குறுகும்போது
நீயவனருகுநில்லாதொழியினுன்னையமைந்தர்
தாயமுஞ்செல்வமுற்றுந்தரணியும்பெறுவரன்றே. (க௪௫)

எற்றியகடனெய்வீசியிந்தனமடுக்கினாலுங்
காற்றுவந்துறுதபோதுகடுங்கனல்கதுவவற்றோ
நீற்றணிவிமலனன்னநின்கைவில்லிற்றதாகிற்
சீற்றவேலரசன்சேனைதென்புலம்படர்கைதிண்ணம். (க௪௬)

பன்னியவுரையில்கேள்விப்பயனுகர்மனத்தாய்நின்னை
மன்னவன்மொழிந்தவெல்லாம்பொறுத்தியென்றருளிமாயோ
னக்ககர்தன்னில்வண்மையருளழகாண்மைபேசுங்
கன்னனைப்பயந்தகோதற்கன்னிதன்கோயில்புக்கான். (க௪௭)

மண்டலமதியமன்னமாசறுமுகத்தினாளுந்
திண்டிறன்மருகன்றன்னைச்சென்றெதிர்கொண்டுகண்டு
வெண்டிரைமகரவேலைவிரிபுனன்முகந்துதோன்றுங்
கொண்டலைமகிழ்ந்தாடுங்குளிர்பசுந்தோகைபோன்றாள். (க௪அ)

யாறுறையில்லின்வந்ததென்னமாதவமென்றேத்திக்
காறுறைமைந்தர்தம்மைக்கண்டனள்போன்றுளாகித்
தேறுறைதளவினான்றன்செய்யமாமுகத்தைநோக்கி
வாறுறைபுரிசைமூதூர்வந்ததென்னருடியென்றாள். (க௪௯)

நின்பெரும்புதல்வர்சொல்லநெடும்புனலுடுவேண்டி
வன்புடையரசர்கோமான்மனக்கருத்தறியவந்தேன்
றென்புலவேந்தன்வெஃகச்செருத்தொழில்புரிவனென்று
னென்பலசொல்லினானெதிர்க்கவேயிசைந்ததென்றான். (க௫0)

என்றலுங்குந்திசாலவிரங்கினளெதிர்ந்தபோரில்
வென்றிடுவார்கள்யாரோவிதியினாலமர்க்களத்திற்
பொன்றிடுவார்கள்யாரோவென்றுளம்புலர்ந்துநொந்தா
ளன்றவடன்னைத்தேற்றியாழியானுரைக்கலுற்றான். (கருக)

தன்மைநானுரைப்பக்கேணின்றந்தைதன்மனையினீயுங்
கன்னியாயிருந்துவாழுங்காலையோர்முனிவன்வந்து
சொன்னமந்திரமோரைந்தினொன்றினாற்சூரன்றன்னை
முன்னினையவனுமன்றுவந்துநின்முன்புநின்றான். (கருஉ)

கதிரவனருளினாலோர்கணத்திடைக்காதல்கூர
மதலையங்கொருவன்றன்னைப்பயந்தபின்வடுவென்றஞ்சி
மிதவையம்பேழைதன்னிற்பொதிந்துநீவிடவப்போதந்
நதியுமம்மகவைக்கங்கைநதியிடைப்படுத்ததன்றே. (கருக)

காதனின்புதல்வன்றன்னைக்கண்ணிலாவரசன்பொற்றேர்ச்
சூதன்வந்தெடுத்துக்கொண்டுசுதனெனவளர்த்தகாலை
யாதபனிவனையாருங்கன்னனென்றழைக்கவென்றான்
றாதையும்விசும்பிற்சொன்னநாமமேதக்கதென்றான். (கருச)

பண்புடைக்குமரன்கற்றபடைத்தொழில்பலவுங்கண்டு
நண்புடையுரிமையெல்லாநல்கிமாமுடியுஞ்சூட்டி
வன்பணியுயர்த்தகோமான்வாழ்வவற்களித்தான்மற்றைத்
திண்பரித்தேர்வல்லோரிலவனையார்செயிக்கவல்லார். (கருரு)

அந்தநின்மைந்தன்றானேயருஞ்சிலைவிசயனோடு
வந்தெதிர்மலையநின்றானுறவுமற்றறியமாட்டான்
சிந்தையினையந்திரவிதனைநீதெளியச்சொல்லிக்
கொந்தவிழலங்கலானைக்கூட்டுகவிரைவினம்மா. (கருசு)

தம்பியரைந்துபேருந்தனித்தனியேவல்செய்ய
வம்பவிழலங்கலோடுமாமணிமகுடஞ்சூட்டி
யம்புவிமுழுதுநீயேயாளலாம்வருகவென்று
ழும்பர்காவனையகையானுன்னுரைமறுத்தானாகில். (கருஎ)

எரியமுதருந்தக்கானமெரித்தநாளகன்றுபோன
வரவினையங்கர்கோமானுசுகமாகக்கொண்டான்
வரிசிலைவிசயன்றன்மேன்மறுகணைதொடுக்காவண்ண
மொருவரம்வேண்டுகென்றானுற்றவர்க்குறுதிசூழ்வான். (கருஅ)

மன்றலந்தெரியல்வெய்யோன்மதலையென்மைந்தனென்ப
தன்றெனக்குரைத்தாயாகிலவனுடனாகவொட்டேன்
சென்றுயிரொழிக்குமாறுசெருவினைவிளைத்துப்பின்னை
யின்றெனக்குரைத்தாயையாவென்னினைந்தென்செய்தாயே. (கருகூ)

கான்பட்டகனவிற்பாயுங்கடுங்கணைவிலக்கினேனேல்
வான்பட்டபுரவித்தேரோன்மகன்படுமெகவான்மைந்தன்
றான்பட்டமெடியுஞ்சென்றுநடாதினியிருந்தேனாகில்
யான்பட்டகொடுமையன்றென்றென்பட்டாளிரங்கிவிழ்ந்தாள். (சகூ0)

களத்திடைமடிந்தனகலிங்கன்வேழமென், றுளத்தழல்கண்ணிணைசிவப்பவுந்திட
த், தளத்தரணிபரெனுந்தானையானைகள்,வளைத்தனமருத்தின்மாமடங்கறன்னையே.

கந்தடர்களிற்றுடன்கலிங்கபூபதி, மைந்தருஞ்சேனையும்பொருதுமாய்ந்தபி
னிந்திரசூற்சிறகிழந்தகுன்றுபோற், சிந்தைநொந்துடன்றனன்சேனைமன்னனே.

வீமனுந்தனதுதேர்மேல்கொண்டாங்கொரு, தாமவேலவன்புயத்தடத்திலோச்சி
னான்,மாமருமாலையான்ருனுமற்றவே, ஸ்ரீமரமொன்றினாற்றுணித்துவீழ்த்தினான்.

வே று.

ஓடமிரதத்திவுளிநாலுமுடலற்றுவிழவோரொர்கணைதொட்டிரதமு
மீடுகுலையத்துவசம்வீழவணிகத்தவருமேகவெதிர்முட்டுதலுமே
நீடுவரையொப்பதொர்கதாயுதமெடுத்தனுகிநேர்படவடித்தனனரோ
வீடுமன்மனத்தனையதேர்வலவனைக்கடிதின்வீமனெனும்வெற்றியுரவோன். (௨௩)

வேகமுடனிப்படியில்வீமனுமுடற்றியடல்வீடுமனொடொத்தமுதுபோர்
மோகரவிதத்தரசர்மாமகுடரத்நமுடன்மூளைகடெறிக்கவடியா
நாகமொடெடுத்திவுளிதேர்சிதறமுற்றவொருநாழிகையிலெற்றிவரவே
யாகவமுழுக்கவுருமேறெறிவதொக்குமெனவாரவமிகுத்ததறவே. (௨௪)

மீளவும்வளைத்தசிலைவீடுமனதிர்த்தகுரல்வீமனொடுருத்திருவருங்
காளமுகிலுக்குமுகினேர்மலைவதொக்கவெரிகாலுநயனக்கடையினார்
மூளவெதிர்முட்டியெதிர்சேனையுநிலத்துதிரமோதுபொழுதத்துவெகுளா
வாளபிமன்வெற்றிவரிவார்சிலைகுனித்துவயவாளிகடொடுத்துவரவே. (௨௫)

வார்சிலையைவட்டவடிவாம்வகைவணக்கியெதிர்மாறுபடவுற்றுவருவோ
ரோரொருவர்நெற்றிதொறுமோரொருவடிக்கணைகளுடுருவவிட்டுநகுவோன்
மேருவைவளைத்துநெடுவாசுகிபிணித்துமழைமேகநிகர்மெய்க்கணைதொடா
வாரழலின்முப்புரமுநீறெழநகைத்தவரவாபரணனொத்தனனரோ. (௨௬)

மேவலர்விதப்படையும்வீடுமனுமுட்கும்வகைவீமனும்விறற்புதல்வனும்
பூவலயமுற்றுமெழுகாலவிறுதிப்பரவைபோலிகல்விளைத்தபொழுதிற்
கூவலினிலைப்புனலுமீதெழுவதொத்ததொருகோபமொடுசேர்ப்பதுவசக்
காவலனுரைப்பவிருவோரையும்வளைத்தனர்கள்காவலரெனைப்பலருமே. (௨௭)

தானவர்சமத்துமிருதோள்வலியுமற்றுமுனைதானைபுறகிட்டழியவே
வானவர்துதிக்கவயவாகைபுனையக்கடவுள்வாழ்வினிதளித்துவருவோன்
மீனவனெனத்தகையகாளையொடெடுத்தகதைவீமனைவளைத்தனரெனக்
கூனல்வரிவிற்பகழிதூவியிரதத்தின்மிசைகூவியவரைக்குறுகினான். (௨௮)

வீசுபகழித்துளியின்மேகமெனவிற்கொடிவன்மேலுறநடக்குமளவிற்
றேசுடையருக்கனெதிர்மூடுபனியொத்தரசர்தேரணிகெடச்சிதறினார்
மாசுணமணிக்கொடிமகீபதிபடைத்தலைவன்வார்சிலைவளைத்திலனெடும்
பாசறைபுகக்கடவினார்கடகளிற்றினணிபாய்பரியணிப்படைஞரே. (௨௯)

வேலையமுதுக்குவருவானவர்களொத்தனர்கள்வீடுமன்முதற்படைஞரா
ராலநிகரொத்தனனனீகினிதொலைத்தொருதனுண்மைநிலையிட்டுவருவோன்
மேவினியிமைப்பொழுதுநாம்வெளியினிற்கிலிவன்மேலிடுமெனக்கருதினான்
போலெழுவயப்புரவியூருமிரதத்திரவிபோயுததியிற்சொருகினான். (௩௦)

ஆதபனொளித்ததிசையோவொளிசிவத்ததறவாழ்குருதிமெத்துகையினுன்
மாதிரமுமைக்கடலுமாநிலமுமுட்டவொருமாசறுசிவப்புவடிவா
யேதிலிருள்புக்குலவலாமிடமறக்கடலினேறனலியொத்ததிகலிப்
பாதகமிருத்தகொலைவாணிருபர்தத்தமதுபாடிநகர்புக்கனர்களே. (௩௧)

கூளிகள்செருக்கிடமாகளம்விட்டரசர்கோமகனையுற்றளவிலே
வாளமினுக்குமொருதேர்விசயனுக்குநம்வருநிணிபுறக்கிடுவதே
காளைமுதுகிட்டவரையாருயிர்செகுத்திடுவனெனவுரைத்தனனிரா
மீளவுமுதித்தனன்விரோசனன்முதற்பகலில்வீரன்விறலைக்கருதியே. (௩௨)

ஆ. செய்யுள்-௨,௮௧௦.

இரண்டாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# மூன்றாம்போர்ச்சருக்கம்.

---

தந்தமுறியிலவர்வைத்ததயிர்பால்வெண்ணெயெட்டாமற்
குந்தியுரலின்மிசையேறியிளங்கோவியர்முன்கூத்தாடி
நந்தன்மனையிலசோதையிருநயனங்களிக்கவிளையாடு
மைந்தனிருதாளொருநாளுமறவாதாரேபிறவாதார். (௧)

எலாவமரின்மூன்றாநாளிரண்டுபடையுந்திரண்டேறக்
காலார்திண்டேர்விடுமெனும்வகுத்தான்கடுங்காருடயூக
மேலாம்வென்றிப்பாண்டவர்தம்வெஞ்சேனையைக்கொண்டெஞ்சாமற்
றோலாவர்த்தசந்திரப்பேர்வியூகம்வகுத்தான்றளவோனே. (௨)

போரேதொடங்கியிருபடையும்புகுந்தபொழுதிலுகந்தொலைந்த
காரேதொடங்கிக்கார்கோள்வெங்கடுங்கால்கலிகொண்டார்ப்பனபோல்
வாரேதொடங்கும்பணைக்குலமுமணிக்காகளமுமுடன்முழங்கப்
பாரேதொடங்கியெவ்வுலகுமடைவேசெவிடுபட்டனவே. (௩)

சொல்லார்கேள்விக்கங்கைமகன்றுரோணன்முதலாமதிரதரு
மெல்லாரிரதகயதுரங்கமேலாருடனேகாலாளும்
வில்லான்முன்னூட்டமைத்துரந்தவீரன்றனையுஞ்சிறுபதத்தே
மல்லால்வஞ்சமல்லடர்த்தமாயன்றனையும்வளைத்தாரே. (௪)

ஞார்க்கெல்லாமுதலென்னுந்துரியோதனனுந்தம்பியரு
மாரக்கவிகைக்காந்தாரர்முதலாவுள்ளவவனிபருஞ்
சேரத்திரண்டேகரிகளொருசிங்கம்வளைத்ததெனச்சிங்க
வீரத்துவசனின்றுழிப்போய்வளைத்தார்சமரம்விளைத்தாரே. (௫)

வரத்தான்மறையாற்றும்பெற்றவரிசாபங்கள்பிடித்ததனிக்
கரத்தான்மறைந்தவரவர்தங்கடைக்கண்படைக்கள்விரைந்துவிடுஞ்
சரத்தான்மறைந்ததகல்வானந்தரணிதலமச்சரந்தணித்த
சிரத்தான்மறைந்தகுருதிச்சேற்றான்மறைந்ததிசைநான்கும். (௬)

துவசம்பிளந்ததேருந்துரகம்பிளந்துசுடர்மணிப்பொற்
கவசம்பிளந்துமார்பகமும்பிளந்துருவக்கடோற்கசன்று
லவசந்திரமாமுனைவாளிதொடுத்தான்றொடுத்தாழிகையி
லவசம்பிறந்ததம்பியர்முன்விழுந்தானொருவர்க்கழியாதோன். (௭)

நாகந்துவசமெனவுயர்த்தோனடுங்காமுன்னநண்ணலரை
மாகந்தனிற்சென்றமர்கடந்துவருமைந்துடையோன்றிருமைந்தன்
வேகம்படநின்றொருசமரவேலான்மீண்டுமெவ்வேந்தன்
பாகன்றனதுமருமத்திற்பாய்ந்தானவனுமாய்ந்தானே. (அ)

விழுந்தான்வேலாற்றேர்ப்பாகன்வெஞ்சாயகத்தால்விறல்வேந்தர்
தொழுந்தாளரசன்றானுமுயிர்சோர்ந்தானென்னுந்தொனிகேட்டுச்
செழுந்தார்வாகைவிசயனையுந்திருமாலையும்விட்டொருமுனையா
யெழுந்தான்மந்தாகினிமைந்தனிளைத்தோர்தமக்கோரெயில்போல்வான். (கூ)

வண்டாரலங்கல்வலம்புரியோன்மார்பந்துளைத்தவாளிவழி
கண்டானெடுத்துத்தாழ்ந்ததிருக்கையாலணைத்துக்காற்றேரிற்
கொண்டானுவிதருமருந்துகொடுத்தானவனுங்கொடுத்தமருந்
துண்டானுண்டகணத்தினின்மீண்டுணர்ந்தானுலகேழுடையானே. (க0)

மன்னன்றனையச்சந்தனுவின்மைந்தன்பெரும்போரணிநிறுவிப்
பொன்னங்குன்றேயிவன்சிலையுமிவனேகாணும்புராரியென
மின்னுங்கழற்கால்வீமனுடன்வெம்போர்விளைத்துவிடலையராய்
முன்னின்றவரும்பின்னிடத்தன்முனைவாளியினால்வினைசெய்தான். (கக)

மருமங்களினும்புயங்களினும்வதனங்களினுங்கண்களினுஞ்
செருமும்படிவெங்கணைமாரிசிந்திச்சிந்திச்சிரந்துணித்துத்
தருமன்சேனைப்பரவையெலாந்தானேயாகித்தலைநாளிற்
பொருமந்தரமால்வரைபோலத்திரிந்தான்வெம்போர்புரிந்தானே. (கஉ)

மலையொத்ததிருங்கடகளிறும்வயமாவணியுமான்றேருந்
தொலையத்தொலையயாவரையுஞ்சுடுவெங்கணையாற்றுரந்துதுரந்
தலையத்தரங்கமெறிகடல்வாய்வடவானலம்போலவனின்ற
நிலையைக்கண்டுங்காணான்போனின்றான்விசயனிகரில்லான். (கங)

வேறு.

கானெரிதுற்றெனவீடுமனிப்படிகாதிமலைத்திடவு
மானநினைத்திலைசாபமெடுத்திலைவாளிதொடுத்திலைநீ
யேனிதுனக்கெனமாயனுரைத்தவனேறிரதத்திழியா
வானதெனக்கினியாகவெனத்தனியாழியெடுத்தனனே. (கச)

ஆழியெடுத்தனன்வீடுமனைப்பொருதாவியழித்திடுவா
னூழிமுகக்கனல்போலெழும்பொழுதோடியருச்சுனனுந்
தாழிதனக்குமுன்வீடுகொடுத்தருடாளிணையைப்பிடியா
வாழியுனக்கிவனோவெதிர்வித்தகமாயவெனத்தொழுதான். (கரு)

வாசவன்முற்பெறுகாளைதொழத்தொழமாறுபடச்சினவுங்
கேசவனிப்படிமேல்வருகிற்பதுகேவலமுற்றுணரா
நாசநமக்குறுகாலநணித்தெனநாடிநடுக்கமுடன்
றேசணிபொற்றடமேருவெனத்திரிதேரினைவிட்டிழியா. (கசு)

ஆரணகற்பிதமாதவவச்சுதவாழியிடைத்துயிலுங்
காரணசிற்குணரூபமலர்க்கொடிகாதன்மனத்துறையு
நாரணவற்புதவானவருக்கொருநாயகநிற்பணியும்
வாரணமுத்திவிசாலதவத்திடைவாழ்வுறவைத்தவனே. (கஎ)

ஆவியழித்தவொர்தூணிலுதித்தடலாடகனைத்தலைநாள்
மாவலியைச்சிறுமாணுருவத்துடன்வார்சிறைவைத்தனையா
லேவிலரக்கனைவீழவடர்த்தனையானெனிலக்கெனவோ
னீவலியிற்சினமுறுமனத்தொடுநேமியெடுத்ததுவே. (க௮)

யானரகிற்புகுதாமலெனக்குயர்வானுலகைத்தருவா
னீநினைவுற்றதுபோனபிறப்பிலென்னீடுதவப்பயனே
யானுமினிப்பிறவாமலளித்தருளீசவெனப்பரவா
ஞானமனத்தொடுநாகுழறப்பலநாடியுரைத்தனனே. (க௯)

ஆரியனப்பொழுதாறினனிற்கவுமாடலருச்சுனனுந்
தாரைவடிக்கணையாயிரமுய்ப்பதொர்சாபம்வளைத்திரா
யாரெதிர்நிற்பினும்யாவர்தடுப்பினும்யானினியிப்பகலே
சோமுருக்குவனேறுகெனத்தனதேர்மிசைபுக்கனனே. (உ0)

நீறுபடுத்தினன்மாமகுடத்திரணீணிலவைப்படையச்
சேறுபடுத்தினன்மூளைகளிற்றிசைசேர்குருதிப்புனலா
லாறுபடுத்தினனோரொருவர்க்கெதிராயிரம்வைக்கணையா
லீறுபடுத்தினன்வீடுமன்விட்டவர்யாவர்பிழைத்தவரே. (உக)

வாயுவடிக்கணைவாசவன்வைக்கணைவாருணமெய்க்கணைசெந்
தீயின்வடிக்கணைதேவர்சுடர்க்கணைசேரவிடுத்தமையா
லாயமுனைப்படுதோரணிபட்டனவாளணிபட்டனவெங்
காய்கரிபட்டனபாய்பரிபட்டனகாவலர்பட்டனரே. (உஉ)

நாடியொளித்தனர்சூழ்புனன்மத்திரநாடன்முதற்பலருங்
கூடியொளித்தனர்மாரதரிற்றிறல்கூரும்வயப்படையோ
ரோடியொளித்தனராடமரிற்றுரியோதனனுக்கிளையோர்
வாடியொளித்தனர்மாகதரொட்டியர்மாளவர்குச்சரரே. (உ௩)

வேறு.

பார்த்தனம்பினின்மேவலார்படைப்பரவைசாயவேவிரவுகோவியர்
தூர்த்தனன்புடன்கண்டுவெந்துதன்றெருக்கசேனையின்பக்கமெய்தினன்
சேர்த்தவெம்பனைக்கொடிமகீபனும்வில்வினோதனுஞ்செல்வமைந்தனுங்
காத்துநின்றுதங்காவலன்றனைக்கொண்டுபாசறைகடிதினெய்தினர். (உ௪)

வெஞ்சரத்திறல்விசயன்வென்றபோர்மிகுகளத்தின்வாய்விசையொடற்றன
குஞ்சரத்தின்வீழ்கைகளேகமேகுருதிவட்டமும்பரிதிவட்டமே
பஞ்சரத்தொடுந்திரியுமானையின்பக்கமெங்கணும்பட்டுமூழ்கிய
செஞ்சரத்தின்மேற்சிறகர்பண்டுவச்சிரமரிந்திடுஞ்சிறகர்மானுமே. (உ௫)

கொற்றமன்னர்சென்னியினணிந்தபொற்கோளம்யாவையுந்தாளமாகவே
யற்றைவெஞ்சமத்தடலருச்சுனனுண்மைபாடிநின்றலகையாடுமான்
முற்றவெம்பிணக்குவையும்வேழமுமுடுவாசியுந்தேருமொய்ம்புறத்
தற்றகுன்றெனவொன்றுபட்டெழச்சொரியுமூளையாறருவியொக்குமே. (உ௬)

பமரமும்மதக்கரிவிலாவின்வேல்பட்டவாய்நிணம்பறியநிற்பன
குமரன்வேலின்வாயனலமூர்தருங்கோடுடைத்தடங்குன்றமொக்குமா
லமரர்கோன்மகன்செங்கையம்பினாலற்றவீரர்தந்தலைகள்கவ்வியச்
சமரபூமிசேர்ஞாளிமானுடத்தலைவிலங்கினிற்றன்மைசாலுமே. (உ௭)

அன்றுவெஞ்சரத்தொடுதெறிந்தவாளரசர்சோரிமெய்ப்பட்டதாநலிற்
சென்றுசெங்கதிர்ச்செல்வன்வாருணத்திசையடைந்துவெண்டிரையின்மூழ்கினு
னின்றருச்சுனன்பொரமறந்ததுநெடியசெங்கண்மானேமிதொட்டதும்
பின்றைவில்லெடுத்தமர்மலைந்ததும்பேசினுன்மகீபதிபிதாமகன். (உஅ)

தருமன்மாபெருஞ்சேனைதன்னுளார்தங்களாதரத்தொடுதனஞ்சயன்
பொருவிலாண்மையும்வீமன்மாமகன்பொருதவீரமும்புகழ்ந்துபாடினு
ரரவகேதனன்சேனைதன்னுளாரழிந்தமன்னருக்கழுதரற்றினு
ரிருவர்சேனையுங்கண்படாமலன்றிரவுபட்டதென்னென்றியம்புவாம். (உகூ)

நென்னலங்கையிற்கொண்டதென்னையேநேமியாகவந்நீலமேனியா
னின்னமும்பொரத்தேடுமாகவத்தின்றுமென்றுகொண்டெண்ணியேகொலோ
தன்னெடுந்தனிச்சயிலமும்பொலந்தபனியத்தடஞ்சயிலமாகவே
மின்னெடுஞ்செழுங்கதிர்பரப்பினுன்வெய்யவேழ்பரித்தேர்விபாகரன். (கூ0)

ஆ செய்யுள் - உ,அசO.

மூன்றும்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# நான்காம்போர்ச்சருக்கம்.

தேடியவகலிகைசாபந்திர்த்ததா, ணீடியவுலகெலாமளந்துநீண்டதா, ளோடியசக
டிறவுதைத்துப்பாம்பின்மே, லாடியுஞ்சிவந்ததாளென்னையாண்டதாள். (க)

நற்பகலிடைவருநளினநாயகன், பொற்பகலுறவொளிபுரியுநேமியான்
பிற்பகலணியையும்பிறங்குசேனையான், முற்பகல்வியூகமேயாகமூட்டினுன். (உ)

கார்முகில்வண்ணனைக்கண்டுகாணலார், தாமுமவ்வியூகமேசமைத்துமுந்தினு, ரேம
மோடெதிர்முனைந்திருவர்சேனையும், போர்முரசெழவெழப்பொங்கியார்த்தவே. ()

எழிருபுவனமுமேந்துமேருவைச், சூழ்வனகிரிக்குழாஞ்சுற்றுமாறுபோற்
பாழியம்புயகிரிப்பவனன்மைந்தனை, வேழவெம்படையுடைவேந்தர்சூழவே. ()

வே று.

ஆலாலமெனக்கதுவாவதிரா, மேலாள்விழவீமன்வெறுங்கைகளா
லேலாவுடலென்புகமோத்வெறுந், தோலாயினசிற்சிலதோவினமே. (ரு)

மேல்வாய்தமகையொடுமேலெழவுந், தோல்வாயவைகீழ்விழவுந்துணியா
மால்வாரணம்வாய்கள்கழன்றனமுன், னுல்வாயெனுநாமநலம்பெறவே. (சு)

மதிவெண்குடைமாருதிவன்புடனே, குதிகொண்டொருகைகொடுகுத்துதலா
லதிர்சிந்துரவல்லுரமத்தனையு, மெதிர்சிந்துரமாகியினைத்தனவே. (எ)

உடலிற்றசையாவுமுடைந்துநெடுங், குடலற்றுவிழும்படிகுத்துதலான்
மிடல்பற்றியவீமன்வெறுங்கைகளா, லடலத்திகளத்திகளாயினவே. (அ)

சுந்தாவகன்மொய்ம்புறுகானபுயக், கந்தாலமர்செய்துகலக்குதலிற்
றந்தாவளசேனைதரிப்பறவே, தந்தாவளமுற்றனசாயுறவே. (கூ)

வெவ்வாயுவின்மைந்தன்வெகுண்டொருதோன், மொய்வாருவில்வைத்தெதிர்
மோதுதலாற், கைவாலதிமெய்த்தலைகால்கள்சரந், தவ்வாரணம்வாரணமாயினதே.()

கம்பித்தனகாருடல்பேருயிருங், கும்பித்தனவாயுகுமாரனிவ
னம்பொற்காபங்கயமன்னுதலிற், றும்பிக்குலமாயின தும்பிகளே. (௧௧)

பொன்னாகமணிப்புயன்வெங்கதையான், முன்னாகமலைந்துமுருக்குதலா
லென்னாகமுனாகமெனும்படியே, மன்னாகவமெங்குமடிந்தனவே. (௧௨)

கோடுங்காமும்பரியக்குதிகொள், டோடுங்குருதிப்புனலூடுடல
மூடும்படியாவருமூழ்குதலா, லாடுங்சயமாயினவக்கயமே. (௧௩)

வீசந்தமலைகம்முதன்மெய்ம்முழுதுங், கூசும்படிசிந்திலகுழம்புகளாய்
மூசுங்களபக்குலமொய்ம்பனுடற், பூசுங்களபக்களிபோன்றனவே. (௧௪)

கிரியேயெனவந்தெதிர்கிட்டினபுன், பொரியேயெனவானிடைபுக்கனபோ
ரரியேறனையான்வலிமைக்கவர்தங், கரியேகரியல்லதுகண்டவர்யார். (௧௫)

இவ்வாறுவெருண்டிவனெற்றுதலுங், கைவாரணவேலைகலக்கமுறத்
தெவ்வாகியமன்னவர்தேர்களொடும், வெவ்வாசிகடம்மொடும்வென்னிடவே. ()

உடைகின்றமைகண்டிரதத்துவசன், குடையுங்கொடியுங்குளிர்மாமுரசும்
படையுஞ்சிலதம்பியரும்பலரும், புடைகொண்டுவரப்போனவன்மேல். (௧௭)

வீமற்கெதிர்நின்றவன்வில்லறவுஞ், சேமக்கவசஞ்சிதைவுற்றிடவு
நாமக்கணையேவினனாயகனு, மாமுத்தமதிக்குடைமன்னவனே. (௧௮)

ஆறம்பினிலற்றரவத்துவச, நூறம்பகன்மார்பினுழைந்ததுபின்
வேறம்புதொடுத்திலன்வீமனவன், மாறம்புதொடுத்தனன்மற்றிவன்மேல். (௧௯)

சிங்கக்கொடியற்றணிதேர்சிதைவுற், றங்கத்தினுழைந்தனவம்புகளுந்
துங்கக்கடகத்திரடோள்புடையா, வெங்கட்கனல்வீமன்வெருண்டனனே. (௨௰)

சொந்தானிவனென்றுநுதிக்கதிர்வே, லந்தார்முடிமன்னரநேகருடன்
வந்தார்பலதம்பியர்மைத்துனருங், கொந்தார்தொடைவீரகுமாரருமே. (௨௧)

மலருங்குடைமன்னவர்வந்தமைகண், டலருங்கொடிவாளரவோனருகே
பலருங்கரிதேர்பரியாளுடனே, சிலரும்புவிபாலர்திரண்டனரே. (௨௨)

வேறு.

எதிர்ந்தார்மன்னரிருதிறத்துமொருவர்க்கொருவரிடையிடைநின்
றதிர்ந்தார்சிறுநாண்பேரொலியாலுடையாவல்லவகிலாண்ட
முதிர்ந்தார்போரிற்றெறுகணையான்முரட்டோடுணிந்துமுடிதுணிந்து
முதிர்ந்தார்தத்தமுடனிலத்திலுயர்ந்தாராவியுயர்வானில். (௨௩)

தாமத்தெரியல்வலம்புரியோன்றடந்தாமரைக்கைத்தனுத்தறியச்
சேமக்கவனப்பவனகதிப்பரிமாநான்குஞ்சிரந்துணிய
மாமொட்டொடிந்துகொடிஞ்சியுடன்மான்றேர்சிதையமார்புருவ
நாமக்கணைகள்பலபடவில்லுகைத்தானின்றுநகைத்தானே. (௨௪)

முன்னாளமரிற்கடோற்கசன்றன்முனைவெஞ்சரத்தான்மூழ்குவித்தான்
பின்னாண்பிளப்பிறைக்கணையாற்பிளந்தானவனைப்பெற்றெடுத்தோ
னென்னாவிரங்காமெய்ந்நடுங்காவெடுத்தாரணைத்தார்சகுனியுமப்
பொன்னூர்தடந்தேர்ச்சல்லியனுமுதலாவுள்ளபூபாலர். (௨௫)

தம்முன்றளர்ந்தநிலைகண்டுதெரியாராகித்தம்பியர்க
ளெம்முன்பொருதற்கிசைவார்களிசைவீரென்றென்றிகல்கூறித்
தெம்முன்செவிகள்செவிடுபடச்சிறுநாணெறிந்துதேர்கடவி
முன்முன்கடிதிற்கணைபொழிந்தார்முருந்தன்றமித்தமுகில்போல்வார். (௨௬)

வின்மேல்விசையிற்கடும்பாணமேன்மேலிறுத்திவேந்தரைப்பார்த்
தென்மேனியினைவென்றவரவர்பேரிரதந்துணித்துச்சிலைதுணித்துத்
தன்மேல்வந்ததம்பியரிற்றரியாதுடன்றவைவர்க்கு
மன்மேலெய்தவாளியெனத்தொடுத்தானைந்துவயவாளி. (௨௭)

சேனுவிந்துசுதக்கணன்பொற்றேர்ப்பிங்கலசன்சலாசந்த
ருருவீமவாகுவெனுமடல்வாணிருபரைவரையும்
வானுடாளும்படிவிடுத்தான்வன்பாற்றம்மையவரையுங்
சானுள்கென்றகாவலனைப்போல்வான்வீரக்கழல்வீமன். (௨௮)

ஒருபால்வீமன்சிலைவிசயனொருபாலொருபாலபிமன்னு
வொருபானகுலன்சாதேவனொருபாலொருபாலுரகேச
னொருபாலரக்கன்பாஞ்சாலனொருபாலடலுத்தமபானு
வொருபாலுடன்றுபொரப்பொரவேயுடைந்ததரசன்பெருஞ்சேனை. (௨௯)

விண்ணாடருக்காவெஞ்சமத்திலசுராதிபரைவென்கண்டோன்
மண்ணாளரசர்மகுடசிகாமணியேபோல்வான்மாமரபாற்
பண்ணார்பஞ்சகதிமான்றேர்ப்பகலோனன்னபகதத்த
னெண்ணார்துரக்கவரும்படையையஞ்சலென்றென்றெதிர்சென்றான். (௩௦)

அலைகால்வெள்ளக்கருங்கடல்போலதிராநின்றவாகவத்தின்
மலைகால்பெற்றுவருவதுபோல்வருதிண்பணைக்கைமாமிசையான்
சிலைகால்வளைத்துத்தீவாய்வெஞ்சரங்கொண்டடையார்சிரங்கொண்டான்
கொலைகால்செங்கட்கரியநிறக்கூற்றன்றனக்குக்கூற்றனான். (௩௧)

தாராரோடைத்திலகநுதற்சயிலம்பதினாயிரஞ்சூழ
வாராநின்றமதகயத்தின்வன்போர்வலியுமனவலியுஞ்
சேரார்வணங்கும்பகதத்தன்றிண்டோள்வலியுஞ்சிலைவலியும்
பாராநின்றகடோற்கசன்றன்படையின்றளர்வும்பார்த்தானே. (௩௨)

வேறு.

ஆயபோதிலாயிரநூறுமதமாவு
மேயதீயகாலனையொக்குமேலானுஞ்
சாயகம்முஞ்சாபமும்யாவுந்தானேயா
மாயவேடங்கொண்டவனோடுமலைவுற்றான். (௩௩)

சங்கமூதத்தார்முரசார்ப்பமுழவார்ப்பப்
பொங்கும்பூழியாழிவறக்கும்படிபோதச்
சிங்கக்குன்றிற்செல்வதுபோலச்சிலையோடு
மெங்குந்தானும்வேழமுமாகியெதிர்சென்றான். (௩௪)

மைபோலார்த்துமும்முறைதானமழைசிந்திக்
கைபோய்முட்டிக்கையொடுதெத்தங்கால்வீசி
மெய்போல்வெம்போர்செய்தனவீரன்விறல்வேழம்
பொய்போனின்றவருபகதத்தன்போர்வேழம். (௩௫)

நின்றார்நின்றபடிகடிதாகநெடிதோடிச்
சென்றார்கண்டசிந்துரம்யாவுந்தியம்பிற்
கொன்றார்மற்றக்கோற்றவர்யாருங்கொலையுண்டார்
வென்றான்றோவீமன்மகன்சேனையில்வீரர். (௩௬)

ஆனதானவானவெங்குமானைப்போர்
போனபோனமைந்தர்பிழைப்பீர்போமென்றென்
றானமெய்தாதவ்விறைபோறுறுயிரோடும்
போனகண்டகாய்கதிரோனும்புறமிட்டான். (௩௭)

பூந்தண்மாலைப்பஞ்சவரானைப்போர்வென்று
சேர்ந்தசேர்ந்தமன்னவரோடிந்திரலோடுந்
தாந்தம்பாடிவீடுபுகுந்தார்தரையாளும்
வேந்தனுமெம்பாசறைபுக்கான்வீமன். (௩௮)

பூண்பாய்மார்பிற்புத்திரர்தம்மைப்பொலிவோடுங்
காண்பானவர்க்கண்டிலன்பெற்றகாந்தாரி
சேண்பாலெய்தச்சென்றனரோவென்றிருகண்ணீர்
றூண்பாலாகிச்சோர்தரவுள்ளஞ்சோர்வுற்றாள். (௩௯)

கொன்னேருந்திமைந்தரிருக்கக்கொலையுண்டார்
முன்னேமூன்றுமுன்னமுடிந்ததின்னென்று
மின்னேயென்னமெய்குலையாமண்மிசைவீழ்ந்தா
ளென்னேயென்னேயென்றினையாநின்றென்செய்தாள். (௪0)

விழுர்கற்பின்மின்னனையாளைவிறன்மைந்த
ரேறுமன்றிலேற்றவுமாமன்றென்றுதா
ளொருவன்பிற்கண்ணறைமன்னனொருதேவி
யாறுவெள்ளந்தன்புறவன்றேயடியிட்டாள். (௪௧)

ஆளாய்மாய்ந்தவேந்தரிடந்தோறழுமோசை
கேளாவெப்போதேகுவமென்றக்கிளர்கங்குன்
மீளாவோடிற்றத்திசைவானோர்மிளிர்சென்னிச்
சூளாமணிபோல்வந்ததுகாலைச்சுடரம்மா. (௪௨)

ஆ செய்யுள் - உ,௮௮உ.
நான்காம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# ஐந்தாம்போர்ச்சருக்கம்.

---

கருமாமுகிற்கோலநெஞ்சத்திருத்துங்கருத்தெய்துமே
வருமாதவன்றூறுமவன்முத்திதருகைக்குமவனேகுருத்
தருமாலைமணநாறுதாளானைவண்டேறுதண்ணந்துழாய்
மருமாலைபுனைகின்றதிருமாலையல்லாதுவல்லார்கள்யார். (௧)

வாசங்கமுந்தாரையுஞ்சின்னமும்பொன்மணிக்காளமு
முரசங்களுந்துந்துபியுமெங்குமெழவிம்மமுழவிம்மவே
கரைசிந்துதிரைசிந்துநுரைசிந்துவிரைசிந்துகனமென்னவே
யரசன்பெருஞ்சேனைவெள்ளம்புறப்பட்டதணியாகவே. (௨)

விருதாயிரங்கோடிமுரசாயிரங்கோடிமேன்மேலெழப்
பொருதானையுடன்வந்தணைந்தார்புறந்தந்தபூபாலருங்
கருதாவரக்கன்கொடுந்தானையிறைவன்கடுந்தானையென்
றிருதானையும்போலவெதிருற்றவிருமன்னரிருதானையும். (௩)

அரக்கர்க்குமுதல்வானளித்தோருமெமரின்றுமவர்போலுமைத்
துரக்கைக்குநின்றேனெனத்தெவ்வர்தம்மோடுசொல்லிற்றெனக்
குரக்குக்கொடித்தேரின்மிசையோடிவிசையோடுகூத்தாடவே
புரக்கைக்குநின்றேனுடன்செங்கண்விசயன்புறப்பட்டனன். (௪)

அரனின்றனன்போலவவனின்றதேரொத்தவணிதேர்மிசைப்
பொரநின்றதிமைந்தனுடுசென்றுமுனைநின்றுபொரவெண்ணியே
சரநின்றகுனிசாபவிசயன்றனைக்கொண்டுசெங்கங்குறித்
துரநின்றவவனெஞ்சுடைப்பாகன்மான்றேருகைத்தூரவே. (௫)

ஊர்கின்றதேரோடியுயர்கங்கைமகனின்றவொருதேருடன்
சேர்கின்றவெல்லைக்கலிங்கேசர்முதலானதெம்மன்னர்போய்
நேர்கின்றவிசயன்றனுடன்மோதியவனேவுநெடுவாளிபட்
டூர்கின்றபுண்வாயில்வார்கின்றசெந்நீரினிடைமூழ்கினர். (௬)

செல்லுங்கலிங்கேசரலையுண்டநிலைகண்டுசிவனென்றுபார்
சொல்லும்பெருஞ்செம்மல்பல்லங்களவன்மேற்றொடுத்தேவினான்
கொல்லுங்கொடும்பாணமவையைந்துவிசயன்கொதித்தேவினான்
வில்லுந்தன்வின்ஞாணும்விறலம்புமுடனற்றுவிடைகொள்ளவே. (எ)

இவர்கொண்டசெற்றத்தொடிவ்வாறுபோர்செய்யவிகல்வீமனைப்
பவர்கொண்டநெடுவேலைபோல்வந்துமொய்த்தார்கள்பலமன்னருங்
கவர்கொண்டமுனைவாளியவர்மார்புதோளுங்கழன்றோடவே
தவர்கொண்டுசெற்றான்முன்னளகேசனமர்வென்றதனியாண்மையான். (அ)

துச்சாதனன்றம்பிமார்மைந்தர்மற்றுஞ்சகுனிசல்லிய
னெச்சாபமுடிமன்னரும்பின்னருந்துன்னியெதிர்சீறினு
ரச்சாபமொன்றாலுமன்றவ்வவர்க்கம்பநேகந்தொடுத்
துச்சாசனஞ் * சொல்லிநின்றானவ்வடன்மன்னருடனோடவே. (௯)

செருத்துப்புடைத்தோடிவருதம்பியர்கண்டுசெற்றத்துடன்
கருத்துப்புகைந்துட்கலங்கிக்கடைக்கண்கள்கனல்காலவே
மருத்துத்தருங்காளைநின்றானையின்றுவிமலைவேனென
வுருத்துத்தடந்தேரின்மிசைவந்தடுத்தானுரககேதனன். (௧0)

போராதநிலைநின்றுவன்போடுசாபம்பிடித்தெங்கணுஞ்
சோராதவயவாளியீரைந்துசேரத்தொடுத்தேவினு
ராவமுடனிட்டகவசம்பிளந்தோடியாண்மைக்கெலாம்
வீராபிடேகஞ்செய்வயவீமனகன்மார்பின்மிகமூழ்கவே. (௧௧)

ஈமந்தொறுஞ்சென்றுநடமாடுகேழலையனெதிராய்வருங்
காமன்றனுடன்மேல்விழித்திட்டநுதலிற்கனற்கண்ணெனத்
தாமம்புனைந்தாரமணநாறுமார்பத்தடந்தோயவே
வீமன்றொடுத்தானொரெதிரம்புபார்மன்னன்மிடல்சாயவே. (௧௨)

வே று.

ஓரம்பினுளைந்தேழுலகுடையானலமரவே
வீரம்புனைவீமன்குனிவில்லோடெதிர்நிற்கப்
போரம்பரவுலகாள்பவர்புகழ்பூரிசவாவந்
தீரம்புதொடுத்தானொருதேர்மேலினனிவன்மேல். (௧௩)

* உச்சாசனம்—கொலை.

இவனுமமையமறியாதெதிரெய்தானெனவெய்திற்
பவனுசகிபெருந்தேரினனிருபதியிளவ
லவனுருயிர்கவர்வேனெனவம்பொன்றுதொடுத்தான்
றவனுன்மறைதெரிபூரிசவாவுஞ்சரம்விட்டான். (கச)

ஏணற்றுயர்வரைமார்பினரிருவோர்களுமொருவோர்
காணற்றொழிலரிதாமுறைகடிதிற்கணைதொடவே
நாணற்றனவெஞ்சாபமுநவெற்றனவெனினுங்
கோணற்றனபுகல்வாரொருகுறையற்றதவர்க்கே. (கரு)

ஒருகேடகவுரைதேறினருளமேயெனவமரிற்
பொருகேடகநடவுங்கனபொற்றேர்மிசையிழியா
முருகேடவிழ்தார்மார்பினர்முனைவாளமிரண்டோ
டிருகேடகமிருகையினுமிருவோருமெடுத்தார். (கசு)

படிவாயுபெறியுந்தினபதியும்பொருதெனவே
தொடிவார்கரதலமொன்றியதுறுதோலிடைமறையா
வடிவான்முனையசையாவிசைவருசாரிகள்பயிலா
விடிவாய்முகிலதிராவெதிரெதிர்சீறினரிப்பால். (கள)

தோலாதடலொடுசீறினதுரகத்தொடுதுரக
மேலாளொடுமேலாள்வரிவில்லாளொடுவில்லா
ளேலாமுடியரசோடரசிரதத்துடனிரதங்
காலாளொடுகோலான்மதகரிமாவொடுகரிமா. (கஅ)

நீடுங்கடகரியின்கரநிரையற்றனநடியா
யோடுங்குருதியின்வாளைகளெனவோடினவொருசார்
கோடுஞ்சிலையம்பிற்றலையரியுண்டனகுறைநின்
றாடுந்தொறுமுடனாடுவவலகைக்குலமொருசார். (ககூ)

கோல்கொண்டவைசிலைகொண்டவைவாள்கொண்டவைகூர்வாய்
வேல்கொண்டவையவைதம்முடன்விழுகைத்தலமொருசார்
கால்கொண்டொருசெந்நீர்விரிகளமோககனமதா
மால்கொண்டகரிக்கோடிளமதியாவனவொருசார். (உ0)

முந்நீர்தருபவளக்கொடுமுன்னாஞ்சமைவனபோற்
செந்நீரின்மிதந்தோடுவதேராழிகளொருபா
னன்னீர்மழைபொழிசெம்புனனதிவாய்வருநுரைபோ
லந்நீரிடைபுகுமூளைகளலைபாய்வனவொருசார். (உக)

வையாரவில்கணைதோமரம்வாள்கப்பணமுதலாங்
கையாயுதமுழுகுந்துளைவழிசெம்புனல்கால
மெய்யாயிரவிதமாய்விழவெம்போரிடையிருபத்
தையாயிரமுடிமன்னவர்கல்வானமடைந்தார். (உஉ)

இவ்வாறுமுனைந்தாருயிரிருசேனையுமடிய
மைவானுலவிடமற்றதவயவீரர்செருக்கா
லவ்வானவர்தமதாலயம்வலம்வந்தவருக்கன்
செவ்வானுதவுடபால்வரையிடமென்றதுசேர்ந்தான். (உங)

எப்போதுமரும்போரினிலிதயங்கரிகூர்வார்
கைப்போதுறுபடைசெம்புனல்கடலுண்டதுகால்வா
ரொப்போதுதலரியாரிருதிறமன்னருமொருவா
வப்போதனிகத்தோடமெகன்பாசறைபுக்கார். (உச)

இரவென்றிருள்கெழுநஞ்சினிளந்திங்களெயிற்றே
ரரவுண்டதுதான்மீளவுமிழ்ந்தோனெனவருக்க
னுரவுங்குடதிசைநீணிறவுததிக்குளொளித்தோன்
விரவுங்குணதிசைவேலையின்மிசைவந்துகிளர்ந்தான். (உரு)

ஆ செய்யுள் - உ,கூ0எ.

ஐந்தாமபோர்ச்சருக்கமுற்றிற்று.

---

# ஆறாம்போர்ச்சருக்கம்.

கோயிலாளுடையபைங்கொண்டலார்கண்டுயில்
பாயலாய்வாழநீபாக்கியஞ்செய்ததென்
றீயலாதுவமைவேறில்லெனத்தியநின்
வாயெலாநஞ்சுகால்வாளெயிற்றுரகமே. (க)

பயிலும்வெம்பாசறைப்பாண்டவரைவருந்
துயிலுணர்ந்தணிபசுந்துளபமாலடிபணிந்
தயிலுநஞ்சனையபோரடுகளங்குறுகினர்
சயிலவெங்கடகரித்தானையுந்தாமுமே. (உ)

பகுத்தபல்லணிகளின்பான்மையக்குரோணியான்
மிகுத்தவெஞ்சேனையாம்வெள்ளநீர்வேலையைத்
தொகுத்துவண்டிமிர்தொடைத்துருபதன்றிருமகன்
வகுத்தனன்புறமிடாமகரமாவியூகமே. (ங)

போகமுந்தருமமேயானமெய்ப்புனிதனு
நாகவெங்கொடியுடைநாயகக்குரிசிலும்
வேகவெம்படையுடைவேந்தருஞ்சேனையு
மாகவங்குறுகினராரவம்பெருகவே. (ச)

பொருஞ்சமங்கருதியாள்புரவிதேர்போதகந்
தெரிந்துகொண்டிருதிசையினுஞ்செல்லவே
பெருஞ்சனந்தன்னையப்பீடுடைவீடுமன்
தரிஞ்சமென்றுள்ளபேர்வியூகமுங்கட்டினன். (ரு)

இந்திரன்முதலியவிமையவர்தங்களா
லந்தரமிடனறவரவுனிந்தலமா
வந்துவந்திருபெரும்படைஞருமாறுபட்
டுந்தினர்முந்தினரொட்டினர்முட்டினர். (சு)

பரவிநால்விதவயப்படைஞருஞ்சூழவா
ளிரவிநான்வெம்பகையிருளினுக்கென்றுதன்
புரவிநான்மறையெனப்பூண்டதேர்தூண்டினன்
விரவினன்வீமன்மேல்விற்கையாசிரியனே. (எ)

நிலைவரம்பெறுதவித்தேசிகன்சிறவு
நிலைபெறும்புகழினானெஞ்சினெஞ்சலிசெயா
மலையினும்பெரியதேர்வலவனும்புரவியுந்
தலையறும்படிசரந்தனுவலைத்துதைதயினான். (௮)

சூழிவெங்கசாததாகதகிருபனை
வீழவெங்கணைகளான்மெய்துளைத்தளவிலே
தாழுகின்றிலனெழிற்சல்லியன்றன்னொடே
தோழவின்றமர்செய்கென்றொருமிசைத்தோன்றினான். (௯)

வல்லிவெஞ்சமர்செயவல்லைநீவருகென
வில்லையுந்துணிசெய்துவெல்லவந்தவனையுந்
தொல்லைவெங்கரியெனத்தேரொடுந்தோண்மடுத்
தெல்லையம்புவியின்மேலெற்றினான்வீமனே. (௧௦)

சல்லியன்றன்பெருஞ்சலிவுகண்டங்கையி
னொல்லியங்கனியினிரோலாருயிரெனப்
பல்லியங்களுமெழப்பாந்தளம்பொற்கொடி
யல்லியந்தெரியலானங்குவந்தணுகினான். (௧௧)

வெம்புயவீமன்மேல்வில்வளைத்தாயிர
மம்புகண்மாரிபோலார்த்தெழவீசினார்
தும்பையந்தார்முடிச்சூழ்படைமன்னருந்
தம்பியர்யாவருமாமனுந்தானுமே. (௧௨)

தோன்றரித்தவசனுஞ்சோகமில்பாகனார்
வான்றடந்தேரொடும்வருகெனச்சென்றெதி
ரூன்றினான்மைந்தருமிளைஞருமுயிரையே
போன்றமைத்தனரும்வாணிருபரும்புடைவர. (௧௩)

நின்றிருசேனையுநேர்படவேலினும்
வன்றிறல்வில்லினும்வாளினுமலைவுறக்
குன்றனதோளினாரிருவருங்கொக்கரித்
தோன்றினார்வில்வளைத்தொருவருக்கொருவரே. (௧௪)

அவனுமம்பிவனாத்தழகுறவெழுதின
னிவனுமம்பவன்மணித்தோளின்மேலெழுதினான்
புவனமெங்கணுமிகப்பொறியெழப்போர்செய்தார்
பவனனுக்கனலியுநிகரெனும்பரிசினார். (௧௫)

வரத்தின்முன்பெறுகதைவன்மையும்வின்மையுந்
திரத்தினின்றெண்ணவோர்பேர்பெறுஞ்சேவகன்
சரத்தினுக்கெடுதேர்ச்சர்ப்பகேதனனையன்
றரத்தின்வெங்கணைகள்பட்டுருவவில்லுலைதயினான். (௧௬)

தான்விசைக்கணைகளிற்றம்பியர்தம்மையுந்
தேன்விசெந்தெரியலானெய்துபுண்செய்துபின்
றான்விசைப்படிதனித்தருவபல்பகழியால்
வான்விசேப்பேரையும்வானிலுய்த்தனனரோ. (௧௭)

வாவருங்கவனமாக்கடுகுதேர்வலவர்போ
யேவருஞ்சிலைகள்போயிருபுயவலிமைபோ
யாலரும்பண்டுதாமிடுபுறமிட்டனர்
தேவருங்கண்டுவெந்தலர்மழைசிந்தினார் (௧௮)

வேறு.

ஏயவரிசிலைவீமனொடுபொருபோரிலனைவரும்வென்னிட
மேயவிழியிலையாயபதிதருவீரர்பலரும்விகன்னனு
மாயமுதிர்சினமுளவிரைவுடன்மீளவரவபிமன்னுவுந்
தூயவரிசிலைவாளிகொடுதனதேர்கொடவனெதிர்துன்னினான். (௧௯)

மானவபிமனுஞானவிகனனைவாளிபலபலவேவவே
லானவிரதமுமாவும்வலவனுமாழிகளுமுடனற்றபின்
றானவிரதமுறுமல்விசையொடுதத்தியருகுறுசித்திர
சேனனெனுமிளையோனதணிபெறுதேரின்மிசைகடிதேறினான். (௨௦)

மற்றையிளைஞருமைத்துனனுமதமத்தகயபகதத்தனுஞ்
செற்றவிகனனுமுற்றுமிவனொடுசெற்றியமர்பொருகிற்றினார்
வெற்றியபிமனும்விற்கையுடனவர்விட்டகணைகள்விலக்கிமார்
பெற்றுகணையனைவர்க்குமவரவரெய்த்துவிழவிழமொத்தினான். (௨௧)

நெடியவரிசிலைநிமிரமுறைமுறைநெடியவிசையுடன்விசியுநா
ணிடியுமுகிலெனவகிலவெளிமுகடிடியவதிர்பெருநகையுடன்
கொடியவிகனனைமடியவவனுடல்கொடியகுடருகுகுருதிநீர்
வடியவிருபுயமொடியவுதையினன்வடியகணையொருநொடியிலே. (௨௨)

மன்னர்மணிமுடிமன்னுகனைகழன்மன்னனிளவல்விகன்னனை
முன்னருறுகணைபின்னர்விழவிழமுன்னரமர்பொரமுன்னினான்
பொன்னசலகிரன்னபுயவபிமன்னுவொருவனுமின்னுநா
மென்னவமர்பொரவின்னரனுகுவதென்னவெருவினர்துன்னலார். (௨௩)

அன்றையமரினிலொன்றுபடவவரங்கமயர்வுறுபங்கமே
தென்றுமொழிவதுதந்தமனையுறவெந்திருபருமுந்தினார்
வென்றுபொருமுனைநின்றவபிமனைவிஞ்சுமுவகைகொணெஞ்சுடன்
சென்றுதழுவினரிந்துவரவெழுசிந்துவெனமகிழ்தந்தைமார். (௨௪)

கோடுமுதலொடுவாளிகளினிறவீழ்வபலகடகுஞ்சரங்
காடுபடுதுளவோன்முன்வரவிடுகஞ்சன்மழகளிறொக்குமா
லோடுகுருதியினூடுவடிவொருபாதிபுதைதருமோடைமா
நீடுமுதலையின்வாயின்வலிபடுநீலகிரியைநிகர்க்குமால். (௨௫)

மாலுமதகடசாலநுதலுமருப்புமொருகையும்வதனமுந்
தோலுமொழியவுளானநசைபலபேய்களுகர்தருதும்பிமா
நாலுமறைகளுமோலமெனவகல்வானமெனமுழுஞானமே
போலுமெனவொளிர்மேனியுடையவர்போர்வையுரியதள்போலுமே. (௨௬)

சேனையிபமுமற்றுவிழுவனசென்றுதிசைவழிகவ்விவிள்
போனவயவர்கள்படைகொடெதிரெதிர்பூசல்புரியிருபூதமுஞ்
சோனைமழைமுகில்வாகன்முதலசுரேசர்தொழுதுதுதிக்கவே
யானைமுகவசுரேசனுடனமராடுமுதல்வனையொக்குமே. (௨௭)

இமையமனனென்விசயன்மதலையையின்றையமரிணியுக்களுக்
கமையுமெனமுதலனிகமடையவுமனியுமவனிபர்நால்வருக்
தமையனொடுதமபதியினணுகினர்தங்கவிளைவொடுகெங்குல்போய்ச்
சிமையமனனென்மீளகனியிருள்செறையவுதயதிவாகரன். (௨௮)

ஆ செய்யுள் - ௨,௯௯௫.

ஆறும்போர்ச்சருக்கமுற்றிற்று.

# ஏழாம்போர்ச்சருக்கம்.

ஊறும்வேதமுந்தொடாநந்தகோனுடனசோதைகண்டுகவாழ்வுகூர்
தாணிமீதுசெங்கையுமாமுழந்தாளும்வைத்துவைத்தாடுமாயனார்
விரவிநின்றமாமருதிறாடுதாமெத்தெனத்தவழ்ந்தருளிமீளவும்
புரியுகீள்கடைக்கண்ணும்வண்ணமும்போற்றுவார்கண்மெய்புளகமேறுமே. (௧)

இருவர்சேனையுஞ்சேனைமன்னருமிகலியேபலதிசைகளெங்கணு
முரசமாதிவெம்பணைகொழிக்கவேமுன்னைவெங்களம்பின்னுமெய்தினார்
மரகதாசலம்போலுமேனிமாமாயனச்சுமாசனவியூகமுந்
தரணிகாவலன்றன்பிதாமகன்சகடவியூகமுந்தான்வகுக்கவே. (௨)

மன்றணிம்பகாண்மாலைவேலினான்மாறன்மீனவன்வழுதிபஞ்சவ
னன்றுபஞ்சவர்க்காகவேயுடன்றந்தணற்குடைந்தஞ்சியோடினான்
றுன்றுமாயமால்யானைகொண்டுபோர்யானைமன்னரைத்தொல்லமர்க்களே
வென்றுகண்டவர்புறமவர்க்கிடான்மீளவந்தனன்வீமன்மைந்தனே. (௩)

முகினிறங்கொண்மாமேனிமாயனார்முன்பிறக்கவேபின்பிறந்தவன்
புருகிலத்தனிற்சற்றுநின்றிலன்பொருசுதாயுதன்போர்பொறாமையிற்
சகுனியும்பெருஞ்சேனைமுன்வரத்தக்கசல்லியன்றானுமோடவே
மிருகிறங்கொள்பைந்தாமவாகைபோர்வென்றுசூடினான்வீமசேனனே. (௪)

உயர்ந்தமேருவோடொத்திலங்குதேருலகளந்ததாள்வலவனூரவே
செயந்தன்மாபெருந்துணைவன்வன்பெருஞ்சேனைதன்னொடுஞ்சென்றுபற்றினான்
வியந்ததேரின்மேன்முப்புரங்களும்வென்றமீளிபோனின்றவீடும
னியைந்தபோரினுக்கெதிரில்வல்லரோரிருவர்விற்களுமெதிர்வளைந்தவே. (௫)

ஒருவரெய்தவம்பொருவர்மேலுறாதோரோரம்பினுக்கோரோரம்புதொட்
டிருவரும்புகுந்தெய்தவல்லபமின்னதாகுமென்றன்னலாகுமோ
வரிவில்வெங்கடகரியின்வந்ததாரகனுமாமயிற்குகனுமன்றியே
மருவுவெங்குரற்கொண்டல்வாகனும்வலனுமிராமராவணருமென்னவே. (௬)

கரியணிக்குளெக்கரிகள்புண்படாசடவுதேரிலெத்தேர்கலக்குறா
பரிநிரைக்குளெப்பரிதுணிப்புறாபாகர்தம்மிலெப்பாகர்வீழ்கலார்
காளும்வெற்றிகூர்வசவுமுற்றபோர்கவிலுகிற்கினுநாகநெக்குமா
லிருதளத்திலுமிருவரம்பினுமேவலுற்றபேரேந்தமன்னரே. (௭)

வேறுபோரினிப்பொருதல்வேண்டுமோவிசயன்வீடுமனென்னும்வீரர்தஞ்
சேறுபோரிடைத்திசையடங்கலுஞ்சிவந்தகோலமெய்க்கவந்தமாடுமாற்
கூறுபோர்பொரக்கருதிவெங்களங்கொண்டுதெங்கலிற்கொல்லலுற்றநா
ளாறுபோரினும்பட்டபேரினுமதுபடக்குபோன்றுபட்டதே. (௮)

பாரவாளினுங்கூரவேலினும்பகழிவாயினும்பட்டபட்டபோர்
வீரர்வானின்மேல்வழிநடத்தலான்மெய்தளர்ந்துவேதனைமிகுத்தபின்
சேரநீருநும்பாடியெய்துவீர்செருவினொந்ததிச்சேனையென்றுபோ
யாரவாரநீடாழியெய்தினனாழியொன்றுடைத்தேரருக்கனே. (௯)

வெங்களந்தனிற்பகன்மலைந்தபோர்மெய்விடாய்கெடக்கைவிடாதுபோய்த்
திங்களின்குலத்திருவர்தம்பெருஞ்சேனைமன்னரும்பாடியெய்தினா
ரிங்களந்தவாறப்புறத்துவானெல்லைதானளந்திந்தமன்னவர்
தங்கள்வெஞ்சமங்காணமாமணிச்சயிலமெய்தினான்றபனன்மீளவே. (௧௦)

ஆக செய்யுள் - ௨,௯௪௫.

ஏழாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

# எட்டாம்போர்ச்சருக்கம்.

பூத்தநாபியந்தாமரைப்பூவில்வந்துபல்பூதமுஞ்
சேர்த்தநான்முகப்புனிதனுமுனிவர்யாவருந்தேவரு
மேத்தநான்குவேதங்களுந்தேடநின்றதாளெம்பிரான்
பார்த்தன்மாமணித்தேர்விடும்பாகனானதெப்பான்மையே. (௧)

நெருநலிப்பெருஞ்சேனையோநிலைதளர்ந்ததச்சேனையைப்
பொருநிலத்தினிற்புறமிடப்பொருதுமென்றுறக்கருதியே
வருநிலத்தெழுந்தூளியால்வானயாறுநீர்வற்றவுந்
தருநிலத்துளோர்காணவுந்தருமன்வந்தனன்சமரிலே. (௨)

வென்றுபோனபோர்மேன்மையால்விலோதனப்பணிக்காவல
னின்றும்வேறுமென்றக்களத்தெண்ணில்சேனையோடெய்தினான்
றன்றுகங்கையின்றிருமகன்றுசியூகமுந்துளபமால்
வென்றிகூர்பெருஞ்சகடமாம்வெய்யயூகமுஞ்செய்யவே. (௩)

தொலைவிலங்கழற்றுணைவரேதுணைவராகவெஞ்சூறைபோற்
கொலைவிலங்கையன்பிறைமுகக்கூரவாளியன்றேரினன்
மலைவிலங்குதோள்வீமனைவளைத்துவந்தெதிர்திளைத்தனன்
றலைவிலங்கலுக்கரசெனத்தகும்வலம்புரித்தாரினான். (௪)

தும்பிமேன்மதத்திடைவிழுந்தும்பிபோல்விறற்றுரோன்றனுந்
தம்பிமாருமுற்றெய்தவெஞ்சாயகங்கண்மெய்தைக்கவே
வெம்பிவீமனுந்தன்சரம்விண்டலத்திலிவ்வேந்தனுக்
கெம்பிமாரிலின்றெண்மர்போயிடம்பிடிக்கவென்றேவினான். (௫)

முந்தவன்றுசென்றுசுகன்மைந்தனாசுகமூழ்கவே
சுந்தரன்விசாலக்கணன்வீரவாசிபௌதுண்டனு
மந்தமாமகோதரனுடன்மாகவிந்துவுமபயனுஞ்
சிந்தினார்களந்தன்னிலாதித்தகேதுவுஞ்சேரவே. (௬)

அற்றகந்தரமுயிரினோடந்தரம்புகத்துள்ளவு
மிற்றபேருடம்பவனிமேலெடுத்தவில்லுடன்வீழவு
முற்றதம்பியர்மாய்தல்கண்டுள்ளுடைந்துபோயுரனுடைக்
கொற்றவன்பெருங்குருகுலக்குரிசினின்றுழிக்குறுகினான். (௭)

தன்பிதாமகன்செய்யதாடனதுமௌலிமேல்வைத்துநின்
றன்பிதாவின்மேலன்பினாலகமும்பியர்க்குதவுவா
யென்பிதாவுநீயாயுநீயென்றிருந்தனனெம்பிமார்
முன்பிதாமருத்தென்றுமம்முநல்லவனான்முடிவெய்தினார். (௮)

நீவினைத்தலைச்சேனையின்றலைவனாகிமுன்னிற்கவே
யீவெனக்குவேறில்லையென்றெண்ணினேனெனவேந்தர்வேந்
தோவியத்தின்மெய்யுணர்வழிந்துள்ளழிந்துகொண்டுரைசெய்தான்
வாவிநீத்திலமென்னவேமலர்ந்தகண்கணீர்மல்கவே. (௯)

வேறு.

ஓங்கனிசிறிதுமையவெஃகிபடையெடுப்பதியாரு
முரங்கள்போயமரிற்சாகாதுய்ந்தனரோடவன்றே
சரங்களாலயிலால்வாளாற்றம்பகைசெருத்துத்தாமுஞ்
சிரங்கள்வேறுடல்கள்வேறாக்கிடப்பதேசெல்வமம்மா. (௧௰)

இருந்தனம்படைத்தமாக்களின்பமுமறனுமஞ்சார்
விருந்தெதிர்சிறிதுமஞ்சார்மேம்படவாழுமில்லோர்
பொருந்தியவிறப்பையஞ்சார்போதமெய்யுணர்ந்தமாந்த
ரருந்தவமுனிவரஞ்சாரரசருமடுபோரஞ்சார். (௧௧)

இன்னமொன்றுரைப்பக்கேண்மோவிருசெவிக்கேறுதேனா
முன்னரசாண்டவேந்தர்முறைமையிற்சிதைந்ததுண்டோ
மன்னவதன்னினின்றமாசிலாவடமீன்போல்வா
டன்னிருகண்ணீரின்னமிவைகொலோதருவதம்மா. (௧௨)

கால்வருகவனமான்றேர்க்கன்னனுங்கன்னபாக
மால்வருகனுழிவேகமாவலான்சகுனிதானு
நால்வருபழுதில்கேள்விநம்பியுநீயுமிந்த
நால்வருங்குறித்தவெண்ணநாளையேதெரியுமையா. (௧௩)

விதுரனும்வெஞ்சொலாற்றன்வில்லினையொடித்துநின்று
னதிரதனுலன்றியங்கர்கோனமரின்வாரான்
முதிர்படைவிசயன்வீமன்மூண்டமர்புரியுங்காலை
யெதிரினிகானுநீயுமல்லதிங்கிலக்குவேறார். (௧௪)

புரிந்தறம்வளர்க்குநீதிப்பொய்யிலாமெய்யனங்கே
செருந்தவிழ்துளபமாலைத்திருநெடுமாலுமங்கே
யருந்திறலமரிற்பொன்றுதங்கிருந்தவரையிங்கு
மிருந்தவர்காண்பதல்லால்யார்கொலோவிறக்கலாதார். (௧௫)

விடேசவலவேண்டாமேலுனக்குறுதிசொன்னேன்
முடுவாளமரிற்சென்றுமுனைமுனைந்தாரையின்றே
யடுகமற்றென்றிலொன்றிலாங்கவர்தங்கள்கையாற்
படுவாவென்றுதேர்மேற்சென்றனன்பரிதிபோல்வான். (௧௬)

காயிருங்கலிற்றின்மேலான்கடோற்கசக்காளைதானே
ராயிரம்வடிவாய்முந்தியரசர்போரணியையெல்லாந்
தோயிருட்பிழம்போற்றசேனையம்புயலிற்றோன்றி
மாயிருவிசும்பிற்றாரகணமெனமாய்த்தவர்தான். (௧௭)

ஒருபுடையிவன்போர்செய்யவொருபுடையுரககன்னி
யருளுடைமைந்தனெண்ணிலாயிரமுருவமாகி
யிருபுடையினும்போர்வேந்தரெலிகள்போலேங்கியம்பாற்
பொருபடையுருண்டுபோகப்பொருவில்வெம்பூசல்செய்தான். (கஅ)

இப்பகன்முடியுமுன்னேயாவரையுமுடிப்பனென்னுப்
பைப்பகன்மகுடமைந்தன்பலபெரும்படையுமாகி
யப்பகலடுபோர்செய்யவன்றமராழிந்துமாய்ந்த
மெய்ப்பகனிளவலந்தவீமன்மேல்வெகுண்டுவந்தான். (கசு)

என்னுடன்பிறந்தோன்றன்னையுதிட்டிரனிளவல்கொன்முன்
றன்னுடல்பிளப்பேனென்றுதானைவல்லரக்கரோடு
மன்னுடன்சொல்லிநிற்பான்வந்தெதிர்மலைந்தகாலை
மின்னுடைமுகில்போற்சென்முன்வீமனுக்கிளையோன்மைந்தன். (உ0)

வலம்புரித்தாமவேந்துக்காகவேமலைவான்வந்த
வலம்பசனேடுஞ்சென்ரேருடங்கலுமரக்கர்மாயக்
குலம்பழுதற்றமைந்தன்கொண்டபல்லுருவத்தோடும்
புலம்புறப்பொருதானந்தவரக்கனும்புறந்தந்தானே. (உக)

அஞ்சினன்போனபின்னரரவினையடர்க்குமாய
வெஞ்சினக்கலுழனுகியுருமெனமீளவந்தா
னஞ்சினையுமிழும்வெவ்வாய்நாகங்களனைத்துமொன்ற
யெஞ்சினபோலநின்முனிருதருக்கிறுதிசெய்தான். (உஉ)

நின்றவன்றன்னையந்தநிருதனும்வடிவாளோச்சிக்
கொன்றனன்கொன்முனைக்குருகுலத்தரசன்சேனை
வென்றனனரக்கனென்றுவிரிகடல்போலவார்த்த
தன்றவனடர்த்தமாயமார்கொலோவடர்க்கவல்லார். (உங)

வேறு.

பூஞ்சாயகன்கைப்பொருசாபம்பொசிந்துகண்ணுற்
றீஞ்சாறுபாயுஞ்செழுநீர்வயற்செந்நெல்வேலிப்
பாஞ்சாலநாடர்பலரும்படப்பாணம்விட்டார்
தாஞ்சாபம்வாங்கிமறைமைந்தனுந்தந்தைதானும். (உச)

பட்டான்றுணைவனெனக்கேட்டுப்பரிவுபொங்க
விட்டான்மணித்தேர்வனைத்தான்றணிவெய்யசாபந்
தொட்டான்பகழியபிமன்னுத்தொடுத்தலோடுங்
கெட்டாரரசன்பெருஞ்சேனையிற்கேடில்வேந்தர். (உரு)

மைந்தன்களத்தின்மடிந்தானெனவாயுமைந்தன்
றந்தம்பறியுண்டெதிர்சீறியதந்தியென்ன
வெந்தங்கமுற்றுமனந்தீயெழமேனடந்தான்
சிந்தந்திகழவெழுதுந்திறற்சிங்கமன்னன். (உசு)

சினத்தோடெம்மேல்வருகின்றனன்செம்மலென்று
வினத்தோடுசெல்லும்பிறைவாளெயிற்றேனமென்ன
மனத்தோடியைந்ததிருத்தம்பியரோடுமன்னர்
சனத்தோடும்வந்தானெதிர்சீறித்தரணிவேந்தன். (உஎ)

திளைத்தாராசர்திகிரிக்கிரியென்னவோடி.
வளைத்தார்கனகவரைபோல்வருமன்னன்றன்னை
யுளைத்தாரைவோர்களுமோரொருபாணமேவித்
துளைத்தார்கிளைத்தார்விளைத்தாரமர்தூண்டுதேரார். (௨அ)

எடுத்தானொருதன்சிலைவீமனுமென்னில்பாணந்
தொடுத்தானவர்மேலிமைப்போதையிற்சூழ்ந்துளோரைக்
கெடுத்தானரசற்கிளையோரெதிர்கிட்டிமீண்டும்
படுத்தானெழுவரிவன்வாளியிற்பட்டுவீழ்ந்தார். (௨௯)

அறமிக்கசொற்குண்டலபோசனனுதியக்கன்
திறமிக்கதீர்க்கநயனன்சிலைத்திம்மவாரு
மறமிக்கவேற்குண்டலன்குண்டலதாரன்மன்னூற்
றுறைமிக்ககேள்விக்கனகத்துவசனனதோன்றல். (௩௦)

இப்பேரெழுவர்சிரமேழுமெழுந்துதுள்ளி
மைப்பேரெழிலியகல்வானிடைவந்தவெல்லை
யொப்பேதெனவாசவன்கேட்டலுமோங்கல்விந்தை
கைப்பேரெழிற்பைங்கழங்கென்றனர்கண்டவானோர். (௩௧)

அறந்தந்தவாழ்க்கைமுடிக்கின்றனையாகிநீயு
மிறந்தந்தரத்திலினியேகுகவென்றுசீறி
மறந்தந்தசியக்கொடியோன்பொரமாசுணத்தோன்
புறந்தந்தபோரிற்புறந்தந்தனன்போகலுற்றான். (௩௨)

கந்தேயனையபுயவீமன்கணைகள்பட்டுத்
தந்தோழிந்துபடுமன்னவன்றானையென்ன
மந்தேசரெல்லாமலைவுற்றுமடிந்துவீழச்
செந்தோருக்கன்குடபாற்றிசைசென்றுசேர்ந்தான். (௩௩)

தளவொத்தமூரற்றலமானைத்தருமன்மைந்தன்
வளமிக்கவெம்போர்க்களம்வென்றுவதுவைசெய்வா
னுளமுற்றளித்தகலன்போலுமுருகலன்கள்
பிளவுற்றவேழமதனித்திலப்பெட்டிபோலும். (௩௪)

பூட்டற்றவில்லின்மிசைசோரிப்புனலின்வீரர்
வாட்டற்றவீரல்பலசுற்றிவயங்குதோற்றம்
வேட்டற்பொருட்டாற்புவிமானுக்குவேந்தருட்டுஞ்
சூட்டற்றமுற்றுஞ்சுடர்வாசத்தொடையலற்றே. (௩௫)

குலமாகிருபர்குடர்சோருங்குருதிவெள்ளம்
பலமாநதிபோய்த்திரைவேலையிற்பாய்ந்ததோற்ற
நிலமான்விளிம்புசிவப்பேறியநீலவாடை
நலமாகமன்றற்குடுத்தென்னநவிலலாமே. (௩௬)

தன்பாடிபுக்கான்புறந்தந்ததரணிவேந்தன்
மின்பாடிலங்குங்கணைவெஞ்சிலைவீமனுமே
மன்பாடிபுக்கான்பெரும்போரிடைமாய்ந்தமன்னர்
தென்பாடிபுக்கார்குடிபுக்கதுசேர்ந்தகங்குல். (௩௭)

அன்றேகளத்திற்பலியூட்டியவாண்மைவீர
னின்றேயிறந்தானிதற்குன்னியிரங்கலீரென்
றொன்றேமொழியுமுரவோன்முதலிவருக்குங்
குன்றேகவித்தகுடைக்கோவலன்கூறினானே. (௬௮)

உன்னிக்களத்திலுயிர்விடுமுரகமைந்தன்
சென்னிக்கதிர்மாமணிசிந்தியசோதியெல்லாந்
தன்னிற்கவர்ந்தானெனப்பண்டையிற்றும்மமேனி
மின்னிப்பரிதிகுணபாற்றிசைமேவினானே. (௬௯)

ஆ செய்யுள் - உ,௬௮௪.

எட்டாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# ஒன்பதாம்போர்ச்சருக்கம்.

---

போராறுமூழ்கிமறைநூல்பிதற்றிமிடறும்பிளந்துபிறவித்
தூராறுமாறுநினையாமலுங்கடொழிலேபுரிந்தசுமட
ரோராறுபேதசமயங்களுக்குமுருவாகிநின்றவொருவ
னீராறுநாமமுரைசெய்துமண்கொடிடுவோர்கள்காணுமிமையோர். (௧)

முன்போருடைந்துதனதில்லடைந்தமுடிமன்னன்முன்னையிரவிற்
றன்போலுமாமனவனோடுகேடுதருதம்பியோடுகெருதிப்
பின்போதில்வன்மையொழிவானையோடியழையென்றுபேசவவனு
மின்போலிறந்தவிளையோர்கள்பாடுவினவாவிருந்தபொழுதே. (௨)

மாவில்லெடுத்தென்னிளையோர்கள்கந்தவகன்மைந்தன்முன்புசிவன்முன்
பூவில்லெடுத்தமதனனவாறுபுகல்கிற்பதல்லவனிகக்
கோவில்லெடுத்தென்மறைநாலும்வல்லகுருவில்லெடுத்தெனினிமே
னீவில்லெடுக்கிலனைவேமுமுய்துநினையாரும்வாகைபுனையார். (௩)

என்னுஞ்சொலண்ணல்செவியேறநெஞ்சமெரியேறவெய்தின்மொழிவான்
முன்னுந்தைதந்தையுரைசெய்தமேன்மையறியாய்கொலம்பொன்முடியாய்
தன்னுந்துதேரும்வரிவில்லுமுண்டுசரமுண்டுநானையவனே
யுன்னுங்களத்திலவர்வானமாளவுலகாளுவிப்பனுனையே. (௪)

விற்கவ்வுவாளியடலவர்மீதுவிடலஞ்சிவீரரெதிரே
புற்கவ்வுமாகில்விரைவோடுகெங்குல்புலராமுன்வந்துபொருவேன்
சொற்கவ்வையாகநினையற்ககொன்றுசுரர்நாடளிப்பனினியுன்
சிற்கவ்வைதீரவவருக்குநின்றதிருமாலினுக்குமெனவே. (௫)

துச்சாதனவிம்மொழிசென்றுகங்கைசுதனுக்குரைக்கவெனவே
நச்சாடராவையனையானுமங்கோர்நொடியுற்றபோழ்தினடவா
வெச்சாபமன்னுமணியூகமானவிரதந்தனக்குநடுவோ
ரச்சாணியானவவனுக்கிவன்சொலடைவேபுகன்றனனரோ. (௬)

பேரன்புகன்றமொழிகேள்விசெய்துபெரியோன்முகிழ்த்துநகையா
வீரம்புகன்றெனினிநானுமக்குவிசயற்செறுத்தன்முடியா
தீரந்துறந்தவொருநூறுபேரைமகுடந்துணிப்பனினியென்
னேரன்றமர்க்கணுரைசெய்தவாய்மைகிறைவேறுநாளையுடனே. (௭)

ஒருநாளுகிவிர்பொருமின்களும்மையுலகாளுவிக்கவருவோர்
வருகாடொடங்கியமர்செய்துதெவ்வைமடிவிப்பர்சொன்னவகையே
குருநாடுமற்றைவளநாடுமெய்திருமரோடியைந்தருழுமிப்
பெருநாளிருந்துகனிவாழ்திரென்றுவிடைநல்கிவிட்டபிறகே. (அ)

கன்றுந்துயின்றுதுயிலும்முனர்ந்துசிறுகாலையுள்ளகடனு
மென்றுங்கருத்தின்வழியேயியற்றியிகன்மன்னர்சூழவரவே
மன்றுங்குலுங்கவரையுங்குலுங்கவெழுதூளிமாதிரமுமால்
விண்ணும்புதைக்கவடலாகவத்தின்மிசைசென்றுபுக்குவிரகால். (கூ)

நாகங்குறித்தகொடிமன்னர்மன்னைநடுவேகிறுத்தியடைவே
பாகங்கடோறுமொருகோடிமன்னர்பகதத்தனோடுகிறுவிப்
பூகம்பமாகவினமோடலம்பசனுமுன்புபோகவொருபேர்
யூகஞ்சருப்பதோபத்திரமாகவணிசெய்துமானவரவோன். (க0)

நின்றானமர்க்கணவரங்குநிற்கவிவரிங்குமென்னனிருதன்
கொன்றானெனத்தன்மதலைக்கொரென்மரெழுவோரைநீடுகொலைசெய்
தொன்றாகமன்னர்பலராவிகொண்டவுரவோனுமும்பர்பகைபோய்
வென்றானுமற்றையிளையோருமொன்றின்விரகற்றகோவுமுதலோர். (கக)

மற்றுள்ளமன்னர்புடைபோதமுன்னர்மழைமேனிமாயன்வரவே
யுற்றுள்ளவீரரொடுசேனைநாதனணிநிற்கவொண்கொயுளமா
முற்றுள்ளவெங்குமெழுபூழிதுள்ளமுரசங்களுள்ளமிகவுஞ்
செற்றுள்ளமேவுகனறுள்ளவந்துசெருவெங்களத்தினிடையே. (கஉ)

செம்பற்பராகமுடிமாமதாணிசெறிதொங்கல்வாகுவலயம்
பைம்பற்பராகமலர்வல்லியோடுதிருமேனிசோதிபயில்வான்
வெம்பற்பராகவரையூகமாகமுறையாலணிந்துவெயில்கா
லம்பற்பராகபதியென்னநிற்கவமராடலுற்றபொழுதே. (கங)

வேறு.

இந்திரனுமேனையிமையோர்களுநடுங்க
வந்தாருமெண்டிசையுநின்றதிரவதிரா
வெந்திறலலங்கல்புனைவீமனுடன்மலைவான்
வந்தனனலம்பசன்வலம்புனைபுயத்தான். (கச)

செருவில்வெருவாநிருதசேகரன்வயப்போர்
மருவுசுடர்வாளினுடன்வந்தநிலைகாணு
விரவிவருதேரனையதேரின்மிசையிழியா
வருமுருமெனவிரைவினோடியெதிர்வந்தான். (கரு)

யாளியொரிரண்டிகல்புரிந்ததெனவிகலா
மீளிமையினாலும்வலியாலும்விறன்மிக்கோன்
வாளின்மிசைவாளதனைவைத்தடலரக்கன்
றோளிலொருதோளிலனுறும்படிதுணித்தான். (கசு)

அற்றதிரடோடுணியவச்சமறவேநின்
றற்றுழியும்வாளுரகமென்னவுளறுமி
மற்றையொருதோளின்மிசைதட்டியினிமற்போர்
பற்றுகெனவீமனுடல்பற்றபுகுந்தான். (கஎ)

குத்துவர்திரிப்பரிருகுன்றனையதோள்கொண்
டொத்துவர்வயப்புலிகளென்னவுடனேடித்
தத்துவருரத்தொடொரமுழ்கமுதுதகர்போன்
மொத்துவர்சினத்தொடெதிர்முட்டுவர்சிரத்தால். (கஅ)

மல்வலியழிந்துபிறைவாளெயிறரக்கன்
வில்வலியறிந்திடுதுமென்றுவில்லெடுத்தான்
கல்வலியதோள்விடலைகன்றிவிலெடுத்தான்
றொல்வலியினேடிருவருங்கணைதொடுத்தார். (கக)

கணைகளவையொன்றினுடனென்றெதிர்கடித்துப்
பிணைபடவிழுந்தசெயல்கண்டுநனிபேதுற்
றிணையிலதிவர்க்கினியிரண்டனிசினிக்கும்
புணையுமிவரென்றனர்புரந்தரனெடிமையோர். (உ0)

மலையினையும்வாசுகியையும்பொருவுநாணுஞ்
சிலையுமறமேலொருசெழுங்கணைதொடுத்தான்
றொலைவில்பகையானபகன்மார்புமிருதோளுங்
குலைகுலையுமாறுபலகுத்தினுயிர்கொண்டான். (உக)

மந்தரமுமந்தரமுமென்னவமர்மலைவா
னந்தரமிதல்லவெனவந்தரநெறிப்போய்க்
கந்தரநெடுங்கிரிகரத்தினிலெடுத்துச்
சுந்தரன்வயங்குதிரடோடனிலெறிந்தான். (உஉ)

எறியுமளவிற்குரிசிலிளவறிருமைந்தன்
குறியினெடுவெஞ்சிலைகுனித்தருகுநின்றுன்
பொறியிலவன்வீசியபொருப்பொராணுவாகி
முறியும்வகைபல்பகழிமுகிலெனவிடுத்தான். (உங)

வில்லபிமன்வெங்கணைகள்விசையொடவனெறியுங்
கல்லசலநீறுபடவித்ததிறல்கண்டே
கொல்லவினிவேண்டுமெனவெய்யதொருகூர்வேல்
வல்லடலரக்கனகன்மார்பின்மிசைவிட்டான். (உச)

விட்டவடிவேலுருவவேலுருவுமுன்னே
பட்டவனும்வீழவிருபாலும்வருசேனை
முட்டவுமிவன்கணைமுனைக்கெதிரிலக்காய்க்
கெட்டனர்நிசாசரர்கள்கிரிகளெனவீழ்ந்தார். (உரு)

ஆறுபடிநூறுபடியாயிரமரக்கர்
மாறுபடுபாடைவடமன்னரொருகோடி
யூறுபடவெங்கதைகொடன்றவனுடைக்கச்
சேறுபடமூளைகடிறந்தனர்சிரத்தால். (உசு)

முற்பகலின்மைந்தனைமுருக்கியவரக்கன்
பிற்பகலில்விழவடிவேல்கொடுபிளந்தான்
சொற்பகலிலானிளவலென்றனர்துதித்தா
ரற்பகலிலாவுலகில்வாழமரரெல்லாம். (உஎ)

காசியர்கள்சேதியர்கண்மாளவர்கலிங்கர்
பூசலிடையேழுபதிநூறுயிரவர்பொங்கிக்
கேசவனடாவுகிளர்தேர்கெழுசுவேத
வாசியுடையான்விசயன்வாளியின்மடிந்தார். (௨௮)

வேறு.

நாகத்தடந்தேர்த்தனஞ்சயன்கைவரிவெஞ்சாபஞ்சொரிகணையா
னாகத்துவசன்பெருஞ்சேனையொருசாருடையவொருசாரிற்
சருகொத்தனிலகுமரன்கைத்தண்டாலுடையக்கண்சிவந்து
கருகித்திருகிமேனடந்தான்கங்காநதியாடிருமைந்தன். (௨௯)

பட்டக்களிற்றுப்பாய்புரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்
திட்டத்துய்மன்முதலானோர்சிகண்டியுடனேயெதிர்தோன்ற
வட்டக்கவிகைவீமனுமன்னற்கிளையகாளையரு
மெட்டுத்திக்கிற்காவலருமவரோடெய்தியிகல்செய்தார். (௩௦)

வரிவெஞ்சிலைக்கைக்கௌரவர்க்குமுநலாமுதல்வன்வடிக்கணைக
டெரியுங்கணத்திற்றெரியாமற்றேருந்தாமுஞ்சிலர்பட்டார்
கரியுந்தாமுஞ்சிலர்பட்டார்கலுழ்வாய்மதுகைக்கால்வேகப்
பரியுந்தாமுஞ்சிலர்பட்டார்படாதாருண்டோபாஞ்சாலர். (௩௧)

நீயுங்ககனங்குடியேறநின்பேருடலமீனிலத்திற்
றேயும்படிநிற்பொரநின்றேனென்றேசொல்லாயிரஞ்சொல்லிச்
சேயுந்தனக்குநிகரில்லாச்சிகண்டிகடுங்காற்சிலைவாங்கிக்
காயுங்கணைகட்கிலக்கானான்காமன்கணைக்குங்கலங்காதான். (௩௨)

வில்லோன்சரங்கள்படநகைசெய்தவன்மேற்றனதுவில்வளையாத்
தொல்லோனின்றநிலைகண்டுதுச்சாதனன்றன்சுடுசரத்தாற்
பல்லோர்வியப்பத்தங்கள்குலப்பகைவன்சேனாபதியிளவல்
செல்லோடளாவுநெடுங்கொடியுந்தேருஞ்சிலையுஞ்சிதைவித்தான். (௩௩)

இவனேவிலக்காமென்பகழிக்கென்பான்போலவெங்குலத்தி
லவனேசெங்கைச்சிலைவீழ்த்தானரசன்றம்பிக்கழிந்தவனுந்
தவனேயத்திலிருளென்னச்சாய்ந்தானென்றுதனஞ்சயன்றன்
பவனேயத்தேர்நடவிட்டான்பணியார்தாமும்புறமிட்டார். (௩௪)

பார்த்தன்கணையாற்பட்டவரைப்பங்கேருகத்தோன்பலகோடி
காத்தந்திவனேயென்றுதற்குநாமார்புகலத்தேமாலை
மாத்தந்திகளும்புரவிகளுந்துணியத்துணியவழிசோரி
நீத்தந்தன்னுள்வடவைமுகநெருப்பொத்ததுகார்நெடுவேலை. (௩௫)

மன்னுஞ்சேனைபடக்கண்டவாட்சந்தனுவின்றிருமைந்தன்
பின்னுந்தனதுசிலையேந்திப்பேறாரெவரும்பின்காட்டத்
தன்னும்பகழிமழைபொழிந்துதாக்கும்பொழுதுவிராடபதி
யென்னுங்குரிசிறனக்கிளையோனிராமற்கிளையோனெனத்தக்கோன். (௩௬)

பன்னும்பரிமான்றேருடையான்படைத்தேர்மன்னர்பலர்சூழ
வென்னுஞ்சிலைக்கைச்சதானிகன்வந்தெதிருன்றதனுமெண்டிசையு
மன்னுந்திகைக்கும்படிமலைந்தான்மன்பேருயிருக்காருயிருங்
கன்னும்போல்வான்கருதலர்க்குச்செங்கானெருப்புங்கனல்போல்வான். (௩௭)

உற்றுச்சமரில்வில்லெடுத்தவுமவோன்றன்னையுடலோடு
மற்றுச்சென்னிவேறுகிவிழத்துணித்தேயம்பொன்றாற்
செற்றுக்கங்ககைமகனிற்பச்சோரரோடத்தேரோனு
மிற்றுத்தெறித்தமகுடமெனவீழ்ந்தான்புணரிக்கிடையந்தோ. (௩அ)

திலத்திற்சின்னப்படமுன்னஞ்சிவேதனுடல்கொண்டுயிர்செகுத்தான்
றலத்திற்கனகமுடிசிந்தச்சரத்தாலழித்தான்சதாநிகனை
வலத்திற்றிரிதனையுருட்டுமான்றேர்மச்சத்தவனிபர்தங்
குலத்திற்சிவனேகூற்றென்றார்கூற்றுங்குலையுங்கொலைவேலார். (௩௯)

சேந்தநெடுங்கண்முரிபுருவத்திட்டத்துய்மன்சேனையொடுஞ்
சார்ந்தகிருபரைவரொடுந்தானுந்தன்பாசறையடைந்தான்
பாந்தளுயர்த்ததுவசனுடன்பைம்பொற்கவரிமதிக்கவிகை
வேந்தருடனும்போய்ப்புகுந்தான்றன்பாசறையில்வீடுமனும். (௪0)

சென்றபரிதியாயிரம்பொற்சிகரப்பொருப்புக்கப்புறத்து
நின்றவிருளையிப்புறத்துநீங்காவண்ணங்குடியேற்றி
யொன்றவுலகமுற்றதுயிலுணர்த்துவான்போலுதயமெனுங்
குன்றமிசைநின்றனைவரையுங்கரத்தாலெழுப்பக்குணக்கெழுந்தான். (௪௧)

ஆ செய்யுள் - ௩,0௨௫.

ஒன்பதாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# பத்தாம்போர்ச்சருக்கம்.

---

வலியிலன்றுதந்தைசெற்றமைந்தனுக்குவந்தபேர்
நலிவெலாமகற்றுநாமநாலிரண்டெழுத்துடன்
பொலியுநாமமறைகள்சொன்னபொருள்விளக்குநாமமுன்
கலியனெங்கண்மங்கையாதிகண்டுகொண்டநாமமே. (௧)

தருமராசன்மதலைபஞ்சசயனநின்றெழுந்தபின்
கருமமானகாலையிற்கடன்கழித்துநேமியம்
பெருமனோடுசென்றுதக்கபெற்றிபேசிவெற்றியிற்
பொருமகீபர்சூழநின்றவினைஞரோடுபோதவே. (௨)

திரண்டுபல்லியங்கடேவர்செவிபுதைக்கவானிடைப்
புரண்டெழுந்ததூளிகண்புதைக்கமெய்புதைக்கவே
முரண்டொடங்குசேனைவந்துமுன்னர்நானையூகமே
யரண்டொடங்குயூகமாகவாகவத்துளணியவே. (௩)

வீடுமன்னெனுந்தடக்கைவீரமன்னும்வெஞ்சுடர்க்
காடுமன்னுபரிதியைக்கரங்குவித்திருந்தபின்
ரூடுமன்வலம்புரித்துலங்குதாமகிருபனு
நீடுமன்னர்பலரும்வாயிலிருபுறத்துநிற்கவே. (௪)

வனைந்திலங்குகழலுமுத்துவடமும்வாகுவலயமும்
புனைந்தசெம்பொன்மவுலியோடுபொற்பின்மீதுபொற்பெழ
முனைந்தடங்கவின்றுநாமுடித்தும்வெய்யபோரெனு
நினைந்துதன்பனைப்பதாகைநீடுதேரிலேறினன். (௫)

சுற்றுதவில்லினன்றொடைமிடைந்ததூணியன்
கொற்றவாகைவாளினன்கூரவீரவேலினன்
மற்றுமாயுதங்களோடுமென்னரோடும்வார்மூர
செற்றுமாரவத்தினேறுமெகௌத்தினெய்தினான். (௬)

தாறுமுன்னணிந்தவாறுதானையைநிறுத்தியச்
சேனைமன்னன்வந்துநின்றநிலைமைகண்டுசெங்கண்மால்
வானினின்றிழிந்தகங்கைமைந்தனுக்குவானுலாம்
யானையின்றனித்தியென்றுவிசயனோடிசைக்கவே. (௭)

போரினண்டர்பகையைமுன்புபொருதுவென்றவின்மையான்
முரிவெங்கொடிக்குரங்குமுன்னடக்குமேன்மையான்
வாரிதங்கொண்மேனியான்வனம்புகுந்துவருதலான்
யாருமின்றிராமனென்னவிசையநின்றவிசயனே. (௮)

சிலைபதாகையிவுளிதேர்செழுங்கனலளித்தன
வலவன்யாரெனிற்குறிப்பொடென்னையாளவந்தநீ
தலமபோல்லதேவர்தானவரெதிர்ப்பினுங்
கொலைபடாமலேவர்போவர்குன்றெடுத்தகோவலா. (௯)

எந்தையாகதுணைவராகதனயராகவெந்தைதன்
றந்தையாகநீயுரைக்கில்யாரையுந்தறிப்பன்யான்
முந்தையாரணங்களுக்குமுடிவினின்றபொருளையென்
சிந்தையாமுற்றுவித்துவினையறுத்தசெம்மலே. (௧௦)

என்றபோதுவந்துதேவவிரதனின்றவெல்லையிற்
குன்றமன்னதேர்கடாவியருகணைந்தகொற்றவ
ரொன்றுபட்டசேனையோடியாவருமுடன்றுபோய்
நின்றசேனைநிருபன்மேனிரைத்துவாளிதூவவே. (௧௧)

பலருமெய்தவாளிமெய்படப்படப்பனித்துநாப்
புலரகொர்ந்துகங்கைமைந்தனிதயமும்புழுங்கினான்
மலருகின்றவார்பனிக்குடைந்துசாலமாழ்கிநீ
டலருமந்தநிறமழிந்தவம்புசாதமென்னவே. (௧௨)

துன்னிமித்தமும்பலதொடர்ந்துசெய்யவெய்யவா
மந்நிமித்தநன்னிமித்தமாகுமென்றகந்தெளிந்
துன்னிமித்திரர்க்குநாளுமுதவிசெய்யுமுறுதியோன்
வின்னிமித்தவாளியாலவ்வாளிகள்விலக்கினான். (௧௩)

துருபதேயர்மகதநாடர்வெங்குலிங்கர்சோனகர்
கருநடேசர்சிங்களர்கடாரபூபர்கௌசலர்
தருமராசன்மதலைசேனைமுதுகிடச்சரங்கள்போ
யொருவர்போலவனைவர்மேலுமுருவவெய்துறக்கினான். (௧௪)

முடிதுணிந்தபின்புவிழமுன்னடந்தடற்றுவா
ரடிதுணிந்துவிழவிருந்தலங்கல்வில்வணக்குவார்
கொடிதுணிந்தவிற்றுணிந்தகோறொடுத்தகையுடன்
றொடிதுணிந்தசோரிவெள்ளநதியினூடுசோருவார். (௧௫)

மருத்தெறிந்தபூழியென்னவந்தவாமடங்குவா
ருருத்தெறிந்தவுருமிஞெந்தவுரகமென்னவுட்குவா
ரொருத்தரோடவென்னிதென்றநேகரஞ்சியோடுவார்
விருத்தன்வில்வளைத்தவாண்மைவிசயனுக்குமிசையுமோ. (௧௬)

வே று.

வெம்புயவிசாலவடமேருவொரிரண்டுடையவீமெனைநீடுமுனைவா
யம்புதமெழுந்துபொழிகின்றவழியோடிவருமனிலமெனவந்தணுகினர்
செம்பியனுமாகிருபனுஞ்செறிதுரோணனொடுசேயொடுசெயத்திரதனுந்
தம்பியருமாமனுஞ்சயிந்தரொடுவெய்யபகதத்தனொடுசல்லியனுமே. (௧௭)

மனஞ்செய்வலிகூர்கசதுரங்கமபதாதியிரதத்துடன்வளைந்துபலருந்
தனஞ்சயன்மடங்கவெதிர்சாபமும்வளைத்தெதிர்சரங்களுமுகைத்தமர்செய்தார்
கனஞ்சலதிமொண்டுகொடெழுந்தனைய வண்ணனொருகார்முகம்வணக்கியொரு
நா, றினஞ்சரமொரோர்தொடையிலேவியவரேவுசரம்யாவுமெதிரேவிலகினன்.()

தேருதயபானுவெனநின்றவிசயன்றனெதிர்தெவ்வர்பனியென்னவகலத்
தாருதயமாகிருபர்வேலைசுவறத்தனதுதண்டுதெனிகொண்டுகுதியா
வோருதவியின்றிமுடியோடவர்சிரங்களுமுடைந்துமுதுகிட்டுடையவே
மாருதசகாயனெனமாருதனெனக்கடவுண்மாருதசுதன்கடுகினன். (௧௯)

ஏறிவருதேருடனெடுத்தெறிதருஞ்சிலரையிருபணைகள்பற்றியிறுகச்
சீறிவரும்யானையொடெடுத்தெறிதருஞ்சிலரையைந்துகதியுஞ்சிவணவே
மாறிவருவாசியொடெடுத்தெறிதருஞ்சிலரைவஞ்சினமும்வெஞ்சினமுடன்
கூறிவரும்வாளரசரேறியணிநின்றரதகுஞ்சரதுரங்கம்விழவே. (௨0)

முந்துபடைவீரர்மிகநொந்துகதைவீமனெதிர்முதுகிடுதல்கண்டுமுனியா
வைந்துறழுநூறுபடியாயிரவர்வின்மையிலருச்சுனனையொத்தவடலோ
ருந்துரககேதனனுரைப்பமுகிலேழுமுடனூழியிறுதிப்பொழிவ்போல்
வந்துவடிவாளிமழைசிந்தினர்பராக்கிரமவாசியிபமாவிரதரே. (௨௧)

வெவ்வனமெரிக்கடவுளுண்டிடவணக்குமொருவில்லியுமவ்வில்லொடெதிர்போ
யவ்வவர்தொடுத்துவிடும்புகளெணைப்பலவுமவ்வகைதொடுத்துவிலகிக்
கைவரிவிலற்றுநடுநாணினடுவற்றவளர்கைத்தலமுமற்றுவிழவே
வைவரிவடிக்கணைகளேவினன்மணித்திகிரிவலவன்விடுதேரில்வருவோன். (௨௨)

தருமன்முதலவ்வரையும்வென்றிடுதுமென்றுதுச்சாதனனொடைவரிளையோர்
பொருமுனையின்வீடுமென்முனின்றவர்களல்லதுபுகன்றநரபாலரெவரும்
பருமமதமாபுரவிதேர்கொடுபறந்தனர்படாதவர்கெடாதகதையுஞ்
செருமுனைசராசனமுமுடையவிருவோருநனிசீறியமர்செய்தபொழுதே. (௨௩)

விண்ணவரினுற்றெழுவர்கண்டுகளிகூரவிறல்வீமன்விருப்பினுடனே
கண்ணிணைநெருப்பெழவுடன்றினிநமக்குமிதுகாலமெனமாலைபுனையும்
வண்ணவரிவிற்றலைவணக்கிவிதமானபலவாளிகடெரிந்துதருமற்
கெண்ணுமிரதத்தலைவரனைவரையும்விட்டிலனிமைப்பொழுதினெய்தனனரோ.()

எத்தனைமுடித்தலைகளெத்தனைபுயக்கிரிகளெத்தனைகரக்கமலம்வே
றெத்தனையுடற்சுமைகளெத்தனையுறுப்பினிணமெத்தனைகொடிக்குடர்களு
மெத்தனைநிணத்தடிகளெத்தனைநரப்புவகையெத்தனையெலுப்புநிரைமே
லெத்தனைமணித்தொடைகளெத்தனைமலர்க்கழல்களிற்றனகளத்தினிடையே. ()

விரிந்தனவுரங்களும்வெருண்டனமனங்களும்விழுந்தனபசுங்குருதிநீர்
சொரிந்தனவெலும்புகளழிந்தனகொழுந்தசைசிமிர்ந்தனநரம்பின்விசியுஞ்
சரிந்தனபெருங்குடர்துணிந்தனசிரங்கண்டதவழ்ந்தனநெடும்புருவமு
மெரிந்தனமுகங்களுமெழுந்தனசிரங்களுமிறந்தனர்கடுங்கணிலையோர். (௨௬)

வேறு.

சோமகரின்மச்சரிற்றென்னரிற்றுளுவரிற்றுருபதேயரில்வளவரிற்
றேமருவலங்கரிற்குலிங்கரிற்சோரிற்செஞ்சியரில்வெஞ்சமர்விடா
மாமருடவர்த்தனரின்மண்டலிகரிற்பட்டவர்த்தனரின்மற்றிவ்வுரவோ
னேமருகணைக்கிலக்காகாதமன்னவர்களெம்மன்னரென்றுமொழிவாம். (௨௭)

வேறு.

மேலெழுந்தடம்படையைநீடுகங்கைமைந்தனடுமேன்மைகண்டிரங்கிவெருளா
ஞாலமுண்டசெம்பவளவாய்மலர்ந்துகொண்டிவணைநா முரண்டொடங்கவிதுவே
காலமென்றுமன்றல்கமழ்கார்முருந்தன்வெம்புரவிகால்கொள்சந்தனங்கடவவே
கோலவெஞ்சரங்களடைவேதெரிந்துகொண்டுசிலைகோலினன்றனஞ்சயனுமே.()

ஓதம்வந்தெழுந்தெனமேகநின்றதிர்ந்ததெனவூழியும்பெயர்ந்ததெனவே
மாதிரங்களுஞ்செவிடுபோயகண்டமும்பொதுளிவாய்பிளந்தஅண்டமுகடுஞ்
சிதான்செழுந்துளபமாதவன்றயங்கருணைசிதபங்கயங்கொடிருவி
ஞாதன்வெஞ்சமங்கருதியூதுகின்றசங்கின்முழுநாதம்வந்தெழுந்தபொழுதே. (௨௯)

தூரியங்கறங்கநரபாலர்சங்கினங்களணிதோறுநின்றுநின்றுகுமுறத்
தேர்களுந்துரங்கமொடுவேழமுங்கலந்துவருசேனைமண்டலங்களுடனே
பேர்பெறுஞ்சிகண்டிதலையாகமுன்புகொண்டுலகுபேருமன்றுமின்றுகொலெனப்
போர்தொடங்கிவென்றிபுனைவீடுமன்றடங்கணெதிர் போயினன்றனஞ்சயனுமே.

காதிவெங்கொடும்பகழிமோதுநின்சிகண்டிதலைகாணலுங்குனிந்துநகையா
வாதியம்பையின்றுபகைமீளவந்ததென்றுநனதாயுதந்துறந்துவிரைதேர் [துச்
மீதுகங்கைமைந்தனொருதான்வெறுங்கைநின்றளவின்மேனடந்து சென்றுபொரு
சாதனன்சரங்கள்பலதூவினன்பரிந்தெதிரிசாபமுந்துணிந்துவிழவே. (௩௧)

சாகநின்றிலன்றுருபதேயனெஞ்சமின்றிவரிசாபமின்றிவண்கொடிகடேர்
வாகமின்றிவந்தவழியீளநின்றசந்தனுகுமாரனுஞ்சரங்கள்விடவே
யூகமும்பிளந்துசுராசன்மைந்தன்முந்திரதமூருகின்றசெங்கணெடுமான்
மேகமுங்கருங்கடலுநீலமுங்கலந்ததிருமேனியுஞ்சிவந்ததறவே. (௩௨)

போனதின்சிகண்டிதனைமீளவுங்கொணர்ந்துபொருபூசலுங்கடந்திரதமே
லீகலஞ்சனின்கணையுமேவுகென்றுவெஞ்சமரினேர்நடந்துசென்றுவிசயன்
கூனலங்கிதந்தசிலைகோலியம்பொடம்புபலகூடநெஞ்சழன்றுகையினன்
வேனிலம்புமன்புதைதையாதிலங்குமம்பொன்வரைமேனியெங்கணும்புதையவே.

தோளுநெஞ்சமுஞ்சிரமுமார்பமுந்தொடங்கிநிலைதோறும்வந்துவந்துருவவே
சாளரங்கொளங்கவழியோடுகின்றவிந்துமுகசாயகங்கைகொண்டுபிடியா
நாளறிந்தெதிர்ந்துபொருவோனுமைந்தனன்றுமுதனுமமுஞ்சிகண்டியிவனெய்
வாளியொன்றுமிங்கெமையுறாதனஞ்சயன்செய்பெருவாழ்வி தென்றறிந்துமகிழா.

நாமவெங்கொடுங்கணையினுமுநோர்தனஞ்சமாநாளுமின்றுமுந்தவினிநீர்
போமடங்கநந்தமையளிள்பதம்பொருந்தியுறுபோரறிந்துகொண்டுபொருவீ
ராமதன்றியென்செயினுமாவதொன்றுமின்றுதனியாண்மைபொன்ற* லென்றரு
குசேர்,கோமடக்கறம்பியர்களாகிநின்றவமைந்தரொடுகூறினன்பனங்கொடியனே.

---

* பொன்றல்—பொன்றுக.

கொடுகொண்டசெம்பவளகாதம்வந்துவந்துசெவிகூடமுன்புநின்றநிலையே
நாடிநெஞ்சழிந்துதிருநாமமன்புடன்றனதுநாகுழன்றுகொண்டுநவிலா
வோடுகின்றவம்பொழியநீடெம்படங்கமுனையூரநின்றவம்பொரமணையா
வீடுமென்கிடந்தகிடைதேவர்கண்டுவந்தனர்கண்மேல்விழுந்ததம்பொன்மலரே. ()

போரிலெஞ்சினன்குருகுலேசனென்றுகண்டபுருகூதன்மைந்தனும்புனைதுழாய்
வீரனுந்துனைந்துவருதேரினின்றிழிந்திருகண்வீழுமம்பினுண்முழுகினார்
சேரவந்திரண்டுவகையாகிவெங்களங்குறுகுசேனையுந்திரண்டலறவே
யாருநெஞ்சழிந்தனர்கள்யாருநொந்துநைந்தனர்கள்யாருநின்றிரங்கினர்களே. ()

வேறு.

ஆகமெங்குந்தங்குமம்பினணைமேல்வீழ்வான்
யோகங்கொண்டேயுயிரையோடாவண்ணநிறுவி
மாகஞ்சூழுமிரவிவடபாலெய்துமளவு
நாகங்காணேனென்னஞானத்தோடேவைக. (௩௮)

இங்குந்தருமன்முதலாவுள்ளமன்னரெவரு
மங்குந்துரியோதனனையாதியானவரசர்
பொங்குங்கனலாலுலகம்பொன்றுமன்றுபோலே
சிங்கமன்னான்பாதஞ்சென்னிமேற்கொண்டழுதார். (௩௯)

மறமும்வாகுவலியும்வல்வின்முதலெப்படையின்
றிறமுந்தேசும்வாழ்வுஞ்சீருங்கேள்விச்செலவு
நிறமுமுண்மையறிவுநெறியும்புகழுந்திகழ்பே
ரறமும்பொன்றுநின்னோடையாவந்தோவந்தோ. (௪0)

தந்தையின்பமெய்தத்தவமேயின்பமாகச்
சிந்தைதெளியுஞானச்செல்வாசெஞ்சேவகனே
முந்தைமரபுக்கெல்லாமுதல்வாஞாலமுழுது
மெந்தையாளவைப்பாரினியார்கோவேயென்றார். (௪௧)

அழுதமைந்தர்தம்மையஞ்சலென்றென்றாற்றி
யெழுதுதொல்லைவினையையாரேவிலக்குகிற்பா
ருழுதவாளியுருவவுங்கண்முன்னர்வீழ்ந்தேன்
பழுதொன்றில்லையிதுவேபயனென்பவத்தாலென்றான். (௪௨)

சரத்தின்சயனம்பஞ்சசயனங்களினுமினிதென்
சிரத்தின்றாழ்வுதீர்ப்பாய்திண்டோள்விசயாவென்ன
வரத்தின்பயனாலுயிரைநிறுத்துமன்னன்மகிழ
வுரத்தினம்பான்முடியையுயரும்வண்ணமுயர்த்தான். (௪௩)

சொரியுங்கண்ணீர்துடைத்துத்துரியோதனனைநோக்கி
வரியுஞ்சாபக்கன்னன்மன்னர்க்குருமேறன்னான்
றெரியுங்காலத்தவனைச்சேனைத்தலைவனாக்கிப்
புரியும்போருநாளைப்புரிமினென்றுபுகன்றான். (௪௪)

கோயிறருமன்செய்யக்கூர்வெஞ்சரமேயணையா
நோயில்யாவுமெய்யினுழையக்காலநோக்கி
வியின்முத்தியில்லையென்னவிருந்தான்விருந்தாய்ச்
சேயின்முதியகேள்வித்தெள்ளாரமுதநுகர்வான். (௪௫)

இன்றுன்மைந்தன்பட்டானென்றுதந்தைக்கிசைப்பான்
சென்றுபரிதிமேலைத்திக்கினெல்லைசேர்ந்தா
னன்றுவருணனன்பாலழுதசெங்கீராழுய்
மன்றவெங்கும்பரந்ததொக்குஞ்செக்கர்வானம். (௪௬)

பாண்டுமன்னன்புதல்வர்படையும்பாடிபுக்க
தாண்டுபொடிபுக்கதரவத்துவசன்படையு
மீண்டுமுதல்வன்பட்டதெந்தைக்குரைமினென்று
தாண்டுமொன்றேர்மைந்தன்சஞ்சயனைவிடுத்தான். (௪௭)

முனியுநகரிற்சென்றுமுகுரானனனுக்குரைப்பக்
கனியுமன்பின்வெள்ளங்கண்ணீராகிச்சொரிய
வினியென்மைந்தர்க்குறுதியில்லையென்றென்றிரங்கிப்
பனிவெண்மதியங்கண்டபங்கயம்போலானான். (௪௮)

மண்மேல்விழுந்தானெழுந்தான்மானம்போனதென்றான்
கண்மேலெற்றியின்றேகண்ணுமிழந்தேனென்றான்
விண்மேலுள்ளோர்செல்வம்வீறுபெற்றதென்றான்
புண்மேலனலுற்றென்னப்புலர்ந்தான்முதல்வன்புதல்வன். (௪௯)

செங்கணரவக்கொடியோன்சேனாபதியாய்நாளை
யிக்குமுனையினிற்பார்யாரென்றெண்ணுமெல்லை
யங்கர்பூபன்யானேயமரார்வானத்தமரக்
கங்கைமைந்தன்சொன்னபரிசேகாப்பனென்றான். (௫௦)

தானுதிகனேநீவெஞ்சமரிற்சேனைத்தலைவ
னானுலராசாய்நிற்பார்யாரென்றவனைவிலக்கி
மீனூர்கொடியோன்றன்னைவென்றவேதக்கொடியோய்
சேனாபதியாகென்றான்நீவாய்நாகக்கொடியோன். (௫௧)

சிலையாசிரியன்வேந்தர்வேந்தன்சேனைதனக்குத்
தலையாய்மன்னர்யாருந்தன்னைவந்துசூழக்
கொலையார்பகழிவெள்ளமார்பந்தோறுங்கோத்துத்
தொலையாவெம்போர்தொலைக்கத்துணிந்தானெவருந்துயின்றார். (௫௨)

வருணன்மைந்தன்பாவெருணற்குரைத்துமீளத்
தருணமைந்தன்விசயஞ்சதமகத்தோன்கேட்ப
விருணிறைந்தகங்குலெங்குமுன்னேயோட
வருணன்பொற்றேர்தூண்டவருக்கன்குணபாலடைந்தான். (௫௩)

ஆ செய்யுள் - ௩,௦௭௮.

பத்தாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

வீட்டுமபருவம்

முற்றுப்பெற்றது.

---

ஏழாவது

# துரோணபருவம்.

## பதினோராம்போர்ச்சருக்கம்.

காயமும்புலனுமந்தக்கரணமுமாகியெல்லாத்
தேயமும்பரந்துநின்றுமீளவுஞ்சித்துஞ்சுத்த
மாயமுமாகிநீங்கிவருபெருஞானானந்த
மாயவெம்பெருமானென்னையாண்டருளாழியானே. (௧)

பகிரதிமைந்தன்சேனாபதியெனப்பத்துநாளு
மிகல்புரியியற்கையெல்லாமியம்பினமினிமேலந்தத்
துகளறுகேள்விவேள்வித்துரோணவாசிரியன்செய்த
புகலருமைந்துநாளைப்பூசலும்புகலலுற்றாம். (௨)

சென்றனன்கங்கைமைந்தன்றினகரன்மைந்தன்செல்வா
னின்றனன்றுரோணன்மைந்தனீடமர்முனைந்துசெய்யான்
வென்றனமினிநாமென்றுமெய்ம்முகில்வண்ணன்சொல்லக்
குன்றனகுவவுத்தோளார்வெங்களங்குறுகினாரே. (௩)

மாதனத்தளகையாளுமன்னனவாணிற்பாக
சாதனக்கடவுளென்னத்தகும்பெருந்தரணிவேந்தன்
சேதனப்படைஞரோடுஞ்சேனையின்காவலான
வேதநற்குருவினோடும்வெங்களம்வந்துசேர்ந்தான். (௪)

மதியிலாவிசும்புஞ்செவ்விமணமிலாமலருந்தெண்ணீர்
நதியிலாநாடுஞ்செம்பொனரம்பிலாநாதயாழு
நிதியிலாவாழ்வுந்தக்கநினைவிலாநெஞ்சும்வேத
விதியிலாமகமும்போன்றவீடுமனிலாதசேனை. (௫)

பகடுதேர்புரவிகாலாள்பலவகைப்பட்டசேனை
சகடமாவியூகமாகவகுத்தனன்றனுநூல்வல்லான்
றிகடருகவுஞ்சயூகமாகவேதிட்டத்துய்மன்
றகடருசாதுரங்கம்யாவையுந்தொகுத்துநின்றான். (௬)

படையுடையிருவர்சேனாபதிகளும்பனிவெண்டிங்கட்
குடையுடைநிருபர்சூழவருதினிக்குழாங்கள்சூழ
நடையுடைத்தடந்தேருந்திநாகரும்பணிக்கும்வண்ணந்
தொடையுடைவாளிமாரிசோனையம்புயலிற்பெய்தார். (௭)

மருத்துவர்மைந்தர்தம்மிலிளவலும்வலியகுது
கருத்துடன்பொருதவென்றமாமனுங்கலந்துதம்மி
லொருத்தரையொருத்தர்வேறலரிதெனவுடன்றுவேக
சாத்தொடுசரங்கள்பாயச்சராசனம்வாங்கினாரே. (அ)

ஒருகணைதொடுத்துப்பாகனுயிர்கவர்ந்துயர்த்தகேது
விருகணைதொடுத்துவீழ்த்தியிரதமாத்தொலையநான்கு
பொருகணைதொடுத்துவஞ்சன்பொருவருமார்பிலாறு
வருகணைதொடுத்துவாகைமிலைந்தனன்வஞ்சமில்லான். (௯)

உருகிணைச்சேற்றினான்றியோடுநெற்குன்றுவான்போற்
சருனியத்தேரினின்றுமிழிந்துகைத்தண்டமேந்த
நகுலனுக்கிளையோன்றனுகருமணிவலயத்தோண்மேன்
மிருதிறற்றண்டுகொண்டேவென்னிடப்பொருதுமீண்டான். (௰)

மதாசலமருடமான்றேர்வாம்பரிவயவர்வெள்ளப்
பதாதியெம்மருங்கும்போதப்பார்த்திவர்கிழவிற்போதப்
பிதாமகனிறந்தானென்றுபேதுறுகிருபன்போந்து
சதாகதிமைந்தனோடுந்தாக்கினன்றபனன்போல்வான். (௧௧)

அரிக்கொடியரியேறன்னானரவவெங்கொடியுமற்று
வெருக்கொள்பேரரவமன்னான்வில்லுமுனற்றுவீழ
வெரிக்கணையேவிச்சூழ்ந்ததரணிபரெதிர்ந்தவேந்தர்
கரிக்குலமிவுளிதிண்டேர்மடியவெங்கணைகடொட்டான்: (௧௨)

பல்லியமுழக்கமன்னர்படப்படப்பரித்தேரோடும்
வில்லியருளைவேந்தன்வென்னிடும்விரைவுகாணாச்
சொல்லியவிற்கைவாயுசுதனுடனுருமேறென்னச்
சல்லியன்முனைந்துவீரசாயகமேவினானே. (௧௩)

தம்முனோடுடன்றுவந்தசல்லியகுமரன்றன்னை
வெம்முடனெதிர்ப்பையாகிலிமைப்பொழுதிகல்செய்கென்று
வெம்முனைகடந்தபொற்றேர்வெஞ்சிலைநகுலன்றோன்றி
யம்முனைகவிந்தமாடவவனொடும்போர்செய்தானே. (௧௪)

மோகரித்தொன்றிரண்டுமூன்றுநாலைந்தம்பேவிப்
பாகனைச்சிலையைப்பொற்றேர்ப்பதாகையைப்பரியைவீழ்த்தி
யாகமுற்றுருவவெய்தானருச்சுனனிளவன்மாறாப்
போகமத்திரத்தார்கோவும்புறந்தந்துபோகலுற்றான். (௧௫)

சையமோரிரண்டுதம்மிற்பொருதெனத்தடந்தேரூந்தி
வெய்யவன்மகனும்வீரவிராடனுமெதிர்ந்தவேலை
வையகக்கம்பமுற்றுமாசுணநடுங்கமேன்மே
லெய்யும்வெங்கணையால்வானத்தெல்லையுமறைந்ததன்றே. (௧௬)

துருபதயாகசேனகிருபனுந்தும்பைசூடி
வருபகதத்தனென்னுமடங்கலேறனையகோவு
மொருபகன்முழுதுந்தங்களுக்கழுமாறுந்தேசம்
பொருபடைவலியுங்காட்டிப்போதகப்பூசல்செய்தார். (௧௭)

துன்றுவெங்கழற்காற்சோமதத்தனுஞ்சூழ்ந்துநின்ற
வன்றிறல்வேந்தர்தாமும்வாளமர்புறந்தந்தோட
வன்றுவீடுமனைவென்றவாண்டகைசிகண்டியென்பா
னின்றுபோர்செய்தவீரமெம்மனோர்க்கியம்பலாமோ. (௧௮)

வேறு.

தேர்த்திரள்பரித்திரள்கரித்திரள்சேனையின்
கோத்திரள்புடைவரக்குடைவரக்கொடிவரப்
பார்த்திவன்மதலையும்பார்த்தன்மாமதலையுந்
தூர்த்தனர்விசும்பையுந்தொடுத்தனதொடைகளால். (௧௯)

மொய்கணைபிற்படமுந்துதேருந்தவும்
பெய்கணைகணையுடன்பின்னிமுன்வீழவு
மெய்கணையபிமனுமிலக்கணகுமரனுங்
கைகணைதரநெடுங்கார்முகம்வாங்கினர். (௨0)

இன்சிலைமதனவேளெனவருங்குமரனவ்
வன்சிலைவில்லிதான்மகிழ்வுறுங்குமரனை
நன்சிலைநடுவறநாணொடுந்துணியவே
தன்சிலைகொண்டுவெஞ்சாயகமேவினான். (௨௧)

அற்றவிற்றுணிகளாலரியையும்பாகையுஞ்
செற்றனன்சென்றனன்றேரொடுந்தேருகக்
கொற்றவர்நூற்றுவர்க்குரியவக்குமரனைப்
பற்றினனுயிரொடும்பாண்டவர்குமரனே. (௨௨)

வீயினால்வென்றபோர்வில்லியைக்கண்ணுதற்
றீயினால்வென்றவன்றிகழ்தருஞ்சிந்தையோன்
காயினன்வார்குழல்கைப்படுத்தெதிருறப்
போயினனவனொடும்பொன்னெடுந்தேரின்மேல். (௨௩)

முந்துவாளபிமனம்மூரிவிற்குமரனை
யுந்துதேர்மீதுகொண்டோடலுமொருபுடைச்
சிந்துபூபதிசெயத்திரதன்வன்செயமுற
வந்துவெங்குனிசிலைவாளியிற்றகையவே. (௨௪)

மடங்கலைவலைவதோர்சிலம்பினால்வலையெனத்
தொடங்கியமன்னவன்றேருளுரந்தொலைந்தபின்
றிடங்கொடோளங்கர்கோன்முதலியதேர்மன்ன
ரடங்கவந்தபிமனுமொருவனோடமர்செய்தார். (௨௫)

வந்தவர்வந்தவர்வாணுதனிலைதொறுஞ்
சிந்துரத்தூளியாற்றிலகமிட்டனனெனக்
கொந்துறுகணைமுனைக்குருதிநீர்மல்கவே
வெந்திறல்வில்லின்வென்கண்டனன்வீரனே. (௨௬)

சென்றதேர்யாவையுந்தன்னொருதேரினால்
வென்றுமாமன்னவன்மகனையுமீதுகொண்
டன்றுபோம்வெஞ்சிலையாண்மைகண்டபிமனை
வன்றிறற்சல்லியன்வந்துமுன்வளையவே. (௨௭)

சித்திரபானுவிற்றிமுற்செல்லுமம்
மத்திராசனைவருகவருகவென்
றத்திரகாவிரண்டவன்முகத்தடசினான்
மித்திரர்செல்வமாம்விசயன்மாமதலையே. (௨௮)

தோளிரண்டினுகைத்துளைபடப்பாகன்மேன்
மீளவுங்கொடியதோர்வீரவேலேவினா
னிளவெங்கதையுடனீள்வரையிழிதரும்
யாளிபோற்சல்லியனிரதம்விட்டிழியவே. (௨௯)

வன்புடனபிமன்மேன்மற்றவன்வருதலு
மன்புடன்கண்டுபோனிலன்மாமதலைபோ
யென்புடன்புயநெரிக்கினமணிமருடமு
முன்புடன்சாயவேதண்டினான்மொத்தினான். (௩0)

தலக்கணேசல்லியன்வீழ்தலுந்தந்தையோ
டலக்கணுற்றடியனேனாண்மையென்றுமெனக்
குலக்கணியானவிற்குமரனின்றயர்தலு
மிலக்கணகுமாரனுந்தனதுதேரேறினான். (௩௧)

தரையில்வீழ்சல்லியன்றன்னையுந்தனதுபே
ரிரதமேலேற்றியவ்விலக்கணகுமாரனுங்
குரிசிலையன்றுயக்கொண்டுபோயினனரோ
கிருதவன்மாவெனுங்கிளர்முடிகிருபனே. (௩௨)

பொரும்பொருமுனைதொறும்புண்ணியன்சேனையிற்
பெரும்பெருந்தரணிபர்பேறுடன்வேறலா
வரும்பெருங்கொடியின்மேலரவவேறெழுதினான்
றிரும்பினன்பல்வகைச்சேனையுந்தானுமே. (௩௩)

வேறு.

தண்டேகொண்டுவீமனெனுஞ்சண்டபவனந்தாக்குதலாற்
றிண்டேரென்னப்பட்டதெல்லாஞ்சிதைகின்றதுகண்டிதயம்வெரீஇப்
பண்டேயுள்ளவோராழித்தேரோடொளித்துப்பரிகளுடன்
கொண்டேயருக்கனவ்வளவிற்குடபான்முந்நீர்குளித்திட்டான். (௩௪)

சென்றகிருபர்புறகாணத்திண்டோளபிமன்முதலான
வென்றிகிருபர்குழுக்கொண்டுவிறலார்சேனைவேந்தருடன்
மன்றல்கமழுந்துழாய்மவுலிமாலுந்தாமும்பாடிமனை
யொன்றியினிதிற்கண்டுயின்றுருநாணுந்திறலுமுடையோரே. (௩௫)

பானாளவுந்துயிலாமற்பாந்தட்டுவசன்றனக்குயிர்கண்
பானார்பலரும்வான்வேந்தரமைச்சர்பலருமிளையோருஞ்
சேனாபதியுஞ்சூழவிருந்தபிமன்கையிற்றிருமைந்தன்
னானுடமரிலகப்பட்டதாழ்வுக்கிரங்கியுளநொந்தார். (௩௬)

தநுவேதத்தின்கேள்விக்குஞ்சதுர்வேதத்தின்வேள்விக்குஞ்
செறுவேயுன்னையல்லதினிச்செய்துமுடிக்கவல்லவர்யார்
மறுவேயனையவுதிட்டிரனைநாளைச்சமரின்மற்றிதற்கோ
ரறுவேயென்னவகப்படுத்திலல்லாற்செற்றமறுதென்றான். (௩௭)

பெற்றோன்றனினுஞ்சதமடங்குவலியோன்வீமன்பின்னிற்கப்
பொற்றேர்விசயன்முன்னிற்கப்பொரும்போர்முனையிற்போருதவி
யற்றோர்போலவில்வலியாலறத்தோன்றன்னையகப்படுத்தன்
மற்றோர்பிறப்பிற்றெரியாதிப்பிறப்பின்முடிக்கமாட்டேமால். (௩௮)

செவ்வாய்வைக்கும்வலம்புரிக்கைத்திருமால்செம்பொற்றேரூர
வெவ்வாய்வாளிவில்விசயன்மெய்மைத்தருமனணிநின்ற
வவ்வாயிமைப்போதனுகாமற்காப்பார்சிலருண்டாமாகி
லிவ்வாய்நாளையகப்படுத்தித்தாலாமென்றானெழின்மறையோன். (௩௯)

திகத்தராசன்முதலாகச்சஞ்சத்தகரிற்சிலமன்ன
ருகத்திற்கடையிற்கனல்போல்வாரொருவர்க்கொருவருரைமுந்திச்
சகத்துக்கொருவனெனும்விசயன்றம்முற்குதவிசெய்யாமன்
மகத்திற்சனிபோல்வலைக்குவம்யாமெனவஞ்சினமும்பலசொன்னார். (௪0)

அருளேவடிவுகொண்டனையோனருகங்கமரிலணுகாம
லொருளேரிரதத்தருச்சுனனையொருநாண்முழுதுந்தகைந்திலமேன்
மருளேகொண்டுகுடிவருந்தமனுநூல்குன்றிவழக்கழியப்
பொருளேவெஃகுமரசரைப்போற்புகுவேம்யாமுநரகென்றார். (௪௧)

மறனிற்சிறந்தபுயவலியால்வரைபோன்றனிலன்மைந்தனெனப்
புறநிற்பானைத்தம்முனிடைப்போகாவண்ணந்தகைந்திலமே
லறனிற்கொண்டதன்மனையாளமளித்தலத்தினழுதிரங்கப்
பிறனிற்றேம்பெரும்பாவிபெறும்பேறெமக்கும்பேறென்றார். (௪௨)

கன்றால்விளவின்கனியுதிர்த்தோன்கடவுந்திண்டேரவனுக
வன்றாட்டடக்கைமாருதியேயாகவமரின்மறித்திலமே
லென்றாநாளைமுனிபோரினெந்நன்றியினுஞ்செய்ந்நன்றி
கொன்றார்தமக்குக்குருகுலத்தார்கோவேயாமுங்கூட்டென்றார். (௪௩)

வெவ்வேறுரைத்தவேந்தர்க்குவேண்டுஞ்சிறப்புச்செய்தகற்றிக்
கைவார்சாபமுனிவரன்றன்கழற்கால்வணங்கியேகுகெனச்
செவ்வாய்மலர்ந்துமானத்தாற்றிறலால்வாழ்வாற்செகத்தொருவ
ரொவ்வாவரசன்றன்கோயிலடைந்தான்விபுதர்க்கொப்பானே. (௪௪)

கங்குற்சிலைநூன்முனிவனுடன்கழற்காலரசன்பணித்தமைகேட்
டங்குத்தரியாதிவன்கரத்தேயருள்கூர்நெஞ்சனகப்படுமென்
றிங்குத்துயில்வார்யாவரையுமிருபாலையத்தினிடந்தோறுஞ்
சங்கக்குரலாற்றுயிலெழுப்பித்தபனன்குணபாற்றான்சேர்ந்தான். (௪௫)

ஆ செய்யுள் - ௩,௧௨௩.

பதினொராம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# பன்னிரண்டாம்போர்ச்சருக்கம்.

---

பொய்யாததவமுனிபின்போயருளித்தாடகைதன்
மெய்யாவிகரென்னவெஞ்சரத்தாலழுத்தியபின்
மையாழிமுகில்வண்ணன்வாங்கியனபூங்கமலக்
கையாலுமொருசாபங்காலாலுமொருசாபம். (௧)

அற்றாபதிகருதியாசாரேனுரைத்தவேலா
மொற்றாலக்கணத்தேயுணர்ந்தமுரசக்கொடியோன்
மற்றாவணைதுறந்தமாயனுக்கும்விசயனுக்குஞ்
சொற்றாபதநெருங்கத்தொடைத்தும்பைபுனைந்தானே. (௨)

கருங்களவின்கனிவண்ணன்கனைகழற்கால்வேந்தரொடும்
பெருங்களஞ்சென்றெய்தியபின்பெறார்கள்வெருக்கொள்ள
விருங்களிறுதேர்பரியாளிருமருங்கும்புடைசூழ
வருங்கனிகொள்வருதினியமண்டலமாவகுத்தானே. (௩)

பின்னிறுத்திமாருதியைப்போனியிற்பலவகையா
மன்னிறுத்தியிருபாலுமருத்துவர்மைந்தரைநிறுத்தி
மின்னிறுத்துநெடுவொளிவிசயனையுங்குமரனையு
முன்னிறுத்திநடுநின்றான்முரசநிறுத்தியகொடியோன். (௪)

இப்பான்மற்றிவர்நிற்பவிரவுரைத்தமொழிப்படியே
தப்பாமற்றிகத்தகுலத்தலைவனுஞ்சஞ்சத்தகருந்
துப்பார்வெஞ்சிலைத்தடக்கைத்துரோணன்முதலனைவோரு
மப்பால்வந்தணிமகரவியூகம்வகுத்தணிந்தாரே. (௫)

காரணிபோற்பொருப்பணிபோற்காற்றணிபோற்களிற்றணியுந்
தேரணியும்பரியணியுந்திரிகத்தகுலபதியு
நாரணகோபாலரெனுநாமபெரும்வாள்விசயன்
காரணமாவறைகூவிக்கடுங்கொடுங்கார்முகம்வளைத்தார். (௬)

ஆர்த்துவருமவர்நிலைகண்டசனிநிகர்மைப்பொழுது
காத்திடுமினெனநின்றகாவலரோடுரைசெய்து
கோத்தருமன்பணித்ததற்பின்கோதண்டமுறவாங்கிப்
பார்த்தனுமன்றவரெதிர்போய்ப்பலவாளிமழைபொழிந்தான். (௭)

தூளியேயண்டமுறத்தூர்த்துமுதலகல்விசும்பை
வாளியேதூர்க்கும்வகைமலைவாங்குசிலைவாங்கி
யாளியேறனையானுமவனிபருங்கவெந்தமுடன்
கூளியேநடமாடக்கொடுஞ்சமரம்விளைக்குங்கால். (௮)

கொடித்தலைவெற்சயத்திரதன்சவுபலன்குண்டலன்முதலா
முடித்தலைவாளடனிருபர்முப்பதினாயிரர்சூழ
விடித்தலைமாமுரசியம்பவிபதாகப்படைசூழக்
கொடித்தலைமான்றடந்தேரான்குனிசிலையின்குருவந்தான். (௯)

வந்தகுருக்குருகுலமாமன்னுடன்போர்புரிவதன்முன்
பந்தமுறப்பாஞ்சாலர்பற்பதினாயிரர்சூழ
முந்தவயப்பணைமுழங்கமுழங்கொலிநீரொலிப்பதுபோ
லந்தமுனிக்கெதிர்நடந்தானவர்சேனாபதியே. (௧௦)

இருவர்பெருஞ்சேனையுமுற்றெதிரெதிராயுதமேந்தி
பொருவரொருவரைவேறற்கொண்டுதவமருடற்றச்
செருவிலரியேறனையான்றிட்டத்துய்மனும்வெருண்டு
பொருசிலைவெங்கணைபொழிந்தான்போர்வேந்தர்பலர்மடிந்தார். (௧௧)

துன்முகனைப்புறங்கண்டுதுன்மருடன்முனைசாய்த்துக்
கன்முகமாங்காந்தாரர்கலிங்கர்கவுசலர்நிடதர்
புன்முகராயிளைத்தோடப்பொருதழித்தான்பொருதழிந்த
மன்முகவெம்பெருஞ்சேனைமறையவன்பாலடைந்தனவே. (௧௨)

மறைவாய்வெஞ்சிலைமுனிவன்வருதினிதன்னிலையழிந்து
குறைவாவந்தமைகண்டுகோதண்டமெதிர்வாங்கித்
துறைவாய்வெங்கனல்போலுந்துருபதன்கைச்சிலைதுணியப்
பிறைவாய்வெங்கணைதொடுத்துப்பிறைமுடியோனெனச்சென்றான். (௧௩)

சத்தியகேதுவின்சாபஞ்சரமொன்றாலிரண்டாக்கிச்
சித்திரவெஞ்சிலையாண்மைச்சிகண்டியையுஞ்சிலையறுத்திட்
டுத்தமோசாமுதலாவுள்ளகொடுந்திறல்வேந்தர்
தத்தமுயிருடன்போகத்தானையெலாமடிவித்தான். (௧௪)

தாண்டியவெம்பரிநகுலசாதேவர்வென்னிட்டார்
பாண்டியனுமுதுகிட்டான்பாஞ்சாலர்புறமிட்டா
ரீண்டியவெங்களத்தவிந்தாரெத்தனையாயிரம்வேந்தர்
தூண்டியவெம்பரிநெடுந்தேர்த்துரோணன்கைத்தொடையாலே. (௧௫)

வேறு.

வடுத்தருவெஞ்சிலீமுகமும்வணக்குகொடுஞ்சராசனமு
மெடுத்துமனங்கதாவுசினமெழுப்பவெழுந்தோர்நொடியி
னடுத்தகைவின்வானவருநடுக்குறுவெம்போர்முனையி
லடுத்தனர்வன்றபோதனனுமடற்றருமன்குமாரனுமே. (௧௬)

அதிர்த்தனசங்கசாலமுதலனைத்துவிதங்கொள்காகளமு
முதிர்த்தனவண்டகோளமுறவொலித்துவின்றுழாமுழுதம்
விதிர்த்தனசெங்கைவாளொடயில்விழித்தனகண்கடியுமிழ
வெதிர்த்தனதங்கள்சேனைகளுமெதிர்ப்படுமைந்தர்போர்பொரவே. (௧௭)

மதித்துமதங்களேழினுமெய்வனப்புறுகொண்டன்மானுவன
கதித்துநெடுங்கைவீசியுடுகணத்தைமுகந்துவாருவன
மிதித்துரகன்பணாமணிகள்விழித்துவெருண்டுலாவுவன
கொதித்திருகண்களாலுமெரிகொளுத்தினகும்பவாரணமே. (௧௮)

வரைக்குலமென்றுகூறிடினவ்வரைக்குவயக்குநேமியில
நிரைக்குநெடும்பதாகையிலசிறத்தகொடிஞ்சியாதியில
வுரைப்படவுந்துபாகரிலவுகைத்ததுரங்கராசியில
விரைத்துவிரைந்துலாவவிலவெனச்செருமண்டுதேர்பலவே. (௧௯)

உகத்தின்முடிந்தநாளலையொடொலித்தெழுசந்தவேலையென
மிகப்புகைகொண்டுவானுலகும்வெடித்திடமண்டுதேயுவென
நகச்சிகரங்கள்சாயவெதிர்நடப்பனசண்டவாயுவென
விகற்செய்துசெம்பராகமிசையெழுப்பினதுங்கவாசிகளே. (௨௦)

விளைத்தனர்தோந்தமாகவமர்மிகைத்தனர்தந்தம்வீரமுட
னுளைத்தனர்சிங்கசாபமெனவுறுக்கினர்சென்றுமேன்முடுகி
வளைத்தனர்கொண்டவார்சிலைகள்வடித்தசரங்களாலுழுது
திளைத்தனர்வென்றிகூரும்வகைசெருக்களமெங்குமாடவரே. (௨௧)

மிசைந்தனர்தும்பைமாலைமுடிமிலைச்சினரின்றுசாறுமென
நகைத்தனர்தங்கடேருமெதிர்கடத்தினர்சண்டவேகமொடு
பகைத்தனராங்கம்யாவுமிசைபடப்புடைகஞ்சுகால்பகழி
புகைத்தனரற்றையாடமரிலுதிட்டிரனுந்துரோணனுமே. (௨௨)

சினத்துமுனைந்தபோரில்வருசிலைக்குருவின்பதாகையற
மனத்திறமுந்துமாதுணியவயத்துடனுந்துபாகன்விழ
வனைத்தருளுஞ்சதாவியிடவடுக்குறகின்றதேரழிய
வினைத்தொடையைத்துருபதியுமிமைப்பொழுதின்கணேவினனே. (௨௩)

தனித்துமலைந்தபோரிலெழுதலத்தாசன்கைவாளிகளி
லனைத்தும்விலக்கநாளுடுவிலறத்துணியுண்டதாகவமுன்
முனிக்குலமென்றுமாதிமறைமுதற்குருவென்றுமேன்மையுற
வினிக்கணையொன்றுமேவுதிலமினிப்புறவஞ்சலேலெனவே. (௨௪)

அறத்தின்மகன்றனன்மையினையழித்துயிரெஞ்சிடாவகைதன்
மறத்தொடுகொண்டுபோவலெனமதித்தெதிர்வந்தசாபமுனி
திறத்தினிவன்கையேவுபலசெய்ததுகண்டுநாணிமெலி
வுறத்தளர்சிந்தையோடுதனதுடற்சமைகொண்டுபோயினனே. (௨௫)

வேறு.

தருமன்மைந்தனுடன்மலைந்துசமரிலஞ்சியோடியுங்
கருமநன்றுபடநினைந்தகலசயோனிபின்னையு
முரண்மிகுந்துடற்றவேகொண்முந்தவோடவேகொலாம்
விரைவுடன்சினங்கடாவவேறொர்தேரிலேறினன். (௨௬)

தங்கண்மன்னனம்முனைத்தனித்துவென்றவின்மையுந்
துங்கவென்றியின்றியேதுரோணனாரழிந்தது
மங்குளங்கனன்றுமீளவண்ணிகொடேரினனதுஞ்
சிங்கமென்னவருகுகின்றசிறுவர்கண்டுசீறியே. (௨௭)

முந்திமுந்திமச்சராசனோடுசேனைமுதல்வனுங்
குந்திபோசனாதியானகுலமகீபர்யாவரும்
வந்தருழவேழமீதுவயமடங்கல்செல்வபோ
லந்தவேதமுனியையோடியக்கணத்தில்வளையவே. (௨௮)

கன்னனாதிசகுனியாதிகலிங்கதேசனாதியா
மன்னனாதியாகவங்குமறையவன்பெரும்படை
தென்னனாதிகுலனாதிதிட்டத்துய்மனோடயி
மன்னனாதியாகவிங்குதிட்டிரன்வருதினி. (௨௯)

நின்றசேனைமன்னர்தாமுநின்றவந்நிலத்திடைச்
சென்றசேனைமன்னர்தாமுமெங்கணுஞ்செருச்செய்தா
ரென்றகூறியெதிருனைத்தல்யாவருக்குமுடிவுறு
தோன்றநூறுசின்னமாவுடைந்ததோரொருடலமே. (௩௰)

வேல்விதத்தும்வாள்விதத்தும்வில்விதத்தும்விடுநெடுங்
கோல்விதத்துமுடிதுணிந்தகொற்றமன்னர்சற்றலார்
நல்விதத்துமிக்ககேள்விகோன்சிலைக்கைமுனிபடைக்
கால்விதத்தாரததாக்கயவிதத்துவயவரே. (௩௧)

குத்துவார்படைக்கலங்கள்கொண்டுமெற்குறிப்பிஞன்
மொத்துவாரிரண்டுதேருமுட்டவிட்டுமொய்ம்பிஞெ
லொத்துவார்களிற்றினின்றுமொருகளிற்றின்முதுகுறத்
தத்துவார்துரங்கமங்கடாரையாகவேறுவார். (௩௨)

கொற்றவாளின்முடியிழந்தகுறையுடம்புவாளுடன்
கற்றசாரியோடுமெக்கணக்கறிந்துபுகழுவா
ரற்றகால்களற்றகைகளாயுதங்களாகவே
யெற்றுவார்படைக்கலனிழந்துநின்றவீரரே. (௩௩)

உங்கள்சேனைகெட்டதென்றுதிட்டிரன்றிறத்துளார்
திங்களன்னகும்பயோனிசேனைதன்னையிகழுவா
ரெங்கள்சேனைகெட்டதுங்களிறைவன்வின்மையாலெனத்
தங்கள்சேனையந்தணன்றளர்ந்ததற்கிரங்குவார். (௩௪)

சொன்னவாறுகுறியுமுள்ளதுரகதந்துணிந்தன
கன்னவாறுசொரிமதக்களிற்றினங்கள்வீழ்ந்தன
பின்னவாறுபட்டனபிறங்குதேர்பதாதிக
ளின்னவாறுபட்டனவெனக்குறித்தியம்பொணு. (௩௫)

இருதளத்துநின்றமன்னரிருவராகவிகலியே
யொருதளத்துமன்னரென்னவொத்துநின்றுடற்றிஞர்
பொருதளத்திணிங்ஙனின்றுபோர்புரிந்தபொழுதிலே
வருதளத்தொடுதெவிஞன்மருத்துவீமன்மைந்தனே. (௩௬)

நிருதகன்னிமகனுநேமிநீலவண்ணன்மருகனுங்
கருதிநெஞ்சழன்றுவந்தகாவன்மன்னர்யாவருஞ்
சுருதியன்னதூமொழித்துரோணன்மேனடக்கவே
பரிதிகண்டபனியெனப்பகைத்தளம்பறந்ததே. (௩௭)

பறந்துபோய்நெடும்பணிப்பதாகையானுடைய்திஞர்
பிறந்துபோய்வளர்ந்தபின்பிறப்புணர்ந்தபெருமனுந்
துறந்துபோயவிதுரன்முன்றுணித்தவில்லென்த்துணிந்
திறந்துபோனமன்னரன்றிநின்றமன்னரெவருமே. (௩௮)

வதிட்டனுந்துதிக்கும்வாய்மைவரிசிலைக்கைம்முனிவனே
டுதிட்டிரன்புரிந்தபோருரைக்கவேயுணர்ந்துளான்
பதிட்டிதம் * பிறந்ததின்றுபாண்டவர்க்குஞாலமென்
றதிட்டமொன்றுமுணர்கலானுமனிலவேகமாயிஞன். (௩௯)

விட்டவிட்டாததுரங்கவேழவாகனத்தொடுந்
தொட்டதொட்டசிலையொடுந்துணிந்துவெங்களத்திடைப்
பட்டபட்டநிருபர்தங்கள்பாடுகோணவெண்ணியோ
முட்டமுட்டவேகுகென்றுதன்படைக்குமுந்திஞன். (௪௦)

முந்தவந்தமன்னனுமுரண்கொள்வாகையரசரும்
வந்தவந்தசேனையும்வகுத்தணிந்தமுனையவே
யந்தவந்தமுனைகடோறுமந்தவந்தவீரர்மெய்
சிந்தவந்துடற்றினன்சிலைத்தடக்கையபிமனே. (௪௧)

---

* பதிட்டிதம்—நிறுத்தப்பட்டது.

செந்திவாளிமழைகளோடுசிலைவளைத்துமுடுகுதே
ருந்திவாரிமேகமென்னவமர்செய்தானுமொருவனே
யந்திவாணமொத்ததக்குருதிநீர்கொளுமெனக்
தந்திவாசிதேர்களோடுடைந்ததென்னிருளையே. (௪௨)

ஏறுதொழிந்துசாபமிற்றுமுற்றுமின்றியே
வேறுதேருமின்றிநின்றுவில்லெடுத்தவேதியன்
கூறுதேருமிட்டிடான்குனித்தவிற்குடைந்துபின்
றூறுதேர்தனைப்புரக்கநோய்தினிற்சமுற்றினன். (௪௩)

முனியுமேனையாலநேரின்முடுகிவந்தநிருபருங்
குனிசிலைக்கையபிமன்வெங்கணைக்குவென்கொடுக்கவே
யினிநமக்குநல்லகாலமென்றுசீறியெய்தினன்
றனிதமிக்கசலநமன்னசதமகன்சகாயனே. (௪௪)

வேறு.

அநிதவளமத்தவாரணமுமுதலமுதமதனைத்திலாழிமிசைவரு
மதகளிறுசுத்தமாகவிவனுமமகபதியெடுத்தகார்முகமுமவ
னெதிர்தரவெடுத்தசாபமிவனுடனிகல்செயநினைக்கயாவருளரென
விதமுறவகுத்தயானையணியுடன்விருதுபகதத்தராசனுதவவே. (௪௫)

இருபதுபதிற்றுநூறுகளிறுளவிவனிறுமிகுத்தவீரர்கடவுவ
தொருபதுபதிற்றுநூறுமழகளிறுவமையெனமிக்கவாகுவலியினன்
முருகனெனவெற்றிசேமிமுகிலெனமுரணவுணருக்குவாழ்வுகெடவுயர்
சுரபதிதனக்குவாழ்வுவரும்வகைசுரருலகளித்ததோழனிவனரோ. (௪௬)

எழிலணிதடக்கைமேருகிரிசிகரிபசிரமலைதக்கமோதியுருமென
மொழியுறவதிர்த்துநீடுபெயகிரிமுறைமுறைநடிக்கவேகமொடுபுகை
பொழிசினமனத்தின்முளவவிரொளிபுனைநுதல்வெயர்க்கவாயுகதியென
விழிவழிநெருப்புவிழவிரைவுடன்விறன்மிகுகளத்திலானபொழுதிலே. (௪௭)

பொருதபுறமிட்டசேனையிவன்வருபொலிவொடுபுறக்கிடாதுதிருகின
வரவினையுயர்த்தகோவுமிளைஞருமவனிபருமொத்துமீளமுடுகினர்
முரசெழுதபொற்பதாகைநிருபனுமுதலமர்செகுத்தவாகையபிமனு
மிருகைமலர்கொட்டியாடியெதிர்கொளவிருபடையுமுற்றபூசல்விளையவே. (௪௮)

நிசிசரனெடுத்தவாதிகயிலையுநிகரலவிதற்கெனுமுன்வருகரி
விசையுடனடத்திவீமனெவனவன்விறன்முடிதுணித்துமீள்வனினியென
வசைபலபிதற்றிவேகமுடன்வரும்வலியபகதத்தன்வாகுகிரிகளி
லொசிதரவிளைத்துமார்புசுழிதரவொருகைகொடுகுத்திவாயுகுமரனே. (௪௯)

கதைகொடுபிலக்கைவீசியெதிர்வருகடகரியினெற்றியோடையணியொடு
புதைபடவடித்துமீளவிசையொடுபுரவியிரதத்தின்மீதுகுதிகொள
விதயமலர்செற்றமுளவிவனவனெதிர்சிலைவளைத்துவாளிநிரைபட
வுதையவுதைபட்டவாளிதனதுகையுயர்கதைபுடைத்துவிழமுனியவே. (௫௰)

ஒருவரையொருத்தர்வேறலரிதெனவொருபடிசெருச்செய்தாலுமினியென
விருவருமெடுத்தசாபமொலிபடவெதிரெதிர்தொடுத்தவாளிநெடுமழை
பொருவருடலத்தின்மூழ்குமுனையுறவுருவுதொழிலற்றுநூலின்முறைமையி
னிருவரும்விலக்கவோடிவிலகினவெதிரெதிர்கடித்துவானமறையவே. (௫௧)

மகரிகைமருப்புநாலுமுளவெனில்வலியகுணதிக்கில்வாரணமுமெதிர்
நிகாலவிதற்குநாமுமுரைசெயினிலையுடையசுப்பிரதிகமிதன்வலி
பகரிலிபமெட்டுநாணுமெதிரெறிபடைகளுணர்வுற்றபோரிலெரிவரு
புகர்முககரக்கபோலமதகரிபொருதொழிலுரைக்கலாகுமளவதோ. (௫௨)

சரிகளையெடுத்துவானினிடையிடைகாநுதிகொடெற்றுநீடுபிறைநிக
ரிருபணைமருப்பினாலுமவரவரெதிரெதிருடைக்குநேமியிரதமு
முரனுடையசித்திரவாலதிகடொருபடிபுடைக்கும்வாசிவிழவிழ
வரவபயமிட்டுவீழநடையபயிலடிகொடுநுகைக்கும்வீரணியுமே. (௫௩)

அமர்செய்பகதத்தனுலுமவன்விடுமருவிமதவெற்பினாலுமணிகெழு
தமபடையினைத்ததாகவிறலொடுதருமனுணர்வுற்றுவேறோர்திசையினி
லிமிர்முரசெற்றுபூசல்புரிதருமிளையவனடத்துதேரின்வலவனை
நிமலனையனைத்துமானவொருவனை நினையினன்மனத்தினேடுபோவியே. (௫௪)

வேறு.

நினைவுற்றபொழுதெழுதுமுரசுற்றகொடிநிருபனியமித்தபடிதரியலார்
முனைமட்கவமர்பொருதுசெயமுற்றியுவகைபெறுமுகிலொத்தவடிவினெடுமால்
புனைவிற்கையடுபகழிதிசைசுற்றுமறையநனிபொழிகொற்றவிசயனுடனே
வினைமுற்றியுயர்தருமனுடனிற்றையரியவமர்விளைவுற்றதெனவுரைசெய்தான். ()

ஒருபத்தொடுறெழொருபதுறழ்பத்தொடுறெழொருபதுடையெட்டிருதருயிர்நீ
தெரிவித்தபகழிகொடுமெடிவித்துவலிமையொடுசிலைவெற்றியுறவமர்செய்தாய்
முரணற்றதிவணினியுன்னுயிரொத்தமையனெடுமுனைபுக்குவிரைவினனுகா
வரையொத்தகளிறுடையபகதத்தனுயிர்கவரவருகிற்றிநொடியிலெனவே. (௫௬)

அரியொத்தபரிகடவிமனமொத்தவிரதமிசையமரர்க்குமுதல்வன்மகனோ
டெரிபற்றிவருமனிலமெனவெற்றிவரிவளையுமிதழ்வைத்தவ்வொருநொடியிலே
கிரிமுற்றுமரிவதொருகிளர்வச்சிரமெனவுதயகிரியுற்றபரிதியெனவே
கரிசுற்றும்வரவிகடகரடக்கைம்மலையில்வருகணைவிக்கிரமனையணுகினான். (௫௭)

அனிலத்தின்மதலையொடுவயிரத்துமலையுமுனையமர்விட்டுமுகிழ்நகைசெயா
வினியிற்றையமரிலரிதெளிதொட்டியெதிர்பொருதலெனமத்தகரியின்மிசையான்
மனமுற்றுமழல்கதுவமொழிமுற்றுமிடிநிகரவலிபட்டசிலையைவளையா
மினலொத்தகணைபலவும்வசையற்றபுகழுடையவிசயற்குமிசையுதவினான். (௫௮)

அவன்விட்டசுடுகணைகள்கொடிமற்கடமுமடுவணறவெட்டியதிதவளவெங்
கவனத்தின்முடுகியடுபரிகொத்தியுடலிவிடுகவசத்தைமறையவுருவிச்
சிவனுக்குமலரிலுறைபிரமற்குமுணர்வரியதிகிரிக்கைவலவனையுமிச்
சவனத்தின்மிகுதுயாமுறுவிக்கவவசமிகுதளர்வுற்றதனுவிசயனே. (௫௯)

உரமிக்கதனதுசிலைகுனிவித்துமதியின்வகிருவமிக்குமடுபகழியால்
வரமிக்கதவளநிறமதவெற்பையெதிர்கடவிவருவெற்றியவனிபதிதன்
காமுற்றசிலைகவசமறவெட்டிவிடுகணைகள்கணைவிட்டுவிலகவவனுஞ்
சரம்விட்டொரயில்விசயனிரதத்தின்வலவன்மிசைதமரத்தினுடனெறியவே. ()

எறிகுற்றவயிலசுரருயிர்செற்றவயிலதனையெதிர்முட்டவிடுபகழியிற்
றறிவித்துமகபதிதன்மகன்முக்கணிறைவனெடுசரியொத்துமுறுவல்புரியா
வெறிமத்தகரடமுகபடமொத்தபுகர்கொண்முகவிகடக்கைம்மலையணியெலா
முறியத்தன்வரிவிதுமிழ்முனைபட்டபகழிமழைமுகில்வற்கமெனமுடுகினான். (௬௧)

அணிகெட்டுமதகரிகள்கரமற்றுவிழமுறியசிரமற்றுவிழவருகுதாழ்
மணியற்றுவிழநெடியருடரற்றுவிழமுழைகொள்வயிறற்றுவிழவுடல்களுந்
துணிபட்டுவிழவிறுசெவியற்றுவிழவலியதொடையற்றுவிழமகரிகைப்
பணிபெற்றபணைகளொடுபதமற்றுவிழவுழுதுபடுவித்தபலபகழியே. (௬௨)

பெயர்பெற்றகரிவயவர்பிணமிக்கவமரினிடைபிறகிட்டுமுறியுமளவிற்
சயசக்ரதரனையிவன்வழிபட்டபொழுதருசழலுக்கிரமுடையதொருவேல்
வயமுற்றசிலைவிசயனுடலத்தினெறிவதுதன்வடிவத்தினுறவுதவினு
னயர்வுற்றவுணர்வினலமெனமுத்திமுதல்வனெனவருகுற்றரதவலவனே. (௬௩)

பருமித்தகளிறுவிடுபகதத்தனெறியுமுதுபகைசெற்றுவருகொடியவேன்
மருமத்தினிடைமுழுகுபொழுதத்திலதுபுதியமணிவற்கமிகுதொடையலாய்
திருமித்தபடிதனதுபுயவெற்பின்மிசையொளிரநிகரற்றகருணைவடிவைக்
கருமத்தின்முதலையிமையவர்சித்தமொடுதொழுதகரையற்றபுகழுரைசெய்தார். ()

இதுநிற்கயமனைநிகர்பகதத்தனுயிர்கவரவிதுபக்குவமெனவிசயனோ
டுதரத்தின்முழுதலகுகுடிவைத்தபுயலுரைசெய்துறுதிக்கண்விடுபகழியோன்
றிதயத்தினுடனருளவுயர்வச்சிரன்மதலைதொழுதிருபொற்கைம் மலர்கொடுகொளா
வதிரத்தனெதிர்களிறுபொரவிட்டகொடியிலவனகலத்தினுருவவிடவே. (௬௫)

பரிதத்தவருமிரதமிசைதத்தவெதிர்முடுகுபகதத்தனுடன்முழுதுநீ
டெரிதத்தியுருவதெனவுருவித்தருகுநிதியிடைதத்தவலிகெழுபுயக்
கிரிதத்தமருடமொடுதலைதத்தவொருசதகிரிதத்திவிழுவதெனவே
கரிதத்தமறியலகைகளடைதத்தியுவகையொடுகெளமுற்றுநடநவிலவே. (௬௬)

வேறு.

பகதத்தனும்பட்டவனூர்ந்தபகடும்பட்டுப்புடைசூழச்
சொக்கிரிபோலணிநின்றசேனைக்களிறும்பட்டமைகண்
டிகலிற்பொழிகார்வெஞ்சிலைக்கையிமையோர்தலைவன்குமரனையும்
புகழ்தற்கரியபாகனையும்புகழாதில்லைப்பூபாலர். (௬௭)

விருதஞ்சங்கும்பல்லியமுமேன்மேலதிரவிற்போரிற்
பொருதின்றிவனைக்கொன்றன்றிப்போகோமென்னப்புடைசூழ்ந்தார்
மருதஞ்சகடும்விழவுதைத்தவலவன்கடவவாயுவெனக்
கருதம்புரவித்தேருருங்கழற்காவலன்மேற்காந்தாரர். (௬௮)

காந்துந்தறுகட்காந்தாரர்கடுவெங்கனல்போற்கண்சிவந்தங்
கேந்துஞ்சிலையாற்கணைமழைபெய்தெழிலிக்கணம்போலெதிருன்றிச்
சாந்தம்புழுகுங்கமழ்வாருச்சகுனிதனயர்தலைப்போரிற்
சேர்ந்தன்றிறந்தார்விடசெயனுஞ்செயனுமெனும்போர்ச்செயவீரர். (௬௯)

சஞ்சத்தகர்வின்குடியேறத்தானையடர்த்தான்பகதத்தன்
விஞ்சைக்கடவுள்சிகரநிகர்வேழத்துடனேவிழப்பொருதான்
வஞ்சச்சகுனிமைந்தரையுமலைந்தான்விசயன்வடிக்கணையா
லெஞ்சப்பொருதநரபாலர்க்கிலக்கேதன்றங்கென்னுநற்கே. (௭௰)

இங்கிப்படிபோருடன்றெழுந்தசகுனியிவன்கைவெரிகணையாற்
பங்கப்பட்டவரசொழியப்படாதவரசர்பலரோடுஞ்
சிங்கத்தனியேறெனச்செம்பொற்றேர்மேனின்றதருமனுடன்
புக்கப்படையாலமர்புரியப்புகுந்தான்மதலைப்புலிபோல்வான். (௭௧)

சோரத்துடனீபொருதடர்த்தருதன்றிவைமெய்துளைத்துருவும்
வீரப்பகழியுனையிவற்ருல்வெல்வேனெனப்போர்வில்வாங்கி
யீரக்கருணைமுகத்தண்ணலெய்தானவற்றுக்கெட்டாமற்
பேரப்போத்தேர்கடவிப்பின்னிட்டவர்க்குமுன்னிட்டான். (எ௨)

உடனேவந்துபொருநிருபரொருவர்க்கொருவருதிட்டிரன்கை
விடநேர்கணையாலேவுண்டுவிளிந்தாரொழிந்தார்வெஞ்சமத்திற்
கடனேதமக்கென்றூர்புகுந்தார்காலைச்செந்தாமரைமலர்ந்த
தடநேரென்னநிறம்பெற்றதப்போதந்தச்சமபூமி. (எ௩)

ஆசாரியனுந்திருமகனுமடல்வேலங்கர்பெருமானுந்
தூசாருரகக்கொடிநெடுந்தேர்த்துரியோதனனுந்தம்பியரும்
வீசாநின்றமாருதம்போன்மேல்வந்தடுத்தவீமனுடன்
கூசாதெதிர்ந்துவெம்பகழிகோத்தார்விசும்பைத்தூர்த்தாரே. (எ௪)

கெடுமோகருடனுரகர்க்குக்கிரிவெஞ்சரபந்தனையரிக
ளடுமோசக்கிரபாணியுடனமருந்துவரோவசுரேசர்
நெடுமேருவின்முக்குவடொடித்தானேயப்புதல்வன்பேருடலிற்
படுமோதொடுத்தபகழிபருப்பதஞ்சேர்மழைபோற்பாறினவே. (எ௫)

பொல்லாவவுணர்வைகியமுப்புரநீறெழவன்றரன்வளைத்த
வில்லாமென்னவலியவிறல்வில்லொன்றெடுத்துவிறல்வீம
னெல்லாமன்னவருமூர்ந்தவெல்லாவிரதங்களுமிமைப்பின்
வல்லானெறிந்தபம்பரம்போற்சுழலும்படிகால்வளைத்தானே. (எ௬)

ஒன்றுமுதலாப்பலபகழியோரோர்தொடையிற்றெடுத்தேவி
யன்றுமுதன்மையுடன்மலைந்தவரசருடலந்தொறுமூட்டி
யின்றுமுதலாயோதனத்திலேறேமென்னும்படியாகக்
கொன்றுமுதற்பின்வருமுரகக்கொடியோன்மனமுங்கொதிப்பித்தான். (எ௭)

கொதித்தானரசனெனவரிவிற்குனித்தாரிளைஞர்குனித்ததுகண்
டதிர்த்தான்வீமன்றன்கணையாலறுத்தான்வில்லுமணிநாணும்
விதித்தான்வரினும்வீமனுடன்விற்போர்புரிதலரிதென்று
மதித்தார்தம்முனிளைத்ததெல்லாமுடிக்குஞ்சமரவரிவில்லார். (எ௮)

நின்றார்நின்றபடிகொடித்தேர்கிருபன்றனையுமிளைஞரையும்
வன்றாள்வரிவிற்குருவினையுமைந்தன்றனையுங்கன்னனையும்
பொன்றாழ்மார்பிற்பலபடைக்கைப்பூபாலரையுங்கொல்லாமற்
கொன்றான்வாயுகுமரன்றன்கோலாகலவெங்கொடுங்கணையால். (எ௯)

இளைத்ததடையப்பெருஞ்சேனையினிநாமொன்றுக்கிடாகோம்
வளைத்தசிலையோடிவனிற்கமாயன்றன்னேடவனிற்கத்
துளைத்தகணையாற்றுரோணன்வவிதொலைத்தோனிற்கமலைத்திவரைத்
திளைத்தலரிதென்றக்களத்திற்பொன்றுவரசர்சென்றூரே. (அ0)

பெரும்பேறத்தின்திருமகவைப்பிடிப்பானென்னிமுடிப்பான்போற்
பொரும்போரரசருடன்வந்தபொற்றேர்முனியும்புறம்போனன்
பரும்பேருரகக்கொடிவேந்தன்பட்டான்மிகவும்பரிபவமென்
றரும்போரரசர்களித்தாடவவருந்தம்பாசறையடைந்தார். (அ௧)

சாரிற்குளிர்ந்துருமுழைந்தசெழுங்கானம்பூத்ததெனக்கவினிற்
பாரிற்பிறங்குசிறந்தவிந்தப்பன்மாநிறத்தபரியனைத்தும்
போரிற்புகுந்துமடிதற்குப்புறந்தந்தஞ்சிப்போவான்போற்
றேரிற்றுரகங்கொண்டோடிக்குடபாலடைந்தான்றினகரனும். (௮௨)

வேறு.

அறந்தந்தமைந்தற்கும்வீமற்கும்விசயற்குமபிமற்குமே
புறந்தந்தவயவீரரெல்லாருமாசன்புறஞ்சார்பிருந்
திறந்தந்தயூகத்துவாராதமன்னர்க்கிரங்காவழா
மறந்தந்தவேழத்துடன்பட்டபகதத்தன்வலிகூறினார். (௮௩)

மன்னர்க்குமன்னன்றன்முன்வைகுமுனிதன்னைமதியாமனி
னென்னாற்கலங்காமனுரைசெய்தவுரையின்றுநிலையானதே
கன்னப்பெயர்க்காளைமறையந்தணர்க்கென்னகட்டாண்மையுண்
டென்னச்சிரித்தான்வணங்காதவர்க்கென்றுமிடியேறனான். (௮௪)

தெருமந்தசிந்தைச்சிலைக்கைக்குருக்கண்சிவப்பேறவே
யுருமுத்திகைக்கக்கொதித்தங்கர்பதியோடுறக்கூறுவான்
சருமந்தவாவன்றிறற்கன்னனேயல்லகழன்மன்னரிற்
றருமன்றன்முன்னிற்கவல்லார்கள்யாரித்தளந்தன்னிலே. (௮௫)

இன்றல்லநாளைக்குமாகின்னவைக்கண்ணிருந்தோர்களிற்
சென்றல்லலுறமோதியறன்மன்னனைத்தங்கள்சிலையாண்மையால்
வென்றல்லதுறுகாதவீரர்க்குவிடைநல்குவிறன்மன்னநீ
நன்றல்லவீரத்திலோரஞ்சொலுவதென்றுநனிசீறினான். (௮௬)

வில்லாண்மையாவர்க்குமின்றென்றெனைப்போலமிகுவஞ்சினஞ்
சொல்லாமலறன்மைந்தனைப்போர்மலைந்துங்கடோளாண்மையால்
வல்லாரினிக்கொண்டெம்மின்கள்வந்தாலிம்மண்ணொன்றுமோ
வல்லாதவுலகிற்குமிருநாலுதிக்கிற்குமவன்வீரனே. (௮௭)

எம்போலவரிவில்லெடுத்தெய்யயார்வல்லரெனும்வீரரும்
வெம்போரில்வந்தாலொரணுவுக்குநில்லாதுவிளிகிற்பரால்
வம்போதியென்பேறுவல்லாண்மைபுனையந்தவில்லாளிகூ
ரம்போடிராமன்கையடலம்புமுவமிக்கிலதிபாவமே. (௮௮)

கோத்தோத்ததோலடையொத்தவளவொத்தசிறகொத்தகுதையொத்தவொன்
றோத்தோத்தமுனையோடுமுனைதத்திவிழுமாறுடன்றேவினான்
றத்தோத்தபுரவித்தடந்தேர்மனென்றேசோதித்ததும்
வித்தோத்ததென்வாளியவன்விட்டவடிவாளிவிளைவொத்ததே. (௮௯)

வன்மைக்குவயவீமன்வின்மைக்குமுகிலூர்திமகனன்றிவே
றின்மைக்குமாவிந்தைகிரிகன்னிகரியென்பரெம்மன்னரும்
வின்மைக்கும்வன்மைக்குமிளையோரையனையாரைமிகவெண்ணலாந்
தன்மைக்குநிலையானதருமற்குநிகர்யார்தனித்தெண்ணவே. (௯0)

அதிர்வார்களதிர்மின்களதிரப்பொரும்போரிலறன்மைந்தனோ
டெதிர்வார்களுண்டாகிலிக்கக்குல்சென்றுவிளிக்காணலா
முதிர்வாய்மையாலென்னபயனென்னவெஞ்சாபமுனியேகினான்
கதிர்வார்முடிக்கோவமாசர்க்குவிடைதந்தகன்றேகினான். (௯௧)

மகதத்தரிற்ருரசஞ்சத்தகரிலுள்ளமகிபாலரும்
பகதத்தனுந்துள்ளியெதிர்வந்தகாந்தாரபதிமைந்தருந்
தகதத்தவெனவெங்களத்தூடுவிழவென்றதனுவேதியுஞ்
சுகதத்தமுறவோடவென்ருேர்களுங்கண்டுயின்ருர்களே. (௬௨)

நிலையானவயவீரருந்தேவராய்நின்றநிலைகண்டுவெண்
கலையார்நிரம்புஞ்செழுந்திங்களேகக்கடைக்கங்குல்வா
யலையாழிமுழுநீலவுறையின்றுமாணிக்கவணியாழிபோ
லுலையாதவொளிகொண்டகதிராயிரத்தோனுமுதயஞ்செய்தான். (௬௩)

ஆக செய்யுள் - ௩,௨௧௬.
பன்னிரண்டாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

# பதின்மூன்ரும்போர்ச்சருக்கம்.

சங்கையிலாவகையமபடராலுயிர்தளர்பொழுதத்தருகே
மங்கையர்சூழவிருந்தழுதுள்ளமயக்கினும்யான்மறவேன்
கங்கையுநான்மறையுந்துளவுங்கமழ்கழலிணையுந்திருமா
லங்கையின்மீதொளிர்சங்கமுநேமியுமஞ்சனமேனியுமே. (௧)

நஞ்சவியாளமுயர்த்தபதாகைநராதிபனேவலினல்
விஞ்சவலுதினிமன்னர்திரண்டனர்விசயனைமேலிடுவோ
னெஞ்சவராலழிவுண்டதபோதனனெருநலினுங்கடுகிப்
பஞ்சவர்கோமுதல்வன்றனைவன்பொடுபடைபொரவெண்ணினனே. (௨)

இலக்கணமைந்தனுமைந்துடைமன்னவனிளைஞருமெம்முனையுங்
கலக்குறவென்றகலிங்கருமுட்படுகாவலர்பற்பலருஞ்
சிலைக்கைவயம்பெறுசிந்துநராதிசெயத்திரதன்சிரமா
நிலக்கணெழுந்துகள்வானிடைசென்றிடநின்றனர்பேரணியே. (௩)

அக்கரம்யாவுமுணர்ந்தசிலைக்குருவாசுரர்சேனைநடுச்
சுக்கிரனர்நிகரென்னவகைப்படுதூசியின்மாமுறையே
யெக்காமும்படைகொண்டெழுசேனையையெயில்கள்வளைப்பனபோற்
சக்கரயூகம்வகுத்திரதத்திடைசயமுறநின்றனனே. (௪)

ஒப்பறுபோரினில்வாகைபுனைந்தவுதிட்டிரனன்றடையார்
தப்பறவெண்ணியவெண்ணமுணர்ந்துதனஞ்சயனுக்குமுரைத்
தப்பறுகோடையில்வெங்கதிரோனெனவாகவநீடளவித்
துப்புறுசிந்தைமகீபர்வருதினிசூழநடந்தனனே. (௫)

ஈரிருதேரினர்மூவகையானையரெண்ணறுமாமிசையோ
ரோரிருநாலுடையயிருபூமியிலுள்ளபதாதருடன்
பாரிருநாலுதிசாமுகமும்படையோடுபரந்துவரும்
பேரிருமானவருதினியின்றிரள்பேசுறலாமளவோ. (௬)

வருபடைதன்னைநிறுத்திவிதம்படமகரவியூகம்வகுத்
தொருபகல்யூகமுமிப்பகலுக்கினியொப்பலவென்றிடவே
குருபதியுந்திருமாலுமதிக்கவணிந்தடுகோளரிபோற்
றருபதன்மைந்தனுநின்றனனந்தாதுந்துபிமீதெழவே. (௭)

இத்தகவாகவணிந்திருசேனையுமெதிர்முனையும்பொழுதின்
முத்தகவெண்குடைமன்னவனேவலின்முற்பகலின்படியே
மத்தகமாமுதலாகியநான்மைவரூதினிதன்னொடுசெஞ்
சத்தகர்வந்தறைகூவவெகுண்டுதனஞ்சயனேகினனே. (௮)

மால்விடுதேர்மிசையான்வரிசாபம்வளைத்ததுமல்விகல்வெங்
கோல்விடுபூசலும்வில்லுடனேபொழிகொண்டல்வியப்பெனலா
மேல்விடுதேர்களும்யானையும்வாசியும்வீரருமெய்யுருவிக்
கால்விடுதாரையெழுஞ்சருகென்னவுடைந்தனர்கையறவே. (௯)

பட்டவரெத்தனையாயிரர்நின்றுபடாமலுயிர்ப்புடன்வெந்
னிட்டவரெத்தனையாயிரரஞ்சலினேருகவென்றமர்வாய்
விட்டவரெத்தனையாயிரர்தங்குலமேன்மையும்வெந்திறலுங்
கெட்டவரெத்தனையாயிரரன்றுகிரீடிதொடுங்கணையால். (௧0)

ஒரொருடம்பினிலாயிரமாயிரமுற்பலவாளிபடத்
தாரைபடும்படிபொழிமுகிலொத்தனர்சமர்முனையிற்றரியார்
மாரனையக்கமெரித்தருள்கண்ணுதல்வடிவமெனும்படியே
பாரொருபாதிசிவந்ததுமேனிபரந்தெழுசோரியினால். (௧௧)

இந்திரன்மாமகனிங்கிவர்தம்முடனிம்முறைபோர்புரியச்
சந்திரசூரியமண்டலமொத்தணிதானையிரண்டுமுனைந்
துந்தியவேலையினுந்திகழுலுடையுந்திரதத்திடைபோ
யந்தணன்மேல்வரிசாபம்வளைத்தனனவர்படைத்தலைவன். (௧௨)

நாலொசோபம்வளைத்தவன்மற்றிவனெய்திடுகைத்தவடிக்
கோலொடுகோன்முனையற்றுவிழத்தொடுகுனிசிலைநாணழியச்
சேலொடுசேல்பொருசிலமெனும்படிதேர்களிரண்டுமெணிக்
காலொடுகோல்பொரவன்றுவசத்தொடுகவசமழித்தனனே. (௧௩)

அருமுனியாதிவசிட்டனுமன்குலவாதியுமந்தணனும்
பெருமுனிதானுமுடற்றியபோர்சிலர்பின்பொருதாருளரோ
வொருமுனியேழ்கடலுங்கரமொன்றிலொடுக்கினன்மன்னனைமேல்
வருமுனிவென்றனன்முனிவருடன்பொரவல்லவர்யார்புவிமேல். (௧௪)

வந்தெதிர்முட்டுதலுந்தனதேரினைமாறுபடத்திருகிச்
சிந்தையுமானமும்வீரமும்விட்டொருசெயலறவென்னிடலுந்
தந்திரநாதனுடைந்தனனென்றிருதானையின்மன்னவரு
மந்தணனுண்மையும்வன்மையும்வின்மையுமன்றுதுதித்தனரே. (௧௫)

வேதியன்விட்டசரங்களினொந்தவெரீஇவருமன்னவனைத்
தாதவிழ்பொற்றொடைமார்பிலணைத்துயர்தருமனுரைத்தருள்வா
னிதவறிற்பினையார்நிலைநிற்பவர்நிருபர்சிகாமணியே
மோதியிளைத்தனையாறுகெனப்பலமுகமன்மொழிந்தனனே. (௧௬)

தன்னெதிர்மாமயிலோனெனநின்றதனஞ்சயன்மாமகவைப்
பொன்னெதிர்பேரொளியருள்வடிவாகியபூபதிவருதியெனு
நின்னெதிர்போரினினிற்பவர்வேறிலர்நேமிவியூகமுநீ
முன்னெதிராவமர்புரிபொழுதன்றிமுரண்குலையாதினியே. (௧௭)

என்னையழைத்துடனென்னுடன்றுவென்னிட்டவில்லாசிரியன்
மன்னவனைத்தொருசக்கரயூகம்வகுத்தெதிர்நின்றனனு
னின்னையளித்ததராபதிதன்னையுநின்னையுமேயொழியப்
பின்னையெடுத்தவிலோடெதிர்சென்றுபிளந்திடவல்லவர்யார். (௧௮)

புல்லுகவென்றனன்மார்புறவன்பொடுபுல்லியிமைப்பொழுதிற்
செல்லுகவென்றனன்வன்சமரத்திடைசென்றுமிகப்பகையைக்
கொல்லுகவென்றனனின்புயமேவருகொற்றவைதன்னருளால்
வெல்லுகவென்றனனன்றுதுரோணனைவென்றபெருந்தகையே. (௧௯)

வேறு.

மூத்ததாதைதன்னேவவிற்கழன்முளரிகைதொழுதானுறச்
சேர்த்தநாணுடைவில்லன்வெய்யதெரிந்தவாளியன்முதுகுறக்
கோத்ததூணியன்வாண்முதற்பலகொற்றமுற்றியபடையினன்
பார்த்தன்மாமகனிரதமீதுயர்பரிதியாமெனவேறினான். (௨௦)

வீரவார்கழல்சழலின்மீதுவிளங்கமார்பினில்வெண்ணிலா
வாரமாலைதுலங்கமாசுணவலயம்வாகுவிலழகெழச்
சேரவானமதிருளகற்றுமிரண்டுசெஞ்சுடரென்னவே
சாரமாமணிகுண்டலங்கள்வயங்கமௌலிதயங்கவே. (௨௧)

இனஞ்செய்கேண்மைகொடுருபதேயனுமெண்ணில்கோடிமகீபருங்
கனஞ்செய்தூரியமெழவெகுண்டெறிகாலெனும்படிகைவரத்
தினஞ்செய்நாதனடாவுதேர்நிகர்தேர்விரைந்துசெலுத்தினான்
றனஞ்சயன்றலைநாண்முயன்றதவம்பலித்தனதன்மையான். (௨௨)

ஓதைகொண்டணிநின்றசக்கரயூகமன்னருரந்தொறுங்
கோதைதங்குகரத்தில்வில்லுதைகூரவாளிகுளிக்கவே
சிதைகொண்கனுமேவலாருயிர்தென்புலத்திடுதென்பெருந்
தாதையுந்தரமெனவிமைப்பிடைதாவுதேரினனேவினான். (௨௩)

அச்சுதப்பெயர்மாதுலன்புகலரியமந்திரமன்பினோ
டுச்சரித்தொருநொடியினிற்பலகோடிபாணமுடற்றினா
னெச்சிரத்தையுமெப்புயத்தையுமிடைதுணித்தவினடையமுன்
வச்சிரத்தவனுரைசெய்சக்கரமாறிலாவணிபாறவே. (௨௪)

மல்லலம்புயவபிமன்வெஞ்சரமழையனைத்தையுமாலெனப்
பல்லவெங்கணைகொடுவிலக்கிமுனைந்துவந்தெதிர்பற்றினான்
வெல்லவந்ததுரோணமாமுனிவிறலழிந்ததுகுருவெனுஞ்
சொல்லழிந்ததுவில்லழிந்ததுதேரழிந்ததுதொடைகளால். (௨௫)

தந்தைவென்னிடுமுன்னர்முப்புரதகனனேநிகர்மகன்மிகச்
சிந்தைகன்றிவெகுண்டுதேரொடுசென்றுகால்வளைசிலையினா
லுந்துகின்றசிலிமுகம்பலபகைமுகங்களினுருவவே
முந்தினானவனப்புமாரியின்மூழ்கினானுடன்முற்றுமே. (௨௬)

கன்னனென்றுலகென்னும்வீரனுமொய்ம்புடன்பலகணைகள்வான்
மின்னெழுந்தொருகோடியென்னநிறுத்திமெய்யுறவீசினா
னன்னவன்பகழிக்குலங்களநேகமோகரமாகையா
லென்னவெஞ்சமமினிநமக்கெனவேறுதேருடனேகினான். (௨௭)

மண்டுகொண்டலின்மிகவதிர்ந்துமருத்தின்மைந்தனுருந்தெழுக்
தண்டுகொண்டுவியூகமாகியசக்கரத்தையுடைத்தலால்
விண்டுகொண்டுமுருக்குமாருதிமீளவந்தனனுமெனக்
கண்டுகொண்டனன்வெஞ்சினக்கனனின்றுகாய்தருகண்ணினான். (௩௮)

வேறு.

நபமுகின்முழங்கியேறியிடிவிடாநெடுங்கிமாயுமவென
வுபரியெழுகின்றசியம்வரவரவுடையுமிபசங்கமோவெனவென
வபிமனொருவன்கையேவினமபடையடையகெளிகின்றதாயபொழுதினில்
விபினமிசைமண்டுதீயொடனிலமும்விரவுமியல்பந்தவீமனணுகிலே. (௩௯)

சருனியுடன்விந்துபூரிமுதலியதரணிபரடங்கவேகிமகபதி
மகன்மகனெடுங்குருதபடியெதிர்வளைமின்வருகந்தவாகன்மதலையை
விகனனுமடங்கல்போலுமிளைஞரும்விருதர்பலருந்துரோணன்மதலையு
மிகன்மலையிலிந்தநாழிகையிலிவரிருவரையும்வென்றுகோறலெளிதரோ. (௪0)

எனவுயர்புயங்ககேதுவுரைசெயவிவனைவிடைகொண்டுவீரனைவரு
முனைபடவணிந்துகாலமுகிலெனமுரசினமுழங்கவோடியெதிரெதிர்
கனலெனவெகுண்டுசேனைபலபலகசரததுரங்கராசியுடன்வர
வனிலகுலமைந்தனனபதியொடுமபிமனெடும்வந்துபோரின்முடுகவே. (௪௧)

விழிமலர்சிவந்துகோல்மதிநுதல்வேயர்வரவிரண்டுதோளுமுறைமுறை
யழகுறவிளங்கமுரனிலவுடனணிமகரகுண்டலர்திவெயிலெழ
முழவினெடுசிங்கநாதமெழவெழமுடுகியெதிர்சென்றுமோதியவரவ
ரெழில்வடிவமெங்கும்வாளியுதையினனிரதமிசைநின்றவாயுமதலையே. (௪௨)

மணிமுடிசிரங்களோடுதறிபடவலயமொடணிந்ததோள்கடறிபட
வணிகழலொடுந்துதாள்கடறிபடவயிலொடுகரங்களானதறிபட
ரணியவிரதங்கள்சாயவிவுளிகணடுவறவளைந்தசாபமுதலிய
துணிபடவழிந்துமீளநடவினர்துவசபுயகன்பதாதிநிருபரே. (௪௩)

விசயன்மகனுந்தன்மீதுவரும்வரும்விருதருடலங்கள்யாவுநிரைநிரை
தசைகுருதியென்புமூளையிவையிவைதரணிமிசைசிந்திவேறுபடவிழ
வசையவிரதங்கடாவிவனைதருமணிசிலையுமம்புமாகிமுனைமுனை
திசைதொறுநடந்துசீரவியெதிர்திமிரபடலங்களானவடையவே. (௪௪)

இருவரெதிரும்பொருமன்முடுகியவிருபடையுநொந்துமீளவவனிபன்
வெருவொடுதளர்ந்துபோனநிருபரைமிகவசைமொழிந்துபோதநகைசெய்து
கருகிமுகநெஞ்சுகோபவனல்கொடுகதுவிநயனங்கள்சேயநிறமுற
வருகுவருசிந்துராசதிலகனெடுபரிமிதமின்சொலாகவுரைசெய்தே. (௪௫)

மறனுடையைசெம்பொன்மேருகிரிநிகர்வலியுடையைவென்றிகூருமரசிய
லறனுடையைபஞ்சபாணனெனவடிவழகுடையைநின்றசேனையரசரி
னிறனுடையைதிங்கள்சூடிவியனதிநிறைபுனல்பரந்துலாவுமவுலியர்
றிறனுடையமன்றனுறுமலரடிதெளிவொடுபணிந்தஞானமுடியினை. (௪௬)

வயவிசயனின்றதேர்கடவிவரும்வலவன்மருகன்றனோடுவரைபுரை
புயமுடையதண்டவீமனுமிவிருபொருநரையுமின்றுபூசல்பொரவரி
நயலிவரகன்றுபோகிவமர்பொரவறவுமெளிதுண்டுபோயறுதலெளி
நயனனருள்கொன்றைமாலைதனையிவர்கவிடிலிரண்டுபோதுமகல்வரே. (௪௭)

அரன்முடியணிந்ததாமமிதுவெனவடிகொடெடுந்துபோகவெருவுவர்
பாவைநிகர்கம்பதாதியவனிபர்பலருடன்வளைந்துகோலியமரிடை
வாமுறவணங்குநாளிலருள்செய்துமணமகிழமங்கைபாகனுதவிய
வாளுடையதன்மடினாலிவ்வபிமனையுயிர்கவர்தலின்றுசாலவுறுதியே. (௪அ)

எனவிவன்மொழிந்தபோதிலவனிவனிணையடிவணங்கியாதுநினைவினி
யுனதுநினைவென்கிடாமலபிமனையுயிர்கவர்வனென்றுதேறவுரைசெய்து
கனகதருமன்றன்மாலையெனவொளிர்கடியிதழியந்தன்மாலைபரமனை
மனனுறவுணர்ந்துநாவினிகழ்தருமறையொடுவளைந்துவிழவெறியவே. (௪௯)

எறிதொடையல்சங்கபாணிமருமகனிகனுமமர்வென்றுமீளுமளவையி
னெறியிடைவிலங்கிவாளகிரியெனநிமிர்வுறவளைந்துகுழவருதனு
மறிவுடனிறைஞ்சியாதிபகவனதணிமுடியலங்கலாருமடையலர்
முறியவினிமன்டுபோரிலமர்செய்துமுடிதுமெனவந்துமீளமுடுகவே. (௫0)

வேறு.

பரிசனை * குமாரன்விடு
மெரிகணைகளான்முடுகு
தரியலர்பதாதிபடை
செரியவருகாலையிலே. (௫௧)

விறலபிமனின்றகள
முறுதுமினியென்றுகனி
குருகனும்விலக்கியது
கறையிதழியந்தொடையே. (௫௨)

இன்றமரின்யாருமுயிர்
பொன்றிடினுமீசனணி
கொன்றைகடவேனெனமுன்
னின்றனனராதிபனே. (௫௩)

முந்துவடிவாளமரின்
வந்தனுருவான்மதலை
சிந்தினைகொலாமிதென
நொந்துசிலகூறினனே. (௫௪)

இந்தமதமாலையிடை
தந்தபிமனுருயிரை
யுந்திவிடவோவெளிது
சிந்துபதிசேவகமே. (௫௫)

வீரருபடவெப்பொழுது
மாரணமர்தொடக்கும்வலி
யூரகதுவசற்கொழிய
வாசரிலெவர்க்குளதோ. (௫௬)

தன்மகனையுஞ்சமரில்
வன்மையொடுகொன்றொழிய
மன்முனைதிரண்டிடினு
மென்மகன்மடிந்திடுமோ. (௫௭)

என்றிதழிமாலைதனை
நின்றுதொழுதன்பினொடு
சென்றனனிடிம்பனைமுன்
வென்றதிறல்வீமனுமே. (௫அ)

மாலைகடவாமல்வரு
பாலனரசர்க்குநடு
வேலைவடவைக்கனலி
போலொளிரநின்றனனே. (௫௯)

யாளியெனநின்றவய
மீளியையவளைந்துபல
வாளிகள்பொழிந்தனர்கள்
கூளிகணடஞ்செயவே. (௬0)

பற்பலருமர்த்தரதர்
விற்பலவணக்கியெதிர்
சொற்பொலிவயப்பகழி
சிற்சிலதொடுத்தார். (௬௧)

பெய்கணையடங்கவிவ
னெய்கணைவிலக்கியிட
மொய்கணையனந்தமவர்
மெய்கணையவுந்தினனே. (௬௨)

கன்னனுமடங்கலபி
மன்னுவுமுடன்றுமுனை
முன்னிரதமுங்கடவி
மன்னமர்தொடங்கினரே. (௬௩)

அங்கர்பதிதேரிலிவன்
வெங்கணைகளுவிட
மங்குலெனகாலுதர
கங்களும்விழுந்தனவே. (௬௪)

* பரிசனன்—வாயு.

தொடுத்தசிலைகோலியவ
னெடுத்தசிலையுங்கொடியு
நடுத்தறியவெட்டிமுனை
கெடுத்தனனனந்தரமே. (சுரு)

இரவிமகனேகுதலு
மரவதுவசன்றுணைவர்
விரவினர்விளைந்துதம
புரவியணிதேர்படவே. (சுசா)

விட்டவிரதத்தினொடு
வட்டவரிவிற்குரிசி
ரொட்டகணைதைக்கவவர்
கெட்டுமுதுகிட்டனரே. (சுஎ)

சுகனிகர்துரோணனொடு
மகன்விசயன்மைந்தனெதிர்
முகனமரில்வந்துபுர
தகனனெனநின்றனரே. (சுஅ)

நிற்குநிலைநின்றுவரி
விற்களும்வளைத்தா
ருற்கைகளினூறுபல
பொற்கணைதொடுத்தார். (சுகூ)

வருகணைவிலக்கியெதிர்
பொருகணைகளாலே
யொருவனொரிமைப்பொழுதி
லிருவரையும்வென்றான். (எ0)

தேர்முகமிழந்துமிரு
கார்முகமிழந்தும்
போர்முகமிழந்துமவர்
நேர்முகமிழந்தார். (எக)

துன்முகனுமன்றமரின்
முன்னமமர்செய்தே
வன்மிகமறிந்ததென
நன்முடிதறிந்தான். (எஉ)

சித்திரவில்வீரனெனு
மத்திரர்பிரானும்
புத்திரரிலாதியுரு
மித்திரனும்வந்தார். (எங)

வந்தபிமனோடமரின்
முந்தியிருவோருஞ்
சிந்துகணைமாரிகளி
னந்தரமறைத்தார். (எச)

அவரவமெடுத்தவிரு
தவருநடுவெட்டா
விவர்கணைவிலக்குவன
கவர்கணைதொடுத்தான். (எரு)

மைந்தனொருவாளியினி
லந்தரமடைந்தா
னொந்துபலவாளியொடு
தந்தைபுறகிட்டான். (எசா)

வென்றபிமன்வாளமரி
னின்றநிலைகண்டே
யொன்றுபடமாவிரதர்
சென்றனருடைந்தே. (எஎ)

கெட்டவர்களின்னரென
முட்டவுரைக்கொண்ணு
பட்டவரநேகரிவன்
விட்டகணையாலே. (எஅ)

வேறு.

முற்சக்கிரயூகம்பிளப்புண்டபின்முன்பினோடும்
பொற்சக்கிரமென்னவெறித்தாமம்பொலிந்துசூழ
விற்சக்கிரமாகமணித்தேரினின்மீதுநிற்பான்
கற்சக்கிரமாகநடுவோர்செங்கதிரோடொத்தான். (எகூ)

வடாதுந்தெனாதும்பராசர்வகுத்தநேமிக்
குடாதுங்குணாதுமவற்றுட்படுகோணநான்கும்
விடாதுந்துதேரின்மிசையெங்கும்விராயபோது
சடாதுங்கமௌலிப்புரசூதனன்றன்னையொத்தான். (அ0)

வின்மைந்துகொண்டுதருவோர்தமைவென்றவீர
னன்மைந்தனுக்குமுதுகிட்டனரென்றநாணி
மன்மைந்தரெண்ணில்பதினாயிரர்வந்துசூழத்
தன்மைந்தனையுமுடனேவினன்சர்ப்பகேது. (அக)

மேல்வந்தவேந்தன்மகனும்பலவேந்துமூழிக்
கால்வந்துவேலைக்கடற்றன்னைக்கலக்குமாபோ
னூல்வந்தகொற்றச்சிலையாசுகநொய்தினேவி
மால்வந்தகைக்குன்றனையானைமுன்வந்துசூழ்ந்தார். (அஉ)

முன்முன்புமுந்திப்பலரேவியமுரிவாளி
தன்முன்புதூவுமலர்போலிருதாளில்வீழ
வின்முன்புடையோனொருவில்லின்விசித்தவம்பாற்
பின்முன்புபட்டபலகோடிபிறங்குசேனை. (அங)

## வேறு.

ஆயுயர்த்தவன்மதலையொடடலுடையாசர்புத்திரனைவருமெழுபரி
வீரவிபொற்கதிர்தெறுதலினிரிதருமிருளெனத்திசைதிசைதொறுமுதுகிட
வூறுடைப்பனைமுழவுறழ்திணிபுயனொருசமர்த்தனுமொருதனியிரதமும்
வீரவிமுற்பொருகளமழகுறும்வகைவிறல்வயப்புலியெனவெதிர்முடுகவே. (அச)

வளையமுத்துதிர்விழியுடைவரிசிலைமதனன்மைத்துனனவனிபர்பலரையு
மிளையெனப்புறமிடவமர்பொருதபினிளையவித்தகனெதிருறவருதலு
முளையெயிற்றினிலவெழவகல்வெளிமுகமுடைப்பதோர்நகைசெய்துகடவின
னுளைவயப்பரியிரதமுமிரதமுமுமானொடொத்தினவுருள்களுமொடியவே. (அரு)

ஏகுருலத்தவனிளவலுநிசெரரிறையளித்தருளிளவலுமிருவரு
நிகரெனத்துணைவிழிகடைசிமிர்தரகெறிகடைப்புருவமுமிகமுரிதர
முடிவிடித்தெனவெழுகடல்களுமிகமொருமொருத்தெனவனிலமுமனிலமு
முகமுடித்தெனமுறைமுறைபலபலவுரையெடுத்தனரொருவரொடொருவரே. ()

ஒருவிமாத்திறுமனனெரியெழவெழகிருபர்விட்டனகசாதுரகமு
மெலிவெழப்பிறகிடவுமின்னொருதனிவிறல்குறித்திரதமுமெதிர்கடவினை
யொலிபடுத்தெதிர்வரின்விரிசுடரெதிருலவுவிட்டிவினுயிரழிகுவையென
வலியுறுத்தினனவனிபன்மதலையைவலியவச்சிரன்மதலைதன்மதலையே. (அஎ)

இவனுமப்பொழுதெதிரொலியெனநனியிகலருச்சுனன்மதலையையுனதயி
ரவனிபர்க்கெதிர்கவருவனொருநொடியளவையிற்பொருதெனமுனையறுமினன்
சிவன்வளைத்தபொன்மலையினும்வலியனசிலைவளைத்தனரிருவருமெறிதரு
பவனன்மைக்கடல்வடவையைமுனிதருபவனமொத்ததுபகளமுழுதுமே. (அஅ)

நாகதத்துடல்கெழுமினசிலகணைதுவசமற்றிடவிரவினசிலகணை
யிருவர்நெற்றியுமெழுதினசிலகணையிருபுயத்திடைசொருகினசிலகணை
யணியொத்தெரிசதுவினசிலகணையகன்முகட்டையுமுருவினசிலகணை
முனிலக்கணகுமாறுமபிமனுமுடுகியிப்படிமுரணமர்புரியவே. (அகூ)

மழைமுகிற்குலநிகர்திருவடிவினன்மருசன்முட்டியுநிலையுமெய்வலிமையு
மழகுறத்தொடுகணைகுருபதிமகனவயவத்தினிலடைவுறமுழுகின
கழல்களற்றனவிருதொடைநழுவினகவசமற்றதுகரமலர்புயமுடன்
முழுதமற்றனவொளிவிடுநவமணிமுகுடமற்றதுமுகிழ்நகைமுகனொடே. (கூ0)

## வேறு.

இலக்கணகுமான்வெங்கானெரித்தவன்குமானேவா
லலக்கணுற்றுவிமாய்ந்தானமரிடையென்றுகேட்டுக்
கலக்கணீர்சொரியநின்றகண்ணிலிகுமரன்வெம்பி
வலக்கணோர்முனிவரோடுமன்னவரோடுஞ்சொல்வான். (கூக)

மன்னவர்மைந்தரோடென்மைந்தனைக்கொன்றமைந்தன்
றன்னையுமிமைப்பிற்கொன்றுசவமுறச்செகுத்திலீரேற்
பின்னையிவ்வரசம்வேண்டேன்பெருமிதவாழ்வும்வேண்டே
னென்னுயிர்தானும்வேண்டேனென்றனனிராசராசன். (கூஉ)

தனித்தனியரசரெல்லாந்தாளிணைபணிந்துபோற்றிப்
பனித்துயிர்பொன்றிவீழப்பார்த்தன்மாமகனையின்னே
குனித்தவின்னிமிராவண்ணங்கொடுஞ்சமர்க்கொன்றிலேமே
லினித்தனுவென்றுபோரிலெடுக்கிலேமிறைவவென்றார். (௯௩)

குன்றவில்லவனையொக்குங்குமரனும்பகைகளாறும்
வென்றவின்முனியுமற்றும்வேந்தராயருகுதொக்கு
நின்றவில்விருதர்யாருநிருபன்மாமதலையாவி
பொன்றவில்வளைத்தோன்றன்னைப்புலிவளைந்தென்னச்சூழ்ந்தார். (௯௪)

போரொருமுகத்தாலன்றிப்பொருப்பொன்றிற்புணரியேழுங்
காரொருமுகமாய்மொண்டுகணக்கறப்பொழியுமாபோற்
றேரொருவனையயாகச்சென்றுதிண்சிலைகள்கோலி
யோரொருவீரர்கோடியாசுகமுடற்றினாரே. (௯௫)

தரணிபரெய்தவெய்தசரங்களைச்சரங்களாலே
முரணறவிலக்கிப்பாதமுடியளவாகவந்தக்
கரணமும்புலனுமெய்யுங்கலங்கியக்கணத்தில்யாரு
மரணமென்றுன்னவல்வில்வளைத்தனன்வளைவிலாதான். (௯௬)

ஆகவந்தனின்முந்தமனுகுலத்தரசன்பட்டான்
கேகயன்குமரன்மாய்ந்தான்கிருபன்வில்லொடிந்துமீண்டான்
மாகதக்குரிசிலோமெகுடவர்த்தனரநேகர்
நாகமுற்றனர்கள்கோடிநரபதிகுமரர்வீழ்ந்தார். (௯௭)

சிலையழிந்தவரநேகர்தேரழிந்தவரநேகர்
தலையழிந்தவரநேகர்தாளழிந்தவரநேகர்
நிலையழிந்தவரநேகர்நெஞ்சழிந்தவரநேகர்
துலையழிந்தவரநேகர்தோளழிந்தவரநேகர். (௯௮)

இனைவருஞ்சகுனிமைந்தரெழுவருந்துணைவருள்ளா
ரனைவருமாவிமாளவமரழிந்தவனும்போனான்
றனைவரும்புரவித்தேர்த்துச்சாதனன்றுணைவரோடு
முனைவருமளவிற்பாலன்முனைவெரீஇமுதுகுதந்தான். (௯௯)

காவலருடைதல்கண்டுகன்னனையரசன்பார்த்துக்
கேவலமல்லவிப்போர்கிரீடிவந்திவனைக்கூடி
னீவலையாகிற்சென்றுநேர்மலைந்தடர்த்தியென்னக்
கோவலன்மருகன்றன்னைக்குறுகினன்கொடையான்மிக்கோன். (௪௦௦)

மன்முரிகுவவுத்திண்டோள்வாசவன்பேரன்றன்னோ
டன்முரியிரவிமைந்தனருஞ்சமர்விளைத்தகாலைச்
சென்முரிந்தென்னவேறுதேர்முரிந்தெடுத்தவாகை
வின்முரிந்துள்ளந்தானுமிகமுரிந்துடைந்துமீண்டான். (௪௦௧)

தேறினான்றேறித்துச்சாதனன்றருஞ்செம்பொற்றேரி
னேறினான்மீளவில்லுமெரிகணைபலவுங்கொண்டு
தூறினானபிமன்செங்கைத்தொடைகளாலெதிர்த்தலஞ்சி
மாறினான்முகமுந்தேரும்வரிவில்லுமழிந்துமன்றே. (௪௦௨)

தூண்டினன்மேலாளொத்துணைபரித்தடந்தேர்தூண்டி
மீண்டனன்காலாளாகிவிளிந்தனன்றெளிந்துமீளத்
தாண்டினபரித்தேர்தேடிச்சாபமுந்தேடிநெஞ்சாற்
பூண்டனன்பொருவான்றன்கைப்பொருகணைப்புயங்கம்போல்வான். (௧௦௩)

விற்குனித்திரவிமைந்தன்விடும்விடுங்கணைகள்பட்டுப்
பற்குனன்மைந்தன்றிண்டேர்ப்பரிகளும்பாகும்பட்டு
முற்குனித்தெய்தவில்லுமுரிந்ததுமுரித்தேரு
நிற்குநன்னிலைமருண்டுநேமியுநெரிந்ததன்றே. (௧௦௪)

தன்னையத்தனயன்செய்ததாழ்வெலாந்தனயன்றன்னைப்
பின்னையத்தந்தைசெய்துபின்னிடாதசைந்துநிற்ப
முன்னையபுரவித்தேருமொய்த்தவெஞ்சிலையுமின்றி
மின்னையொத்திலங்கும்வாளொடவனிமேல்விரைந்துபாய்ந்தான். (௧௦௫)

வாளொடுபரிசையேந்திமண்டலம்பயிற்றியிற்றை
நாளொடுதுறக்கமெய்தநயந்தனனின்றவீரன்
றோளொடுபுரையுஞ்செம்பொன்மேருவைச்சுடரோனுகக்
கோளொடுசூழ்வதென்னச்சுழற்றினன்குமாரரேறே. (௧௦௬)

வேறு.

தேர்போனதுபரிபோனதுசிலைபோனதுசிறுவன்
போர்போனதினிச்சென்றமர்புரிவோமெனநினையாக்
கார்போனவியதிராவிதழ்மடியாவெறிகடல்வாய்
நீர்போலுடன்மொய்த்தார்வெருவுற்றோடியநிருபர். (௧௦௭)

துச்சாதனன்மகன்மன்னர்தொழுந்துச்சனியென்று
நச்சாடரவனையானினிநானேபழிகொள்வே
னிச்சாயகமொன்றாலெனவெய்தானவன்முடியோ
டச்சாயகம்வடிவாள்கொடறுத்தானடலபிமன், (௧௦௮)

துரியோதனன்மகனும்பொருதுச்சாதனன்மகனும்
புரியோதனமுனைவென்றமைபுரிவின்முனிகருதா
வரியோமெனுமறையாலடலம்பாயிரமெய்தான்
வரியோலிகெழுவாரணவவாள்கொண்டுதணித்தான். (௧௦௯)

சொரியுங்கணைமழையேவதுரோணாரியன்வில்லும்
பரியுங்கடவிரதத்தொடுபொரும்பலபலவாய்
முரியும்படிவடிவாள்கொடுமோதாவமர்காதா
விரியுஞ்சுடரெனநின்றனன்விசயன்றிருமகனே. (௧௧௦)

ஒருக்காலழிதோன்றியுருளாழிகொடேர்மே
விருக்கால்வரமுக்கால்வரவெக்காலுமழித்தே
பெருக்காறினைசெய்தொத்தவிர்பிள்ளைப்பிறையனையான்
செருக்கானகைசெய்தான்வரிசிலையாசிரியனையே. (௧௧௧)

முன்னுஞ்சுருதியினுயர்முனிவீரனைமுனியாப்
பின்னும்பனிவரைபோலொருபெருந்தேர்மிசைகொள்ளா
மன்னுஞ்சிலைகுனியாமுனைவடிவாளொடுகையு
மின்னும்பிறைமுகவாளியின்வீழும்படிவிட்டான். (௧௧௨)

பேணுருயிர்பருகும்பசிபெட்பப்பகுவாய்வெங்
கோணுகமுலாவந்தெதிர்கொடுநோவெறிவதுபோற்
பூணார்கடகக்கையொடுபுகர்வாளமுமண்மே
னீணாகர்வியக்கும்படிவிழவீளியுகின்றான். (௧௧௩)

இருதோள்களினொருதோண்முனியிகல்வாளியின்விழவு
மொருதோள்கொடுபொரகிற்பதொர்மதவாரணமொத்தான்
கருதோகையொடளகாபதிதனையோர்கதிபெறமுன்
மருதோரடியிணைசாடியமாயன்றிருமருகன். (௧௧௪)

தன்மாதுலன்முதனாளுரைதருமந்திரமொன்று
லென்மாமணியுருளொன்றினையெறிசக்கரமாக்கிக்
கன்மாரிவிலக்குங்கிரியெனமேல்வருகருதார்
வின்மாரிவிலக்காவதுகொடியாரையும்வீழ்த்தான். (௧௧௫)

ஒருகையினிலுருணேமிகொடோடித்திசைதோறும்
வருகையறவெறிவானுயர்வனமாலியையொத்தா
னிருகையொருவரைமண்ணிலிறைஞ்சாமுடியிறைவன்
பொருகையறவபிமன்பொருபோர்கண்டுபுழுங்கா. (௧௧௬)

வேறு.

ஒருவனம்படைத்தலைவர்களைவரையுமொருகைகொண்டடற்றிகிரியின்விழவெதிர், பொருவதென்கொலிச்சிறுவனொடொருபடிபொழுதுசென்றதெப்பொழுதமர்முடிவது, வெருவருந்திறற்றரணிபர்களிலிவன்விளியவென்றிடத்தகுமவரிலரினி, யருளுடன்சயத்திரதனையழையெனவவனும்வந்துபுக்கனனொருநொடியிலே.

அருகுநின்றகொற்றவர்களுமவரவரரியதிண்டிறற்குமரருமமரிலுன், மருகனும்படப்பொருதனன்மகபதிமகன்மகன்றனைப்பசுபதியருளிய, வுருகெழுங்கதைப்படைகொடுகவருதியுயிரையென்றெடுத்துரைசெயவரசனை, யிருகையுங்குவித்தருளுடன்விடைகொளுமெழில்கொள்சிந்துவுக்கொருதனிமுதல்வனே. (௧௧௮)

உரகவெங்கொடித்தரணிபனலமருமுள்மகிழ்ந்திடக்கதிபலபடவரு
துரகதம்பிணித்தணிகொளிரதமிசைதுவசமுந்தொடுந்தடலுடைவலவனை
விரைவுடன்செலுத்துகவெனவுரைசெய்துவிழிசிவந்துசிற்றிளமதிபுனைதரு
கரகவண்புனற்சடைமுடியவனடிகருதிநின்றெடுத்தனனொருகதையுமே. (௧௧௯)

மறலிதண்டெனக்கொலைபுரிதொழின் மிகவலியதண்டகைக்கொளுமளவினிலிவ
விறல்புனைந்தகைத்திகிரியையொழியமுன்வினையழிந்துபற்றலர்முதுகிடவிழு [ன்
திறல்விளங்குபொற்கதைகொடுவிரைவொடுதிருகிநின்கதைக்கிதுகதையெனவுரை
யுறவிளம்பியப்பொருகளமுழுவதுமுருமெறிந்ததொத்துவகையொடதிரவே. ()

சினவுசிங்கமொத்திருவருமுறைமுறைதிருகிவெஞ்செருப்புரிதலினெழுமொலி
கனல்வனைந்துசுட்டனிலமுமெறிதருகடலதிர்ந்தெனக்கனமதிர்வனவென
மினல்பரந்தெழத்திசைகளின்முடிவுறவெடிகொளண்டபித்தியுமுடைதரவெழ
மனமழன்றுபொற்கிரிநிகர்தமபுயவலிமைகொண்டெற்றினர்வயமலியவே. (௧௨௧)

உரியசிந்துவுக்கரசனதிருபுயமொடியவென்புநெக்குடன்முரிதரவுட
னெரியவெங்குடர்க்கொடிநெடுவலையமுநிமிரவன்றுடைப்புடைமிடைநடையுற
வரியகண்கனற்பொறிபெழமணிமுடியழகழிந்துபொற்பிதிர்படவுதிர்பட
வெரிபெழுஞ்சினத்தொடிதனதொருகையினிலருதண்டமிட்டிகலுடனெறியவே.

வசையறும்புகழ்க்குருகுலதிலகனைமருதிரண்டொடித்தவர்திருமருகனை, விச
யன்மைந்தனைப்பனைமுகின்மிசைவருவிபுதர்தங்குலத்ததிபதிபெயரனை, யசைவில்
வன்றிறற்பகைமுனைநிருபரையடையவென்றகட்டழகுடையபிமனை, யிசைகொள்
சிந்துவக்கரசனுமொருகதையிருகைகொண்டெடுத்திசலுடனெறியவே. (௨௨௩)

கரமிழந்தமற்றொருகரமிசையொருகதைகொள்வெஞ்சினக்களிறனையவனிவ
னிரதமுந்தகர்த்துறுகதியுடன்வருமிவுளியுந்துணித்தெதிர்முனைவலவனை
முரணுடன்புடைத்தணிதுவசமும்விழமுதுருகண்டபிற்சாபமதெனும்வகை
யான்வழங்குபொற்கதையுடனவனியிலவனுமுன்குதித்தடலுடன்முனையவே. ()

பதயுகங்களொத்தியவலிபலகணபணபுயங்கர்பற்பலமுடிசிதறின
வெதிர்கொடண்டமொத்தியவலிதிசைகளிலிபமுகின்றுமெய்ப் பிடியொடுசிதறின
கதியில்வக்ரசித்திரமெனமுறைமுறைகதுவிமண்டலித்தொருபகன்முழுவது
மதிசயம்படப்பொருதனரெதிரெதிரபிமனுஞ்சயத்திரதனுமமரிலே. (௧௨௫)

உலைவிறண்டிணிற்பரிசனன்மதலையுமுவமையின்றெனப்பகழியின்மழைபொழி
சிலையின்வன்றொழிற்றிறலுடைமகபதிசிறுவனுந்தனக்கெதிரிலனினியென
மலையும்வெஞ்சமத்தொருதனிமுதுபுயவலிமைகண்டுபொற்புறுகழலபிமனை
யலகெகெங்கடற்றரணிபரனைவருமமரருந்துதித்தனர்முகடதிரவே. (௧௨௬)

கழுகுபந்தரிட்டனமிசைவிசையொடுகழுதினக்களிட்டனபலகரணமு
மெழுகவந்தமிட்டனபலபவுரிகளிருபுறங்களிட்டனவெதிரழிபடை
யொழுகுசெம்புனற்குருதியின்வருநதியுததியுஞ்சிவப்புறும்வகைபெருகலின்
முழுகியெஞ்சியிட்டனகழியிடையிடைமுகிலின்வெங்குரற்கசரதுரகமே. (௧௨௭)

முறைமையின்றியெத்தரணிபர்களுமெதிர்முடுகவந்துமுற்றெறுதலினவரவர்
பொறையழிந்துகெட்டனவரும்வெருவொடுபுறமிடும்படிக் கொருதனிபொருதபி
னிறைவலம்புரித்தொடைகமழ்புயகிரிநிருபதுங்கன்மைத்துனனுளம்வெருவர
வுறைபெருங்கதைப்படைகொடுவலியுறவமர்புரிந்திளைத்தனனடலபிமனே. ()

இவன்மயங்கிமெய்த்தளர்வுடன்மெலிவுறமிறுதிகண்டிணித்தெறுவதுகடனென
வவனிகொண்டபற்குனன்மதலையையவனருகுவந்தடுத்தணிபுயவலிகொடு [ரு
சிவனையஞ்செழுத்துரைசெய்துதொழுதொருசிகரதண்டம் விட்டெறிதலினெறித
பவனனன்றருக்கினகிரியெனவிசைபடவிழுந்ததப்பருமணிமகுடமே. (௧௨௯)

தலைதுணிந்துதத்திடவிழவிவனொருதனதுதிண்கையிற்கதைகொடுதெரியல
னிலையறிந்துபுக்குரனுறவெறிதலினெரிநெரிந்ததத்தரணிபனுடலமு
மலைமறிந்ததொத்தபிமனதுடலமுமகிதலந்தனிற்றரியறவிழுதலி
னலையெறிந்துமைக்கடல்புரளுவதெனவரவம்விஞ்சியிட்டதுகளமடையவே. ()

வேறு.

மாயனுந்திருமாமன்றனஞ்சயனுந்திருத்தாதைவானோர்க்கெல்லா
நாயனும்பிதாமகன்மற்றொருகோடிநராதிபராகண்பாய்வந்தோர்
சேயனுமபிமனுவாஞ்சயத்திரதன்கைப்படுவான்செயற்கைவெவ்வே
றுபகாளவனிதலத்தவ்விதியைவெல்லும்வகையார்வல்லாரே. (௧௩௧)

சேடன்முடிநெளியவருசெம்பொற்றேரழிவதோவந்தோவந்தோ
கேடகவாளணிவலயக்கிளர்புயத்தோளறுவதோவந்தோவந்தோ
கூடகவெங்கதையொன்றாற்சிந்துபதிகொல்வதோவந்தோவந்தோ
வாடமரிலருகொருவர்வாராமலிருப்பதோவந்தோவந்தோ. (௧௩௨)

கன்னனையுந்தேரழித்தான்கந்தனினும்வலியனேயந்தோவந்தோ
மன்னவரைவருமிருக்கமைந்தனுயிரழிவதேயந்தோவந்தோ
பொன்னுலகோர்வியந்துருகிப்புகழியினான்மலர்பொழிந்தாரந்தோவந்தோ
வன்னநெடுந்துவசனிவற்காயுமிகக்கொடுத்திலனேயந்தோவந்தோ. (௧௩௩)

சரமறுத்தான்வில்லறுத்தான்றேரறுத்தான்கொடியறுத்தான்சமரபூமி
யுரமறுத்தான்முதற்பொருதவுதயதினகரன்மைந்தனுடன்றுசீறிக்
கரமறுத்தானடுப்பொருதகார்முகத்தின்குருவிசயன்காளைதன்னைச்
சிரமறுத்தான்பின்பொருதசயத்திரதனிவன்வீரஞ்செப்பலாமோ. (௧௩௪)

எட்டானைத்தம்பமுடன்சயத்தம்பநாட்டியபேரிறைவன்மைந்தன்
பட்டானென்பதுகேட்டுத்திருகினார்முதுகிட்டுப்பறந்தவீர
ரொட்டாமற்செயிரமரிலுயிரிழந்ததன்புதல்வற்குருகுஞ்சோகம்
விட்டான்வெஞ்சமரமினிவென்றேமென்றுட்கொண்டான்வேந்தர்வேந்தன். ()

ஓரிரண்டுவெயவர்முனைந்துடன்பொருதலுலகியற்கையொருவன்றன்மேற்
போரிரண்டுபுறமும்வளைந்தொருகோடிமுடிவேந்தர்பொருதுகொன்றார்
தேரிரண்டுகிடையாதகுறையன்றேகளத்தவிந்தான்சிறுவனென்றென்
றீரிரண்டுபெயரொழியமற்றுள்ளாரழுதிரங்கியென்பட்டாரே. (௧௩௬)

தாள்விசயம்பெறமுனைந்துசக்கரயூகம்பிளந்துதானேநின்று
வாள்விசயன்றிருமதலைவானோரும்வியந்துரைக்கமாய்ந்தானென்று
வேள்வியினாலுண்மையினாற்றிண்மையினாற்றண்ணளியால்விறலாற்பன்னூற்
கேள்வியினான்மிகுந்தெவர்க்குங்கேளானவுதிட்டிரனுங்கேட்டானன்றே. (௧௩௭)

பிறந்ததினமுதலாகப்பெற்றெடுத்தவிடலையினும்பீடுந்தேசுஞ்
சிறந்தனையென்றுனைக்கொண்டேதெவ்வரைவென்றுலகாளச்சிந்தித்தேனே
மறந்தனையோவெங்களையுமாலையினால்வளைப்புண்டுமெருவார்போரி
லிறந்தனையோவென்கண்ணேயென்னுயிரேயபிமாவின்றென்செய்தாயே. (௧௩௮)

தேனிருக்குநறுமலர்த்தார்ச்சிலைவிசயனிருக்கவரைத்திண்டோள்வீமன்
றானிருக்கமாநகுலசாதேவர்தாமிருக்கத்தமராய்வந்து
வானிருக்கின்முடிவானமரகதமாமலையிருக்கவாழ்வானென்னி
யானிருக்கவினையறியாவிளஞ்சிங்கமிறப்பதேயென்னேயென்னே. (௧௩௯)

நின்றனையேயெனைக்காத்துநீயேகென்றியானுரைப்பநெடுந்தேரூர்ந்து
சென்றனையேயிமைப்பொழுதிற்றிகிரியையுமுடைத்தனையேதெவ்வரோட
வென்றனையேசுயோதனன்றன்மகவுடனேமகவனைத்தும்விடங்காலம்பிற்
கொன்றனையேநின்னாண்மைமீண்டுரைக்கக்கூசினையோகுமாரரேறே. (௧௪௦)

உனக்குதவியொருவரறவொருதனிநின்றமருடற்றியொழிந்தமாற்றந்
தனக்குநிகர்தானானதனஞ்சயனுங்கேட்கினுயிர்தரிக்குமோதா
னெனக்கவனிதரவிருந்ததித்தனையோமகனேயென்றென்றுமாழ்கி
மனக்கவலையுடனழிந்துமணித்தேரின்மிசைவீழ்ந்தான்மன்னர்கோவே. (௧௪௧)

சங்கலாரிடைவளைத்தசக்கரத்தையுடைப்பதற்குத்தமியேனெய்தி
யங்குலாவருமிரதத்தரசரையுந்தொலைத்துன்னையடைப்பான்வந்தேன்
பங்கெலாமரகதமாம்பவளநிறப்பொருப்புதவுபைம்பொற்கொன்றைத்
தொங்கலாற்கோறவித்தசூழ்ச்சியையின்றறிந்திலனேதோன்றலேநான். (௧௪௨)

மின்றுமலிடித்ததெனவீழ்ந்தபொலந்தொடையாலும்விடையோனிந்த
பொன்றூர்வெங்கதையாலுமல்லதபிமனையமரிற்பொரவல்லார்யார்
தன்றன்மையிலிருந்திச்சங்கமுழக்கியவீரசெங்கசாப்
வென்றனையிறந்துபடவின்னமுநானிவ்வுயிர்கொண்டிருக்கின்றேனே. (௧௪௩)

எடுத்தபடையனைத்திறுக்குமெதிரில்லையெனக்கலைகளெல்லாமுன்னை
யடுத்ததுகண்டையாகின்றுருயிர்க்குக்கரைந்துகரைந்தையுற்றேன்யான்
விடுத்தபெருந்திருந்தாரைவிழிகளிப்பப்பகைவென்றுமீளாதென்னைக் [லோ.
கெடுத்தனையேபிழைத்தனையென்றினியொருவர்வந்துரைக்கக் கேளேன்கொல்

என்றென்றுவிமறுக்தன்னினையொருமழுதரற்றவிறந்தோன்வீர
கன்றென்றுதனமிரண்டினரபாலர்பலர்நிரண்டுகவிலாதிற்ப
வன்றென்றுமனமருளுற்றபிமனதேலக்குன்றையடுத்துமேலக்
குன்றென்றுநமொழிப்பின்னையும்போய்த்தனதுதடங்குன்றுசேர்ந்தான். (௧௪௫)

வேறு.

இங்கிலத்தவனிபாலரிவ்வகையிரங்கியேங்கத்
தென்னிலத்தெதிர்ந்துளாரைத்தென்னிலந்தன்னிலேற்றி
யெங்கிலத்திருந்தன்றன்மைக்கெதிரிலாவிசயன்றானு
மங்கிலத்தகன்றுமீண்டானுற்றவாறறிவுறாதான். (௧௪௬)

போனதுவருவதெல்லாம்புரையறவுணருகிற்கு
மானதிர்கனகத்திண்டேர்வலவனுமதுரைமன்னன்
றேனதிர்கடுக்கைமாலையிசெயத்திரதன்றன்னு
லானதுங்குறித்துவானோராசையுங்குறிக்கலுற்றான். (௧௪௭)

மதித்தலுமனத்திற்றோன்றும்வலாரியைக்குறிப்பினாலுன்
கதித்தடந்திண்டேர்மைந்தனுயிரைநீகாத்தியென்னத்
துதித்தவன்றெழுதுமாயச்சூழ்ச்சியான்முனியுமாகி
விதித்தலைப்பட்டகாதற்சுதனுடன்விழுவனென்றான். (௧௪௮)

நெறியிடையிவர்கள்காணநெருப்பினைவளர்த்துத்தானும்
பொறியுறவீழ்ங்காலைப்புவனங்களனைத்துமீன்றே
னறிவுடைவிசயற்கிந்தவந்தணன்றழலில்வீழா
தெறிகணைவரிவில்வீரவிலக்குநீயீண்டையென்றான். (௧௪௯)

என்றலும்விசயனெய்தியெந்தைநீயெரியில்வாளா
பொன்றலுக்கிருந்தாலின்னம்புதல்வரைப்பெறலுமாகு
நன்றலதவத்தின்மிக்கோய்நல்லுயிர்செகுத்தலென்னக்
குன்றினும்வலியதோளான்முனிவனைத்தழுவிக்கொண்டான். (௧௫௦)

வீதலும்பிழைத்தலும்விதிவழியன்றிநம்மா
லாதலுமழிவுமுண்டோநின்னில்வேறறிஞருண்டோ
பூதலந்தன்னில்யாவர்புதல்வரோடிறந்தாரையா
சாதலிங்கியற்கையன்றேன்றருளுடன்றடுத்தகாலை. (௧௫௧)

தன்மகவுடன்றீமுழ்கத்தவிர்ந்தநற்றவனுமிள
வின்மகளுகிகின்றவிசயனைவெருண்டுநோக்கி
யென்மகனிறக்கவென்னைவிருத்தினையாயினம்ம
நின்மகனிறந்தாலென்சொன்மறுதொழிநீயுமென்றான். (௧௫௨)

ஐயெனத்தொழுதுவீரனந்தணனுயிரைமீட்டு
மையெனக்கரியமேனிவலவனுந்தானுந்திண்டே
ரொய்யெனச்செலுத்துகாலைவேலையிலோதைதானும்
பொய்யெனப்பரந்தோரோதைசெவிகளைப்புதைத்ததன்றே. (௧௫௩)

பாசறையனுகுமுன்னம்பாசடைப்பதுமம்போல
மாசறவிளங்குமேனிவண்டுழாயலங்கன்மூர்த்தி
யாசறுவரிவிற்காளையங்கையுமருகுநீங்காத்
தேசுறுபடைகள்யாவுமொழித்தனன்றீமைதீர்ப்பான். (௧௫௪)

அங்கையார்த்தனைத்துளோருமரற்றுபேரரவங்கேட்டுக்
கங்கையம்பழனநாடன்கண்ணனைவணங்கிநோக்கி
யிங்கயலெழுந்தகோடம்யாதெனயாதுஞ்சொல்லான்
பங்கயநெடுங்கண்சேப்பநித்திலம்பரப்பினானே. (௧௫௫)

வன்கணனிளகிச்செங்கண்மாலடிவீழ்ந்துமேன்மே
லென்கணுந்தோளுமார்புமிடனுறத்துடிக்கைமாறு
நின்கணுமருவிசோரநின்றனையின்றுபோரிற்
புன்கணுற்றவர்கண்மற்றென்றுணைவரோபுதல்வர்தாமோ. (௧௫௬)

திருவுளத்துணராதில்லைசெப்புகென்றயர்வான்றன்னை
மருவுறத்தழுவித்திங்கண்மரபினுக்குரியசெல்வா
வெருவுறப்பகையைவென்றவீரனேமருகனென்றென்
றருவரைத்தோளினானுக்குற்றவாறனைத்துஞ்சொன்னான். (௧௫௭)

மைத்துனனுரைத்தமாற்றமைத்துனன்செவிக்குத்தீக்கோ
லொத்திருபுறனும்வேவவுள்ளுறச்சுட்டபோது
புத்திரசோகமென்னுநஞ்சினாற்பொன்றினான்போ
லத்தடந்தேரினின்றுமவனிமேலயர்ந்துவீழ்ந்தான். (௧௫௮)

அயர்ந்தனன்விழுந்தகோவையச்சுதன்பரிவோடேந்திப்
புயந்தழீஇயெடுத்துவாசப்பூசுநீர்தெளித்துமாற்றிப்
பயந்தருகோடிகூடப்பாகலந்தணிந்துமெல்லக்
கயந்தெளிவுற்றதென்னக்கண்மலர்ந்தழுதலுற்றான். (௧௫௯)

போரினிற்றுணைவரோம்புயக்ககேதனனைவென்று
பாரெனக்களித்திநீயேயென்றுளம்பரிவுகூர்ந்தே
னேருனக்கொருவரில்லாய்நீகளம்பட்டாயாகி
லாரினிச்செருக்கவல்லாரைவருக்குரியகோவே. (௧௬௦)

சக்கரம்பிளந்தவாறுந்தரியலருடைந்தவாறுந்
துக்கரமானகொன்றைத்தொடையலால்வளைத்தவாறு
மெய்க்கரந்துணிந்தவாறுமீண்டுருத்தடர்த்தவாறு
முக்கரமுடனென்முன்னேயோடிவந்துரைசெய்யாயோ. (௧௬௧)

பன்னகவரசன்பெற்றபாவைமாமதலைதன்னை
முன்னுறமுனையிற்றோற்றேன்மூர்க்கனேன்முடியாதுண்டோ
வுன்னையுமின்றுதோற்றேனுன்னுடன்றொடர்ந்துவாரா
தின்னமுமிருந்தனையாவென்னுயிர்க்கிறுதியுண்டோ. (௧௬௨)

கரிவறுமிக்குமுன்னேகண்மயிலுணர்த்தியென்னை
யரிமர்க்கோலங்கொள்வானறிவுறுத்துரைக்கவல்லாய்
முறிமர்முருக்கிமீன்டேணித்தனைப்போதுமுன்போ
லெதிர்வரக்காண்கிலேனிங்கில்லையோவென்செய்தாயோ. (௧௬௩)

தந்திரமியாவுமின்றித்தனித்துநீதானேபோர்செய்
தந்தரமணையுமென்றிவ்வகலிடந்துறந்தவையா
மைந்துடனம்மைக்காணமகன்மகன்வருகின்றனென்
றிந்திரனேவவுன்னையிமையவரெதிர்கொண்டாரோ. (௧௬௪)

தொழிந்தெடுத்தவில்லுஞ்செங்கதிர்வாளுமின்றி
யொருதவியும்பெறுமலொழிந்துயிரழிந்தமைந்தா
போரமருடற்றிநீயப்பொன்னகரடைந்தபோதுன்
பேராண்மைகேட்டுப்பிதாமகனென்சொன்னானே. (௧௬௫)

மற்புயக்குன்றிலொன்றுவாளுடன்வீழப்பின்னும்
பொற்புறப்பொருதநீயப்பொன்னுலகடைந்தகாலை
யற்புதப்படைகள்வல்லாயபிமனேயமரருங்
கற்பகக்காவும்வானிற்கங்கையுங்காட்டினாரோ. (௧௬௬)

வளைத்தவின்னிமிராவண்ணம்வாளியான்மாவுந்தேருந்
துளைத்துமுன்காலாளாகத்துரோணனைத்துரந்தவீரா
இளைத்தவெஞ்சமரினொந்துதனஞ்சயன்சிறுவன்மேனி
யிளைத்ததென்றிந்திராணியின்னமுதூட்டினாளோ. (௧௬௭)

வேறு.

என்னமகவான்மகனிரங்கினனரற்ற
முன்னவர்கள்பின்னவர்கண்முறைமுறைபுலம்பச்
சென்னிகரம்வைத்தனைவருங்கலுழிசெய்ய
வன்னபொழுதாரணமளித்தமுனிவந்தான்.. (௧௬௮)

வந்தமுனிமற்றுமுடன்வருமுனிவரோடு
மந்தரபாலர்கண்ணரும்புனறுடைத்துக்
கந்தனிகர்மைந்தரொடுகையறநினைக்கும்
பந்தனையறுக்குமொழிபற்பலபகர்ந்தான். (௧௬௯)

தாயரொடுதந்தையர்கடாரமொடுதனையோர்
தாயதனைவோர்களொடுசுற்றமெனநின்றோர்
மாயையெனும்வல்லபமயக்குறுமயக்கா
லாயவுறவல்லதவரார்முடிவில்யார்யார். (௧௭௦)

வந்துபிறவாதமனையில்லைமுலைமாறித்
தந்தபரியாமலொழிதாயர்களுமில்லை
புந்தியுணர்வற்றவர்புலம்புறுவதல்லா
லிந்தவுலகத்தறிஞர்யாதினுமயங்கார். (௧௭௧)

உம்மையினும்யாருறவுணர்ந்திலமினிப்போ
மம்மையினும்யாவருறவாவரெனவறியே
மிம்மையினிகழ்ந்தவுறவித்தனையிரங்கன்
மும்மையுமுணர்ந்தவருமூதறிவினீரே. (௧௭௨)

ஆற்றிறமதாண்மையழியாமலிருமென்றென்
றேற்றியடைவேசுருதியாவையுமெடுத்துத்
தேற்றியுரைசெய்துதமசேவடியிறைஞ்சிப்
போற்றியமகீபரையிருத்தியவர்போனார். (௧௭௩)

தேற்றினுமகப்பரிவுதேறலரிதென்றே
யாற்றவரிதாதலினருச்சுனனராற்றா
மாற்றரியபேரழல்வளர்த்தியெனவல்லே
யேற்றதுணராதுதனதிளவலொடுரைத்தான். (௧௭௪)

மத்திரைமகன்கனல்வளர்க்கவதனாடே
மித்திரரும்யாவரும்விலக்கவும்விலங்கான்
சித்திரவில்லோடுயிர்செகுப்பனெனநின்றான்
புத்திரரிலாவிடர்பொறுத்திடலுமாமோ. (௧௭௫)

அன்பொடுதுழாய்முதல்வனப்பொழுதழைக்க
முன்புதழன்மூழ்கலொழிமுனிவிரைவின்வாரா
நின்புதல்வனோடெரியினீபுகுதனெறியோ
வென்புதல்வனோடெனையிறப்பதுதவிர்த்தோய். (௧௭௬)

வழிப்படவழக்கின்வழிவருகவெனமுனிவன்
மொழிப்படிபொறித்தழலின்மூழ்குதொழின்மாறி
விழிப்புனலின்மூழ்கிமனம்வெந்துதளர்வுறுவோன்
பழிப்படுசுரத்தின்முளிபாதவமதானான். (௧௭௭)

காமர்பிறையன்னசிறுகாலைதனைவாளா
வேமமுறுவெஞ்சமரிலேவினர்களென்று
மாமுரசணிந்தகொடிமன்னனையும்வண்டார்
வீமனையுநின்றவிளையோரையும்வெகுண்டான். (௧௭௮)

சிந்துபதியாகியசெயத்திரதனைத்தே
ருந்தமரினானையுருமேறெனவுடற்று
வந்திபடுமவ்வளவினாவிகவரேனேல்
வெந்தழலின்வீழ்வனிதுவேதமொழியென்றான். (௧௭௯)

இன்றபிமன்வாளமரிலின்னுயிரிழக்கக்
கொன்றவனைநாளையுயிர்கோறல்புரியேனேன்
மன்றிலொருசார்புறவழக்கறவுரைக்கும்
புன்றொழிலர்வீழ்நரகுபுக்குழலுவேனே. (௧௮௦)

மோதமரினென்மகன்முடித்தலைதுணித்த
பாதகனைநாளெதிர்படப்பொருதிலேனேற்
றாதையுடனேமொழிதகாதனபிதற்றும்
பேதைமகனெய்துநெறிபெற்றுடையனாவேன். (௧௮௧)

சேயனையவென்மதலைபொன்றவமர்செய்தோன்
மாயமுனடர்த்துவயவாகைபுனையேனேற்
றாயர்பசிகண்டுகனிதன்பசிதணிக்கு
நாயனையபுல்லருறுநரகிலுறுவேனே. (௧௮௨)

வஞ்சனையிலென்மகனையெஞ்சமுன்மலைந்தோ
னெஞ்சமெரியுண்ணவமர்நேர்பொருதிலேனேற்
றஞ்செனவடைந்தவர்தமக்கிடர்கிளைக்கு
நஞ்சனையபாதகர்நடக்குநெறிசேர்வேன். (௧௮௩)

வினையிலென்மகன்றனுடல்வேறுசெய்வித்தோனைக்
குனிசிலையினுனையுயிர்கோறல்புரியேனேன்
மனைவியுயிர்வியநன்மகன்மனைவிகையாற்
றினையளவுமோர்பொழுதுசீவித்தவனாவேன். (௧௮௪)

இன்னணமிருந்தவர்கள்யாவருநடுங்க
மன்னவையிலன்றுபலவஞ்சினமுரைக்கச்
சொன்னவுரையானகனல்சுட்டசெவியோடும்
பின்னையறன்மைந்தனெடுமாலினொடுபேசும். (௧௮௫)

வேறு.

வடிசுடர்வேலினான்மொழிந்தவஞ்சினப்
படிசயத்திரதனைப்படுத்தல்கூடுமோ
பொடியனவிவன்புயிற்புகுந்துகால்வரு
மிடிபொருமாவெனவிறந்ததின்னமே. (௧௮௬)

முப்பதுகடிகையின்மூரண்டுமொய்ம்பனைத்
தப்பறக்கொல்லுவேனென்றுசாற்றுமா
லப்பெருஞ்சேனையிலவனையுள்ளுறத்
துப்புறவணிக்கிடிற்றுன்னலாகுமோ. (௧௮௭)

எஞ்சின்மற்றென்செய்வேனென்னுமெல்லையி
னஞ்சலென்றறன்மகனவலமாற்றினான்
கஞ்சவான்பொய்கையிற்கராவின்வாய்ப்படு
குஞ்சரந்தனக்கருள்கொண்டல்மேனியான். (௧௮௮)

இந்திரன்காக்கினுமீசன்காக்கினுஞ்
சிந்துவின்றலைவனைத்தேவர்காக்கினுஞ்
சந்தனிற்சிறந்தசின்கனிட்டனையே
மைந்துறப்பொருதவன்மகுடங்கொள்ளுமே. (௧௮௯)

வெயிலெழுவதன்முனிவ்விசயன்றன்னெடுங்
கயிலையம்பொருப்பனைக்கண்டுமீளவுந்
துயிலுணர்ந்திடும்படிதோன்றுவோமெனு
வயிலணியாழியானவனொடேகினான். (௧௯0)

ஏகியநெறியிடையினைத்துவாசவற்
காயிருமான்மெய்யயர்ந்துவீழ்தலும்
போகியினறிதுயில்புரியுநான்மறை
யோகியங்கையினணைத்துயக்கமாற்றியே. (௧௯௧)

உண்டிலையடிசிலுமுண்ணுந்தீம்புனல்
கொண்டிலைபசிக்கனல்கொளுந்திவீழ்ந்தனை
மண்டிலவேலினாய்மகவினன்பினாற்
கண்டிலையுலகியல்காட்டக்காட்டவே. (௧௯௨)

மாங்கனிவாழையின்கனிவருக்கையின்
றீங்கனிகன்னலிற்செய்தமாவுள
வேங்கனற்பசியுநின்விடாயுமாறவே
யீங்கிலிதருந்துதியேந்தலென்னவே. (௧௯௩)

சரிந்தவர்சரிவறத்தாங்குநாயகன்
பரிந்திவையுரைத்தலும்பாவைபங்கன்மேற்
புரிந்திலனின்னமும்பூசையென்றனன்
வரிந்தவெஞ்சிலைக்குமண்மதித்தவீரனே. (௧௯௪)

மருவருகானகமலரினுலெமைப்
பொருவருபூசனைபுரிதியையநீ
யிருவருமொருவரேயென்பதின்றுபோ
யருவரையவனடியடைந்துகாண்டியே. (௧௯௫)

என்றரியியம்பலுமிருமருங்கினு
நின்றநன்மலர்கொய்துநிகரில்கேள்வியான்
மன்றலந்துழாய்முடிமாயன்மேன்மன
மொன்றியேசிவாகமவுரையிற்சாத்தினன். (௧௯௬)

சாத்தினன்றொழுதுபின்றலைவன்றாண்மலர்த்
தீர்த்தமுங்கனிகளுந்தெவிட்டவுண்டுதென்
காத்திரந்தேறினன்கருத்துந்தேறினன்
பார்த்தன்முற்றவப்பயன்பலித்தவாறரோ. (௧௯௭)

போயருநெறியிடைப்புள்ளின்வேந்தனைத்
தூயவனினைத்தலுமவனுந்தோன்றினன்
மாயனைத்தோளினும்வலாரிமைந்தனைச்
சேயதன்கரத்தினுஞ்சேரவேந்தினன். (௧௯௮)

நீலமுற்றியமலையிரண்டொடொன்றுபொற்
சீலமுற்றியமலைசெல்வதென்னவே
யாலமுற்றியகளத்தையன்வெள்ளியங்
கோலமுற்றியமலைகுறுகினனரோ. (௧௯௯)

மாற்றினல்விளங்குபொன்வடிவன்வெஞ்சிறைக்
காற்றினல்விசைபெறக்கழன்றுபோயின
வாற்றினலறம்புரியம்மையோடொரு
கூற்றினன்வரைபடிகொண்டலேழுமே. (௨௦௦)

வரிந்தபைங்கனைகழல்வயினதேயனை
விரிந்தவெண்கிரியரமாதர்மீதுகண்
டெரிந்திடுவச்சிரனிந்தமால்வரைக்
கரிந்திலன்சிறகெனவையமெய்தினர். (௨௦௧)

நிறைமதிக்கரெனசிறந்தவெள்ளியம்
பொறைமலைதிசைதொறும்பொழியும்வாணிலா
நறைமலரிதழிசேர்நாதன்வார்சடைப்
பிறைமதிநிலவினும்பிறங்கவிசுமால். (௨௦௨)

கீரறுதருக்கருந்தழைக்கின்றமுன்
னாதன்முதலியோர்நவிற்றுகாதயாழ்
பாரதவமர்புரிபச்சைமாமுனி
லாரர்விடாயையவந்தாற்றுகின்றதால். (௨௦௩)

சங்கரன்மணிவரைச்சாரன்மாருதக்
திங்கணிலவுமிழ்செக்கர்வேணிமேற்
கொங்கவிழ்செழுமலர்க்கொன்றைவாசமுங்
கங்கைநுண்டுவலையுங்கலந்துவீசுமால். (௨௦௪)

அங்குளவிடாகத்தநேகமாயிரம்
பொங்கழலுமிழ்விழிப்புயங்கமாமணி
யெங்கணுமிருளறவிலங்குசோதியாற்
றங்குளும்பகலவன்கரங்கள்காட்டுமால். (௨௦௫)

செந்திருமடமயில்கேள்வன்சென்றுசெவ்
வந்திவானிறத்தினனருள்செய்வாய்மையா
னந்தியுள்விடுத்திடகான்றனோடுதன்
புந்தியின்மகிழ்ந்தமந்திரத்துட்போயினான். (௨௦௬)

புரகலையாவெரிபுராரிதன்முன
கரனுநோரணனுமியன்பினுற்
சரணபங்கயமுறத்தாழ்ந்துபன்முறை
காணுறமகிழ்ந்திதுகழறன்மேயினார். (௨௦௭)

பொங்கரவெயின்மணிப்பூணும்பேணுசீற்
றங்கரகமுமுவந்தணியுமேனியாய்
சங்கரமேருவெஞ்சாபம்வாங்கிய
செங்கரசிவசிவதேவதேவனே. (௨௦௮)

விண்ணிடைத்திரிபுரம்வெந்துநீறெழப்
பண்ணுடைச்செந்தழல்பரப்புமரலா
வெண்ணுடைக்காமனையெரித்தபேரழற்
கண்ணுடைக்கடவுளேகாலகாலனே. (௨௦௯)

தருவதுமுயிரெலாங்காக்குந்தன்மையு
முருவறவொழித்தலுமுன்றனுடலே
கருவாரதொழிந்தவர்கருத்திற்கண்டுநே
ரொருவனேயெம்மனோர்க்குரைக்கற்பாலையோ. (௨௧௦)

சித்தனேவிமலனேநிகழ்கின்றமனே
யத்தனேயடியவர்க்கெளியவள்ளலே
பித்தனேயாதியந்தங்கள்பேசொணா
முத்தனேயுயிர்தொறுமுலாயமுன்பனே. (௨௧௧)

என்றுபற்பலவுரையெடுத்துக்கூறியே
நின்றனைநெக்குநெக்குருகிநேயமோ
டொன்றுகண்ணருவிகளுகுத்தனெக்கியே
யன்றுமாபதியவர்க்கருள்செய்தானரோ. (௨௧௨)

கண்ணன்மேலணிமலரனைத்துங்காயெரி
வண்ணன்மேற்காண்டனுமகிழ்ந்துமேதினி
யுண்ணுமாதவன்சிவனுருவமென்றுணர்ந்
தண்ணலுமுடல்புளகரும்பினனரோ. (௨௧௩.)

இமையநல்வரையினிநின்றகன்னிகை
யுமையவள்கணவனெவ்வுயிர்க்குநாயகன்
சமைவுறத்துதித்திடுமடியர்தம்முக
மமைவுறுதிருவுளத்தருளினோக்கியே. (௨௧௪)

வேண்டுவதென்னெனவிண்டுதாழ்ந்தெழீஇப்
பூண்டருள்கருணையம்புனிதவிங்கிவ
ணுண்டருள்படைகளாலவுணர்க்காய்ந்தன
னீண்டுநல்குதிவிறலெய்தும்வண்ணமே. (௨௧௫)

தானவர்ப்பொருபடைகொண்டுதாரணி
மானவர்ப்பொருவதுவழக்கன்றாதலாற்
கூனல்விற்கணையொடுகுறைவுறாததோர்
தூநிறத்தடமருள்கென்றுசொற்றனன். (௨௧௬)

வேறு.

ஆயிடைநின்றகிரீடியைமுக்கணனங்கொருபொய்கையிலே
போயிடைமூழ்கெனவப்புனலூடோர்புயங்கமெழுந்ததன்
வாயிடைவந்தனன்மாணுருவாயொருமாமுனியம்முனியச்
சேயிடைநீரிலெடுத்தனன்மற்றொருசிலையுடன்வாளியுமே. (௨௧௭)

முப்புரநீறெழுநாளினியற்றியமுட்டியுநன்னிலையு
மப்புரசூதனனேவலினந்தணனமரர்பிரான்மதலைக்
கோப்புறவோடுபயிற்றியிதங்கொடுருத்திரமாமறையுஞ்
செப்பினனுலவைபெற்றனன்வென்றுசெயந்திரதற்றெறுவான். (௨௧௮)

யாதொருபோதுநினைத்தனையவ்வழியெய்துமுனக்கிவையென்
றோதியநேகவரங்கள்கொடுத்தபினுமையொருகூறுடையோன்
பூதலமாதிடர்தீரவருஞ்சமர்புரிதொழின்முற்றியபின்
சீதரநின்பதமேவுகவென்றருள்செய்துவிடுத்தனனே. (௨௧௯)

எண்ணியகாரியமெய்தியிறைஞ்சியவிந்திரன்மாமகனுந்
திண்ணியநேமிவலம்புரிவாள்கதைசிலையுடைநாயகனும்
புண்ணியன்மால்வரைநின்றுரகாரிபுயங்களும்வன்கரமு
நண்ணியகாலையில்வெள்ளியெழுந்ததுஞாயிறெழுந்திசையே. (௨௨௦)

இங்கிவர்மூவருமேகினர்மீளுமுனெறிமுரசக்கொடியோ
னங்குரையாடியதுரைசெயின்மண்மிசையார்வியவாதொழிவார்
பங்குனனோதியவஞ்சினமும்பசுபதியிடையேகியதங்
கங்குலினேவினனுரைசெய்கவென்றுகடோற்கசமீளியையே. (௨௨௧)

மற்றவன்முந்துறுதந்தையைவந்துவணங்கிமுன்வஞ்சனையிற்
செற்றவர்தம்முடனுற்றதுசொல்வதுசேவகமோவறிவோ
கொற்றவர்மாமுடிகமழ்கழலாய்வலிகூர்திறனுஞ்செயலு
மற்றவர்போலவுரைப்பதென்னென்றுளழன்றுபுகன்றனனே. (௨௨௨)

இறணியாமனுரைத்தனைமாருதிசிறுவனெனும்படிநீ
மறநெறியன்றுவயிர்த்தவர்சொல்வதுவஞ்சனையோவிரகோ
வறநெறியேபொருதல்லதுவெல்லுதலாண்மைகொலோவழகோ
விறனெறியாவதுபொய்யிலதென்றனன்மெய்ம்மையுணர்ந்திடுவோன். (௨௨௩)

நிருதனைத்துவணங்கிணங்கமழ்நீளிலவேலிறைவெய்
கருதலர்துற்றியபாசறையன்றேர்கணைப்பொழுதிற்புகுதா
வொருதனிலக்கணமைந்தனிறந்தனனென்றமுதுள்ளழியும்
விருதுடைவித்தகன்வாயிலினின்றுவிளித்தனனேருரையே. (௨௨௪)

எதிரெதிர்கொற்றவன்வாயிலினின்றவர்யாரெனவெய்துதலு
மதிர்முரசக்கொடியோனரவக்கொடியரசனிடைப்பகர்வான்
முதிரவுரைத்ததொர்மொழியுளதச்சொன்மொழிந்திடவந்தனன்யா
னெதிரறுவெற்றியரிக்கொடியோன்மகனென்றனன்விக்கிரமனே. (௨௨௫)

அம்மொழியிருமேறெனநீடவையாசர்செவிப்படவோர்
செம்மொழியற்றவன்மொழிவழிசென்றொருசிறிதுமதித்தருளா
னும்மொழிவிட்டொருமெய்ம்மொழிகேளெனநோதருநெஞ்சினனும்
வெம்மொழிவித்தகவெம்மொழிநுந்தைதன்மெய்ம்மொழியென்றனனே. (௨௨௬)

தன்றிருமைந்தனைமௌலிதுணித்தசயத்திரதன்றலைவாள்
வென்றிகொள்காவலர்காவன்மிகுப்பினும்வெயிலவன்வீழ்வதன்முன்
கொன்றிடுவேனதுதப்பினருங்கனலூடுகுதித்திடுவே
னென்றுமொழிந்தரன்வாழ்கயிலாயமுமெய்தினன்வில்விசயன். (௨௨௭)

வஞ்சனையாலமரிற்பகைதன்னைமலைப்பதுபாதகமென்
றஞ்சினனுதலினியறியும்படியையன்விடுத்தனனு
வெஞ்சினனுனையுன்மைத்துனனென்றுகொளென்றனன்வன்றிறல்கூர்
நெஞ்சினில்வேறொருசஞ்சலமற்றநிசாசரன்மாமருகன். (௨௨௮)

வேறு.

மன்மைந்தர்பலரொடும்போய்மறித்தொருவர்மீளாமன்மலைந்துவீழ
வென்மைந்தனிறந்திடவும்யாதொன்றும்புகலாமலிருக்கின்றேன்யான்
றன்மைந்தனிறந்தனனுந்தான்றழலின்மூழ்குவனுஞ்சபதங்கூறி
வின்மைந்தின்மிகுந்தவருக்கழுதிரங்கியாற்றுவதுவீரந்தானே. (௨௨௯)

பயத்திரவினைசெய்யரன்பருப்பதம்புக்கவன்கொடுத்தபடையும்வாங்கி
வயத்திரதமால்கடவவந்தெதிர்தோன்றுவனுநின்மகரமோதுங்
கயத்திரவிழுவதன்முன்கையறுதன்புதல்வனைப்போர்க்களத்தின்மாளச்
சயத்திரதன்கொடுக்கணையாற்றுன்படுதலுறுதியெனச்சாற்றுவாயே. (௨௩0)

என்னினும்பார்த்தனுக்குரியன்சிலைத்தொழிலிற்சிலைக்குருவாயெவரும்போற்று
மன்னினுந்தான்மிகவலியன்றண்டெடுத்தாலுந்தையினும்வலியன்சால
வன்னிலுந்தோளுரனுடையன்மதியாமலிப்படிநீயுரைக்கலாமோ
தன்னிலும்போர்க்கெளியனோசயத்திரதன்றானென்றுசாற்றுவாயே. (௨௩௧)

ஆனையாணிலையறிவதல்லதுமற்றறிபவர்யாரணிந்தபோரி
னுனைபவர்வெல்வரெனத்தெரியுமோவெனகவின்றுநகைத்தான்மன்னோ
பாளைவாய்நெடுங்கமுகின்மிடறொடியக்குலைத்தெங்கின்பழங்கள்வீழ
வாளைபாய்குருநாடுமெந்நாடுமுதாளுமன்னர்கோமான். (௨௩௨)

தாரரசன்மகன்றுச்சாதனன்மகன்சல்லியன்மகன்வேற்சகுனியென்னும்
பேரரசன்மகன்முதலாவெத்தனைபேர்பட்டாலும்பெரியதன்றே
பாரரசாளுதற்கிருந்தபார்த்தன்மாமகனொருவன்பட்டானாகி
லாரரசுக்கினியுரியாரந்தோவென்றுரைத்தான்மற்றங்கர்கோமான். (௨௩௩)

அங்கிருந்துசயத்திரதனுவிகவர்ந்திடுவெலெனவாண்மைகூறிப்
பங்கிருந்தவுமாபதிபாற்பணிந்துவரம்பெறச்சென்றான்பார்த்தனாகிற்
கொங்கிருந்ததாராய்நின்குடைநிழற்கீழிதுகாலங்கூட்டங்கூடி
யிங்கிருந்தவேழையரேமென்செயமற்றிருக்கின்றேமென்றுசொன்னான். (௨௩௪)

இவன்மொழிந்தவிகழுரைகேட்டிடிம்பன்மருமகன்வெகுளுற்றென்சொன்னா
மவனிதலமுழுதுமினியரசாளநினைந்திருந்தீரறிவிலீர்காள்
சிவனெரிசெய்புரம்போலும்பாடிவீடழலூட்டிச்சேனையாவும்
பவனன்மகன்மகனென்னும்பரிசறியத்தொலைத்திபெடுத்துவேனே. (௨௩௫)

தசைகுருதிமிசையொழுகத்தனித்தனியேயெதிர்த்தவரைத்தலைகள்சிந்த
விசையன்வரவேண்டுமோமற்றுள்ளார்திரண்டுவரவேண்டுமோதா
னிசைபுலருமுனமுனைந்துநீறாக்கிவிடுகுவனெனநிருபன்சொன்ன
வசைவின்மொழிமறுத்துடற்றலாகாதென்றிருக்கின்றேனறிகிலீரே. (௨௩௬)

இருவரெதிரெதிர்தம்மிலிகல்பொருதலுலகியற்கையாருங்கூடிப்
பருவமுறாத்தனிக்குதலைப்பாலகனுக்காற்றாமற்பறந்துபோனீ
ரொருவனெடுந்தேரழிக்கவொருவன்மலர்க்கைதுணிக்கவொருவன்பின்னைப்
பொருவனெனவறைகூவிப்பொன்றுவித்தானிதுகொண்டோபுகல்கின்றீரே. ()

வரைக்குவமைபெறுந்தடந்தோள்வீமன்மகனிப்படியேமதியானாகி
யுரைக்குமொழிகேட்டிருந்தவுரகமணிகொடிவேந்தனுருத்துநோக்கி
யிருக்குமெழிலவைக்கேற்பவியம்பாமற்றன்மதத்தாலியம்புகின்ற
வரக்கிமகனுடனென்றுங்கழறேலென்றனனிருந்தவரசர்யார்க்கும். (௨௩௮)

அந்தவுரைமீண்டவன்கேட்டாங்கவனைநகைத்துரைப்பானரக்கரேனுஞ்
சிந்தனையில்விரகெண்ணார்செருமுகத்தில்வஞ்சகமுஞ்செய்யாரையா
வெந்திறல்கூர்துணைவருக்குவிடமருத்தார்நிரைக்கழுவில்வீழச்சொல்லா
ருந்துபுனலிடைப்புதையாரோரூரிலிருப்பகற்றாருரையுந்தப்பார். (௨௩௯)

செழுந்தழல்வாழ்மனைக்கொளுவார்செய்ந்நன்றிகொன்றறியார்தீங்குசூழா
ரழுந்துமனத்தழுக்குறாரச்சமுமற்றருளின்றிப்பொய்ச்சூதாடார்
கொழுந்தியரைத்துகிலுரியார்கொடுங்கானமடைவித்துக்கொல்லவெண்ணா
ரெழுந்தமரின்முதுகிடாரிவையெல்லாமடிகளுக்கேயேற்பவென்றான். (௨௪0)

தேனிடறிப்பாண்முரலுஞ்செழுந்தாமவிசயனுடன்செருவில்வந்தான்
மானிடரிற்பொரவல்லார்சிலருண்டோதெரியாதுவானுளோரிற்
கோனிடையுற்றருகிருந்ததிறல்வேந்தர்காத்திடினுங்குறித்தவீரன்
றானிடருற்றுயிரழிகைதப்பாதென்பதுமுரைத்துத்தனயன்மீண்டான். (௨௪௧)

வே று.

அரக்கனப்பேரவையகன்றபின்பகை
துரக்கும்வெங்குனிசிலைத்துரோணன்றன்னொடும்
பரக்கும்வெண்டிரைக்கடற்பாரெலாமுடன்
புரக்கநின்றவன்சிலபுகழ்ந்துகூறுவான். (௨௪௨)

கொடிநெடுஞ்சேனையைக்கூறுசெய்துநீ
கடிகைமூப்பதுமுடன்காக்கவல்லையேல்
வடிவுடைச்சிந்துமாமகனுமுய்குவன்
வெடியனற்குளிக்குவன்விசயன்றானுமே. (௨௪௩)

மாலையோர்பகலுமேகமக்குவெய்யபோர்
காலையாலைவருங்காமின்காமினென்
றாலையுமகெளிற்றாழிமன்னவன்
வேலைபுக்கவரினும்வீழ்ந்துவேண்டினான். (௨௪௪)

மணிமதிலாணைமன்னுசேனையை
யணிபடநிறுத்தியாமளவுங்காப்பன்யான்
பணிவுறுபுண்ணியபாவமுற்றுவ
துணிவுறத்தெரியுமோதும்பைமாலையாய். (௨௪௫)

மூப்பதுகடிகையின்மொழிந்தவஞ்சினந்
தப்பதுபடாதெனிற்றனஞ்சயன்சிலைக்
கொப்பதொன்றில்லைமற்றுரைத்தவாசெய
லப்பதுமாசனன்றனக்குமாகுமோ. (௨௪௬)

மல்லினான்மல்லரைமலைந்தமாலவட்
புல்லினனென்னினுஞ்சிந்துபூபனை
வில்லினால்வெல்லரிதென்றுமீளவுஞ்
சொல்லினான்மறைமொழித்துரோணன்றானுமே. (௨௪௭)

கோப்பலருடன்பலகூறமற்றவர்
காப்பலகவிலினாலைவான்பகற்
றப்புவிக்கர்சயத்திரன்றன்னுயிர்
காப்பல்யானென்றனன்கதிரின்மைந்தனே. (௨௪௮)

அன்மருடிமிரமெய்தளவுநாளையிற்
றென்மருடெரியல்வேற்சிந்துவேந்தனைக்
கன்மருடிகிரியிற்காப்பன்யானென்றான்
றன்மருடனனெனூர்தலைவன்றானுமே. (௨௪௯)

விற்புனைகோதைவல்வில்லின்வல்லவர்
றாற்படச்சேவகக்கூறகிற்பரோ
வாற்புரைகேட்டியோடையானையாய்
சாற்புயலானதுதனிதஞ்செய்யுமோ. (௨௫௦)

பொருதொழில்விதம்படப்புரிந்தகாலையில்
விருதர்களிருவரும்வேறல்கூடுமோ
வொருதலைநின்றவனுடற்றும்வின்மையுங்
கருதலன்வின்மையுங்காண்டிகாவலா. (௨௫௧)

என்றுசேனாபதிமகனியம்பினா
னின்றகாவலர்களுமிசைபுவர்ந்தழிச்
சென்றுபோர்புரிந்தநின்றெவ்வர்யாரையும்
வென்றுமீளுதமெனவிடைகொண்டாரே. (௨௫௨)

பூதனைமுலைநுகர்பூந்துழாய்முடி
நாதனும்விசயனுநலத்தொடேவிய
தூதனுமருக்கனுந்துயிலுணர்த்தினார்
சேதனர்புகழ்மொழித்திகிரிவேந்தையே. (௨௫௩)

கயிலைபுக்கதுமரன்கணையுஞ்சாபமும்
வியன்மலர்ப்பொய்கையும்விசயற்கீந்ததும்
புயலெனக்கரியமெய்ப்பூந்துழாயவன்
றுயிலுணர்குரிசிலுக்கடைவிற்சொன்னபின். (௨௫௪)

பைதிகழ்மணிப்பணிப்பதாகையானிடை
யெய்தியங்குரைத்ததுமிருந்தமன்னவர்
வெய்துறப்புகன்றதுமீண்டுவந்ததுங்
கொய்தொடைக்கடோற்கசன்றானுங்கூறினான். (௨௫௫)

ஆ செய்யுள் - ௩,௪௭௧.

பதின்மூன்றாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

# பதினான்காம்போர்ச்சருக்கம்.

அரியதன்கலைவாண்மதியமுங்கொதிகொளாலமுந்தனதிட்த்தடக்கி
யுரியவொண்கங்காநதிக்கொருபதியாயுரைபெறுமுயர்மகோததியிற்
பரியதிண்சிலையோடம்பெலாமுகந்துபற்குனப்பொருப்பிடைப்பொழியுங்
கரியபைம்புயலைக்கைதொழுமவரேகருவிலேதிருவுடையவரே. (௧)

காலையாதபனைத்தருமன்மாமதலைகைதொழுகடன்முடித்தருளிச்
சாலையார்தழல்செய்வேள்வியந்தணர்க்குத்தானமுந்தகுவனவழங்கி
மாலையாமளவிற்றனஞ்சயன்மொழிந்தவஞ்சினம்வழுவறமுடிப்பான்
வேலையாரவப்பலபணைமுழங்கவெம்முரட்சேனையோடெழுந்தான். (௨)

அடைந்தவரிடுக்கணகற்றுநற்கெண்ணியாடகப்பொருப்பினாற்கடலைக்
கடைந்தமுதளித்தகருணையங்கடலேகடும்பரிச்சந்தனங்கடவ
மிடைந்தொளியுமிழும்வேற்படைத்தடக்கைவீமனுமிளைஞரும்பலருங்
குடைந்திருபுறனுங்கைவரமகவான்குமரனுமமர்க்களங்குறுக. (௩)

சேனையம்புயலிற்கணைதொடும்பதாதிதுரகதந்துரகதத்தடந்தேர்
யானையென்றுரைக்குநால்வகையுறுப்புமிராசமண்டலமுகமாகத்
தானையங்கடலைமிடலுறவகுத்துத்தான்முதற்பேரணியாகச்
சேனையின்பதியாமைத்துனனின்றான்றேவரும்யாவரும்வியப்ப. (௪)

பாப்புவெம்பதாகைப்பார்த்திவன்பணியாற்பத்திரண்டியோசனைப்பரப்பிற்
றிப்புறஞ்சூழநடுவணிற்பதுபோற்செயத்திரதனையிடைநிறுவிக்
கோப்புறப்பரிதேர்குஞ்சரம்பதாதிகூறுநூன்முறையணிநிறுத்திக்
காப்புறத்திசைகளெட்டினுநெருங்கக்காவலர்யாரையுநிறுத்தி: (௫)

தூசியின்முதனாள்வஞ்சினமொழிந்ததுன்மருடணன்றனைநிறுத்தி
யூசியுநுழையாவண்ணம்விற்பதாதிவயவரையுரனுறநிறுத்தி
வாசியிலிபத்திற்றேரிலெண்பட்டமன்னரையிருகையுநிறுத்திப்
பேசியகன்னன்சகுனிசல்லியரைப்பேரணியாகவேநிறுத்தி. (௬)

அணிகளைந்தைந்தாலவகைவியூகமாயசேனையின்சிரத்து
மணிமுடிபுனைந்தவைத்தெனவலங்கல்வலம்புரிமார்பனைநிறுத்திப்
பணிவுறுமவுணர்பதாகினிவருத்தபார்க்கவனிவனெனப்புயில்போர்த்
துணிவுடன்பஃறேர்சூழ்வரச்சகடதுண்டத்துநின்றனன்றுரோணன். (௭)

மந்தணமிருந்துகய்குலின்முதனுண்மன்னனோடியம்பியவகையே
யந்தணனணிந்தவிராகினிவிமானத்தமாருமதிசயித்துரைத்தார்
சந்தணிகடகவாருகின்சிகரச்சயத்திரதனையொருபகலிற்
கொந்தழலுரோமத்தனஞ்சயன்பொருதுகோறலோவரிதெனக்குறித்தே. (௮)

செய்த்தலைக்கமலம்வர்லையும்பிணங்குஞ்செழும்புனற்சிந்துநாட்டரசைக்
கைத்தலத்தடங்கும்பொருளெனக்காத்துக்காவலர்நின்றபேரணிகள்
உத்தமோசாவுமுதாமனுமுதலோரோரிருபுறத்தினுஞ்சூழ
வித்தகவலவன்முன்செலத்தடந்தேர்விசயனவ்வினைஞர்மேனடந்தான். (௯)

போர்முகத்தடங்காமடங்கலேறனையான்விதம்படப்பொழிசிலீமுகங்கள்
கார்முகத்தெழுந்ததாரைபோல்வழங்கக்கார்முகத்தொலியினாற்கலங்கித்
தார்முகத்தரசன்றம்பியோடணிந்தசதுரங்கமுமுடனுடைந்து
நீர்முகத்துடைந்தகுரம்பெனத்துரோணனின்றுழிச்சென்றடைந்தனவே. (௧௰)

புரவிமுப்பதினாயிரங்கொடுமுனைந்துபொருதிறற்கிருதவன்மாவுங்
கரவிறற்கரிநாலாயிரங்கொண்டுகோதுதுச்சாதனன்றானு
மிரவியைக்கண்டமின்மினிக்குலம்போலிடழிந்திடவுடன்றெங்குஞ்
சரவிதப்படையால்விண்டலந்தூர்த்துத்தானைகாவலன்முனைச்சார்ந்தான். (௧௧)

வேறு.

சென்றவிற்றனஞ்சயற்குமுனைகுலைந்தசேனைவாய்
நின்றவத்துரோணனுக்குநீடுபோர்விளைந்ததா
லொன்றொடொன்றுதாகதங்களுருமின்மிஞ்சியதிர்வுறக்
குன்றகுன்றொடேற்றெனக்கொடிகொடேர்குலுங்கவே. (௧௨)

முட்டியாலுநிலையினாலுமொய்ம்பினாலுமூரணுறத்
தொட்டவில்லுநிமிர்வறத்தொடுத்தவின்மையாலுமுன்
கிட்டியாசிரியனுக்கிரீடியும்பொரப்பொரப்
பட்டவில்லையிருவர்மேலும்விட்டவிட்டபகழியே. (௧௩)

தேரிரண்டுமிடம்வலந்திரிந்துசூழவாமுனைத்
தேரிரண்டெனவும்வாளியோரோர்கோடியுதையவே
காரிரண்டெதிர்ந்ததம்மின்மலைவுறங்கணக்கெனப்
போரிரண்டுவீரருக்குமொத்துநின்றபொழுதிலே. (௧௪)

இகல்செய்வெஞ்சிலைக்குகைவீரவிந்திலந்தனக்குநின்
பகைவனின்றவந்நிலம்பதிற்றிரண்டியோசனை
புகலுநின்றபொழுதுசென்றதென்றவட்போருமன்மா
துகனுகின்றபரிகொடேரையுள்ளுறச்செலுத்தினன். (௧௫)

எதிர்த்ததேர்விதிர்த்திமைக்குமளவின்மாயமிதுவெனக்
கதித்துரங்கவிசையினேகுகென்காந்தழிதலு
மதித்தடர்ந்தபின்றொடர்ந்தமெத்தபோதருச்சுனன்
கொதித்தவர்க்கருகுவேறடம்மதிருகின்றதகூறுவான். (௧௬)

ஐயநின்னொடமர்நிரைத்தலமருக்குமரிநுநின்
செய்யபங்கயப்பதங்கள்சென்னிவைத்தசிறுவன்யான்
வெய்யவென்சொல்வழுவுறாமல்வேண்டுமென்னமுறுவலித்
தெய்யவந்தமுனிவுமாறியேகுகென்றியம்பினான். (௧௭)

ாசனால்வரங்கள்பெற்றவிந்திரன்றன்மதலைகாம்
போசனாதியெண்ணின்மன்னர்பொருதழிந்துவெருவியுட்
கூசநாலுபாலுநின்றநின்றசேனைகொன்றுபோய்ப்
பாசநாமவணியினின்றவீரரோடுபற்றினான். (௧௮)

முன்னர்முன்னர்வந்துவந்துமுனைகடோறுமூர்நுறு
மன்னர்தந்தம்வில்லும்வேலும்வாளும்வென்றிவாளியிற்
சின்னபின்னமாகவெய்துசெல்லுமத்தனஞ்சயன்
கன்னனின்றவுறுதிகண்டுகண்ணனோடுமுரைசெய்தான். (௧௯)

விலங்கிநம்மையமர்நிரைக்கவிடதன்விற்சுதக்கண
னலங்கல்வேலவந்திமன்னனவன்மகன்றனுதியா
வலங்கொள்வாகைவீரர்சேனைவளையநின்றகன்னனைக்
கலங்குமாறுபொருதுபோகவேண்டுமென்றுகருதியே. (௨0)

ஒக்குமென்றுசெங்கண்மாலுமுளவுகோல்கொடிவுளியைப்
பக்கநின்றபானுமைந்தன்முனையுறப்பயிற்றவு
மிக்கவெம்பதாதியோடுசூழநின்றவிருதரு௩்
தொக்குவந்துவிசயன்மீதுசுடுசரந்தொடுக்கவே. (௨௧)

சரந்தொடுத்தவயவரைச்சரத்தினிற்றனித்தனி
யுரங்குளிக்கவாகுவீழவுதரமூழ்கவொளிமுடிச்
சிரங்களற்றுமறியவென்புசிந்தவாய்கடுனைபடக்
கரந்துடிக்கவிருபதங்கடறியவேகலக்கினான். (௨௨)

கலக்கமுற்றுவில்விழுந்துகவனமாவிழுந்துமே
விலக்கமற்றகளிறிழந்துகொடிகொடேரிழந்துபோ
யுலக்கவிட்டளக்கர்வாயுலம்பவோடுகலமெனத்
துலக்கமுற்றுவருதல்கண்டுசுரருநின்றுதுதிசெய்தார். (௨௩)

துதியினாலுயர்ந்தவண்மையுடையபானுகுனுவுங்
கதியினாலுயர்ந்தமாவொடொத்ததேர்கடாவினான்
மதியினாலுயர்ந்தகொற்றவலவனுந்துதேருடன்
விதியினாலுயர்ந்தசாபவெஞ்சமந்தொடங்கினர். (௨௪)

தொடங்குபோரில்வலியினாலுமதனினுந்துலங்குமெய்
விடங்கினாலும்வின்மையாலுமுவமைதம்மில்வேறிலார்
விடங்கொள்வாளிமின்பரப்பிவெய்யகாணிடிக்கவே
மடங்கல்போலிரண்டுவில்லுமண்டலம்படுத்தினர். (௨௫)

மண்டலம்படுத்தவில்லின்வலிகொள்கூரவாளியால்
விண்டலம்புதைந்துதங்கண்மெய்படாமல்விலகினர்
குண்டலங்கள்வெயிலுமூரல்குளிர்நிலாவும்வீசவே
மண்டலம்புகாமனோர்வயங்குவாண்முகத்தினர். (௨௬)

முகத்திலின்றகன்னனோடுமுடிமகீபரோடுசின்
நிகற்செய்யின்றகடிகையோரிரண்டுசென்றதென்றுள
மிகக்கனன்றுதேரும்வில்லுமெய்யணிந்தகவசமுந்
தகர்த்துமார்பின்மூழ்கவாளியேவினன்றனஞ்சயன். (௨௭)

தனஞ்சயன்கையம்பினுக்குதபனன்மைந்தன்மோகியா
மனந்தளர்ந்திளைத்தபின்னர்வருணராசன்மாமகன்
கனன்றெழுந்துசேனையோடுவந்துகார்முகங்குனித்
தினங்கொள்வாளியேவினனெதிர்ந்தபோரிலீறிலான். (௨௮)

ஈறிலாதவீரன்வந்தெதிர்த்தகாலைவீரரின்
மாறிலாதவிசயன்விட்டமறைகொள்வாளியாவையுஞ்
சேறிலாதசெறுவில்வித்தசெந்நெலென்னவவனுடற்
பேறிலாமன்முனையுறப்பிளந்துகீழ்விழுந்தவே. (௨௯)

விழுந்தவாளிகண்டுபின்னும்விசயன்மூரிவிற்குனித்
தழுந்தவாளியொன்றுபத்துநூறவன்பொட்டசெரு
வெழுந்தவாளிவாளியால்விலக்கவேவியாசுகங்
கழுந்ததாகவவனெடுத்தகார்முகங்கலங்கினான். (௩0)

முகங்கலங்கமெய்கலங்கமுடிகலங்கமூரிமார்
பகங்கலங்கமற்றொர்தண்டருச்சுனன்றன்மேல்விட
நகங்கலங்கவுருமின்வந்ததனையும்பர்நாயகன்
சகங்கலங்கவேற்றனன்றனதுமெய்யினாகவே. (௩௧)

ஆகவத்தில்விசயனுய்யவையன்மெய்யிலுறையுமுன்
மோகரித்தெதிர்ந்ததெவ்வன்முடிதுளங்கிமண்மிசைச்
சோகமிக்குவிழுதல்கண்டுநாகரியாதலான்
மாகமுற்றவமரர்செம்பொன்மழைபொழிந்துவாழ்த்தினார். (௩௨)

வாழிவாழிகுந்திமைந்தன்வலவன்வாழிவாழியே
வாழிவாழியவனியுய்யவந்தநாதன்வாழியே
வாழிவாழிகாளமேகவண்ணன்வாழிவாழியே
வாழிவாழிவாசுதேவன்வாழிவாழிவாழியே. (௩௩).

வேறு.

என்றியாவருந்துதிசெயவிரகிலெதிர்த்தகாவலன்றன்னைக்
கொன்றபோதுதன்றுயிர்பெறுதனஞ்சயன்கொண்டல்வண்ணனைப்போற்றி
நின்றன்மேனியிலெறிகொடுங்கதைபடவெறிந்தவனெடுவாளிற்
சென்றமாயமொன்றிருந்தவாறடியனேன்றெரியுமாறுரையென்ன. (௩௪)

பன்னவாறதையென்றொருத்திதாய்தந்தையும்படுதிரைப்பரவைக்கு
மன்னவன்றரப்பெற்றனன்பலபெரும்படையொடும்வலிகூரத்
தன்றுநாமமுஞ்சுதாயுமற்றொருவராற்றுயிரழிவில்லான்
முன்னிராயுதன்மிசையிவன்படையுறின்முடிவுறும்வரம்பெற்றான். (௩௫)

எறிந்தவெங்கதைகொன்றிடும்படைக்கலனெடுத்தவருட்டற்பட்டா
லறிந்துளாவிடையேற்றலினவனுயிரழிந்ததென்றருள்செய்நாள்
பிறிந்தயோனிகளனைத்துமாய்முதலுமாய்ப்பெருமிதமனத்தோடு
செறிந்தவர்க்கொருசகாயனும்பருந்துயர்தீர்த்திடுந்தேர்ப்பாகன். (௩௬)

கதாயுதந்தனக்குரியநாயகன்மிசைகதைபடச்சிதைவுற்றுச்
சுதாயுவென்பவன்பலபெரும்படையுடன்றுறக்கமெய்தியபின்னர்ச்
சதாயுவென்றவனிளவன்மற்றவனினுஞ்சமர்புரிந்தவன்முனுங்
கெதாயுவாயினன்கிரீடியோடெதிர்த்தவர்யாவரேகெடாதுய்வார். (௩௭)

ஆயிரம்பதின்மடங்குதேரிபமதன்மும்மடங்கடல்வாசி
யாயிரஞ்சதமதனின்மும்மடங்குகாலாளுடனணியாக்கி
யாயிரம்புயத்தருச்சுனனிகரெனவாழியாற்றுணிப்புண்ட
வாயிரம்புயத்தவனெனவெதிர்த்தனனுடலாயிரவாகு. (௩௮)

உரங்களாயிரம்பொலங்கிரியனையனவோரொருகுனிவிற்கள்
கரங்களாயிரங்கொடுவளைத்தாயிரங்கண்ணன்மைந்தனைநோக்கி
வரங்களாயிரமறையொடும்பெற்றவன்மதிவகிர்முகமான
சரங்களாயிரமாயிரமொருதொடைதனிலெழும்படியெய்தான். (௩௯)

எடுத்தபோதிலொன்றருங்குதைநாணிடையிசைந்தபோதொருபத்துத்
தொடுத்தபோதினூறுகைத்தபோதாயிரமெனவருஞ்சுடர்வாளி
யடுத்தபோர்முடிமன்னவன்விடும்விடுமநேகமாயிரமம்புந்
தடுத்தபோதொருதனுவுமைஞ்ஞூறடற்றனுவுடனெதிர்சின்ற. (௪0)

அலிமுகந்தொழுமிளவல்வாணனைப்புயமழித்தமாமறையொன்று
வலிமுகங்கொடியுயர்த்தவன்செவியினிலுரைக்கமற்றதுபெற்றங்
குலிமுகஞ்செறிவரிசிலைகால்பொரக்குனித்துவன்பொடுதொட்ட
சிலிமுகங்களிற்றுணித்தனனுயிரஞ்சிகரவாகுவுஞ்சேர. (௪௧)

மீதலந்தனக்கிறைவன்வச்சிரத்தினல்வெற்பினஞ்சிறகற்றுப்
பூதலந்தனில்விழுவபோல்விழுந்தனபுயங்களாயிரமும்போய்க்
காதலங்கனைதடம்படிந்தேகுதல்கண்டுகோமுகனுகிப்
பாதலம்புகுந்தின்பமெய்தியவிறற்பார்த்தன்வெங்கணையாலே. (௪௨)

அன்றருச்சுனனுயிரம்புயங்களுமரிந்தனன்மழுவீர
னின்றருச்சுனனிவன்புயமரிந்தனனென்றிமையவரேத்தத்
துன்றருச்சுனநான்மறையுரவுடன்றொடாமுன்றவழ்ந்தோடிச்
சென்றருச்சுனமிரண்டுதைத்தருளினேன்செலுத்துதேரவன்சென்றான். (௪௩)

கடிகைமுப்பதுஞ்சிந்துவுக்காசனைக்காக்குமாறறைகூவி
யிடியிடித்தெனப்பல்லியமார்த்தெழவெழுகடற்படையோடும்
படிநடுக்குறப்பணிக்குலநெளித்திடப்பட்டவர்த்தனருள்ளார்
முடிதரித்தவரனைவருந்திரண்டொருமுனைபடவெதிர்சென்றார். (௪௪)

பரிதியால்வளைப்புண்டசெம்பரிதியிற்பற்குனன்றனுவாங்கித்
தெரிசரங்களோரொருவருக்காயிரஞ்சிரமுதலடியீறு
நெரிதரும்படிதொடுத்துவெங்கொடிபரிநேமிதேர்பலகோடி
கரிகளுந்துணிபடப்படமலைந்தனன்கடிகையொன்றினின்மாதோ. (௪௫)

போரில்வெவ்விடாய்தணிவுறக்களத்தினிற்புறங்கொடுத்தவர்சோரி
நீரின்மூழ்கியுங்கழுகிகோவணநீழலாறியுஞ்சென்றார்
தேரில்வாசியிற்களிற்றில்வந்தவர்களிற்சேவடிசிவப்பேற
வாரியார்குதித்தோடுதலொழிந்தவரெறிபடைவீழ்த்திட்டே. (௪௬)

நின்றுபட்டனர்தனித்தனியமர்புரிகிருபர்முந்துறவோடிச்
சென்றுபட்டனர்சேனைமண்டலிகர்வெஞ்சினம்பொழிசெறுசெங்கட்
குன்றுபட்டனபட்டனநவகதிக்குரகதக்குலம்யாவு
மன்றுபட்டவர்க்குறையிடப்போதுமோவநேகநாளினும்பட்டார். (௪௭)

அநேகமாயிரம்பேர்படக்கவந்தமொன்றுமெக்கவந்தங்க
ளநேகமாயிரமாடவெஞ்சிலைமணியசைந்தொருகுரலார்க்கு
மநேகநாழிகையருச்சுனன்சிலைமணியார்த்தநக்களம்பட்ட
வநேகமாயிரம்விருதரையளவறிந்தார்கொலோவுரைக்கிற்பார். (௪௮)

வேறு.

வெவ்வாசிநெடுந்தேர்மிசைநிமிராவரிவிற்கொண்
டிவ்வாறமர்புரிவேலையிலெழுசெங்குருதியிற
லவ்வாடரவுடையானழியாயோதனமந்திச்
செவ்வானகமெனவந்துசிவப்பேறியதெங்கும். (௪௯)

முருகாரிருசிறைவண்டினமுளரிப்புதுமலர்விட்
டருகார்பொழினிழலூடணியலர்நாண்மலருறவே
யிருகாலமுமுக்கால்விடுகைம்மாரியிருக்கா
லொருகாலருமறையோர்விடுபெதநன்னினனுதயன். (௫௦)

வீரவார்முனையடுதேர்நகவெவ்வாசிகள்புனலுண்
ரேவாவிடிலோடாதினியென்றையனுரைப்ப
வரவாபரணன்றந்தருளருமாமலறவருணச்
சாவாய்வரவெய்தானவனெழனுற்றதொர்தடமே. (௫௧)

ஆழம்புணரியினும்பெரிததினும்பெரிதகலஞ்
குழைக்கணும்வண்டாமரைதுறையெங்கணுநீலங்
கிழைக்கணுநெடுவாளைவரால்பைங்கயல்கெண்டை
வாழுங்கலையருகெங்கணும்வளர்கின்னரமிதுனம். (௫௨)

ஒருபால்வளர்போதாகிரைகருநாரைகளொருபா
லொருபாலனமகிழ்நேமிகளன்றிற்குலமொருபா
லொருபான்மடவன்னம்புனலரமங்கையரொருபா
லொருபாலிருபாலுந்தவழொளிநந்துறைபுளினம். (௫௩)

தலமாமகளுந்தித்தடமெனானதடங்கண்
டெலமாறுகொளிருதோள்வலியுடைவள்ளலுரைப்பக்
குலமாமணிபனையான்விரைதேர்கின்றெதிர்குதியா
வலமானதுரங்கங்களைவள்வார்விசிநெகிழா. (௫௪)

குவளைப்பரிமளமேவருகுளிர்வாரிபருக்கிப்
பவளத்துவர்வாயானிருபாதங்களைவிளக்கித்
தவளக்கிரியொருநாலெனமேன்மேலொளிதருபே
ரிவுளிக்குமிளைப்பாறவிளைப்பாறினனிப்பால். (௫௫)

அப்பாலிவனுடனேபொருதனிலத்தெதிர்சருகோ
டொப்பாயுளம்வெருவெய்தியுடைந்தோடியவீரர்
தப்பாரொருவருமின்றசெமரந்தனில்விசயன்
கைப்பாய்கணைபோரநேர்ந்தவர்கழன்மன்னவவென்றார். (௫௬)

துரியோதனனவர்சொல்லியசொற்றன்செவிசுடவே
யரியோடெதிர்பொரவஞ்சியவடல்வாரணமனையா
னெரியோடியபுரியென்னவிளைத்தாரணவேள்விப்
பெரியோனடியெய்திச்சிறுமையினலிவைபேசும். (ருஎ)

அதிரேகவிறற்பற்குனனம்போடெதிரம்பிட்
டெதிரேறியவயமன்னரிலெம்மன்னர்பிழைத்தார்
கதிரேகுமுன்றுச்சனைகணவன்றலைகடிதிற்
பிதிரேறுவதல்லாததுபிழைப்பிப்பவரிலரால். (ருஅ)

காணாதவிடத்தாண்மையுறக்கூறுவர்கண்டா
லேணாடமர்முனைதன்னிலிமைப்போதெதிர்நில்லார்
நாணாதுமுன்வென்னிட்டிடுநெஞ்சேனையடங்கச்
சேணுடுறுமின்றேயொருசெயல்கண்டிலமையா. (ருகூ)

குனிநாணுடைவரிவிற்படைவிசயற்கெதிர்குறுகித்
தனிநானவனுயிர்கொள்ளுதறவிர்கிற்குதலல்லான்
முனிநாயகவேறோர்விரகில்லைத்திருமுன்னே
யினிநாடியபம்போர்விரைவொடுகொணுதியென்றான். (கூ0)

முனியுந்தரணிபனேடுசென்மொழிநன்கினுரைக்குந்
துனிகொண்டுளமழியாதொழிதுணிவுற்றனைமுதலே
யினியஞ்சியினைத்தெண்ணிடுமெண்ணந்தகவன்று
லனிகங்களழிந்தாலுநின்னாண்மைக்கழிவுண்டோ. (கூக)

உரனுல்வருதேரொன்றினிலுற்றோரிருவரையு
நரநாரணரிவரென்பர்கள்ஞானத்தினுயர்ந்தோ
ரரனார்திருவருளான்முனையடல்வாளிகள்பலவும்
வரனாலுயர்மறையும்பிறர்மற்றோர்தனிபெற்றார். (கூஉ)

தவரோடவனின்றால்விதிதானுந்தரமல்ல
னெவரோமலையோடும்பொருதிருதோள்வலிபெற்று
ருவரோதநிறத்தோனவன்விரைதேர்தனியூர்வா
னவரோடினியமர்வெல்லுதலாராயினுமரிதால். (கூ௩)

அதிகம்பகைதமரோடறலாகாதெனவரசர்க்
கெதிரன்றவையிடையேவசையேதேதுபுகன்றாய்
விதுரன்றனதுளநொந்தடல்வில்லுந்துணிசெய்தான்
மதியின்றிறனறிவோர்மொழிவழிவந்திலமன்னே. (கூச)

மன்னாகவமதியாவிறல்வயவன்றனைவிசயன்
றன்னாலொருபகலேயுயிர்தபுவித்திடலாமோ
மின்னார்வடிவேலாயிவைவிதியின்செயலன்றோ
வென்னாவொருகவசந்தனையிவன்மெய்யினிலிட்டான். (கூரு)

வேறு.

பங்கயாசனன்வாசவற்களித்ததுவாசவன்பயில்போரி
லங்கராவினுக்குதவியதங்கராவெனக்கருளியதிந்தத்
தொங்கன்மாமணிக்கவசமெவ்வீருந்தொழத்தகுகழற்காலாய்
புங்கவாளியிற்படைகளிலொன்றினும்பொன்றிடாதிதுவென்றான். (கூசு)

இட்டபொற்பெருங்கவசமேடெழுந்தனனிராசராசனுமுள்ள
பட்டவர்த்தனர்மருடவர்த்தனர்களும்பலபடைஞருங்கூடி
வெட்டிபத்தின்வெஞ்செவிகளுஞ்செவிநெறப்பல்லியமெழுந்தார்ப்ப
முட்டவிட்டனர்தனஞ்சயனின்றமாமுனையில்வேன்முனையொப்பார். (௬௭)

சென்றசென்றவெஞ்சேனைகளினைப்பறத்தெய்விகத்தினில்வந்த
மன்றலம்பெரும்பொய்கைநீர்பருகியப்பொய்கையின்வளநோக்கி
யென்றுமென்றுகாறுகர்புனலன்றுநல்லின்னமுதிதுவென்பார்
தென்றலந்தடஞ்சோலையிற்கரைதொறுஞ்சேர்ந்துதம்விடாய்தீர்வார். (௬௮)

மத்தவாரணங்கொண்டுசெந்தாமரைவனங்கலக்குறுவிப்பார்
தத்துபாய்பரிகளும்புனலருத்துவார்தாமுநீர்படிகிற்பார்
கைத்தலங்களிலளியினமெழுப்பிமென்காவிநாண்மலர்கொய்வா
ரித்தலந்தனிலிம்மலர்ப்பரிமளமில்லையென்றணிகிற்பார். (௬௯)

இன்னவாறுதம்மசைவொழிந்தியாவருமிபதுரகத்தோடு
மன்னவாவியையகன்றனர்கடல்வளையாழிமால்வரையென்னத்
துன்றுமாமணித்தேரினின்றிழிந்துதன்சுவேதமாகீருட்டு
மன்றுவார்சமன்மகபதிமதலையவ்வருகினிக்கடல்கண்டான். (௭0)

கண்டபோதுமுன்காண்டவமழித்தவன்கடவுள்வாவியினன்னீ
ருண்டவாசியைத்தேருடன்பிணித்துவில்லோரிமைப்பினில்வாங்கி
வண்டுழாய்மதுமாலையாய்வளைந்தமேல்வருவருகினிதன்னை
யண்டருர்புகவிடுத்தபின்றேரின்மேலாகுமாறருளென்முன். (௭௧)

கன்றுசித்தையன்கோபவெங்கனல்பொழிகண்ணினன்காலாளாய்
நின்றுதேரினுங்களிற்றினும்பரியினுநிரைநிரைதாங்கம்போற்
சென்றவீரரைத்தனித்தனிசரத்தினுற்சிதையுடற்குன்றுகக்
கொன்றுகொன்றுகுழ்வரக்குவித்தனன்மணிக்குன்றுதானெனநின்முன். (௭௨)

தலைவனுமுனிகிருபனுங்கிருதனுந்துரகதத்தாமாவு
மலைவுறுமனந்தரசருஞ்சேனையுமுனைந்தணியணியாகச்
சிலைவலானெதிர்மிசைபடத்தேர்மிசைவிசையுறச்சிலைவாங்கி
வலையவாகுவின்வலியெலாங்காட்டினர்வரங்கொள்வாளிகள்வல்லார். (௭௩)

கைதவன்குலக்கன்னிகேள்வனுமொருகணைக்கொருகணையாக
வெய்தவெங்கணையாவையும்விலக்கிமேலிரண்டுநாலெட்டம்பால்
வெய்தினேமியந்தேரொடுகொடிகளும்வில்லும்வாசியும்வீழக்
கொய்துகொய்துபல்பவுரிவந்தனன்விறற்குன்றவில்லியொடொப்பான். (௭௪)

தேரினின்றவர்பாரினின்றவன்மிசைவிடுகணைத்திரண்மின்னுக்
காரினின்றுபாதலமுறவுரகர்மேற்கனன்றவீழ்வனபோன்ற
பாரினின்றவன்றேரினின்றவர்மிசைவிடுகணைபாதாலத்
தூரினின்றருமையும்விழுங்குவமெனவுரகரேறுவபோன்ற. - (௭௫)

வேறு.

சேணிவத்தின்மிசைநின்றமர்தொடங்கினவர்தேர்களிற்றினதறிந்தனகெடுந்துவச
காணியற்றனவொடிந்தனதடஞ்சிலையுநாகமுற்றவொழிந்தனரிரிந்தனர்க [டை
ன்ணிலத்தினிடைநின்றசமர்வென்றவனுநேமிவச்சிரமகுடம்புனைகொடிஞ்சிய
யேணிலத்திவுனிமுந்தமுனையுந்திரதமேறிவிட்டனன்முகுந்தனுடனின்புறவே. ()

ஏறியிட்டவன்விளைந்திரதமுங்கடவியேகனூற்றபினியம்புலதழங்கியெழ
வேறுபட்டமருடைந்தவர்களுந்திருகிமேலிடச்சகுனியுந்தினகரன்சுதனு
மாறியிட்டரதகுஞ்சரதுரங்கமமுமாகவிப்படிபொரும்படையொடன்றுநனி
சூறியிட்டனன்வலம்புரியலங்கல்புனைதோளிலெப்புவனமுந்தனிசுமந்தவனே. ()

யோதனத்திலிவனென்கனெதிரின்றளவும்யோசனைக்குமிடைநின்றிலன்மு
னைந்துசமர், மோதுகைக்குநினைவுண்டுகொலெதிர்ந்துமிகமோகரித்துவருகின்றது
தெரிந்ததில்லை, யாதுபெற்றனனெடுஞ்சிலைகொல்வெங்கணைகொலேதமற்றகவசங்
கொலிரதங்கொலென, மாதவற்கிடைவணங்கியிதுவென்கொலெனவாசவக்கட
வுண்மைந்தனுரைதந்தனனே. (எஅ)

ஈசனப்பொழுதுணர்ந்தருளிவென்றிவரியேறுவிற்குரியபற்குனனுடன்பழைய
வாசவற்கயன்வழங்குகவசந்துவசமாசுணற்கருளினன்கலசசம்புவனு
மாசுகத்தினிலொழிந்தபலதுங்கமுனையாயுதத்தினிலழிந்திடுவதன்றதனை
நீசெகுத்திடுதியென்றுதுரகங்களையுநேர்படக்கடவினன்கதிவிதம்படவே. (எகூ)

கானகத்தினிடைமண்டியெரியங்கிதருகார்முகத்தின்வலிகொண்டுமுனைவெ
ஞ்சமரின், மேனடக்குமவர்தங்கண்மகுடங்களினுமேருவொத்துயர்புயங்களினுமு
ந்தியினு, மானனத்தினுநுழைந்துருவவெம்பரிதியாயிரக்கிரணமும்புடைபரந்த
தென, வானகத்துவெளியின்றியணிபந்தரிடவாளிவிட்டனன்மனஞ்செய்துதன
ஞ்சயனே. (அ0)

நாதெறித்தனதுரங்கமநெடுஞ்சிலைகளுணியற்றனவுடைந்தனதடந்திகிரி
பாதமற்றனமதங்கயவிதங்கள்பொருபாகர்பட்டனர்மறிந்தனநெடுந்துவச
மோதுதற்கெதிர்முனைந்தவர்சிரங்கள்பொழிமுளையிற்களமடங்கலுநெகிழ்ந்தாச
ராதபத்திரமழிந்தனவிவன்றனுடனுதாத்தொடுசரந்தொடவியைந்தவரே. (அக)

ஆரமர்க்கண்மிகநொந்திரவிமைந்தனெடிதாகுலத்தொடுமிரிந்தனன்விரிந்தமணி
வார்கழற்சகுனியுந்துணைவருந்தமுகமாறியிட்டனர்மறிந்தனர்கலிங்கர்பலர்
சீருடைக்கிருதனுங்கிருபனும்பழையசேதிவித்தகனுமஞ்சினரொடுங்கினர்கள்
பூரிபட்டிலனெருங்கியணிநின்றுபொருபூபர்பட்டனரொழிந்தவர்புறந்தரவே. ()

தேவருக்கரசனுந்துகனபந்திநிகர்தேரிடைப்பணிநெடுங்கொடிநுடங்கியெழ
மாவுகைத்துவலவன்றிறலுடன்கடவமாமுடிக்கண்மகுடந்திகழவன்றுபெறு, காவ
ன்மெய்க்கவசமுந்தனிபுனைந்துசிலகால்வளைத்தவிர்பெரும்பிறைமுகஞ்செய்கணை,
தூவியுற்றெதிர்முனைந்தனனநந்தவொளிதோய்கழற்றரணிமண்டலதுரந்தரனே. ()

கோமகக்குரிசின்முந்தவிடுமம்புபலகோறெருடுத்தெதிர்விலக்கிவிசயன்றனது,
தீமுகக்கணையநந்தநிலையொன்றின்முனைசேரவிட்டனன்விடுத்தபொழுதத்து விற
ன், மாமணிக்கவச்மெங்குமுடனொன்றியொருமால்வரைப்புயலினுண்டுளிவிழுந்தப
ரி, சாமெனத்தலைமழுங்கியவையொன்றுமவனாகமுற்றிலவசைந்திலனசஞ்சலனே.

வீரன்விட்டனசரங்களவனெண்கவசமேலுறப்படுதலின்றிவிழுகின்றநிலை, யோ
ரிமைப்பினிலறிந்துகுமரன்கையயிலோடுரைக்கவுவமம்பெறுவிடங்கொளயி, றேரி
னிற்பொலியநின்றிருகைகொண்டுநனிசேறிமெய்ப்படவெறிந்தன னெறிந்தளவில்,
வார்சிலைக்குருவின்மைந்தனதுகண்டதனைவாளியிற்றுணிபடும்படிமலைந்தனனே.()

வாளைநெட்டயிறுணிந்திடலும்வேகமுடன்மாணிரைத்திரதமுங்கடவிவந்தமுத
லாகவத்தினிலுடைந்தவரடங்கமுனையாயெதிர்த்தொருமுகம்படநெருங்கிமிக
மோகரித்துவருகின்றசெயல்கண்டமரர்மூவருக்கரியவன்கழல்பணிந்துபரி
தாகமுற்றமர்தொடங்கவுமறந்தகமழ்தாருச்சுனனுயங்கினனனந்தரமே. (அசு)

கோமணிக்குரலுகந்துபுறவின்கணுயர்கோவலர்க்குநடுவின்றுமுன்வளர்ந்தருளில்
காமனுக்கினியதந்தைசமரம்பொருதுகாதன்மைத்துனனயர்ந்தநிலைகண்டுபல[யில
தாமரைக்குளொருதிங்களெனவங்குலி கொடாழ்தடக்கைகளிரண்டொருமுகம்ப
மாமணிக்குழன்மணங்கமழ்செழும்பவளவாயில்வைத்தனனலந்திகழ்வலம்புரியே.

நாகர்பொற்றருவையம்புவியிலன்றுதருநாதன்வச்சிரவலம்புரிமுழங்குகுரன், மேகமொக்குமெனவெண்டிரை யெறிந்துபொருவேலையொக்குமென வெங்கணு மெழுந்தபொழு, தாகமுற்றுறநெகிழ்ந்துபுளகம்புரியவாகவத்தெழுகடுஞ்சினமடி-ந்தவிய, மோகமுற்றனரெதிர்ந்துபொருமண்டலிகர்மோலிபட்டதுகோலண்டமு கடுஞ்சிறிதே. (௮௮)

பாணிறப்புரவியுந்துமிரதங்கடவுபாகன்மற்றவர்மயங்கியதுணர்ந்தருளி, மே னிலத்துநாகன்றனுயிர்கொன்றதொருவேல் கொடுத்திதனில்வென்றிடுதியென்ற ளவில், வானவச்சிரன்மகன்கடிதுவந்துபெருவாழ்வுபெற்றனனெனும்பரிவினன் றனது, ஞானபத்தியொடெழுந்தவலம்வந்துதிருநாள் மலர்ப்பதம்வணங்கியது கொண்டனனே. (௮௯)

மாறுபட்டிவனையின்றுயிர்கவர்ந்துவிடின்மாமருத்தின்மகன்வஞ்சினமழிந்துவிடு
முறுபட்டுவெருவும்படியெறிந்தமரிலேறுவிப்பதுபெருந்தகைமையென்றுகொடு
நூறுபட்டமகவின்றலைவனெஞ்சமிகநோதகக்கடிதெறிந்தனனெறிந்தளவி
வீறுபட்டதுபெருங்கவசம்வந்தவழிநேர்படத்திருகினன்சமரினின்றிலனே. (௯0)

ஆறுபத்திருபதைம்பதுபெரும்பகழியாகவிட்டுவெரிவன்சிலையும்வெம்பரியு, மேறு பைத்தலைநெடுந்துவசமும்புதியவேழுதட்டிரதமுந்துணிசெய்தங்கருகு, சேறுதற்குவ ருநின்குருவின்மைந்தனொடுதேரருக்கன்மகனுஞ்சகுனியும்பலரும், வீறுகெட்டி ருபதங்கொடுவிரைந்துசெலமீளவிட்டனன்முனெண்டிசையும்வென்றவனே. ()

வேறு.

வேர்த்தெதிர்விசயன்வென்றகளத்தி, லார்த்தெதிர்வந்தாரார்கொல்பிழைத்தா
ரேத்தியபதினெண்பூமியினெண்ணும், பார்த்திவர்பற்பலவாயிரர்பட்டார். (௯௨)

தம்பியருந்துச்சாதனன்முதலோ, ரம்பிலழிந்துதம்மாருயிருய்ந்தா
ரெம்பெருமானன்றெரிகணையேவ, வம்பரமுற்றதனைவருமுற்றார். (௯௩)

மாரதர்வீழ்ந்தாரதிரதர்மாய்ந்தார், சாரதிகளும்வன்றலைகளிழந்தார்
நாரதன்முதலோர்நாகரநேகர், பாரதமின்றேபற்றறுமென்றார். (௯௪)

இந்தவயப்போரிம்முறைவென்று, பைந்தளவோனும்பார்த்தனுமாகச்
சிந்துமகீபற்றேடிமணித்தே, ருந்துறுமெல்லையுற்றதுரைப்பாம். (௯௫)

வள்ளல்குறித்தவலம்புரிநாதத், தெள்ளமுதந்தன்செவியுறுபோழ்தி
னுள்ளணிநின்றமுரசமுயர்த்தோன், றள்ளுறுநெஞ்சிற்சங்கையனானான். (௯௬)

நன்றுணைநின்றசாத்தகியைக்கூய், வென்றிடுபோரில்விசயனிளைத்தா
வன்றிமுழக்கானதிர்வளையையன், சென்றறிகுதிநீயென்றுரைசெய்தான். (௯௭)

வன்கட்டிண்டோள்மன்பலர்நிற்க, வென்கட்டந்தானின்னுரையென்று
மன்கட்டாரோன்மலரடிவீழ்ந்தான், றன்கட்டாண்மைத்தன்முனொடொப்பான்.

கண்ணுறநீள்வார்கடவுள்முதலாம், விண்ணவரேனும்விசயன்வெருண்டான்
மண்ணிலெதிர்க்குமன்னவர்யாரோ, தண்ணளிநெஞ்சர்தருமமுமிக்கோய். (௯௯)

என்றறன்மைந்தனைவறலைக்கொன், டன்னொருதேர்மேலதிரதரோடுஞ்
சென்றனன்வெய்திற்றேவகிமைந்தன், றுன்றியசெருவிற்றாசிபிளந்தே. (௧௦௦)

விருதொடுமுந்தவிளங்கியகொற்றக், கிருதனையாதிக்கேழலொடொப்பா
னொருதனுவுங்கொண்டேர்பரிமாவு, மிரதமும்வில்லுமிமைப்பிலழித்தான். (௧௦௧)

பன்முகநூறாயிரவர்பரித்தே, ரன்மிகநூறாயிரவரழிந்தார்
மன்மதவெங்கைமலைமிசைவீரன், றன்முன்மலைந்தான்றார்ச்சலசந்தன். (௧௦௨)

தார்ச்சலசந்தன்சாத்தகியென்னுங், கார்ச்செலவாயகணைமழையாலே
போர்ச்சலமில்லாப்புகர்மலையோடு, மேற்சலமெய்திவெங்கனலானான். (௧௦௩)

நாட்டமில்லாநரபதிமைந்த, ரீட்டமாகவீரிருவோர்கள்
கூட்டம்பெய்யக்கொடுமுனைவென்றான், வேட்டம்போனவெங்களிறொப்பான்.()

யாரும்போரிலெளிவரவீரஞ், சாருஞ்சாபந்தன்னொடுநேமித்
தேருந்தானுஞ்சென்றிடுவோனைக், கூருஞ்சாபக்குருவெதிர்கண்டான். (௧௦௫)

வேறு.

ஏகலேகலென்னுடனினியமர்புரிந்தேகென்
றாகுலம்படத்தகைந்தனனடற்சிலையாசான்
மேகவண்ணனுக்கிளவலும்வேதியருடன்போர்
மோகரிப்பதுதகுதியன்றெனக்கெனமொழிந்தான். (௧௦௬)

இருவருந்தமதிருசிலையெதிரெதிர்குனித்தா
ரிருவருங்கொடும்பகழியுமுறைமுறையெய்தா
ரிருவருந்தமதேர்சிலையாவையுமிழந்தா
ரிருவரும்பெரும்பொழுதமர்திளைத்தனரிளைத்தார். (௧௦௭)

இளைத்துவேதியனிற்பமன்னவனிளைப்பாறி
யுளைத்தடம்பரித்தேருமற்றொன்றுமேல்கொண்டு
வளைத்தவில்லொடுமன்னணிகலக்கிமேல்வருவோன்
கிளைத்தபல்பெருங்கிரணனில்வயங்கொளிகிளர்ந்தான். (௧௦௮)

யானைதேர்பரிவீரரீரொன்பதுநிலத்துத்
தானையோடுதுச்சாதனனடுத்தெதிர்தடுத்தான்
சோனைமேகமொத்திவன்பொழிதொடைகளாற்கலங்கிப்
பூனைபோலழிந்திருபதஞ்சிவந்திடப்போனான். (௧௦௯)

இடையில்வந்துவந்தெதிர்த்தவர்யாரையுங்கடந்து
புடைவருந்தனதனிகினிநிழலெனப்போதத்
தடையறும்படிதருக்குடன்சார்பெரும்பருவ
விடைநடந்தெனநடந்தனன்விசயனின்றுழியே. (௧௧௦)

பின்னருங்கொடிமுரசுடைப்பெருந்தகைவருந்தி
முன்னநின்றவாயுவின்மகன்முகனுறநோக்கி
மன்னரெண்படுவருதினிவாரியினாப்ப
னென்னராயினரும்பியுமெம்பெருமானும். (௧௧௧)

தகலருந்திறற்சாத்தகிதன்னையும்விடுத்தேம்
பகலுமேற்றிசைப்பட்டதுபாஞ்சசன்னியமும்
புகலுகின்றதுபோர்முகத்ததிர்குரல்பொம்ம
விகல்வலம்பட்டீயுமங்கேகுதியென்றான். (௧௧௨)

சொன்னவார்த்தையும்பிற்படமுற்படத்தொழுது
தன்னொடொத்ததோள்வலியுடைத்தரணிபாகேகர்
மன்னுநால்வகைப்படையொடுந்திரண்டிருமருங்கும்
பின்னுமுன்னுமொய்த்துடன்வரப்போயினன்பெரியோன். (௧௧௩)

கலிங்கர்மாகதர்மாளவர்கவுசலர்கடாரர்
தெலுங்கர்கன்னடர்யவனர்சோனகரொடுசீனர்
குலிங்கராரியர்பப்பளர்கொப்பளர்முதலோர்
விலங்கினார்களைவென்றுறவிலக்கிமேல்விரைந்தான். (௧௧௪)

உரங்கவெங்கொடியுயர்த்தகாவலன்றனக்கிளையோர்
துரங்கமாதிகொள்பலபெருஞ்சேனையிற்சூழ்ந்தோ
ரிரங்குமாழ்கடல்பேருகவிறுதியிலெறியுந்
தரங்கநேரெனவிடையிடைதனித்தனிதகைந்தார். (௧௧௫)

முல்லைமல்லிகையுற்பலங்குமுதமாமுளரி
பல்லம்வாளயில்குலமென்பனமுதற்பகழி
யெல்லையில்லனவிடையறுவகைதொடுத்தெதிர்ந்தார்
வில்விதங்களில்யாவையும்பயின்றகைவிறலோர். (௧௧௬)

விந்தன்விந்தனிருவருமேவிமுனையிற்
றந்தம்வாசியுந்தேர்விடுபாகருந்தாமு
மந்தரந்தனிற்றலைகள்போய்முகில்களையலைப்பச்
சிந்துசோரியம்பெருங்கடலலைத்திடச்சிதைந்தார். (௧௧௭)

போர்க்குமுந்துறுதேரினன்குண்டலபோசி
நிர்க்கலோசனன்றிண்டிறற்சித்திரசேனன்
மார்க்கநேர்படவிலங்கிமாமறலிநேர்வரினுந்
தோற்கலாதவர்மூவருந்தம்முயிர்தோற்றார். (௧௧௮)

சோமுப்பதுகுமாரர்கள்சென்றமர்மலைந்தோ
ரோரொருத்தருக்கோரொருசாயகமுடற்றிச்
சூரன்மெய்த்துணைசோதரும்படியுடன்றொலைத்தான்
மாருதச்சுதன்வல்லவில்லாண்மையார்வல்லார். (௧௧௯)

ஆயுவற்றவர்சுயோதனனிளைஞரேழைவர்
வாயுபுத்திரன்வாளியாலாருயிர்மடியச்
சாய்தலுற்றதுசடக்கெனத்தரணிபன்வியூகந்
தேயுவொத்திவன்சேறலுந்திமிரநேரெனவே. (௧௨௦)

வேறு.

எழுகின்றதுகண்டுபெருங்கடலேழுமொண்டுவிழுங்கியதிர்ந்தெழு
மேகமம்புபொழிந்தெனவெங்கணையும்விசும்புவிரைந்துவிரைந்திட
யூகமின்றுபிளந்துதனஞ்சயனோடிவன்புகுதந்திடலும்படை
யாருமம்பமென்றுதடஞ்சிலையாரியன்சமரந்தனின்முந்தவே. (௧௨௧)

ஆதியந்தணன்வந்ததுகண்டிகலாளிவன்சினமின்றிநலம்பெறு
நீதியன்றுனுடன்சமர்செய்திடலிப்பெருங்குருநின்கழலென்றலை
மீதுகொண்டனனென்றவணக்கவும்வேதியன்வகைமிகுந்துபுகுந்தெதிர்
மோதியம்புதெரிந்தனனன்றிறன்மூரிவெஞ்சிலையுங்குனிகொண்டதே. (௧௨௨)

வீரனென்றுமொழிந்திலன்வந்துமுன்வீழ்சரங்கள்விலங்கிவயம்புனை
தேரினின்றுமிழிந்துநடந்தெதிர்சேரவந்துசெழுஞ்சிலையின்குரு
ஊருகின்றவயங்கிரதந்தனையோரிரண்டுகொங்கொடுவன்புடன்
வாரியுந்தவெறிந்தனன்வண்புயல்வானினின்றவரஞ்சியொதுங்கவே. (௧௨௩)

நாகவிந்தம்வளர்ந்துகிளர்ந்ததுநாகமொன்றியதென்றுநடுங்கிட
மேகபந்திகலங்கவெழுந்ததுமீளவும்புவியின்கண்விழுந்தது
பாகனங்கநெரிந்ததுநொந்ததுபாரமுந்துனிவிண்டனமண்டுருள்
வேகவெம்பரியுந்தலைசிந்தினவேதியன்றனதென்புமொடிந்ததே. (௧௨௪)

வீழவிங்குமவன்றனைவென்றிவன்மேனடந்துழியெண்டிசையும்படை
சூழவந்தவளைந்தனரந்தகதூதர்தங்களினும்பெருவஞ்சக
ரேழுமண்டலமும்புதையும்பரிசேறுகின்றதரங்கநெடுங்கட
லூழியும்பெயர்கின்றதெனும்படியோதைவிஞ்சவுடன்றுசினங்கொடே. (௧௨௫)

காரிலைந்துமடங்குபுலம்பினகாகளஞ்சுரிசங்குமுழங்கின
பேரிபம்பினகொம்புதழங்கினபேரியங்கள்பெயர்ந்துகறங்கின
பூரியும்பொருதஞ்சியவந்தியர்பூபனும்புறமன்றிடவெங்கணை
மாரிசிந்திமலைந்தனன்வெஞ்சினமாறமுன்பவனன்றிருமைந்தனே. (௧௨௬)

மாசுணந்தலைநொந்துசுழன்றனமாதிரங்கண்மருண்டுகலங்கின
வீசுதெண்டிரையம்புவெதும்பினமேலையண்டமும்விண்டுபெகிர்ந்தன
பூசலின்கணுடன்றுகழன்றவர்போர்தொடங்கநினைந்துபுகுந்தன
ராசுகன்றிருமைந்தனுடன்சுடராதபன்குமரன்சமர்முந்தவே. (௧௨௭)

கோபம்விஞ்சினர்விஞ்சைவரம்பெறுகூர்சரங்கடெரிந்தனர்கொண்டனர்
சாபமுங்குனிதந்தெதிருந்தினர்தாரைவெம்பரிதங்கிரதங்களு
நீபமெங்குமலர்ந்தெனமண்டுசெந்நீர்பரந்திடநின்றுமுனைந்தெழு
பூபர்தங்களுடம்புசிவந்தனர்பூரமெங்குமலைந்துபுரண்டவே. (௧௨௮)

மாருதன்புதல்வன்றெருமெம்பினின்மாவிரண்டுமிரண்டும்விழுந்தன
சோரும்வன்றுவசந்தரியுண்டதுசூதனுந்தலைசிந்தினன்முந்திய
தேருமுந்துருளுந்துகள்கொண்டனசேமவெங்கவசந்துனிவிஞ்சிய
தாரவெண்குடையம்புவியும்பிறையானதஞ்சலினெஞ்சுமழிந்ததே. (௧௨௯)

வேறு.

அழிந்துகன்னனுங்கால்விசையினிலிவனம்பினுக்கெட்டாமல்
வழிந்துபோதல்கண்டடல்விடசேனனவ்வள்ளலுக்கெதிரோடி
யிழிந்ததன்பெருந்தடமணித்தேரின்மேலேற்றலுமிவனேறிக்
கழிந்தநீர்க்கணைகோலுவான்போலவன்கண்ணெதிருறச்சென்றான். (௧௩௦)

சென்றுமீளவும்வீமனேடெதிர்ந்துவெஞ்சிலையமர்புரிந்தந்தக்
குன்றுபோனெடுந்தேருநண்டுகள்படக்குலைந்துவெண்கொடித்தோடக்
கன்றிநாகவெங்கொடியவன்கண்டுதன்கண்ணிகரினையோரை
யொன்றிநீர்விரைந்துதவுமென்றிருவரையொருகணத்தினிலேவ. (௧௩௧)

கன்னனைக்கடிதுற்றிருவருமதுகயிடவரெனத்தக்கோர்
மன்னருக்கரியனையவீமனுக்கெதிர்வரிசிலையுறவாங்கி
யந்நிலத்தினிலவனுடனெடும்பொழுதமர்புரிந்தவன்கையிற்
செந்நிறக்கொடும்பகழியாற்றம்முடல்சிதைந்துவானிடைச்சென்றார். (௧௩௨)

தனதுகண்ணெதிரிருவருமழிந்தபின்றபனன்மைந்தனுநொந்து
கனதுரங்கமழுங்குதேர்வயப்படைக்காவலன்முகநோக்கி
யுனதுதம்பியரிருவரைச்செற்றவன்முடித்தலையொடியேனே
லெனதுபுன்றலையவன்கையிற்கொடுப்பனென்றெதிருற்றொருதேர்மேல். (௧௩௩)

குனித்தசாபமுந்தொடுத்தசாயகங்களுங்குலவுமால்வரைத்தோளுந்
துனித்தநெஞ்சமுமுரிந்தனபுருவமுமெரிந்தகண்களுந்தோன்றப்
பனித்ததேரொடும்போருடன்றெழுதரும்பரிதியின்விரைந்தெய்தி
யினித்தராதலமுபாகசேதனற்கெனவிளவலோடிகல்செய்தான். (௧௩௪)

ஆற்றையொத்தனகால்வழியனைபுருமாமைதொட்டடன்மள்ளர்
சேற்றையொத்தனநித்திலமெடுத்தெறிசெல்வநீள்குருநாடன்
காற்றையொத்தனன்வலியினாற்சினத்தினாற்கதிரவன்றிருமைந்தன்
கூற்றையொத்தனன்பிறப்பிலேதவக்குளோர்குணங்களுங்கொள்ளாரோ. (௧௩௫)

தேறல்வண்டிமிர்தெரியலான்றினபதிசிறுவனைமுகநோக்கி
யாறல்வெஞ்சமத்தென்னுடன்முனைந்தனைமுனைந்தனையானாலும்
வேறலென்கடனின்னைமன்னவையின்முன்விளம்பியவசனத்தாற்
கோறலெம்பிதன்கடனெனவரிசிலைகுனித்தனன்கொடித்தேரோன். (௧௩௬)

இலக்கமெற்றவெங்கணைகளாலிருவருமெதிரெதிரமராடிக்
கலக்கமுற்றபின்றினகரன்மதலையக்காற்றின்மைந்தனைச்சீறி
யலக்கணுற்றிடப்பலபெருங்கணைதொடுத்தவன்விடுங்கணையாவும்
விலக்கிவெச்சிரத்தேரும்வெம்புரவியும்விறற்றுவசமும்வீழ்த்தான். (௧௩௭)

காலினால்வருங்காலின்மைந்தனைக்கடுங்கதிரவன்றிருமைந்தன்
வேலினாலடர்த்தெறிதலுமெறிந்தவேல்வேறிருதுணியாகக்
கோலினாலவன்றுணித்துமீளவுமழல்கொளுத்தியென்றொருதண்டு
நாலினான்முழமுடையதுகன்னன்மேலெறிந்தனனகைசெய்தான். (௧௩௮)

தேரவன்றிருமைந்தனேறியதடந்தேரும்வாசியுஞ்சிந்தி
யூரவந்தவெம்பாகனுந்தலைபிளந்தோடலுற்றனன்பின்னும்
வீரனும்பெருவலியுடன்வருகெனவேறொர்தேர்மேற்கொள்ளத்
தூரநின்றவரிருவருமுடன்றமைசுயோதனன்கண்ணுற்றான். (௧௩௯)

கண்டுதன்முகனெனுந்தனியிளவலைக்கடிதினேவலுங்கங்குல்
வண்டுசெஞ்சுடர்வலையவந்திறந்தெனவலியவார்சிலைவாங்கிக்
கொண்டுநின்றிறல்வாளியான்மலைமிசைக்கொண்டல்பெய்வதுபோல
மண்டுபோர்புரிந்தண்ணல்கைப்பகழியால்வானிமைப்பினிலுற்றான். (௧௪0)

தாளினோடியகன்னன்மன்னவன்விடுதம்பிவீழ்தலும்வீமன்
றோளினோடிமண்மிசைபுதைதரவொருதோமரந்தனையேவ
வேளினோடிசைவீமன்மேலதுசெலும்வேலையின்விடவெவ்வாய்க்
கோளினோடியகுரிசில்கைக்கணையினாற்கோளழிந்ததுமன்றே. (௧௪௧)

மன்னர்மன்னவன்றம்பியரிருவரைமாருதிமிசையேவ
முன்னர்வந்தவரிருவரும்படப்படமுனைந்தபோர்மதியாமன்
மின்னிருங்கணைவிகருணன்முதலியோர்வீமன்மேலோரைவர்
பின்னருஞ்செலாக்கவரைப்பிறைமுகக்கணையினாற்பிளந்திட்டான். (௧௪௨)

வே று.

பகருநால்வரும்பட்டபின்பைங்கழல், விகருணன்பொரவெஞ்சிலைவாங்கனு
ம், புகனும்வஞ்சினம்பொய்க்கினுநின்னுட, னிகல்செய்யேனெம்பியேகுகென்று
னரோ. (௧௪௩)

சுடுவுரைக்கனலன்னதுச்சாதனன், வடுவுரைக்கவுமன்னுறைமன்றிடை
நடுவுரைக்குநன்றுவுடையாயுனைக், கொடுவுரைக்கணையேவினுங்கொல்லுமோ. ()

பாரறிந்துபழிக்குட்படாதநின், னேரறிந்தும்பொரநெஞ்சியையுமோ
போரறிந்துபொருகவென்றுனெடுஞ், சீரறிந்தவர்செய்ந்நன்றிகொல்வரோ.(௧௪௫)

வீமனிப்படிச்சொல்லவும்வேரியந், தாமமுற்றதடவரைத்தோளினான்
மாமணிச்சிலைவாங்கியவ்வீமன்மேற், றீமுகக்கணையுஞ்சிலசிந்தினான். (௧௪௬)

எம்முனோர்களெனைவருமுங்கையில், வெம்முனைக்கணையால்விளிந்தேகவு [னன்.
மும்முன்யானொருவேனுமுய்வேன்கொலோ,வம்மின்வார்சிலைவாங்குகென்றோதி

மிகநகைத்தும்வெறுத்துந்திரிபுர, தகனனேத்தசமீரணன்மாமகன்
முகனுறச்சென்றுமூரிவில்வாங்கிமே, லிகனிறக்கணையேவினனென்பவே. ()

ஏவினாலிவ்விருவரும்வெஞ்சம, மேவினார்மெய்படாமல்விலக்கினர்
கூவினாரறைகூவிப்பொருதினைத், தோவினார்தமையேநிகரொத்துளார். (௧௪௮)

விகனன்விட்டகணைகளின்வீமன்மெய், யிகன்மணிக்கவசம்பிளந்தேறுதே
ரகலரிக்கொடியற்றுக்கொடிஞ்சியுஞ், சகலமுற்றுத்தனுவுமுரிந்ததே. (௧௫௦)

மின்னையொத்தவிறற்படைமாருதி, பின்னைவிட்டபிறைமுகவார்கணை
யன்னைசித்தமலமரப்பின்னவன், றன்னைவெற்றிமகுடந்தடிந்ததே. (௧௫௧)

கோவிகன்னன்கொலைபடப்பற்பல, ராவிகன்னமறைகணையாலறப்
பாவிகன்னன்பதைக்கவென்றேகினன், மேவிகன்னகம்போற்புயவீமனே. ()

அன்றுசாதத்தலகைகளாடவே, சென்றுசாத்தகிதன்னுடன்சேர்ந்தனன்
றன்றுசாத்திரத்தின்படிசூழ்முனே, வென்றுசாத்தியவாகைகொள்வேலினான். ()

அங்கிதன்னொடனிலமுஞ்சேர்ந்தெனச், சங்கபாணிதன்றம்பியும்வீமனுஞ்
செங்கலங்கலஞ்சேற்றிடைமூழ்கிய, வெங்களத்துவிசயனைக்கூடினர். (௧௫௪)

வே று.

தேவரும்பரவுபாகன்செலுத்துதேர்விடலையோடு
மூவருஞ்சுடர்கண்மூன்றுமூண்டெனத்திரண்டகாலை
மேவருஞ்சமரின்முன்னம்வென்கொடுத்துடைந்தவேந்தர்
யாவருந்திருகிவந்தாங்கெதிரெதிராகிச்சூழ்ந்தார். (௧௫௫)

சாத்தகிதானும்பூரிசவாவும்வெஞ்சாபம்வாங்கிக்
கோத்தனர்பகழிசென்றுகுறுகினதேருந்தேருஞ்
சேர்த்தனர்மலைந்தகாலைச்சிலைதுணிவுண்டுதேர்விட்
டேத்தருந்தடக்கைகொட்டியிருவருமல்லினின்றார். (௧௫௬)

மல்லினின்வென்றுவீழ்த்திமாயவன்றம்பிதன்னைக்
கொல்லுவான்முனைந்துமற்றைக்கோமகனடர்த்தனேக்கிக்
கல்வினின்மாரிகாத்தோன்கண்டுவில்விசயனோடுஞ்
சொல்லினன்பகைவன்றன்னைச்சுடர்முடிதுணித்தியென்றே. (௧௫௭)

இருவருமுனைந்தபோரிலிளைத்தவற்குதவியாகப்
பொருவருகடனன்றென்றுபோற்றியவிசயன்றன்னை
வெருவாமுனைந்துசிறிதீளவும்விளம்பமாயன்
றிருவுளமறிந்துதெவ்வன்றிண்புயந்துணியவெய்தான். (௧௫௮)

புயந்துணிவுண்டபூரிசவாவினைப்புரிந்துதள்ளிச்
சயம்புனைவானிற்றம்மைபத்தார்புனைதலையுங்கொய்து
வயம்புனைக்கிளவனிற்பமன்னறமன்றிப்போரென்
றியம்பியவிராசராசற்கெதிர்மொழியியம்பலுற்றான். (௧௫௯)

கென்னவிரபிமன்றன்னைநேரறவென்றபோரு
முன்னமேயிவேதன்றன்னைவிடுமென்முடித்தபோரு
மன்னறமுறைதவாமன்மலைந்தனிரென்றுநக்கான்
றன்னைவந்தடைந்தோர்க்குற்றதளர்வெலாமொழிக்குந்தாளான். (௧௬0)

பின்னரும்விசயனிற்பப்பேணலார்பின்னிட்டோட
மன்னரின்மலைந்தோர்தம்மைவாளியால்வானிலேற்றி
முன்னவனேறுமேந்தமுகில்வண்ணனிளவலோடுந்
தன்னுரைவழுவாவண்ணந்தரியலர்படையைச்சார்ந்தான். (௧௬௧)

அருக்கனேர்கணத்திலத்தமடையுமவ்வளவுங்காக்கிற்
செருக்கினர்விசயனின்றேறியிடைவீழ்தறிண்ண
நெருக்குபுகின்மினென்றுநிலவறையதனிலந்த
மருக்கமழ்தொடையலானைவைத்தனர்மருவலாரே. (௧௬௨)

நச்சினையரவமென்னநடுங்கினனின்றகாலைத்
தச்சனைகணவன்றன்னைத்தோற்றமொன்றானுங்காணான்
பச்சைமுடைசொண்மேனிப்பாடிமாமகளிர்பைம்பொற்
கச்சைபுளகபாரக்கனதனங்கலந்ததோளான். (௧௬௩)

வேறு.

பாராழியவலமறப்பாண்டவர்தம்மிடர்தீரப்பார்த்தன்வாழப்
போராழியணைதுயிலும்பெருமிதமுமுடன்மறந்துபிறந்தமாயோ
னோராழியெழுபரித்தேருடையானைமாயையினாலொழிக்கத்தன்கைக்
கூராழிபணித்தலுமக்களம்போலச்சிவந்தனவக்குடபாலெங்கும். (௧௬௪)

அயத்திரதமிடப்பசும்பொனுவதுபோலருச்சுனனுரதிஞுக
நயத்திரதமொழிக்கேதைநவின்றபிரான்மயக்கறியார்நாள்செய்வான்றன்
வயத்திரதமறைந்ததெனவலம்புரித்தாரவன்சேனைமன்னர்யாருஞ்
செயத்திரதன்றனைக்கொண்டுசெருமுனையில்விசயனெதிர்சென்றுசேர்ந்தார். ()

வன்சிறந்தமகன்றலையைநிலத்திட்டான்றலைதுகளாகென்றுநாடித்
தன்சமந்தபஞ்சகமென்றொருமடுவிலிவன்றாதைதருப்பிக்கின்றா
னென்சரங்கொண்டிவன்றலைமற்றவன்கரத்திற்போய்விழநீயுடற்றுகென்று
நின்சயங்கொள்விசயனுக்குச்சிந்துபதிதனைக்காட்டித்திருமால்சொன்னான். ()

வரத்தினின்முன்பெறுசர்பம்வாங்கியருச்சுனன்சிந்துமகிபன்மௌலிச்
சிரத்தினிலெய்தலுந்துணிந்ததொருசரத்தாற்றுணிதலுமச்சிரம்வீழாமற்
சரத்தினமேன்மேலேவித்தடத்திருந்துதருப்பித்ததாதைதன்பொற்
கரத்திடையேவீழ்வித்தானவனதலைநிலத்திட்டக்கணத்தின்மாய்ந்தான். (௧௬௭)

முன்பட்டானருக்கனெனவெளிப்பட்டான்வெளிப்பட்டுமுடிவிற்சிந்து
மன்பட்டான்மாமாயன்மாயமிதென்றறியாமன்மகன்போய்ப்பட்ட
பின்பட்டானவன்றந்தையினிப்பட்டாரெவருமெனப்பிழைப்பட்டான்போ
லென்பட்டானரவுயர்த்தோனெரிப்பட்டான்விசயனெனவெண்ணிநின்றான். ()

கன்னசவுபலர்முதலாங்காவலருஞ்சுயோதனனுங்கரந்தான்வெய்யோன்
சொன்னமொழிபிழைத்தான்வெஞ்சுவேததுரங்கமனென்றுதுள்ளியார்த்தா
ரன்னபொழுதெம்பெருமான்பணிகொண்டசுடராழியகற்றநோக்கி [ன்.
னின்னமொருபனைத்தனைப்போழ்துண்டெனநின்றனனெழுபேரிவுளித்தேரோ

விரியோதநெடுங்கடலில்வீழ்வதன்முன்விரைந்துரகன்விழுங்கினானே
வெரியோடிமகனிறக்குமெனமகவான்மறைக்கமுகிலேவினானே
கரியோன்கைத்திகிரியினான்மறைத்தனனோவிருள்பரந்தகணக்கீதென்னோ
பெரியோர்கடிருவுள்ளம்பேதித்தாலெப்பொருளும்பேதியாதோ. (௧௭௦)

உந்திரதத்தனிவலவனுபாயத்தால்வருணன்மகனுயிரைமாய்த்தான்
மந்திரமொன்றறிவித்துவயப்புயமாயிரத்தோனைமடிவித்திட்டான்
றந்திரமெய்ம்மயங்கிவிழத்தன்சங்கமுழக்கினான்றபனன்மாய
விந்திரசாலமுஞ்செய்தானிந்திரன்சேய்வெல்லாமல்யார்வெல்வாரே. (௧௭௧)

முடையெடுத்தநவநீதந்தொட்டுண்டுங்கட்டுண்டுமுதனாகக்
குடையெடுத்துமழைதடுத்தும்வஞ்சனைக்கோர்கொள்கலமாங்கொடியபாவி
படையெடுந்துவினைசெய்யேனெனப்புகன்றமொழிதப்பிப்பகைத்தபோரி
னிடையெடுத்தநேமியினால்வெயின்மறைத்தானின்னமிவனென்செய்யானே. ()

ஒற்றைநெடுந்திகிரியினன்மறைவதன்முனைவரையுமுடனேமோதிச்
செற்றிடுதல்யான்படுதறிண்ணமெனச்சேனையொடுஞ்சென்றுசூழ்ந்தான்
கொற்றவனதுரைகேட்டுக்கொடிநெடுந்தேர்நரபாலர்சபதங்கூறி
மற்றவரோடொருகணத்தில்வம்மினெனத்தனித்தனிபோய்மலைதலுற்றார். (௧௭௩)

துருபதனுஞ்சாத்தகியுந்திரௌபதிமைந்தருமுடுகித்தொட்டசாபக்
குருவுடனேபோர்செய்தார்தம்பியருஞ்சுயோதனனுங்கொற்றவேந்த
ரொருபதினாயிரவரும்போய்வீமனுடனுடற்றியவனூர்ந்ததேரும்
வரிசிலையுமழித்தனர்பினவனும்வெறுங்கரதலத்தால்வன்போர்செய்தான். (௧௭௪)

பரியெடுத்துப்பரியெற்றிப்பரித்தோராற்றேரெற்றிப்பனைக்கைவேகக்
கரியெடுத்துக்கரியெற்றிக்காலனிகர்காலாளாற்காலாளெற்றிக்
கிரியெடுத்துவிரியாழிகடைந்ததடந்தோளிருடிகேசனென்ன
வரியெடுத்தகொடிவிடலைதோள்வலியாலுழக்கியரிநாதஞ்செய்தான். (௧௭௫)

நிருபர்தொழுங்கனைகழற்காணிலவேந்தன்றம்பியரினெடும்போதாக
விருவர்புறங்கொடாமலதிர்ந்தெதிர்ந்திருதோள்வலிகாட்டவிருவரோடு
மொருவரொருவரையறியாவண்ணமிவனொருவனுமேயுடன்றுசீறிப்
பொருதுபிருகனையும்விறற்சுசிதனையும்வானிற்போக்கினானே. (௧௭௬)

இகலிடிம்பன்மருமகனுந்திருமகனுங்குருமகனோடெதிர்ந்துபல்கா
லகலிடஞ்செஞ்சேறுகவமாருடனசுரரைப்போலமர்செய்காலைப்
பகலுடன்காரிருள்பகைத்தாற்பவிக்குமோவஞ்சனபன்மனையப்போதிற்
புகலிடம்பொன்னுலகாக்கிப்போக்கினானொருகணையாற்புரவித்தாமா. (௧௭௭)

நின்சிலையினெடுநாணொலியோடணிசிஞ்சிதமுமெழமாலிளையோனிணை
வன்புயமும்வியன்மார்பமுமுறவன்புபெறுபலவாளிகளேவலு
நண்பொடவனிவனேறியதேர்கொடிகன்புரவிகுடைபாகிவைவீழ்தர
வொண்பிறையின்முகமானசிலீமுகமொன்பதுதையினன்வாகுவுமார்புமே. (௬௪)

குன்றிலருவிகள்போன்மததாரைகள்கொண்டகடதடவாரணமாமிசை
சென்றுசிலகணையேவினபோரிருசிக்குமிரணதிவாகரராமென
வின்றுவயதுழுவிர்புதுநீர்வருமென்றுவரிமணலேகுறிகூடிட
வன்றுவருகுடகாவிரிநாடனுமம்பொன்வரிகழன்மாகதர்கோவுமே. (௬௫)

சங்கைதவியிடைவேயொடுபோகடர்கம்பசிகளமதாசலநீருண
வங்கமறிகடல்சூழெழுபார்வலம்வந்தமனுகுலசோழனைமாகத
னங்கனையரிளமாமுலைதோய்ப்புயமத்திவெயினிகர்சோரியின்மூழ்குற
வெங்கணழலுமிராவதிராவெதிர்மின்கொலெனவிணைவாளிகளேவவே. (௬௬)

வஞ்சிமதுரைபுகாருடையான்வடமண்டலிகர்திறைவாரியநேரியன்
விஞ்சிமுனைதொறும்வாளசுரேசனைவென்றபொழுதடல்வானவர்கோனரு
ளஞ்சுபொழியெரிகாலொருகோல்கொடுகம்பர்சிலைமலைபோலவனேறிய
குஞ்சரமும்விழமாகதர்கோனுயிர்கொண்டுதிருகினன்வார்சிலைகோலியே. (௬௭)

அண்டர்குலபதியாம்விடைவாகனனம்பொனடிமலர்நாறிடுசேகர
னெண்டிசையுமனுநீதிசெய்கோலினனெங்குமொருகுடையாலிடுநீழலன்
மண்டிரணசிகாமணிமோலியன்வண்டுமதுநுகர்தாதகிமாலையன்
மிண்டுமுதுபுலியேறுபதாகையன்வென்றிவளவனையார்நிகர்வீரரே. (௬௮)

வேறு.

யாதேவலென்றுபலமன்னருமீண்டவிப்பார்
மீதேவல்கொள்ளும்விறற்சென்னிவகைவில்லின்வன்பான்
மோதேவுபட்டுமுகமாறிமகதர்கோமான்
சாதேவன்வீழமுதுகிட்டதுதானைவெள்ளம். (௬௯)

புறமிட்டதானைநிலைகண்டுபொருதசோதி
நிறமிட்டவிற்கைத்துரோணன்மகனெஞ்சுகன்றி
மறமிட்டவாளிபலதூவிவருதனோக்கி
யறமிட்டசிந்தையரசன்றனநுசர்தம்மில். (௭௦)

இன்றேமுடிப்பன்வினையென்றிரண்டிந்திரநீலக்
குன்றேநிகர்ப்பத்திருமாலொடுங்கூடிநிற்பான்
சென்றேயதிரப்பரித்தாமனைச்செங்கையம்பால்
வென்றேயிமைப்பின்வெறுங்கரவினின்மீளவிட்டான். (௭௧)

துரியோதனன்றனிலையோரிற்சுதக்கணைப்பேர்ப்
பெரியோன்முறிந்தபெருஞ்சேனையின்பின்புநின்றோன்
பரியோடுமொன்றேர்ப்பரப்போடும்பதாதியோடுங்
கரியோடுமூழிக்கனலென்னக்கனன்றுவந்தான். (௭௨)

முகிலின்சிலையிற்சிலைகோலிமுனைகொளம்பு
பெயலந்தொடுத்துவருகாளையைப்பெட்பினோக்கி
கருணஞ்சிறிதாவகைசெய்தவகைசெய்வாளி
யிலக்கொடெட்டாக்கவன்றன்னையுறஞ்சவித்தான். (௭௩)

மட்டுப்படாமல்வருதெவ்வர்மலையினின்றே
தட்டுப்படாதின்றெமரானவர்தானையென்றுப்
பட்டுப்படாதவடிவேனரபாலர்சூழ
முட்டுப்படாதமுராட்கன்னன்முனைந்துசென்றான். (௭௪)

பாஞ்சாலரிற்கேகயரிற்பலபாடைமாக்க
ளாஞ்சார்பினில்வந்தடைந்தோர்களினன்றுபோரின்
மாஞ்சாரொழிந்தபலமன்னருஞ்சூழவண்டு
பூஞ்சாறருந்துநறுந்தார்கள்புனைந்ததோளான். (௭௫)

மன்னன்றருமன்றிருமைந்தன்மலையவந்த
கன்னன்கருத்துங்கடுஞ்சேனையுங்கண்டுமேற்போய்ப்
பொன்னம்பொருப்போரிரண்டென்னவெம்பூசல்செய்தா
ரின்னந்தமக்குத்தமையன்றியெதிரிலாதார். (௭௬)

உதையன்புதல்வன்பெருஞ்சேனையுதிட்டிரன்கைக்
குதையம்பில்வீழ்ந்தாரிணையோரெனக்கூறறேற்றா
ரிதையம்பழுதிலிவன்சேனையவன்கையம்பா
லுதையுண்டுவீழ்ந்தாருரைத்தாலுமுரைக்கலாற்றா. (௭௭)

பொற்பூசலென்னவிருசேனையும்போயுமீண்டு
மற்பூசல்செய்யவொளிசெய்யுமம்மன்னர்தம்மின்
முற்பூசலம்பிற்பிளந்தண்டமுகடுவிள்ள
விற்பூசலெய்திப்புரிந்தார்வில்லின்வேதம்வல்லார். (௭௮)

கொலையம்புமாளாமணியாவமுங்கொண்டசெங்கைச்
சிலையுங்கிரிகளிரண்டென்னத்திரண்டதோளு
நிலையுங்குறிப்புஞ்சிறுநாணொலிநின்றவாறு
மலையுந்திறலும்புகழ்ந்தண்டரும்வாழ்த்தினாரே. (௭௯)

தாழங்குறித்துக்கரைசெய்யுந்தரங்கவேலை
யாழம்புராசியெழுபார்தனியாளநிற்போன்
சூழம்பொன்மாலைத்துணைத்தோள்களினெட்டுமார்பி
னேழம்புமெய்தானிருள்காயுமிறைவன்மைந்தன். (௮௦)

தன்றோளுமார்புஞ்சரமூழ்கவெஞ்சாபம்வாங்கி
நின்றோனைவாய்மைநிலைநின்றநிருபரேறு
வன்றோளுறநாண்வலித்தோரிருவாளியேவிச்
சென்றோரிமைப்பிற்புயங்கீறிச்சிலையும்வீழ்த்தான். (௮௧)

வேறோர்வரிவில்வெயிலோன்மகன்வெய்தின்வாங்கி
நூறோடுநூறுதொடுத்தேவுநுதிகொளம்பாற்
கூறோரிரண்டுபடயாரையுங்கொன்றபோழ்தி
னாறோடிவிட்டதடையாருடலற்றசோரி. (௮௨)

சாதேவன்றண்டதான்றண்டகன்சித்திரதேவன்
றீதேதுமில்லாத்திறற்சாத்தகிசித்திரகீர்த்தி
தாதேறுதார்த்தம்பியரோடிகற்றண்டநாதன்
மீதேறுதேருந்தகர்ந்தொண்சுடர்வில்லுமற்றான். (௮௩)

முன்சேனையோடும்வலியுற்றமுனைந்தகொற்ற
மன்சேனைநாதன்பொழிவாளிமழையின்மூழ்கித்
தன்சேனைநாதன்முதல்யாருந்தளர்தல்கண்டு
நன்சேனைநாதனுமுடன்குழுநடக்கலுற்றான். (௮௪)

வேறு.

நிருபனென்றெண்டிசையும்வரிசிலைக்குரைசெய்முனிகிருதவன்மன்சிந்தை
விரருடைச்சகுனியெனு, நிருபாங்கங்கடொறுநிரையினிற்றலையுருவநெடியவம்
பைம்பதறுபதுபடப்படமுடுகி, முரண்மிகுந்திண்கடவுண்முரசுடைக்கொடிகொள
ளிமுகிலின்வந்தண்டர்குலமுதல்வனத்தனுவினொடு, தரணியின்கண்சமரமலைவ
தொத்திரதமிசைதருமன்மைந்தன்பரிதிபுதல்வனைக்குறுகினனே. (௮௫)

தருமன்மைந்தன்பரிதிபுதல்வனைக்குறுகியிருசரமவன்செங்கைவரிசிலைதுணி
த்திடவுமெறி, ரிருசரந்துன்னியுயர்கொடியறுத்திடவுமுடனிருசரஞ்சென்றுதனியி
ரதமொட்டிடறிடவு, மொருசரம்பொங்குதிறல்வலவன்மெய்ப்புதைதரவுமொருசர
ந்திண்கவனதுரகதத்தானுறவும், வரமிகுந்துங்கதனுவினைவலைத்தெரிகொள்சிலவ
டிசரங்கொண்டவனதிருபுயத்தெழுதினனே. (௮௬)

வடிசரங்கொண்டவனதிருபுயத்தெழுதியபின்வடகலிங்கக்குருமகதமொட்
டியமுதல, படிதொறுந்தங்கள்குடைநிழல்பரப்பியவரசர்பலருடன்பைம்பொன்மு
டிமகுடவர்த்தனர்பலரு,மிடிமுழங்குங்குரலினதிபயத்தொடுபிலனிலிழிபுயங்கங்க
ளெனவொருவருக்கொருவர்நடை, யடிதளர்ந்தஞ்சலியுமுதுகுமிட்டவரொழியவ
டையவன்றம்பர்பதிகுடிபுகப்பொருதனனே. (௮௭)

அடையவன்றம்பர்பதிகுடிபுகப்பொருதுதனதணிகொள்சங்கம்பவளவிதழி
ன்வைத்தருளுதலு, முடையுமண்டத்திசைகள்செவிடுபட்டிடுமெமருலகுபொன்று
ம்பணிகள்பிலமுமுற்றுறவிடியு, மிடைவழங்குந்தரணிவளர்சனத்தொடுமெடியுமென
முழங்கும்பெரியவரவமெக்கடலுமெழு, கடையுகங்கண்டவடவையின்முகத்தெரி
கனலிகதுவமண்டும்பவனனெறிவியினிற்கடுகியதே. (௮௮)

கதுவமண்டும்பவனனெறிவியினிற்கடுகியணிகவசமுங்குண்டலமுமகபதிக்கரு
ள்குரிசில், சதுர்முகங்கொண்டதொருகனகமொட்டிரதமொடுசதுர்விதந்தங்குகதி
யிவுளியொப்பறவடசி, மதுபமொன்றும்புதியதெரியன்மந்திரகிருபவலவனுந்தும்
பொழுதிலதனின்மிக்கெழுமடியு, மதிரவெங்குந்தனதுவளைமுழக்கினினயரவற
னின்மைந்தன்சமரமுனைமுகத்தணுகினனே. (௮௯)

அறனின்மைந்தன்சமரமுனைமுகத்தணுகியவனகலமுந்திண்புயமும்வடிசுட
ர்ப்பகழிபல, வுறவுமஞ்சங்கண்முடியுருவையற்றிரதநவுடையவுந்துங்கவரிசிலைகு
ணத்துடனறவு, மறம்விளங்கும்பரிகணிகள்பட்டிடவும்விறல்வலவனங்கஞ்சிதறி
யுராணிறுத்தனமுதகு, பறியவுந்தண்டுமுரசெழுதபொற்றுகிலினெடுபெரியவஞ்சண்
டதனுவறவனைத்தனனிவனே. (௯௦)

இவனுமவனைப்புயமுமுரமுமுழுகத்துவசமிடியமணிமொட்டிரதமொடியவரி
விற்றுணிய, நவநடைவயப்புரவிவிறல்வலவன்மெய்ப்புதையநகுசரநிரைத்தொரு
வினைவெறவணக்கினபி, லவனுமிவனைப்பிறகுபொருதமுன்மலைத்தபடியடையவு
மழித்தனனிவ்வடன்மிகுசளத்திலென, வுபகிடதவித்தமுதலவனிபரெனைப்பலரு
முரமுமவர்கற்றகலையுநதியுமுரைத்தனரே. (௯௧)

உறுதியுடன்மற்றொராதமிசைகொளுமுதிட்டிரானுமொருகையில்வயச்சிலையு மொருகையில்வடிக்கணையும், விறலினொடெடுத்தெதிர்செல்பொழுதருண்மிகுத்த மொழிவெயிலவனளித்தருளும்விதரணகுணக்குரிசின், மறமுறவிடுத்தகணைபொடி யுறவியற்றியவன்மதுமலருரத்தைவழிவழிதுளைபடுத்துதலி, னெறிபடைவிடுத்திரத மிசையுறவிளைத்துமுதுகிடவறன்மகற்கிரவிமகனிவையுரைத்தனனே. (௯௨)

உரையுடையைகற்றகலையுணர்வுடையைதக்கமதியுளமுடையைமிக்கவிளையுற வுடையைசத்தியருண, வரையுடையையெத்திசையும்வழுவறவளர்த்தபுகழ்வரிசை கொளறத்தினைஞர்வழிபடுமெதிப்புடையை, தரைமுழுதுமுத்தநிலவுமிழ்குடைநிழற் றவொருதனிநனிபுரக்குமுயர்தலைமைபெறுகிற்றிபகை, கரையழியவுற்றபொழுது யிர்கொடுபுறக்கிடுதல்கடனலவுனக்குநிலைகருதியணிநிற்றியெனவே. (௯௩)

கருதியணிநிற்றியெனவுறுதிசமரத்துரைசெய்கருணனைமதித்துமிகுகருணைய வனிற்பளவில், விருதர்தலையற்றுருளவிருதர்மதவத்திகளின்விரிதலைகளற்றுருளவி றலிவுளிமெய்த்துணிய, விரதம்வயிரச்சுருளைமுடிகொடலையற்றுருளவிருபுறமுமிட் டவிறலொருகதைகொடெற்றியெதிர், பொருசமர்முருக்கிவருபுரையில்பவனக்கட வுள்புதல்வ்னெரிமைப்பொழுதின்முதல்வனையடுத்தனனே. (௯௪)

வேறு.

முதல்வன்வென்னிடுதல்கண்டுமுடியுடைவேந்தரோடும்
விதலையில்வயிரநெஞ்சின்வீமன்வந்துறலுங்காலின்
புதல்வனைப்பொருதுவேறலரிதெனப்பொலம்பொற்றேரோன்
மதலையைநோக்கிப்பாகன்வன்பகைதோன்றச்சொன்னான். (௯௫)

காமனேயென்னநின்றகன்னன்விற்கையில்வாங்கில்
வீமனேயாகவென்றிவிசயனேயாகவெற்றித்
தாமனேகாண்டியிற்றைச்சமரிலென்றழல்வாயொற்றைத்
தூமநேர்பகழிக்காற்றார் தூண்டுதியிரதமென்றான். (௯௬

என்னுமுன்மருத்தின்மைந்தனிரதமேல்வரிவில்வாங்கிக்
கன்னனதுரையும்வில்லுங்கணத்திடைச்சிதைந்துவீழ
முன்னொருவாளிதொட்டானெதிரியுமுரண்வில்லொன்றாற்
பன்னிருவாளிமீளிமார்பிடைப்பரப்பினானே. (௯௭)

பாய்ந்தவப்பாணந்தன்னைப்பாணியாற்றிமிர்ந்துவீமன்
காய்ந்தவாளனையதாரைக்கடுங்கொடும்பகழியொன்றா
லேய்ந்ததேரருக்கன்மைந்தனிதயத்துமூழ்குவித்தான்
வேய்ந்ததாரவனுந்தேரின்மிசையயர்வுற்றுவீழ்ந்தான். (௯௮)

வீழ்தலுமன்னர்மன்னன்வெம்படைவென்னிட்டோட
வாழ்வறவீழ்ந்தோன்றன்னைமத்திரத்தலைவன்றேற்ற
வேழ்பரித்தேரோன்மைந்தனெழுந்துபின்சாபம்வாங்கிச்
சூழ்படைவீரர்யாருந்துஞ்சிடத்துணித்திட்டானே. (௯௯)

கைத்தலவன்மைவேந்தன்கார்முகம்பொழிந்தவம்பா
லெத்தனைநிருபர்மாய்ந்தாரெண்ணுதற்கியாவர்வல்லார்
பத்திகொள்சாதுரங்கப்படைஞர்பாஞ்சாலர்தம்மிற்
செத்தனரெழுவர்சிங்கசேனனையுள்ளிட்டாரே. (௪00)

சேனையுமுறிந்துவீமசேனனுமுதுகிட்டோடக்
கானமர்துளவோன்கண்டுகடும்பரிநெடுந்தேர்தூண்ட
யானைமேற்சிங்கஞ்செல்வதென்னவந்தெய்தியிட்டான்
வானவர்க்கரசன்மைந்தன்மைந்துடைவரிவில்லோனே. (௪௱௧)

சென்றவன்சேனைதன்னினிருபருஞ்செருச்செய்திற்பா
னின்றவன்சேனைதன்னினிருபருநேர்ந்தகாலை
யென்றவன்மதலையேயுமிமையவர்தெவ்வையோட
வென்றவனேயுந்தம்மில்விசும்பினைவேய்ந்தவாலோ. (௪௱௨)

இரவிதன்மதலைக்காகவிமைத்தகண்விழிக்குமுன்னர்ப்
புரவியந்தாமாவென்னும்பூசுரன்றேரிற்றோன்றி
யரவினைச்செல்வன்மெய்யுமருச்சுனன்மெய்யுஞ்செக்கர்
விரவியவானமென்னவெஞ்சரம்புதைவித்தானே. (௪௱௩)

விசயனும்வெகுளுற்றந்தவேதியன்வில்லுந்தேரு
மசைவுறமுடிவெய்தானவனுமற்றிவனைவேறோர்
குசையுடைப்புரவித்தேருங்குனிவருஞ்சிலையுங்கொண்டு
நிசியினையருக்கன்போலநிலைதளர்ந்திடுவித்தானே. (௪௱௪)

தளர்ந்தவத்தளர்ச்சிகண்டுதனஞ்சயன்றன்னைத்தேற்றிக்
கிளர்ந்தடர்புரவித்தாமாக்கேவலமல்லனையா
பிளந்திடுகிவனையென்னப்பிறைமுகப்பகழியொன்று
னளம்புகத்தொடுத்தான்பாகனுரைமுடிவதன்முனம்மா. (௪௱௫)

எய்தவப்பகழியொன்றாலீசன்மாமதலைமாழ்கி
வெய்துயிர்த்திரதமீதுவீழ்ந்தனன்வீழ்ந்தோன்றன்னைக்
கைதவச்செயலினான்றுச்சாதனன்கண்டுமுன்னைச்
செய்தவப்பயன்போல்வந்துதேரொடுங்கொண்டுபோனான். (௪௱௬)

போனவப்புரவித்தாமாப்புரிந்துபோர்தொடங்குமெல்லைச்
சேனைகளொன்றினோடுஞ்சித்திரவாகனென்னு
மீனவன்வழுதிமாறன்வெண்மதிமரபில்வந்தோன்
வானவர்முதல்வன்சென்னிவரிவளையுடைத்துமீண்டோன். (௪௱௭)

சென்றெதிருன்றிவெவ்வேற்சேயனான்றேரின்மேலும்
வன்றிறல்வலவன்மேலும்வாம்பரிமாவின்மேலுந்
துன்றியகணைகளேவித்தொடுசிலைதணித்துவீழ்த்தா
னன்றவன்செய்தவீரமரசரிலார்செய்தாரே. (௪௱௮)

வேறொருதேர்மேற்கொண்டுவிதிதருமரபினானுஞ்
சீறிவெங்கணைகளாறுதெரிந்தொருசிலையும்வாங்கிக்
கூறியசெஞ்சொலேகுறித்தெதிர்கொண்டலவை
யாறுடையவனையஞ்சவருஞ்சமருடற்றினானே. (௪௱௯)

அந்தணனவையெல்லாமவனிபனவ்வம்பால்
முந்துறவிலக்கித்தங்கண்மூவகைத்தமிழும்போலச்
சிந்தையிற்களிக்குமாறுசிலீமுகமூன்றுவிட்டான்
றந்தையைமுதருகண்டோன்றனயனுக்கிலக்குமோதான். (௪௱௰)

காலினூற்றுகைத்தவேலைக்கனைகடலேழுமன்றாள்
வேலினூற்சுவற்றுங்கொற்றவெங்கயல்விலோதவீரன்
மாலினூற்பொருகைவேழம்வாசிதேர்பதாதிமாயக்
கோலினூற்சுவற்றினனக்குருகலர்சேனைவெள்ளம். (௧௧௧)

சங்கரனருளால்வந்தசதுர்மறைக்குமரன்மீளப்
பொங்கழற்கடவுளென்னப்பொருசிலைவெய்தின்வாங்கி
மங்குல்போற்பொழியும்வாளிமழையினாலழிந்ததந்தோ
செங்கயனெடும்பதாகைத்தென்னவன்செம்பொற்றேரே. (௧௧௨)

சிங்கவேறனையானந்தத்தேரினின்றிழிந்துமுன்னந்
தங்கண்மால்வரையில்வைகுந்தமிழ்முனிதன்னைப்போலப்
பொங்குவெண்டரங்கமுந்நீர்ப்புணரிகளேழுஞ்சேர
வெங்கையால்வாருங்கொற்றவேழமாமேற்கொண்டானே. (௧௧௩)

மலையினிற்பிறந்தவாரமணங்கமழ்வடிவிற்றங்க
ளலையினிற்பிறந்தவாரமழகுறவணிந்தகோமான்
கொலையினிற்சிறந்தகோட்டுக்குஞ்சரங்கொண்டுமீண்டுஞ்
சிலையினிற்குருவின்மைந்தன்றேரொடுஞ்செருச்செய்தானே. (௧௧௪)

மோதிமத்தாரைமாருக்கைம்முகமுகுத்தசெக்கர்ச்
சோதிமத்தகவெங்குன்றின்றழைசெவித்துளங்குகாற்றாற்
சாதிமைத்துரோணன்மைந்தன்றனித்தடந்தேரிற்கொற்ற
வோதிமப்பதாகையாடையப்புறத்தொடுங்கிற்றம்மா. (௧௧௫)

கூற்றெனக்கொண்டலென்னக்குரைகடலென்னச்சூறைக்
காற்றெனக்கொடியகோபக்கம்பெருங்கரடமாவி
னூற்றெழுமதங்களேழுமொழுகிமண்ணுடைந்துதாழுஞ்
சேற்றிடைப்புதைந்ததந்தச்சேயனுன்றேரின்காலே. (௧௧௬)

மறையவன்செம்பொற்றேரைவளைந்துமண்டலங்களோட்டிப்
பிறைமுகக்கணையாலந்தண்பிறைக்குலவழுதியெய்ய
நிறைவறப்புரவித்தாமாகேருறவிலக்கித்தன்கை
யறைசிறைப்பகழியொன்றாலானையைவீழ்வித்தானே. (௧௧௭)

பாண்டியன்கைவில்லோடும்பதாதியாய்ப்பகழிசிந்தி
யீண்டியவிவுளித்தாமனிருதடந்தோளுமார்பும்
வேண்டியவாறுசோரிவீழ்தரப்பொருதபின்னர்த்
தூண்டியதுரோணன்மைந்தன்றொடையொன்றாற்றானும்வீழ்ந்தான். (௧௧௮)

பட்டனன்முனிவன்கையிற்பஞ்சவனென்றுவேந்தர்
கெட்டனர்முரசந்திட்டுங்கேதனன்சேனையுள்ளார்
தொட்டனர்வரிவில்வாளிதொடுத்தனரடுத்துமென்மேல்
விட்டனர்வேந்தர்வேந்தன்சேனையில்வேந்தருள்ளார். (௧௧௯)

வேறு.

விற்கையாரிபன்மகன்விசும்பின்வீழ்தரு, முற்கையாமெனவிடுமொளிகொள்வாளியாற், கொற்கையாளிறந்தபின்கோழியானெனுஞ், சொற்கையாமனுகுலத்தோன்றலேன்றிறன். (௧௨௦)

தேரின்மேனின்றுகிரெகட்செம்புகர்க், காரின்மேல்வீரனைக்கணையிற்காய்வதே, பாரின்மேலார்கொலிப்பாதகஞ்செய்தார், நீரின்மேலெழுத்தெனநிலையிலாமையாய். (௧௨௧)

ஆர்ப்பனமறைமொழிந்தவரைவர்பாவமுந், தீர்ப்பனவேள்விகள்செய்வதன்றியே
கூர்ப்பனபலபடைகொண்டுபோர்செயப், பார்ப்பனமாக்களும்பாரின்வல்லரோ.()

தாதையைக்கொன்றவெஞ்சாபவீரனைக், கோதைவிற்கணைகளாற்கொன்றிலாதநீ
பூதைமுற்சருகுபோலோட்லல்லதை, மோதயிற்படைகொடுமுனையவல்லையோ. ()

என்றுசின்மொழிமொழிந்திவுளித்தாமன்மேற், றுன்றுவில்வளைத்தனன்சோழபூபதி, குன்றுடன்குன்றமர்குறிக்குமாறுபோற், சென்றுசென்றடுத்தனதேருந்தேருமே. (௧௨௪)

இருவர்செங்கரங்களுமிரண்டுகோல்களு, முருறைப்பிணித்தகாணுநுசைவிசவு
மருவுபொற்றேருறவலியின்வாங்கவும், விரைவுடன்வளைந்தனவில்லும்வில்லுமே.

புகலருமறையவன்புராரியாதியாந், திகழொளியிமையவர்சிறப்பினிந்தன
விகன்முனைமுனையுறவெதிர்ந்துதள்ளவே, யகல்வெளிபுதைத்தனவம்புமம்புமே.()

காருலகெய்தியதுரோணன்மைந்தனை, யிருகணைபுயத்தினுமிரண்மொர்பினு
மொருகணைநுதலினுமுருவவேவினன், மருவிரிதாதகிவாசமாலையான். (௧௨௭)

பிறைமுடிச்சடையவன்பிள்ளைவள்ளுகிர், விறலுடைப்புலிக்கொடிவீரன்மெய்யெலாம், புறவினுக்கரிந்தநாட்போலமேல்விடுக், திறலுடைவாளியாற்சிவப்பித்தானரோ. (௧௨அ)

தளவணிமுடியவன்றள்ளுகன்றினல், விளவினையெறிந்தெனவீரவேலினல்
வளவனும்வெகுண்டுபின்மயூரவாகன, னிளவலையெறிந்தனனெவருமஞ்சவே. ()

உருத்திரன்முதவினுற்பவித்தவக், கருத்துடைமுனிவன்மெய்கலங்கிவீழ்தலுந்
திருத்தகுசகுனியுஞ்சிற்சில்வேந்தரும், வருத்தமோடெடுத்தவன்வருத்தமாற்றினர்.

அவனெடுமீளவந்தபயன்றன்னெடு, கவனமான்றேருடைக்காவன்மன்னவர்; சிவனெடுமமர்பொருந்தெவ்வரென்னவே, துவனிசெய்முரசெழத்துன்றுபோர்செய்தார். (௧௩௧)

தன்மருடன்மகன்சுவாகுதன்முகன், வின்மகன்சுவாதுவாள்வெயில்விபாகரன்
றன்மகன்றிருமகன்சங்கனென்பவர், மன்மகார்பலரொடுமடிந்துவிழவே. (௧௩௨)

பண்ணகவிசையளிபாடுதண்டலைக், கண்ணகன்காவிரிநாடன்கைக்கணை
மண்ணகநெருக்குறமலைந்தமன்னரை, விண்ணகமிடனறவிரைவினேற்றவே. ()

முன்னியசிலமறைமுனிவன்மைந்தனுந், தன்னிகரிலாவிறற்சகுனியாதியாய்த்
துன்னியதிருபருந்தோல்லமர்க்குநீ, சென்னியென்றவன்புகழ்செப்பிமீளவே. ()

வேறு.

சோனுமேகம்பொழிவதுபோற்றுச்சாதனனுந்தம்பியரும்
வானுடேறவழிதேடிவருவார்போலவெருவாமன்
மேனுள்மொழிந்தவஞ்சினங்கண்முடிப்பானின்றவீமனெதி
ரானுவாளிமழைதுவியடல்வெஞ்சிலையோடடுத்தாரே. (௧௩௫)

உருத்தின்றாசரைவரையுமுடனேகொல்வனெனவெண்ணிக்
கருத்தின்படியேவிரைந்தோடுங்கவனப்புரவிக்காற்றேரிற்
செருத்தின்பிணைகண்முழக்கவருசெங்கோன்மன்னற்கிளையோனை
மருத்தின்புதல்வன்கண்மேழைமுகில்போலெதிர்வாய்மலர்ந்தானே. (௧௩௬)

துச்சாதனனேயுனைப்போலுஞ்சூரருளரோசூரரெலா
மெச்சாநின்றார்வேத்தவையின்மேனாணிசெய்விறலாண்மை
யச்சாரிரதப்போர்க்குமுனக்கார்வேறெதிருண்டம்மவிரைந்
திச்சாபோகமாகவிருந்தின்றோமறலிக்கிடுநாளே. (௧௩௭)

இன்றோவுன்றன்சென்னிதுணித்திழிசெம்புனலிற்குளித்திடுநா
ளின்றோவழலினுற்பவித்தாளிருளாரளகமுடித்திடுநா
ளின்றோதாகங்கெடநாவுக்கிசைந்ததண்ணீர்பருகிடுநா
ளின்றோவுரைத்தவஞ்சினங்களெல்லாம்பயன்பெற்றிடுநாளே. (௧௩௮)

வென்றேயவனிமுழுதாளும்வீரோதயனின்றம்முனையுங்
கொன்றேநாளையமரரெதிர்கொள்ளக்கடிதின்வரவிடுவ
னின்றேநீபோயிடம்பிடிப்பாயென்னுவெண்ணமெண்ணிமன்றி
லன்றேகலகம்விளைத்தென்றுமழியாவரசையழித்தோனே. (௧௩௯)

வீமன்கருத்தோடிவைமொழியவேறுத்தரமற்றொன்றின்றி
யூமன்றனைப்போலவனிற்கவுடனேயிளையோரொன்பதின்மர்
நாமம்பெறுகோலோரொருவர்நானாலாகநடந்தவழி
தூமங்கிளரவொருகணத்திற்றொடுத்தாரெதிர்வந்தடுத்தாரே. (௧௪௦)

தொடுத்தார்தொடுத்தகணையனைத்துஞ்சூரன்றானுந்தன்கணையாற்
றடுத்தான்மீளவோரொருவர்க்கோரோர்பகழிதனுவாங்கி
விடுத்தானவருமிரதமிசைவீழ்ந்தார்வீழ்ந்தவீரரைவந்
தடுத்தார்விரைவிலகல்வானத்தழகார்காதலரம்பையரே. (௧௪௧)

உயிர்க்காருயிராந்தம்பியர்களோரொன்பதின்மர்வீமன்கைச்
செயிர்க்காய்கணையாற்சிரந்துணிந்துதேர்மேல்வீழச்சினங்கதுவிப்
பயிர்க்காமாரிபொழிந்துவருபருவப்புயல்போற்பாவனனை
மயிர்க்காறொறுமம்பினஞ்சொருகிமன்னற்கிளையோன்மலைந்தானே. (௧௪௨)

தன்மேலுரககேதனனுக்கிளையோன்றொடுத்தசரங்களெல்லாங்
கன்மேன்மேகத்துளியென்னக்காய்ந்தானவற்றைக்கடிதுதறி
மன்மேற்கொண்டபுயமுறவில்வாங்கிக்கொடும்போர்வாளிபல
மென்மேலெய்தானெதிர்ப்பட்டால்விடுமோபின்னைவிறல்வீமன். (௧௪௩)

தூவாநின்றவேவனைத்துந்துச்சாதனன்றன்றொடைபிழையா
வேவால்விலக்கியேழுகணையெய்தானெய்தகணையேழு
மாவானவற்றின்றலைநான்குமடங்கற்கொடியுமணித்தேரு
மேவாநிருபன்மலர்த்தடக்கைவில்லுந்துணியவீழ்த்தனவே. (௧௪௪)

இத்தேரழியவேறொருதேரேறிப்பரவையிடைச்சுழன்ற
மத்தேயனையசிலைவாங்கிமன்னற்கிளையவயமீளி
யத்தேரழியக்கொடிவலவன்வயமாவனைத்துமற்றுவிழப்
பத்தேயெய்தாங்கிளைவாளிபகைவன்புயத்திற்படவெய்தான். (௧௪௫)

காரிற்கரியகுழறிண்டிக்கலையன்றுரிந்தகழற்காளை
பாரிற்குதித்தோரதிபாரப்பைம்பொற்கதையாற்பவனன்றன்
றேரிற்புடைக்கத்தேர்சிதைந்துசிந்திற்றவனுஞ்சிலைமாற்றிப்
போரிற்சிறந்ததண்டமுடன்புவிமேற்பாய்ந்தான்புலிபோல்வான். (௧௪௬)

## வேறு.

இருவரும்புயங்களினைப்பிமொத்தினரிகல்புரிந்துதண்டிறுகப்பிடித்தனர்,மருவி
யொன்றொடொன்றனல்கக்கமொத்தினர் வலமிடங்கொண்மண்டலமுற்பயிற்றி
ன,ரருசென்றுசென்றடிவைத்தடுத்தனரகலின்றுநின்றொரிமைப்பின்முட்டின
ர், இருவெஞ்சினத்திடியொத்துரப்பினர்திசையின்மண்டிபக்கிரிசிந்தியிட்டவே.

வெருளிகொண்டுகொண்டெதிர்கொக்கரித்தனர்விசையுடன்கிளர்ந்துயரக்கு
தித்தன, ருகவைவிஞ்சவெங்கதையைச்சுழற்றினருயர்விசும்பெறிந்தொருகைப்பி
டித்தனர், முகமலர்ந்துநின்றதிரச்சிரித்தனர்முதிரவஞ்சினம்பலகட்டுரைத்தனர்,
மகிபர்கண்டகண்டவர்செத்தமுட்கிடவரையிரண்டுவெஞ்சமர்கற்பதொக்கவே. ()

இகலிவெங்கொடுங்கதையொத்து மொத்தொலியிடியின்வெங்கொடுங்குர
லொத்தொலித்தன, மகிதலம்பிளந்ததுசர்ப்பவர்க்கமும்வயிறழன்றுநஞ்சுகள்கக்கி
யிட்டன,திகிரியத்தடங்கிரிபக்குநெக்கதுசெவிடுகொண்டயர்ந்ததுதிக்கயக்குல, மு
கடுவிண்டதண்டருமப்புறத்துறமுகில்களும்பெருங்குகைபுக்கொளித்தவே.(கசகூ)

விழிகளுஞ்சிவந்தனநெற்றியிற்பொறிவெயர்வுவந்தரும்பினவிப்பிமுத்தென
மொழிகளுங்கிளம்பினநெட்டிடிப்பெனமுரிமுரிந்தவண்புருவச்சிலைத்துணை
யெழிலுடன்பாக்கிறுகத்தடித்தனவிமையமந்தரங்களொடொத்தபொற்புய
மழியுமங்கமென்றொருசற்றிளைத்திலரமரிலன்றருங்கதையிட்டடிக்கவே. (கருo)

எதிர்மலைந்தவெஞ்சமரிப்படிக்கெரிசிதலின்றிமொய்ம்புறவுத்தரிக்கவு
முதாநெஞ்சரம்புயமெய்க்கழுத்தெனவுரைசெயங்கமொன்றினுமுற்றுறைத்தில
கதைகளும்பிளக்கொடிபட்டெடுத்தனகரதலங்களுங்கருகிச்சிவந்தன [மே.
முதிர்சினங்கொளுந்தவின்முற்றும்விட்டிவர்முரணுடன்றொடங்கினர்முட்டியுத்த

விரல்களைந்தையுஞ்செறியக்குவித்தொளிமிகுநகம்புதைந்திடவுட்புதைத்திரு
கரதலங்களுஞ்சிரப்பொருப்பிடைகரியகொண்டன்மண்டுருமொத்திடித்திட
வருளுடன்சிறந்தறனுற்றகொற்றவனுசனுந்தயங்குரகத்தனிக்கொடி
கிருபர்தம்பெருந்தகைமுற்கனிட்டனுநினைவுடன்கலந்தெதிர்குத்தியிட்டபின். ()

அனிலன்மைந்தனென்றுரைபெற்றகொற்றவனரசன்முந்துதம்பியைமத்தகத்தி
கனல்கொளுந்தமுந்திரத்தகர்த்திருகவுணெரிந்துவண்செவியுட்காக்கவு [டை
முனைசெறைநந்தாம்பெறுபற்றெறிக்கவுமொழிகளுந்தளர்ந்தனமுற்றொளிக்கவு
மினலிருஞ்சிவந்தொளிமிக்கவற்புதவிழிபிதுங்கவும்பெருகக்கலக்கியே. (கருஉ)

பதயுகங்களங்குலிதொட்டுறப்புளபலவுமென்புடன்றசைபற்றுவிட்டற
விதவிதம்படும்புடைபட்டிடிப்புறவிசிகரம்புசந்துகளிற்றெறித்திட
மதலையந்தடம்புயவெற்பறப்பலவரையுடன்பொருந்தியநற்கழுத்தற
முதகிடுங்கவின்பெறவுற்பவித்தெனமுகனையும்புறந்திருகத்திருப்பியே. (கருங)

மயிர்களங்கன்கொண்டிறுகப்பிடித்தெதிர்வரவிழுந்திடும்படிபற்றியிட்டெ
வயிர்படுங்கெந்தரையிற்றுகட்படவடியிரண்டினுஞ்சரியத்துகைத்தெழு
செயிருடன்பெருந்தொடைதொட்டிழுத்தனிதிகழுரம்புகுந்தவுணக்குலத்திறை
யுயிர்கவர்ந்தகெங்கமொடொப்புறந்தனதொளிசிறந்தனன்கடிதுக்கிரத்தொடே. ()

உகிரெனும்பெரும்பெயர்பெற்றசொட்டைகளுருவியெங்கணும்புதைபட்டுரத்தலம்
வகிரவுங்கொடுங்குடர்வட்டமற்றுருவயிறநோக்கவுங்கிழிவித்தபிற்செறி
தகிருடைத்தசெம்பவரொத்தசெட்டெடல்சொரிதருஞ்செழுங் குருதிப்பெருக்கிடை
பகிரதன்றருங்கடவுட்டுறைப்புனல்படியுமும்பர்தம்பரிசிற்குளிக்கவே. (கருரு)

வேறு.

மன்னற்கிளையோனைவாட்டருமனுக்கிளையோன்
றுன்னப்பிளந்துசுரருலகமேற்றுதலுங்
கன்னற்குமற்றுள்ளகாவலர்க்குநில்லாமல்
வென்னிட்டதம்மன்னன்வீரப்பெருஞ்சேனை. (௧௫௭)

வண்டாரவாரமறாதநறும்பூந்துளபத்
தண்டார்முடியோனும்விற்கைத்தனஞ்சயனுங்
கண்டாரவர்முதலாங்காவலருங்கைகலந்தார்
வெண்டாரகைபரந்தவிண்ணொத்ததாகவமே. (௧௫௮)

வேகமிகுஞ்செந்தீயின்மேனாளவதரித்த
தோகைகுழலுந்துகிலுமுடன்றொட்டனவென்
றாகமுறப்பிளந்தவாண்டகைமீண்டவ்வீரன்
பாகமுறுகைவிரல்கள்பத்துந்துணித்தானே. (௧௫௯)

தண்ணீர்நிகரெனத்துச்சாதனன்றன்மெய்யிலிழி
புண்ணீர்பருகப்புகுவோனையாவருக்குங்
கண்ணீர்வரத்தடுத்தான்காணுங்காலெத்திறத்தும்
வெண்ணீர்மையில்லாதமேகந்தனைப்போல்வான். (௧௬௦)

குடியாமலக்குருதிகொப்பளித்துவாகை
முடியாநின்றென்னெண்ணமுற்றினனென்றாங்கட்
படியாளுஞ்செங்கோன்மைப்பார்த்திவருக்கெல்லாங்
கொடியார்மடங்கலெனக்கூத்தாடிநின்றார்த்தான். (௧௬௧)

துன்பமுறுந்துன்னீதித்துச்சாதனன்போர்செய்
தொன்பதின்மர்தம்பியரோடும்பரூர்புக்கானென்
றன்புடையதம்முனடிவீழ்ந்தகங்கரித்தான்
வன்புடையதாதையினுமிக்கவலியோனே. (௧௬௨)

பாண்டவர்கள்சேனைமதிகண்டபவ்வமெனக்
காண்டவமன்றுண்டகனல்போனனிதருக்கி
மூண்டநிலைகண்டுமுதுகிடுதன்சேனையுடன்
மீண்டுமெதிரூன்றாமல்வெய்யோன்மகனின்றான். (௧௬௩)

மேல்கொண்டுபாண்டவர்தம்வெஞ்சேனைசூழ்ந்திடவு
மால்கொண்டவர்போலமாண்டாயெனக்கழறிக்
கால்கொண்டதிண்டேர்க்டாவினான்கையுளவு
கோல்கொண்டான்கன்னனுமக்கூற்றுக்கெதிர்கூறும். (௧௬௪)

வேந்தனையவிறற்றம்பிவீமன்கை
மாய்ந்தநிலைகண்டுமனந்தளர்ந்ததல்லாது
கூர்ந்ததிறன்மத்திரத்தார்கோவேவெருவுமோ
பாந்தளெதிர்செல்லப்பறவைக்கரசென்றான். (௧௬௫)

முன்னமமரின்முதுகிட்டமன்னரையு
மன்னவர்கண்மன்னனையும்வன்பேரணியாக்கிப்
பொன்னசலம்போலும்புனைபொற்கொடிநெடுந்தேர்க்
கன்னனெதிரூன்றினான்காயுங்கனல்போல்வான். (௧௬௬)

சேனாபதியானதேர்த்துருபதேயனும்வான்
மீனுமெனப்பார்த்தவேந்தருடனேதனக்குத்
தானாண்மைக்கொப்பாந்தருமனையுஞ்சேனையையு
மானாகமுட்கவருத்தாங்கெதிர்கடந்தான். (௧௬௭)

பொன்னார்முரசமுதற்போர்வெம்பணையாலும்
வின்னாணொலியாலும்விண்ணோர்செவிடுபடப்
பன்னாமபேதப்படையொலியாலும்பலபூண்
மின்னாருங்கண்கள்வெறியோடிவிட்டனவே. (௧௬௮)

யாமினியிலெவ்வுயிர்க்குமேற்றதுயின்மாற்றுவோன்
மாமதலைசோமதலைமான்றேர்விடசேன
னாமமணித்தேர்மேனகுலன்மேற்சென்றுசில
தாமமுனைவாளிதழற்பொறிபோற்சிந்தினனே. (௧௬௯)

வெம்புரவித்திண்டேர்விசயற்கிளையோனுஞ்
செம்பதுமக்கையிற்சிலைநாணொலியெழுப்பிக்
கம்பமதமால்யானைக்கன்னன்மகனேவியகூ
ரம்படையவம்பாலறுத்தறத்துவீழ்த்தினனே. (௧௭௦)

அண்டர்பெருமானுக்கம்பொற்கவசமுடன்
குண்டலமுமீந்தோன்குமரன்கொடுங்கணையான்
மண்டெனலருந்தவன்காண்டவமெரித்த
திண்டிறலோன்றம்பிதடந்தேர்க்கால்களையழித்தான். (௧௭௧)

மற்றொருதேரேறிமருத்துவர்தம்மைந்தனுமக்
கொற்றநெடுங்கச்சைக்கொடியோன்றிருமைந்தன்
வெற்றிவிலோதனமும்வெஞ்சாபமுமுடனே
யற்றுவிழவெய்தானவனுண்மைக்காரெதிரே. (௧௭௨)

மீண்டவனும்வேறொருவின்மேருவெனவாங்கிப்
பாண்டவனைவீழும்படியெய்தான்வீழ்ந்தோனை
னாண்டவனற்செங்கண்முரண்வீமன்கொண்டேகக்
காண்டவசிருக்கினன்கண்டானவன்போரே. (௧௭௩)

நன்றாண்டிகழ்மதியாநாகம்பருமத்தா
வன்றாண்டிரைமதியாவண்டர்க்கமுதளித்தோன்
முன்றாண்டியதேரிற்சென்றான்முனைவாளி
பின்றாண்டில்வீசிவிடசேனமீன்படுப்பான். (௧௭௪)

தம்பிபடுந்தன்பந்தமையனையுங்காண்பனென
வெம்பியெதிர்சென்றவிடசேனன்வில்வாங்கிப்
பம்பிவருகொடித்தேர்ப்பார்த்தனையும்பாகனையு
மம்பின்மறைத்தானடலேறரியனையான். (௧௭௫)

வின்னாணும்விற்பிடித்தவெவ்விரலும்வின்னவே
முன்னாணதம்பைமுடித்தோன்முடித்தலையும்
பின்னாகவாக்கும்பிறையம்பும்போமரி
வொன்னார்முனைதடிந்தோனோரம்பினாலறுத்தான். (௧௭௬)

வீழ்ந்தான்விடசேனன்வீரரெல்லாம்வெஞ்சமரிற்
றாழ்ந்தார்புறங்கொடுத்தார்தந்தைதடந்தேர்க்காலைச்
சூழ்ந்தார்சிலவீரர்தோலாதெதிர்நடந்து
வாழ்ந்தார்சுரராகிவான்மாதர்மெய்கலந்தே. (௪௭௭)

வேறு.

சாய்ந்தனன்களத்தருச்சுனன்சரத்தினுற்றனையனென்றவற்றந்த
வேந்தனுங்கருத்தழிந்துதன்றேர்மிசைவீழ்ந்தனனவன்பொற்றே
ரூர்ந்தசல்லியன்றேற்றினன்பற்பலவுரைகளாலவ்வெல்லைப்
பாந்தளங்கொடிப்பார்த்திவனின்றுழிச்சென்றனன்பரித்தாமன். (௧௭௮)

தப்பருஞ்சமர்விளைத்தனிர்நீயுமத்தருமன்மைந்தனுமென்றே
மெய்ப்பெரும்புகழ்புனைகுருகுலத்திடைவீமென்முதலான
வெப்பெருந்திறற்குரவருங்கிளைஞருமேனைமன்னரும்யாரு
மொப்பரும்பெருஞ்சாதுரங்கத்துடனுடன்றுயிர்மாய்ந்தாரே. (௧௭௯)

வலையிலாதனமங்கலவிழவுநல்வரம்பிலாமரபுந்தொல்
விலைவிலாவரும்புலமுமுத்தீயிலாவேதியர்மனைவாழ்வுந்
துளையிலாமணிமுத்துமந்தண்புனற்றுறையிலாவளநாடுங்
கிளையிலாவரசியற்கையுநன்றெனக்கேட்டறிகுவதுண்டோ. (௧௮0)

தும்பிமாபரிமாவுளதேருளசுருங்கினசுருங்காம
னும்பிமார்களிலிருந்தவர்தம்மொடுநவலரும்பலகேள்வித்
தம்பிமாரொடுநும்முனுகியவிறற்றருமன்மாமகனேடும்
பம்பிமாநிலம்புரப்பதேகடனெனப்பார்த்திவற்குரைசெய்தான். (௧௮௧)

ஆரியன்றிருமகனிவையுரைசெயவரசனுமவைகேட்டுக்
காரியம்புகல்வதுபுவியாட்சியிற்கருத்துடையவர்க்கன்றோ
சூரியங்கறங்கமரிடையுடல்விழச்சுராலகுயிரெய்த
வீரியம்பெறலெனக்கினிப்பயனெனவிளம்பினன்விறல்வேலோன். (௧௮௨)

முனிமகன்புகல்கட்டுரைமறுத்தபின்முனிவுறுவகைபோருக்
கினிமைகொண்டசொற்பலமொழிந்தவனெடுமிரப்பவருள்ளங்கைக்
கனியெனுங்கொடைக்கன்னனைத்தழீஇயவன்கண்ணுகுபுனன்மாற்றிப்
பனிநெடுங்குடைப்பார்த்திவனுவன்றனன்பார்த்தனதுயிர்கொள்வான். (௧௮௩)

மலைகலங்கினுமாதிரங்கலங்கினுமாதிரங்களில்விண்ணோர்
நிலைகலங்கினுநெடுங்கடல்கலங்கினுநிலங்கலங்கினுஞ்சேடன்
றலைகலங்கினும்பேரவைமூன்றினுந்தளர்விலாதவர்கற்ற
கலைகலங்கினும்போர்முகத்தென்மனங்கலங்குமோகலங்காதே. (௧௮௪)

என்மகன்றலையென்னெதிர்துணியவம்பேவியபுருகூதன்
றன்மகன்றலைதுணிப்பனிக்கணத்திலோர்சாயகந்தனிலென்று
மன்மகன்றனக்கிரதமூர்மத்திரன்மகன்றனக்குயர்வேள்வி
வின்மகன்றனக்குளமகிழ்ந்துரைத்தனன்வெயிலவன்மகனம்மா. (௧௮௫)

சுரிமுகங்களிற்பேரியங்களிலெழுதுவனியாற்பகிரண்ட
நெரியுமென்றயனஞ்சினன்சேனையினெருக்கினுலெனைத்துள்ள
கிரிகளுஞ்சரிந்திடுமெனவஞ்சினன்கிரீசனுங்கிளராழி
யரியுமஞ்சினன்றாழியாலலைகடலலையவற்றிடுமென்றே. (௧௮௬)

பரியுடன்பரிநெருங்கினநெருங்கினபடையுடன்படைமந்தக்
கரியுடன்கரிநெருங்கினநெருங்கினகடவுதேருடன்றேரும்
விரிநெடுங்குடைகுடையொடுநெருங்கினவிலோதமும்விலோதத்தோ
டரியெறிந்திடநெருங்கினவாடையுமாடையுமலமந்தே. (௧௮௭)

பரியில்வீரரும்பரியில்வீரரும்வயப்படையெறிந்தனர்கொற்றக்
கரியில்வீரருங்கரியில்வீரருமமர்கடுகினர்காற்றோராங்
கிரியில்வீரருங்கிரியில்வீரருமெதிர்கிடைத்தனர்பதசாரித்
தெரியல்வீரருந்தெரியல்வீரருமுடன்செருப்புரிந்தனரன்றே. (௧௮௮)

எடுத்தவேல்களும்வேல்களுமுனைந்தனவிலக்குறக்கொடும்பாணந்
தொடுத்தசாபமுஞ்சாபமும்வளைந்தனதொடியுடைக்கரசாலத்
தடுத்தவாளமும்வாளமும்பொருதனவங்குலிகளிற்சுற்றி
விடுத்தநேமியுநேமியுந்துணித்தனவீரர்சென்னிகள்வீழ. (௧௮௯)

அறன்மகன்பெருஞ்சேனையினிருபருமரவவெங்கொடியானை
மறன்மகன்கொடுஞ்சேனையினிருபரும்வஞ்சினம்பலகூறித்
திறன்மிகுத்ததஞ்சேனையோடெதிரெதிர்சென்றுசென்றிடந்தோறு
முறமலைந்தனரொருவருக்கொருவர்தோளுரமும்வீரமுமொத்தோர். (௧௯௦)

வேறு.

இளைஞரும்பெருஞ்சேனையுமிருபுடைநடக்கக்
கிளைஞர்யாவருநேமியங்கிரியெனச்சூழ
விளையும்வெஞ்சினவீமன்முன்போதரவிசயன்
வளைநெடுஞ்சிலைகணைமழைபொழிந்திடவந்தான். (௧௯௧)

கிரிசன்மைந்தனுங்கிருபனுங்கிருதவன்மாவும்
வரிபொலங்கழற்சகுனியுமுதலியமறவோ
ரெரியும்வெங்கனற்கன்னினரெயிலெனச்சூழந்
தெரியும்வாளிவன்சிலையுடைக்கன்னனுஞ்சென்றான். (௧௯௨)

மல்வளைத்ததோள்வலியர்கள்வலனுறத்தத்தம்
வில்வளைத்தனர்விசையுடன்சிலீமுகந்திகிரிக்
கல்வளைத்தபார்தனக்கிடுகோவணம்போலச்
சொல்வளைத்திலர்தொடுத்தனர்தும்பையந்தொடையார். (௧௯௩)

வேறு.

மருவருஞ்சுருதிகூறுகிலநாலும்வழுவா
திருவருஞ்சிலைவணக்கியதுமெய்தவிரகு
மொருவருஞ்சிறிதுணர்ந்திலருகாந்தமெனவே
வெருவருஞ்செயலில்விஞ்சினர்கள்விஞ்சையருமே. (௧௯௪)

ஒன்றொடொன்றுமுனையோடுமுனையுற்றுறவிழு
மொன்றொடொன்றுபிளவோடவிசையோடுபுதைய
மொன்றொடொன்றுதுணிபட்டிடவொடிக்குமுடனே
யொன்றொடொன்றிறுகவ்வுமெதிரோடுகணையே. (௧௯௫)

இடம்புரிந்திடில்வலம்புரியுமெண்ணின்முறையால்
வலம்புரிந்திடிலிடம்புரியுமண்டலமுமாய்
நடம்புரிந்தபவுரிக்கதிநடத்துமெதிரே
சலம்புரிந்தவிரமுட்டெருசந்தனமுமே. (௧௯௬)

ஆசுபோமிவுளிமாகடவியாழியிரத
முசுபோரிலொருவர்க்கொருவர்முந்தவிடலால்
வாசுதேவனையுமத்திரமகீபதியையுந்
தேசுவேறுதெரிகிற்றிலர்கடேவர்களுமே. (௧௯௭)

மறமுமொத்தவழுவற்றசுழியொத்தவலிகூர்
புறமுமொத்தகதிபற்பலவுமொத்தபுகல்வா
ணிறமுமொத்தவுயரம்பருமைநீளமெனுமெய்த்
திறமுமொத்தவிருதேரில்வருதிண்பரியுமே. (௧௯௮)

நிலையிரண்டிலுறநின்றநிமலற்குநிகர்வோர்
மலையிரண்டினைவளைத்தெதிர்மலைந்ததெனவே
யலையிரண்டெனவதிர்ந்துபொருமவ்விருவர்கைச்
சிலையிரண்டுநிமிராதுகணைசிந்தினர்களே. (௧௯௯)

தேவத்ததமுமுழக்கியுயர்தேவர்பலரா
லாவமெத்தும்வகைபெற்றபலவம்புதெரியா
மூவர்தத்தம்வடிவாமுதல்வன்மெய்ப்புதல்வன்மேற்
பூவின்மொய்த்தவறுகாலினிரைபோலவிடவே. (௨௦௦)

பரிதியன்பொடுவழங்கியபராபரமெனும்
பெருவலம்புரிகுறித்துவிறலங்கர்பெருமான்
வரிநெடுஞ்சிலைவலாரிதிருமைந்தன்விடுதிண்
சரமடங்கவவர்தந்தசரமெய்துதறியா. (௨௦௧)

வயக்கதிர்க்கணைவிதங்கள்கொடுமாயன்விடுதே
ரியக்கமற்றிடவியற்றினனொர்கூடமிவனுந்
தியக்கமுற்றிடமயக்கிநெடுமால்செய்விரகா
லுயக்கமிக்கசரகூடமுளதாயதவனும். (௨௦௨)

வேறு.

மாயாசரகூடமறைத்திடலால்வலையுட்படுவீரமடங்கலெனச்
சாயாபதிமைந்தனுநின்றனன்மெய்தளர்வுற்றனனின்றதனஞ்சயனு
மேயாவிதுவென்கொல்முனைந்துபொராதெழுதோவியமாயினையென்றுவிறற்
காயாமலர்வண்ணன்விளம்புதலுங்கவிவெங்கொடியோனிருகைகுவியா. (௨௦௩)

வன்போர்புரிவெங்கணையங்கர்பிரான்மறநூலுயர்பேரறனார்குமரன்
றன்போலவிளங்கினனாதலினென்றனுவுக்குனியாதுசரங்கள்செலா
வன்போடியதுள்ளமெனக்கினிமேலவனோடமர்செய்தலுமிங்கரிதால்
வென்போகுவனென்றலுமேயிறைவன்விசையோடிரதத்தினைமீளவிடா. (௨௦௪)

முகில்வண்ணனும்வாசவன்மாமகனுமுரசக்கொடிமன்னவன்முன்புசெலப்
பகலின்பதிமைந்தனையின்னமுமிப்பகல்சாய்வதன்முன்புபடுத்திலையா
லிகலெங்ஙன்முடித்திடுநின்கையில்வில்லிதுவென்னவிலென்றுதிருத்தமையன்
புகலுஞ்சொலவன்செவியிற்புகவேபுண்மேலயிலுற்றதுபோன்றதவே. (௨௦௫)

கூரார்முனைவாளிகொளிச்சிலையைக்குறையென்னெதிர்கூறினரம்புவிமேல்
யாராயினுமாவிசெகுத்திடுமோலிதுவஞ்சினமாதலினிப்பொழுதே
தாரார்புயவென்றியுதிட்டிரனைத்தலைகொள்வனெனத்தனுவுங்குனியா
வாராமுன்விலக்கியருச்சுனனைவருகென்றுதழீஇமதருதனனே. (௨௦௬)

ஞாவோர்களிகீயெனிறுங்கொலையிற்கொடிதென்றுயர்கேள்வியர்கூறுவரா
தாவோலையுமம்முறைகொன்றதனேடொக்குஞ்சிலபுன்சொலுரைத்திடுவா
யிவோர்தமநின்முகம்வன்மையிலொளிதயத்தொடுகண்டுமகிழ்ந்துபெரும்,
பாவோதநெடுங்கடல்சூழ்புவியிற்பரிதாபமொழித்தபனிக்குடையோய். (௨௦௭)

என்றுவுரைசெய்தறுமஞ்செயினைத்திருகைகொடிறைஞ்சிநராதிபனைத்
தன்றுவிசையாதனசிற்சிலசொற்றளர்வோடெதிர்நின்றுதனஞ்சயனுஞ்
சொன்றுனறன்மாமகனேருளையுஞ்சொல்லாமலினித்துறவெய்துவனென்
றன்றுவிறைவோடிரதத்தினிழிர்துயர்கானடைவானுணர்வுற்றனனே. (௨௦௮)

நாநாரணர்சென்றுநரபதிதானளினத்தில்விழுந்தொருநாயகமா
வரனுமவனைப்புலிதேர்மிசையேவைத்துத்துனிமாறிமொழுறுரைசெய்
தாளுமெனயேனிநின்றிடயாமனலம்பெனவோடியிமைப்பிடைமுப்
புரமேயகமாயதயித்தியரிற்பொருவோனுயிர்கைக்கொடுபோதுவமே. (௨௦௯)

விடைகொண்டனமென்றுவணங்கிநிலாமதியம்பகலேயொளிவிட்டதெனக்
குடைகொண்டுநிழற்றவிரண்டருகுங்குளிர்சாமரமாருதமாறுபொரப்
புடைகொண்டுமெய்பர்திரண்டுவரப்புலிதேர்மதமாபுரவித்திரள்கைப்
படைகொண்டபதாதினிமுன்பின்வரும்படியேகினர்மாதவபற்குனரே. (௨௧௦)

வெங்கோதைநெடுஞ்சிலையின்சிறுநாண்விசையோதையும்வெவ்விருதோதை
யும்வெண், சங்கோதையும்வண்பணையோதையுநால்வகையாகியதானைநெடுங்கட
லின், பொங்கோதையுமண்டமுடைந்திடவப்புறமுற்றகலாதுசெவிப்படமற், றிங்
கோதையெழுந்ததறிந்திலராவிலமையாவிழியோர்முதல்யாவருமே. (௨௧௧)

தாமங்களின்வைப்பருள்காளையுமச்சாகூடமறுத்தணிதானையொடும்
வீமன்றனெடும்பொருநின்றமைதன்விழிகண்டுகளித்திடவில்விசயன்
காமன்றனைநீறெழவென்றநுதற்கண்போலெரிநின்றகருத்துடனே
மாமந்தரவெற்பனதேர்கடவும்வலவன்றனொடாகவமன்னினனே. (௨௧௨)

அங்கிக்கதிர்தந்தகொடுஞ்சிலைநாணரவக்கணையஞ்சவெறிந்துமிகச்
சங்கித்தடலங்கியளித்ததனிச்சரமேவினன்வந்ததனஞ்சயனும்
பொங்கிக்கனல்சாலமெழுந்ததெனப்புகையும்படிபோயகல்வானதியின்
சங்கிற்பொறிவிட்டதுதாரகையின்கணமென்னவெழுந்ததுகாய்கனலே. (௨௧௩)

இணையின்றியெழுந்தசுடுங்கனலாலிரதங்களும்வென்முதலெப்படையுங்
கணையுஞ்சிலையுங்கவனப்பரியுங்கரியுங்கரியானவைகண்டியமன்
றணைவன்றனைவாகுவளர்ந்திடவுந்துணைவார்புருவங்கடுடித்திடவும்
பிணைவெங்குரல்கன்றிமுழங்கிடவும்பவ்வத்தரசன்றருபாணமெடா. (௨௧௪)

பவ்வம்புனல்வற்றமுகந்துவலம்படவம்பரமூடுருவப்பரவா
வெவ்வம்புதமேழுமுடன்பொழியும்வெள்ளம்புரைவெள்ளமிகச்சொரியச்
செவ்வம்பரமொத்தகளத்தினிடைச்செய்யோன்மகன்வன்பொடுசெறிவிடு
மவ்வம்புநொடிப்பொழுதத்தறவோனத்சன்றழலம்பையவித்ததுவே. (௨௧௫)

வாயுக்கணையேவினன்வானவர்கோன்மைந்தன்றிகழ்பேரொளிவான்மணியின்
சேயுற்றரசேசன்வழங்கியதின்மடல்வெங்கணையொன்றுதெரிந்தனனு
லாயுப்புறமிட்டுவிடப்பொருவோனரிவெங்கணையக்குமலைந்திடுவோன்
வீயுற்பலமாமுனைவெங்கணைமேல்விசிப்பொருமுன்புவிழுங்கியதே. (௨௧௬)

என்னம்புதனக்கெதிரில்லையெனுவிருளம்பினையேவினன்வில்விசயன்
கன்னன்கலையெட்டுடனெட்டுடைவெண்கிரம்புதொடுத்தெதிர்கன்றினனுன்
முன்னம்புசிதைந்துசிதைந்தழியாமுகமாறியிமைத்துவிழிக்குமுனே
பின்னம்புதொடர்ந்துசெலச்செலவேபிலமூழ்கியதென்னபெரும்பிழையோ. ()

மகவானருள்வாளிதொடுத்தனனம்மகவான்மகன்வாசிகளேழுடைவெம்
பகவானருள்வாளிதொடுத்தனனப்பகவானருடியாகபராயணனுந்
தகவாளியிரண்டுமுடன்கதுவித்தாழாதுயராதுசமம்பெறவே
முகவாய்கள்பிளந்தனமற்றுளபோர்முனைவாளியுமிப்படிமுட்டினவே. (௨௧௮)

உரமந்தரவெற்பினுமிக்கபுயத்தரவோனுளம்வெஞ்சினமூறியெழப்
பிரமன்கணையேவுதலுஞ்சமனூர்பின்னேன்முடுகிப்பிறைமாமவுலிப்
பரமன்கணையேவினனக்கணையப்பகவன்கணைநீறுபடுத்ததலிற்
சரமங்கவைவேறுதொடுத்திலர்கைத்தனுவுங்குனிவித்திலர்தார்முடியோர். (௨௧௯)

இவ்வாறிமையோர்கள்வரங்களினுவிருவோர்களுமெய்தியமாமறைகூர்
வெவ்வாளிகளோடியுடற்றுதலால்வெஞ்சேனையடங்கமடங்கியபின்
மைவானளகந்திசைவான்முகமாமலையாமுலைவாரிதிவண்டுகிலஞ்
செவ்வாறுபடுத்தலின்மேதினியாடிருமேனியணிந்ததுசெவ்வணியே. (௨௨௦)

வே று.

மகபதிமைந்தனையீளவுந்தினகரன்மகனுயிர்கொண்டிடவேணுமென்றுறுசின
மிகமிகவன்சிலைகோலியொண்கிரிபலமிடைவனம்வெந்திடவோடியந்தரமிசை,பு
கைகதுவும்படிசீறிவெம்பொறிவிடுபுரிதழன்மண்டியநாளிலம்பெனவரு,மிகலுடை
வெம்பகுவாய்களைந்துடையதொரெழில்கொள்புயங்கனையேவவென்றுசவியே. ()

பரிமளசந்தனதீபமுங்கமழ்புகைபனிமலருங்கொடுபூசையும்பரிவுட
னருளிவணங்கியெடாவிடும்பொழுதினிலடல்வலவன்சிலகூறினன்பரிவொடு
விரிதுளபம்புனைமாயன்வஞ்சனையுளன்விசயனகன்றடமார்பகம்புதைதர
வுரகநெடுங்கணையேவுகென்றிடவவனுறுதிநினைந்திலனுதபன்குமரனே. (௨௨௨)

மழுவுறுசெங்கையிராமனென்பவனருள்வரிசிலைகொண்டணிநாணிதன்செவி
யொடு, தழுவுறமண்டலமாய்வளைந்திடமுதுதறுகணெடுஞ்சினமூளும்வெங்கணை
யினை, யெழிலிமதங்கயவாகனன்றனயனதெழில்பெறுகந்தரமேதுணிந்திடும்வகை
யழலெழுநெஞ்சொடுநாடிநின்றுதையினனளிமுரல்பங்கயநாயகன்குமரனே. ()

வலவனெனுந்திருமாலதன்றனைகெழுவரவையறிந்தணிதேரின்வன்றிகிரிக
ளிலகியவங்குலியாறிரண்டவனியினிடைபுதையும்படிதாழநின்றிடுதலி
னலர்கதிர்தந்தருள்காளையம்பெனவிடுமரவுதனஞ்சயன்மார்பையுங்களையும்
விலகியவன்றனதாதையன்றுதவியவெயின்மகுடந்தனைமோதிவந்திடறவே. ()

இடறியதிண்பணிவாளிபின்பறிதலுமெதிர்பொரவெஞ்சிலைகோலிநின்றவன
ணி, பிடரினுமுண்டுகொல்பார்வையென்றிடவலிபெறநிலைநின்றிருதோள்களும்ப
ரிவுற, வடவியின்வெந்துதன்வால்குறைந்திடவிடுமயின்முகவெங்கணையாலதன்
பருமைகொ, ளுட்டலமிரண்டுடலாய்விழுந்தலமரவுதையினனும்பர்பிரானருள்குரி
சிலே. (௨௨௫)

பிறகுபுரிந்தெழில்கூர்தனஞ்சயன்விடுபிறைமுகவெங்கணையாலழிந்திடுபணி
திறனுடன்முன்றணிசேருமைந்தலையொடுதிரியவும்வந்தெனையேவுகென்றலறவு
முறவொடுநுந்திவழாவரம்பெறுதலினுரைவழுவும்பெரிதாகுலம்புரியினு [லே.
மறுகணையொன்றுதொடேன்முனிந்தினியெனவரிசமலங்கர்குலாதிபன்புகல

எரியிடைவெந்துடல்வாடுமுன்றறிதலினிடாநவுய்ந்திடகீபெரும்புகலென, விரைவொடுவெந்தெனைவாளிகொண்டிடுகெனவிசயனைவென்றிடுமொருளங்கருதவு, மொருதனிவெஞ்சிலைகால்வளைந்திலநுகொ லொருபடியும்பிழைபோனதுன்றெருடையென, வரிகழலங்கர்பிரானைநோக்குரைசெய்துமறலியிடந்தனிலானதன்றுரகமே. (உஉஎ)

வேறு.

காகாயுதந்தப்பிநாளுய்ந்துபொழுதத்துநாகக்கொடிச்
சேகானகெஞ்சத்தவன்சேனையிற்றன்செருச்சேனையிற்
பாகார்கடாயானைகாபாலர்மகிழ்வோடுபரிவெய்திரு
போகாதசத்தன்னிலெக்கோளுங்கரென்னவிகலின்றியே. (உஉஅ)

அருமார்பிலக்காகவெய்யென்னவெய்யாவகங்காரமும்
வருமாகனைத்தன்னைமறுகாதுமேவாமன்மறைசெய்ததும்
பொருமாறுகிலைவற்றதுங்கண்டுநாணெத்தபோர்மீளியைத்
திருமாலொடொப்பானுமுளநொந்துநொந்தம்மசிலகூறுவான். (உஉகூ)

என்றுளுமரிநித்தடக்தேர்விரைந்தூர்நளினியென்றுமற்
றன்றுளுமரிதத்தவிசயன்றனுயிர்கொள்ளலுன்னித்தபோர்
பன்றுகதுவசத்துமரிதானுனைக்கொண்டுபாராளுமா
றென்றுவிழிந்தானவன்றேரின்மிசைநின்றுமிசைநின்றுளான். (உஙo)

என்றேயெழிற்குந்திவயினல்குதனியாளியிகலேறனுன்
வன்றேர்செலுத்திப்பெரும்போர்முடிப்பிக்கவருசல்லியன்
றென்றேரிசைச்செவ்விநறைநாறுமலர்விட்டசிறைவண்டெனத்
தன்றேருமேல்கொண்டுதனிவில்லுமீளத்தரித்தானரோ. (உஙக)

கதவாசிகடையற்றுவலியற்றுவரிவிற்கொள்கணையாவையும்
விதவாழிநிலனுற்றவிரைதேருமெய்வன்புமெலிவுற்றபின்
புதவாமன்மழுவாளியுரைசெய்தசாபத்தையுறவுன்னிநு
னதவாமுமட்போர்தனக்கஞ்சமோவென்றுமடலங்கர்கோன். (உஙஉ)

இயற்கைப்பெருக்கொற்றவலியன்றியார்யாரிடத்தும்பெறுஞ்
செயற்கைப்படைத்தின்மைகைவந்திலாவெய்யசெய்யோன்மகன்
வெயர்க்கத்தனுதல்கண்சிவப்பேறமனம்வெம்பமண்மீதிழிந்
தயர்க்கச்சபித்தோனைவந்தித்துவேறோர்தடந்தேரின்மேல். (உஙங)

பரித்தன்வலவன்செலுத்தத்தடக்கையிலிசல்விற்றுடன்
சிறிக்கெச்செஞ்சாயகக்கோடிமுகிலூர்திசேய்மேல்விடக்
காறிக்கனன்றக்கடுந்தேர்செலுத்துங்கரும்பாகனூர்
கூறிக்கொடுத்தாருக்கண்குமரன்வன்மைகுறைகின்றதே. (உஙச)

குறையற்றதன்வில்லைமகவற்குமாரன்குனித்தாசகஞ்
சிறையற்றகிரிபோலநிற்கின்றநிலைகாரிசிறுவன்றன்மெய்
மறையத்தொடுத்தானுயிர்க்காவலிப்பான்மயிர்க்காலெலாங்
கறையற்றமதிபோலநிலவீனுமுத்தக்கழற்காலினன். (உஙரு)

வேறு.

எத்தலங்களினுமிகையாவோகையாகையாவெதிரிலாவீரன்
மெய்த்தலமுழுதுந்திறந்தகுருதிவெயிலவன்கரங்கள்போலுருப்பக்
கொத்தவாவங்கண்மருடமுக்கவசகுண்டலங்களுமுருக்குலைந்துங்
கைத்தலமற்றதனிவில்வளைத்துனிப்புக்கசேக்கலைதொடுத்திடுங்கணைக்கும். (உஙசு)

அத்தவெற்பிரண்டுவிற்கிடையெனப்போயாதபன்சாய்தல்கண்டருளி
முத்தருக்கெல்லாமூலமாய்வேதமுதற்கொழுந்தாகியமுதல்வன்
சித்திரச்சிலைக்கைவிசயனைச்செருநீயொழிகெனத்தேர்மிசைநிறுத்தி
மெய்த்தவப்படிவவேதியனாகிவெயிலவன்புதல்வனையடைந்தான். (௨௩௭)

தாண்டியதரங்கக்கருங்கடலுடுத்ததரணியிற்றளர்ந்தவர்தமக்கு
வேண்டியதருதிநீயெனக்கேட்டேன்மேருவினிடைத்தவம்பூண்டே
னீண்டியவறுமைப்பெருந்துயருழந்தேனியைந்ததொன்றிக்கணத்தளிப்பாய்
தூண்டியகவனத்துரகதத்தடந்தேர்ச்சுடர்தரத்தோன்றியதோன்றல். (௨௩௮)

என்றுகொண்டந்தவந்தணனுரைப்பவிருசெவிக்கமுதெனக்கேட்டு
வென்றிகொள்விசயன்விசயவெங்கணையான்மெய்தளர்ந்திரதமேல்விழுவோ
னன்றெனநகைத்துத்தரத்தகுபொருணீநவில்கெனநான்மறையவனு
மொன்றியபடிநின்புண்ணியமனைத்துமுதவுகென்றலுமுளமகிழ்ந்தான். (௨௩௯)

ஆவியோநிலையிற்கலங்கியதியாக்கையகத்ததோபுறத்ததோவறியேன்
பாவியேன்வேண்டும்பொருளெலாநயக்கும்பக்குவந்தன்னில்வந்திலையா
லோவிலாதியான்செய்புண்ணியமனைத்துமுதவினேன்கொள்கநீயுனக்குப்
பூவில்வாழயனுநிகரலனென்றாற்புண்ணியமிதனினும்பெரிதோ. (௨௪௦)

என்னமுன்மொழிந்துகரங்குவித்திறைஞ்சவிறைஞ்சலர்க்கெழிலியேறனையான்
கன்னனையுவகைக்கருத்தினானோக்கிக்கைப்புனலுடன்றருகென்ன
வன்னவனிதயத்தம்பின்வாயம்பாலளித்தலுமங்கையாலேற்றான்
முன்னமோரவுணன்செங்கைநீரேற்றுமூவுலகமுமுடன்கவர்ந்தோன். (௨௪௧)

மல்லலந்தொடையனிருபனைமுனிவன்மகிழ்ந்துநீவேண்டியவரங்கள்
சொல்லுகவுனக்குத்தருதுமென்றுரைப்பச்சூரன்மாமதலையுஞ்சொல்வா
னல்லல்வெவ்வினையாலின்னமுற்பவமுண்டாயினுமேழெழுபிறப்பு
மில்லையென்றிரப்போர்க்கில்லையென்றுரையாவிதயநீயளித்தருளென்றான். (௨௪௨)

மைத்துனனுரைத்தவாய்மைகேட்டையன்மனமலருகந்துகந்தவனைக்
கைத்தலமலரான்மார்புறத்தழுவிக்கண்மலர்க்கருணைநீராட்டி
யெத்தனைபிறவியெடுக்கினுமவற்றுளீகையுஞ்செல்வமுமெய்தி
முத்தியும்பெறுதிமுடிவிலென்றுரைத்தான்மூவருமொருவனாமூர்த்தி. (௨௪௩)

போற்றியகன்னன்கண்டுகண்களிப்பப்புணரிமொண்டெழுந்தகார்முகிலை
மாற்றியவடிவும்பஞ்சவாயுதமும்வயங்குகைத்தலங்களுமாகிக்
கூற்றுறழ்கராவின்வாயினின்றழைத்தகுஞ்சராசன்முனன்று
தோற்றியபடியேதோற்றினான்முடிவுந்தோற்றமுமிலாதபைந்துளவோன். (௨௪௪)

அமரரானவருமமரயோனிகளுமமரருக்கதிபனானவனுங்
கமலநான்முகனுமுனிவருங்கண்டுகனகநாண்மலர்கொடுபணிந்தார்
சமரமாமுனையிற்றனஞ்சயன்கணையாற்சாய்ந்துயிர்வீடவுஞ்செங்க
ணமலநாரணனைக்காணவும்பெற்றேனென்றுதன்னகமிகமகிழ்ந்தான். (௨௪௫)

வேறு.

அருந்தழன்மாமகம்புரிந்துங்கடவுட்கங்கையாதியாம்புனல்படிந்துமனிலயோ
கத், திருந்துமணிமலர்தூவிப்பூசைநேர்ந்துமெங்குமாகியவுன்னையிதயத்துள்ளே,
திருந்தநிலைபெறக்கண்டும்போகமெல்லாஞ்சிறுகியனைத்துயிருக்குஞ் செய்யவொ
ண்ணாப், பெருந்தவங்கண்மிகப்பயின்றும்பெறுதற்கெட்டாப்பெரும்பயனின்றி
ருவருளாற்பெறப்பெற்றேனே. (௨௪௬)

நீலவெற்பெங்கிரியுமழைமுகிலும்பவ்வநெடுநீருங்காயாவுநிகர்க்குமிந்தக், கோலமும்வெண்கதைவாளுஞ்சங்குநேமிகோதண்டமெனும்படையுங்குழைத்தவாச, மாலைகளுந்துழாய்மார்புந்திரண்டதோளுமணிக்கழுத்துஞ்செவ்விதழும்வாரிசாதக், காலமலரெனமலர்ந்தமுகமுஞ்சோதிக்கதிர்முடியுமிம்மையிலேகண்ணுற்றேனே. ()

தருமன்மகன்முதலானவரியகாதற்றம்பியரோடமர்மலைந்துதறுகணாண்மைச், செருவிலெனதுயிரனையதோழற்காகச் செஞ்சோற்றுக்கடன்கழித்தேன்றேவர்கோவுக், குறைபெறாதக்கவசமுங்குண்டலமுமீந்தேனுற்றபெருநல்வினைப்பேறுனக்கேதந்தேன், மருதிடைமுன்றவழ்ந்தருளுஞ்செங்கண்மாலேமாதவத்தாலொருதமியன்வாழ்ந்தவாறே. (உசஅ)

வான்பெற்றநதிகமழ்தாள்வணங்கப்பெற்றேன்மதிபெற்றதிருவுளத்தான்மதிக்கப்பெற்றேன், தேன்பெற்றதுழாயலங்கற்களபமார்புந்திருப்புயமுந்தைவந்திண்டப்பெற்றே, னூன்பெற்றபகழியினாலழிந்துவீழ்ந்துமுணர்வுடனின்றிருநாமமுரைக்கப்பெற்றேன், யான்பெற்றபெருந்தவப்பேறென்னையன்றியிருநிலத்திற்பிறந்தோரில்யார்பெற்றாரே. (உசகூ)

என்றுமகிழ்வுறவணங்குமெல்லைக்கதனின்புறவன்புறவினிலாநிரையின்பின்போய்க், கன்றுகொடுவிளவெறிந்தகண்ணனன்றானுங்கன்னனுக்குக்கட்டுரைப்பான்கடவுளாந, னன்றுனதுகவசமுங்குண்டலமும்வாங்கவழைத்தேனுங்குந்தியைக்கொண்டரவவாளி, யொன்றொழியத்தொடாதவரங்கொள்வித்தேனுமுற்பவத்திறன்மையுணர்வித்தேனும். (உரு0)

தக்ககன்றன்மகவானவுரகவாளிதனஞ்சயனைச்சதியாமற்சாய்வித்தேனு, மெய்க்கருணைநின்பொருட்டால்யானேயென்றுமீண்டும்போய்த்தேர்வலவன் விசயற்கானே,னெக்கடலுமெக்கிரியுமெல்லாமன்றுமிமையோருமானுடருமெல்லாமாகி,மைக்கணிளங்கோவியர்தண்டுகிலுநாளும்வரிவளையுமடநெஞ்சும்வாங்குமாலே. ()

பகலவன்றன்மதலையைநீபகலோன்மேல்பாற்பவ்வத்திற்படுவதன்முன்படுத்தியென்ன, விகல்விசயனுறுதியுறவஞ்சரீகமெனுமம்பாலவனிதயமிலக்கமாக, வகலிவ்வீரரெலாமதிக்கவெய்தானந்தவாசகமுருவியப்பாலோடித், தகவுடையார்மொழிபோலத்தரணிபூடுதப்பாமற்குளித்ததவன்றனும்வீழ்ந்தான். (உருஉ)

கருடனதிருத்தோளிற்கண்டகோலங்கண்ணினு நெஞ்சினுநிற்கக்கருணையாதி, புருடனதிருநாமந்தனதுநாவிற்போகாமனனிவிளங்கப்புதைந்தவாளி, வருடமுடல்குளிர்விக்கச்செம்பொற்றேர்மேன்மன்னரெலாம்புடைசூழவையங்காக்குங், குருடன்மகனொருவிருந்தசோகங்கூரக்குற்றுயிரினுடன்கிடந்தான்கொடையான்மிக்கோன். (உருங)

முந்தியெதிர்பொரும்விசயன்றொடுத்தகோலான்முடிசாய்ந்தின்றைவருக்குமுன்னோன்வீழ்ந்தா, னந்திபடுவதன்முன்னேயாவிபோமென்றசரீரியெடுத்துரைப்பவன்னையான, குந்திதனதுளமுருகக்கண்ணீர்சோரக்குழல்சரியப்போர்க்களத்தக்கோகோவென்று, வந்திருகைதலைப்புடைத்துத்தலைநாளீன்றமகவின்மேல்வீழ்ந்தழுதாண்மன்றேறுமன்றே. (உருச)

என்றேயென்றுரைதையழைக்கண்ணீர்மாடத்தெழிலிரவிதிருவருளாலீன்றேனின்ற, வன்றேபொற்பெட்டகத்திற்கங்கையாற்றிலாமுறையாலுனைவிடுத்தேனருளிலாதேன், வென்றேமன்னவர்தருமன்மதலைக்காவிமித்திரனைதகேட்டேன்வீரங்கெட்டு, நன்றேயென்றவப்பயனென்றன்னிவாழ்ந்தேனெழுகீயரசாளநடக்கின்றாயோ. (உருரு)

ஓரைஞ்சுபேருளராலறந்தவாதவுதிட்டிரனாதியருரகக்கொடியோனாதி, யீரைஞ்சுபதின்மருளர்தம்பிமார்களிங்கிதங்களறிந்தடைவேயேவல்செய்யப், பாரஞ்சுமொருகுடைக்கீழ்நீயேயாளும்பதமடைந்தும்விதிவலியாற்பயன்பெறாமற், காரஞ்சுகரதலத்தாயந்தோவந்தோகடவுளர்தம்மாயையினாற்கழிவுற்றாயே. (உ௫௬)

என்றென்றேயமர்க்களத்தினின்றவேந்தர்யாவருங்கேட்டதிசயிப்பவேங்கியேங்கி, யன்றன்போடெடுத்தணைத்துமுலைக்கணூறலமுதூட்டிநேயமுடனணித்தாவீன்ற, கன்றெஞ்சவிளைந்திளைந்துமறுகாநின்றகபிலையைப்போலென்பட்டாள்கலாபம்வீசிக், குன்றெங்குமிளஞ்சாயன்மயில்களாடுங்குருநாடன்றிருத்தேவிகுந்திதேவி. (உ௫௭)

வேறு.

அன்னைமடியினுங்கரத்துமுடல்கிடப்பவங்கர்பிரானாவிதாதை
தன்னைமருவுறத்தழுவித்தானமுறக்கிளர்ந்ததவண்டமொருமன்
மின்னைவலியுறநீட்டியண்டமுகடசையாமல்விண்ணோர்தச்சன்
பொன்னையழகெழப்பூசியொளிபிறங்கநாட்டியதோர்பொற்றூணொத்தே. (உ௫௮)

மருத்துதவவருசண்டமருத்தாலுமருத்துவான்வழங்குஞ்சோதி
யுருத்திகழுங்கரியசுடருருத்தெழுவெங்கனலாலுமுகாந்தந்தன்னி
ணிருத்தமிடும்பெரும்பவ்வநெடுநீத்தம்வறப்பதுபோனிருபன்சேனைப்
பெருத்தகடல்சுவறியவப்பெருமைதனையெப்படிநாம்பேசுமாறே. (உ௫௯)

அணையார்தம்படைக்கடலினருநிலைக்குக்கரையெறலானகோலப்
புணையாயெத்திறங்களினும்பகிராமலுற்றதெலாம்புகலத்தக்க
துணையாயென்னுயிர்க்குயிராந்தோழனுமாகியவுன்னைத்தோற்றேனாகி
லிணையாருமிலாவரசேயாரைக்கொண்டரசாளவிருக்கின்றேனே. (உ௬0)

சூழ்வேலையுலகாளுஞ்சூழ்ச்சியுமிப்பெருஞ்செல்வத்துவக்குநெஞ்சால்
வீழ்வேனோவமராடவீமனொடுதலைநாளில்விளைந்தசெற்றந்
தாழ்வேனோவுனையொழிந்துதம்பியரையொழிந்துமினித்தனித்துநானே
வாழ்வேனோவாழ்வேயென்மனவலியேவருகின்றேன்வருகின்றேனே. (உ௬௧)

எனக்கொண்டுசுயோதனன்பேரிரக்கமுடனழுதரற்றவிருந்தவேந்தர்
மனக்கொண்டவருத்தமுடன்வலியிழந்தோமெனக்கலுழவானினெங்கு
மினக்கொண்டன்முழங்குவபோலந்தரதுந்துபிமுழக்கியிமையோரார்ப்பக்
கனக்கொண்டகதிர்புதல்வன்பாடறிந்துமூழ்கியதாற்கடலினூடே. (உ௬௨)

பேரறத்தின்மகன்முதலாம்பிள்ளைகளைவருந்தம்மைப்பெற்றபாவை
யார்கயற்கண்புனல்சொரியவழுகின்றகுரலினைக்கேட்டாழியானை
யோரிமைப்பில்வினவியிடயுள்ளபடியுரைத்ததற்பினுருமேறுண்ட
கூரெயிற்றுநாகம்போற்குலைகுலைந்துதம்முன்னைப்போய்க்குறுகினாரே. (உ௬௩)

கன்னியிளம்பருவத்திலரியமாவெனுங்கடவுள்காதல்கூர
மன்னியமந்திரமெமக்குமின்றளவுமுரைத்திலையான்மறந்தாய்கொல்லோ
பின்னியசெஞ்சடைக்குழலாயீதென்னபேரறிவுபெற்றதாயி
னன்னியர்நன்றாயிருந்ததிப்படியேபிழைப்பிப்பதறிந்திலேமே. (உ௬௪)

ஊற்றிருந்தவிழியினளாயுனைப்பயந்தாண்மனமறுகவுயிராய்நின்ற
காற்றிருந்தவிடந்தேடிக்கணைபலவுமுடல்குளிப்பக்கன்றாவின்று
கூற்றிருந்தபதிதேடிக்குடியிருக்கநடந்தனையோகொற்றவேந்தாய்
வீற்றிருந்திங்கைவேமுமடிவருடப்புவியாளவிதியிலாதாய். (உ௬௫)

ஒன்றெடுத்தவயவ்வாளியெத்தனையாயிரந்தொடுத்தேனுரகத்தானீ
நான்றொடுத்தகணைக்குத்தப்பினேனெனமகிழ்ந்தேன்சஞ்சரீகந்
தேன்றொடுத்தமலரலங்கற்றினநாதன்சேயேநின்றிருமார்பத்தில்
யான்றொடுத்தநெடும்பகழியெனைக்கெடுப்பதறிந்திலேனென்செய்தேனே. (௨௬௬)

யாயுரைத்ததல்லாதுவேறுரைத்ததசரீரியென்னுந்தேவின்
வாயுரைத்தநின்றளவுங்கேட்டிலேன்கேட்டனமேல்வாட்டமுண்டோ
பேயுரைத்தத்தாலாட்டமுலைப்பாலோடுயிருண்டபித்தாவின்னை
நீயுரைத்தபிறகறிந்தேனெம்முனையின்றெனைக்கொண்டேநேர்செய்தாயே. ()

ஆடகனைப்புதல்வனைக்கொண்டழிப்பித்தாயிலங்கைநகர்க்கரசையன்று
வீடணனைப்பகையாக்கிக்கிளையுடனேவீழ்வித்தாய்வேலைசூழ்ந்த
நாடறியப்புருந்தெமக்குநாயகமாங்கன்னனையுநரன்கையாலே
வீடறியப்பொருவித்தாயிமையோர்கள்வல்லவிரகியார்வல்லாரே. (௨௬௮)

இவ்வகையேதிருத்தமையனிணையடிக்கீழ்வீழ்ந்தலறியாயுந்தாமு
மைவரும்போய்த்தம்பாடிவீடடைந்தாராகுலத்தாலழிந்தநெஞ்சார்
பைவருமாகணத்துவசப்பார்த்திவனைக்கொண்டேதம்பாடிபுக்கார்
தைவருநின்சிலைத்தடக்கைச்சகுனிதனைமுதலானதரணிபாலர். (௨௬௯)

ஆ செய்யுள் - ௪,௧௦௧.

பதினேழாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

கன்னபருவம்

முற்றுப்பெற்றது.

---

உ

ஒன்பதாவது

# சல்லியபருவம்.

## பதினெட்டாம்போர்ச்சருக்கம்.

மீனாமைகோலநெடுநரசிங்கமாகிநிலம்விரகாலளந்தகுறளா
யானாதுசிறுமழுவல்வில்லுமுனையலமுற்றசெங்கையவராய்
வானாடர்வந்துதொழமண்ணாடர்யாவரையுமடிவிக்கவந்தவடிவாய்
நானாவிதங்கொள்பரியாளாகிநின்றருளுநாராயணாயநமவே. (க)

சிதையத்தன்மைந்தனையடுந்தன்மைகண்டுமொருசெயலின்றிநீடுதுயர்கூ
ரிதையத்தனாகியகல்பகலோன்மறித்தவுணரெதிரஞ்சுமாறுபொருதா
னுதையத்தடங்கிரியுமொளிபற்பராககிரியொப்பாசவீசகதிரிற்
புதையப்பரந்தவகலிருளுந்துரந்துரகர்புவனத்தினூடுபுகவே. (உ)

கண்டுஞ்சலின்றியிரவிருகண்ணிலான்மதலைகண்ணீரின்மூழ்கியெவரைக்
கொண்டுஞ்செருத்துமுனைமுடிவிப்பதென்றுயர்சகுனியோடுமெண்ணியிருள்போ
யுண்டுஞ்சுகித்துமலர்மதுவொன்றுசாதிமுதலொண்போதுவிட்டுஞிமிறும்
வண்டுஞ்சுரும்புமரவிந்தத்தடத்துவரவருவோனைவந்தனைசெய்தான். (ங)

தொல்லாண்மையெந்தைமுதுதந்தைக்குமைந்துறுதுரோணற்குமண்ணினிகர்வே
றில்லாதவண்மைபுனைவெயிலோன்மகற்குமுடனெண்ணத்தகுந்திறலினான்
வில்லாண்மையாலும்வடிவாளாண்மையாலுமயில்வேலாண்மையாலுமவனே
யல்லாதுவேறுசிலரிலரென்றுசல்லியனையதியாதரத்தொடழையா. (ச)

நீயேயெனக்குயிருநீயேயெனக்குளமுநீயேயெனக்குநிதியு
நீயேதுணைப்புயமுநீயேவிழித்துணையுநீயேயனைத்துநிலையு
நீயேமுனைச்செருவிலதிரதரின்மாரதரினிகரற்றகோவுமதனா
னீயேமுடித்தியெனதெண்ணத்தையென்றுவகைநிகழாமகிழ்ந்துபுகழா. (ரு)

மன்பட்டவர்த்தனருமணிமகுடவர்த்தனருமுறையால்வணங்கவொளிகா
னன்பட்டமுந்தனதுகையாலணிந்துபடைநாலுக்குநாயகமெனா
மின்பட்டவோடைநுதலிபராசன்வன்பிடரின்மிசைவைத்துகந்தனனரோ
வென்பட்டதப்பொழுதுகுருசேனைமெய்ப்புளகமெழ வொண்கண்முத்தமெழவே.

சேனாபதிக்குவரிசைகள்யாவுநல்கியுயர்தெய்விகமதானபுனலிற்
றூநானமாடிமறைவாணர்க்கநேகவிததானஞ்சொரிந்துதுகிலுந்
தேனாரலங்கல்பலகலனோடணிந்துபொருதேரிற்புகுந்தனன்வழா
வானாருநாதனதிர்முகிலிற்புகுந்ததெனவன்போடுமன்னர்தொழவே. (எ)

கிருபாரியன்கடவுண்மருகன்றிகத்தபதிசாலுவன்கிருபன்முதலோ
கிருபாநுமன்னர்வரமுனிவார்பெருஞ்சேனையெங்கணுஞ்சூழவரவே
கிருபாதியன்றனதுசேனாதிபன்றனெனுடுகீள்களம்புக்கனனரும்
பொருபாரதச்சமரமின்றேமுடிப்பலெனுமெண்ணத்தினோடுபொரவே. (௮)

தாமந்தாரியர்கள்பலரொடும்வலப்புடைசலிப்பின்றியணியவிறல்கூர்
மாமந்தாரியர்கள்பலரொடுமிடப்புடைவகுப்பொடணியத்தினகரன்
கோமைந்தன்மைந்தரிருவோரொடுஞ்சேனையைக்கொண்டுறவணிந்தனனிகற்
சாமந்தர்மண்டலிகர்முடிமன்னர்சூழ்வரத்தரணிபதிபின்னணியவே. (௯)

ஒருவருமெனக்குநிகரில்லையெனுமத்திரன்புத்திரனையுரகதுவசன்
பொருபடைமுனைக்குரியசேனாபதிப்பெயர்புனைந்தமைபுகன்றனமினிக்
குருகுலம்விளங்கவருகுந்திமைந்தர்களிரவிகுமரனைக்கொன்றவிரவிற்
பருவரன்மிகுந்துளமிளைந்ததும்பாசறைமுனைந்ததும்வியந்துபகர்வாம். (௧௦)

வேறு.

செவ்விரவிதிருமகனைச்செகம்புரக்குங்காவலனையிரவலோருக்
கெவ்விரவும்விடிவிக்குமிருகரத்துவள்ளலையின்றிழந்தோமென்று
விவ்விரவுநறுமலர்த்தார்த்தருமன்முதலவருந்தம்விழிநீர்சோர
வவ்விரவிலிமைப்பொழுதுந்தரியாமலழுதாற்றியலமந்தாரே. (௧௧)

சாயைவெறுத்தனளவளிற்றலத்தேவிமிகவெறுத்தாடபனனின்ற
சேயைவெறுத்துயிர்கவர்ந்தானுறவறியான்றயித்தியர்போர்செயித்தானென்று
மாயைவெறுத்திடவிளைத்தமாயோனைவெறுத்தனன்வன்மனத்தியான
யாயைவெறுத்தனன்பின்னைவிதியைவெறுத்தனன்வீமற்கிளையகோவே. (௧௨)

அற்றையிராவிடிவளவுந்தனித்தனியேயாகுலமுற்றனிலன்மைந்தன்
மற்றைநாள்வருமாறுமன்னவருமவருநினியுமருங்குசூழ
விற்றைநாள்வஞ்சினத்தின்குறைமுடிக்கவேண்டுமெனுமிதயத்தோடும்
பிற்றைநாண்முரசதிரவளைமுழங்கக்களம்புகுந்தான்பிதாவைப்போல்வான். (௧௩)

விம்முபெரும்பணையொலியால்விண்டதுகோலண்டமெனவிண்ணோரஞ்சக்
கைம்முகமாமுதலானகடுஞ்சேனைப்பாஞ்சாலன்காதன்மைந்த
னைம்முகமுந்நாலுவிரதமூர்ந்தணிவகுக்கவிளையோர்யாருந்
தம்முனைவந்தடிவணங்கிப்புடைசூழ்ந்தார்சிறிதுமனஞ்சலிப்பிலாதார். (௧௪)

அத்திரயூகமதாகவரும்பெருஞ்சேனையைவகுத்தாங்கதிபனாகி
மத்திரபூபதிநின்றவலியினைக்கண்டதிசயித்துமாலைநோக்கி
யித்திறமாகியபடையோடெப்படிநாஞ்சிலபடைகொண்டெதிர்ப்பதென்றான்
முத்திரமாகியவினைகளொருகாலுந்திருவுளத்திற்குடிபுகாதான். (௧௫)

வீமனைச்சிலைக்குருவாம்வேதியனைநம்முனைமுன்விடுசேர்த்த
நீமணிப்பொலங்கழலோர்நின்னருகேநிற்கின்றார்நிகரிலாய்கே
ளடுதிரைக்கடனீந்தியேறினர்க்குக்கழிகடத்தலரியதொன்றோ
தோடவிழ்தார்ச்சல்லியனுக்கினைப்பரோவெனமொழிந்தான்றுளபமாலே. (௧௬)

வில்லியரில்வேலாளில்வாளெடுத்தோர்தம்மிலொருவேந்தரொவ்வார்
செல்லியல்வெம்பரியாளிற்கரியாளிற்றேராளிற்சிலர்வேறொவ்வார்
மல்லியல்பொற்றோள்வலிக்குந்தண்டிக்குமெதிர்ந்துபொரவல்லார்யாரே
சல்லியனுக்கொப்பார்நின்றம்பியரிலவனென்றுஞ்சாற்றினனே. (௧௭)

அருவரையோரிரண்டிருபாலமைந்தனையதடம்புயங்கண்டவனிவேந்தர்
வெருவருபோர்மத்திரத்தான்வேறொருவர்மேற்செல்லானின்மேலன்றி
யிருவருமேமுனைந்துமுனைந்திரவிகடல்விழுமளவுமிகல்செய்தாலு
மொருவரொருவரைவேறலொன்றுநின்றுமக்கென்றுமுரைசெய்தானே. (௧அ)

பார்த்தனொருவனுஞ்சென்றுபரித்தாமாவுடன்மலையப்படைஞரோடு
மாத்திரிமைந்தரிலிளையோன்சௌபலனைவெல்லவிகன்மாவலோனு
மூத்தவன்மைந்தரைவெல்லமுனைப்பவனன்மைந்தனுமெண்டுவெம்போர்
கோத்தருமமத்திரத்தார்கோவையுயிர்கவர்தியெனக்கூறியிட்டான். (௧௯)

வேறு.

கிருபையாலுயர்கேசவனிங்கிதக்கேள்விகளுணர்வுடன்கேட்டுத்
துருபதேயனுந்தன்பெருஞ்சேனையைத்தூன்றியவியூகமாத்தொடுத்து
நிருபர்யாவருஞ்சூழ்வரத்தாழ்சலநிதியெனவிதியெனநின்றான்
பொருபதாகினியிரண்டினுமுனையுறப்போர்வல்லோர்தூசிகள்பொரவே. (௨0)

ஆயபோதினிற்குருபதிபதாகினிக்கதிபதியாயபூபதியம்
மாயவன்புகன்மொழிப்படிதருமன்மாமதலைமேல்விரைவுடன்வந்தான்
காயும்வெங்கனற்கண்ணினன்செவியுறக்கார்முகங்குனித்தசெங்கரத்தான்
றீய்வாகியசிலீமுகமுரனுறச்சொரிதருசிங்கவேறனையான். (௨௧)

எதிரிதேர்வரும்வன்மைகண்டிமில்முரசெழுதியகொடிநராதிபனுங்
கதிரினேழ்பரித்தேரினுங்கடியதன்கவனமான்றேரெதிர்கடவி
முதிரமேல்வருங்கணைகளைக்கணைகளான்முனைகொடுமுனைகொள்கார்விசும்பிற்
பிதிர்படும்படிதொடுத்தனன்றொடித்தடக்கையினிற்பிடித்தவிற்குனித்தே. (௨௨)

கொடிஞ்சிமானெடுந்தேர்களிற்பூட்டியகுரகதக்குரம்படப்படமண்
ணிடிஞ்சுமேலெழுதூளிமுற்பகல்வருமிரவினைநிகர்த்ததவ்விரவு
விடிஞ்சதாமெனப்பரந்ததத்தேர்களின்மின்னியமணிகளின்வெயில்போய்ப்
படிஞ்சதூளியோர்நடம்பயிலரங்கினிற்பரப்பியவெழினிபோன்றதுவே. (௨௩)

தன்பெருந்தனிச்சங்கினைமுழக்கினன்றருமன்மாமதலையுந்தனது
வன்பெரும்பணைச்சங்கினைமுழக்கினன்மத்திராதிபன்றிருமகனு
நன்பெருந்துளைச்சங்குகளெழுப்பியநாதம்வான்முகடுறநண்ணி
மின்பெரும்புயலேழுமொத்ததிர்தலின்மிகுகுரற்றனிதமொத்துளதே. (௨௪)

வில்லெடுத்தனர்வியுடைநிலையினர்வீக்கிநாண்விரல்களிற்றெறித்து
மல்லெடுத்ததோள்வலனுறவளைத்தனர்வடிக்கணைமுனையுறவடசிச்
செல்லெடுத்தபேரிடியெனமுறைமுறைதொடுத்தனர்தேர்களுஞ்செலுத்திக்
கல்லெடுத்தெதிர்மலைந்தவாலியுமணிக்கழுத்துடையவனுமேயனையார். (௨௫)

எய்தவம்புகளிருவர்மெய்யினும்படாதிடையிடையெஃகுடைத்தலைகள்
கொய்தவம்புகளாகியேமுழுவதும்விழுந்தனகூறுவதென்கொல்
கைதவம்புகலுதற்கிலாவெண்ணுடைக்கருத்தினர்திருத்தகுவரத்தாற்
செய்தவம்புரையறப்பலித்தனையவர்திருக்கணுங்கைகளுஞ்சிவந்தார். (௨௬)

கிரித்தடங்குவடனையகேசரிநிகர்சல்லியன்முரசகேதனன்றன்
பரித்தடந்தனித்தேர்விடும்பாகனைப்பாணமொன்றுற்றலைதுணித்து
வரித்தடஞ்சிலைநாணறுத்தொருமுனைவாளியால்வடிக்கணையொன்றால்
விரித்ததன்குடைமகுடமுமொடித்தனன்வில்வலோரெவரினுமிக்கோன். (௨எ)

வலவன்வீழ்ந்ததுந்தனுவினாணற்றதுமனத்தழுக்கிலாவாய்மைப்
புலவன்வென்குடையொடிந்ததுமேல்வருபோற்றலனேற்றமும்பொருமற்
றுலவுமின்சிலைக்கணைசிலதம்முனைக்கொண்டவீரியமெலாங்கெடுத்தான்
கலவமாமயிலொழிந்துபஞ்சானனமெழுதியதனிக்கொடிக்கந்தன். (உ௮)

தனதுவின்கையிற்சாத்திறுந்தம்பிகைச்சாம்விரைந்துடற்றலிற்றடக்கைக்
கனதுறுந்தனேயூன்றிநின்றுவருக்கணைக்கரமலையுமாகண்டா
னெனதுதோள்களிலினியவன்றனக்குவேறியாதெனுமென்றுடைமனந்தான்
வினைதைகாலியோவெனமகூர்வலியிறுன்வேந்தர்யாரினும்புகழ்மிக்கோன். (உ௯)

எந்தவெந்தவெஞ்சாயகமறையுடனிமையவர்முனிவரர்கொடுத்தா
ரந்தவந்தவெஞ்சாயகமடங்கலுமவரவர்முறைமையிற்றொடுத்தார்
முந்தமுந்தமற்றுள்ளவாயுதங்களுமுடிமுதலடியளவாக
வுந்தவுந்தவெங்குருதியுமுளையுமுகவுகவுடற்றினருரவோர். (௩0)

மத்திரப்பெயர்ச்சிங்கவேறனையவன்வன்கைவான்படைகளின்மயங்கிப்
பத்திரப்பெயர்ப்பருத்தகைச்சிறுத்தகட்பாய்மதப்பருஉப்பகடனையான்
சித்திரக்கதிர்மணிமுடிப்பீடிகைத்திண்டிறற்றிகிரியந்தேர்நின்
றத்திரத்தைவிட்டொருதனிக்கதையுடனிழிந்துபோயவனியிலானான். (௩௧)

பகைவனேறியதேர்விடும்வலவனுந்திகிரியும்பாய்பரிமாவும்
புகையெழும்படியிமைத்தகண்விழிக்குமுன்பொடியெழவிடியெனப்புடைப்ப
வகைகொடார்முடிமத்திரத்தலைவனுமாமறத்தோமரப்படையான்
மிகைகொள்வன்றிறல்வீமனைநெற்றியிலெற்றினன்வெற்றிகூர்ந்திடவே. (௩௨)

வேறு.

தோமரந்தன்னால்வாயுசுதனமரழிந்தபோதி
வெமருவரிவிற்றுணையிருபெருஞ்சேனையோரு
மாமருடடந்தேர்வாசிமத்தவாரணங்களூர்ந்து
நிமருகானமென்னத்தனித்தனிசெருச்செய்தாரே. (௩௩)

தேரவன்மைந்தன்மைந்தர்சித்திரசேனனேனைச்
சூரியவன்மன்சித்திரகீர்த்திமுச்சுடரோடொப்பார்
வீரரில்வீரனானவெம்பரிசுகுலனோடும்
போரில்வந்தெதிர்ந்துதாதைபோயுழிப்போயினாரே. (௩௪)

தசையுறவளர்த்தபொற்றோட்சகுனியுந்தனயராகி
விசையுடன்வளர்ந்தவீரிருவருமிரதமேலோர்
திசையுறுமதமாவந்துநெருப்பெதிர்பட்டதென்ன
விசையனதினவலோடுசெருச்செய்துவென்னிட்டாரே. (௩௫)

புயங்கவெம்பதாகைச்சப்பொங்கழற்புயங்கம்போல்வான்
நயங்குவெங்கழற்காற்கேதுதரனெனுந்தனுவலோனை
வயங்குவெஞ்சிறகர்ப்புங்கவயங்கோள்கூர்வாளியொன்று
லியங்குகவானிறுடென்றிமையவருக்கினானே. (௩௬)

இருபெருஞ்சேனையோருமிப்படிச்செருச்செய்காலைத்
தருமன்மாமதலைதன்மேற்சல்லியன்றனுமீனைப்
பொருபரித்தடந்தேருந்திப்புகைகெழுமுனைகொள்வாளி
யொருதொடைதன்னிலோரேழுரத்துடன்றாக்கினானே. (௩௭)

பின்னரும்விரைவினோடும்பெய்கணைமாரிசிந்தி
முன்னருமுனையினின்றோர்முதுகிடமுரண்டுசீறித்
துன்னருந்தடந்தேரோன்மைச்சுமித்திரன்முதலாவுள்ள
மன்னரையிமைத்தகண்கண்மலருமுன்மடிவித்தானே. (௩அ)

தனக்கெதிர்தானேயானசல்லியன்றானுமீளச்
சினக்கனன்மூளவாளச்சிலம்பெனச்சிலையும்வாங்கிக்
கனக்குலமேழுஞ்சேரக்கன்மழைபொழிந்ததென்ன
முனைக்கடுங்கணையால்வீமன்வடிவெலாமூழ்கவெய்தான். (௩௯)

அறைகழல்வீமன்றானுமங்கர்கோன்பாகன்றானு
முறைமுறைபுரிந்தவெம்போர்மொழிவதற்கியாவர்வல்லார்
நறைகெழுதும்பைமாலைநகுலசாதேவரென்னு
மிறைவருஞ்செங்கண்மாயனிளவலுமிவன்மேற்சென்றார். (௪0)

சென்றுவெஞ்சிலைகள்கோலிச்சிலீமுகமுறப்புத்தோறு
மொன்றெனவநேகமேவியொருமுகமாகப்போர்செய்
தின்றிவனுவிகோறுமென்றுசல்லியன்மேற்றங்கள்
வன்றிறல்யாவுங்காட்டிமாறில்போர்மலைந்திட்டாரே. (௪௧)

மதம்படுவேழமன்னமத்திரராசன்றானும்
விதம்படத்திரண்டுபோர்செய்வீரர்தம்மெய்களெல்லாஞ்
சதம்படுபகழியோரோர்தனுக்களினுருவியோட
விதம்படவெய்துநக்கானேவினுக்கிராமன்போல்வான். (௪௨)

தம்பிமார்தளர்ச்சிகண்டுசெமீரணன்புதல்வன்சீறித்
தும்பைமாமாலைவேய்ந்துதொடுகணைவலிதின்வாங்கி
வெம்புபோர்மத்திரேசன்வியன்கொடிபாகுவாசி
செம்புணீர்சொரிகளத்திற்சிதறிடவறுத்துவீழ்த்தான். (௪௩)

உற்றிருபுறத்துந்திண்டேர்க்குரானுறவுதவியாய
கொற்றவர்பலரும்வீழக்கொடிகுடைகவரிவீழச்
சுற்றியநேமிவாசிதுளைக்கரக்கோட்டுநோல்வாய்ப்
பொற்றைகடுணிந்துவீழப்புங்கவாளிகளுந்தொட்டான். (௪௪)

துருபதன்முதலாவுள்ளோர்சோமகர்முதலாவுள்ளோர்
நிருபர்தங்குலத்துளேனைநிருபர்களாகியுள்ளோர்
தருமன்மாமதலையோடுந்தம்பியரோடுங்கூடி
யொருமுகமாகிமேற்சென்றுறுசெருப்புரியும்வேலை. (௪௫)

வேறு.

அறுதியாகவின்றருஞ்சமர்முடித்துமென்றறத்தின்மைந்தனுக்கன்பா
லுறுதிகூறியபாகன்வெவ்விரைவுடனூர்ந்தவெம்பரித்தேரோன்
பெறுதியாகமாதவம்புரிசிலைமுனிபெற்றவீரனுக்கின்றே
யிறுதிநாளெனவாங்கவனணிந்தபேரிகலணியிடைச்சென்றான். (௪௬)

சென்றுபோர்புரியளவையினருச்சுனன்செழுமணிமுழுநீலக்
குன்றுபோனிறம்பவளவான்குன்றெனக்குருதியிற்சிவப்பேற
வொன்றுபோல்வனபிறைமுகக்கடுங்கணையொருபதுதொடுத்திட்டான்
வென்றுபோர்புரியவுணரூர்நீறுசெய்வீரன்மைந்தனையொப்பான். (௪௭)

தொடுத்தவம்பினையம்பினால்வானிடைத்துணித்திடைநணித்தாக
விடுத்தவம்பினான்மருவலன்பாகனும்வெம்பரிகளும்வில்லு
நடுத்தறித்திடமார்பினுந்தோளினுநாலிருகணையெய்தா
னெடுத்தவெஞ்சிலைதறிதலுமவனுமாவிரதம்விட்டிழிந்தானே. (சஅ)

இழிந்துமீளவும்வேறொருவில்லெடுத்தெரிமுனைபுகைகாலப்
பொழிந்தவாளியோராளவிலவற்றையும்பொடிபடுத்தினன்பார்த்தன்
கழித்தகீர்க்கணைகோலிவந்தெதிர்ந்ததன்கார்முகக்கட்டாண்மை
யழிந்துபோயினன்முனிமகனெனவெழுந்தார்த்ததுபெருஞ்சேனை. (சகூ)

செருப்புலக்கையாமுராலிடைவிருதராந்தினைக்குரல்களைச்சேர
மருப்புலக்கைகொண்டிடிக்கும்வெஞ்சினமனமத்தவாரணமன்னான்
பொருப்புலக்கையுற்றலமரவரிந்தவன்புதல்வன்மேலொருபார
விருப்புலக்கைகொண்டெறிந்தனனவனுமஃதெண்முறிபடவெய்தான். (ருo)

உலக்கையெட்டொருப்பானபினொருதனித்தண்டுகொண்டுயர்கேள்வி
யலக்கைவித்தகனிளவலேர்விடவருமருச்சுனன்றடந்தோளா
மிலக்கையுற்றிடவெறிந்தனனெறிதலுமிவனவனெறிதண்டை
வலக்கையிற்றொடுகணைகளாற்பலதுணியாகவில்வளைத்தானே. (ருக)

பூத்தலைக்கொடியனையமெய்ப்பூணணிபொதுவியர்தனந்தோயுந்
தார்த்தன்வெம்பரித்தேர்விடுமளவுமிச்சுரபதிமகனோடுங்
கோத்தவம்பினிற்பலபடைகளிலமர்கொளுத்துதலரிதென்று
பார்த்தன்முன்புநின்றமர்புரிந்திலன்கடற்பார்புகழ்பரித்தாமா. (ருஉ)

மற்றவன்றனைமுதுகுகண்டவன்றிருமாதுலன்கிருபப்பேர்க்
கொற்றவன்புறந்தரமலைந்தேனைவெங்கொடுஞ்சிலைக்குலவேந்தர்
முற்றும்வென்னிடப்பொருதசல்லியனொடுமுனைபடவெதிர்மோதிச்
செற்றவன்புடையன்புடைத்தம்முனைத்தெம்முனைகெடச்சேர்ந்தான். (ருங)

தயங்குவெண்குடைச்சல்லியன்றன்னொடைச்சமீரணன்மகன்றன்னு
னுயங்குவெம்பரிபாகுதேர்வரிசிலையுயர்த்தவன்கொடியற்றுத்
தியங்குகின்றபேருறுதிகண்டுயங்குதல்சிந்தையிற்சிறிதற்ற
புயங்கசேதனன்கண்ணிலுக்கிமையெனப்பொருபடையுடன்சேர்ந்தான். (ருச)

சாத்தகிப்பெயரவன்சமீரணன்மகனகுலன்வெஞ்சாதேவன்
பார்த்தனென்றிவரனைவருமிவர்பெரும்படைத்தலைவருஞ்சேர
வார்த்தெழுந்துமேல்வருதல்கண்டணிகழலாளியேறனையானும்
பேர்த்துமுந்துறத்திருகினனரசொடும்பெரும்படையொடுமம்மா. (ருரு)

தண்டுழாய்முடிமாயவன்றம்பியைச்சாயகம்பலகோடி
கொண்டுதேர்முதலியாவையுமழித்துமெய்குலைந்திடும்படிமோதி
மண்டுபோய்ப்பரிநகுலனையன்புடைமருகனென்றெண்ணாமற்
கொண்டல்வாயிடிநெருப்பெனச்சிற்சிலகூரவாளியினெய்தான். (ருகூ)

ஒருகொடுங்கணைதொடுத்தலும்வென்கொடுத்தோடினன்சாதேவ
னிருகொடுங்கணைக்கிலக்கமாயினன்மருத்தின்றவனிருதோளும்
பொருகொடுங்கணைமூன்றினாலருச்சுனன்புயமுமார்பமும்புண்செய்
தருகொடுங்குறைதலின்மேலம்புநாலறத்தின்மைந்தனையெய்தான். (ருஎ)

அறத்தின்மைந்தனதானனங்குருதியாலருக்கன்மண்டலம்போல
நிறத்தவாறுகண்டருகுறக்கதைகொடுநின்றவாயுவின்மைந்தன்
மறத்தடம்புயவரிசிலைச்சல்லியன்மணிமுடிகழன்றோடிப்
புறத்துவீழ்தரவெறிந்தனனெறிந்தமைபுயங்ககேதனன்கண்டான். (௫௮)

வேறு.

தன்படைத்தலைவனைத்தண்டினாலெறி
வன்புடைத்தடம்புயமருத்தின்மைந்தன்மேன்
மின்படைத்தொருகணைவிசையினேவினான்
புன்படைப்பினிலயன்படைத்தபூபனே. (௫௯)

காமனைச்சம்பரன்கனன்றபோரென
வீமனைப்போர்செய்துவெல்லமுன்னிய
நிமனத்தரசனைச்சிலீமுகங்களின்
மாமுனைப்படுத்தினன்மறித்துவீமனே. (௬0)

யாளிகளிரண்டெதிர்ந்திகலுமாறுபோன்
மீளிகளிருவருங்குனித்தவில்லுமிழ்
வாளிகளிருவர்தம்வடிவிற்பாயுமுன்
றாளிகள்பட்டனதுணிந்துவானிலே. (௬௧)

தாண்முதன்முடியுறச்சரங்களேவியும்
வாண்முதற்படைகளான்மலைந்துமற்றவர்
தோண்முதலுறுப்பெலாஞ்சோரிகாலவே
நீண்முதற்றீபமேநிகருமாயினர். (௬௨)

வன்பரிபாகுதேர்மதிநெடுங்குடை
மின்பொழிகணையுமிழ்வில்விலோதன
மென்பனயாவையுமிற்றுவீழுமா
றென்பதுபடவமருடற்றினனரோ. (௬௩)

இரணவித்தகனிவனெறிந்தவேலினான்
முரணுடைச்சுயோதனன்முதுகுதந்தபி
னரணுடைப்படைக்கரசானமத்திரன்
மரணமிப்பொழுதெனவந்துமேவினான். (௬௪)

வேறு.

நேரிலாதகிருபப்பெயர்விறற்குருவுநீடுசாலுவனுமற்புயமணிச்சிகர
வீரனனசகுனிப்பெயர்படைத்தவனும்வீறுசால்கிருதவற்பனுமெனப்புகலு
மாரமார்பினர்முதற்படைஞரிற்றலைவரானவீரதுரகத்தினர்களிற்றினர்க
ளூருமூருமிரதத்தினரெனைப்பலருமோதவாரியெனமத்திரனொடொத்தனரே. ()

வீமசேனனுமவற்கிளையபச்சைமயில்வேளின்வானவர்குலப்பகைதொலைத்தவனு
மேமகூடகிருத்தமவயப்புரவியேறுவீரனுமவற்கிளையவித்தகனு
நாமமாயிரமுடைக்கடவுளுக்கிளையனாயிரேறுவமைபெற்றெளிர்நிறத்தவனு
நேமிசூழ்தரணிபெற்றிடநினைத்தமர்செய்நீதிமானருகுசுற்றினர்துணைச்செயவே. ()

ஆடன்மாவுமலையொப்பனமதக்கரியுமாழிசேர்பவனமொத்தவிரதத்திரளு
நாடுபோரிலரியொத்தவனிகத்திரளுநாலுபாலுமெழவுற்றமருடற்றினர்க
ளோடியோடியெதிருற்றவர்முடித்தலைகளூறுசோரியுததிக்கிடைவிழுத்தினர்கள்
கோடிகோடிதமரப்பறைமுழக்கினொடுகோடுகோகெள்குறித்தவிருபக்கமுமே. ()

ஆனைபோதிருதனத்திறுமிருத்தவிறலாண்மைவீரரொருவர்க் கொருவர்மெய்க்கவச
மானமேயெனநினைத்தவரிபொற்சிலையும் வாளும்வேலுமுதலெத்திறவிதப்படையு
மேனியூடுருவவெட்டியகிலைக்குவமைவேறுகூறவிரகெப்படிமலைத்தனர்க
டானவானவருயுத்தமுமரக்கரொடுசோனைமாமிருகயுத்தமுநிகர்த்தனவே. (௬௮)

வீமசேனனொடுருச்சுனன்வயப்புரவிவீரமாகுலனட்டினவனுக்கிளைய
தாமமீளியனிமொய்த்ததளவப்புதியதாரினுணநுசன்விற்குருவைமுற்பொருத
சோமகேசபதிமெய்ப்புதல்வன்மற்றுமுளசூரரானவரைமுற்றுறவிலக்கியெதிர்
மாமனுயுநிகைத்துவருமத்திரனைவாவெழுவமர்தொடக்கினனுதிட்டிரனே. (௬௯)

வீரசாபமொரிமைப்பினில்வளைத்தெதிர்கொள்வேகசாயகவிதந்திறமெனப்பலவு
மாரசாயகமெனச்சிகரமற்புயமுமார்புமூழ்கவுடன்முற்றுமுனையிற்புதைய
வீரமானருநிப்பிரளயமெய்ப்புறமும்யாறுபோற்பெருக வெற்றுதனும்வெற்றிபுனை
சூரர்யாரினுமிருத்திருண்முடிக்கவருசூரனுமெனவியப்புடையமத்திரனே. (௭௦)

ஆரவாரமுரசக்கொடியுயர்த்தவனதாகமீதணிமணிக்கவசமற்றுவிழ
ஆருநேமியிரதத்திறுமமச்சுருளவோடுவாசிதலையற்றிருநிலத்துருள
நேரிலாதவவனெற்றிநுதல்பட்டுருவநீடுகோளெனுடுபிடித்தகுனிவிற்றுணிய
வீரவாய்முனைநெருப்புமிழ்வடிக்கணைகளேவினனொருநொடிக்குள்ளெதிரற்றிடவே

விறுசாலருளறத்தின்மகனப்பொழுதுவேறொர்தோமிசைகுதித்திமையவெற்பினிடை, யெறுகேசரியொடொத்துளநெருப்புமிழவீறிலார்புரமெரித்தவனிகர்க்குமென, மாறிலாதவொருசத்தியையெடுத்துநெடுவாயுவாகுமெனவிட்டனனிமைப்பொழுதில், வாறுபாயருவிமுக்குவடிறுத்தசெயலானதான்முனைகொண்மத்திரன்முடித்தலையே. (௭௨)

வேறு.

தொட்டவரிசிலைத்தடக்கையிராமனென்னத்தொடுத்தகணைதப்பாமற்றொழாதவேந்த, ரிட்டகவசமுமார்பும்பிளந்தபின்னரெடுத்ததொருவடிவேலாலினையோனென்ன, மட்டவிழுந்தும்பையந்தார்த்தருமன்மைந்தன்வாகுவலியுடனெறியமத்திரேசன், பட்டனனென்றணிகுலைந்துமுதுகிட்டோடிப்படாதுபட்டதுயர்த்தபணிப்பதாகன்சேனை. (௭௩)

மதிகண்டபெருங்கடல்போற்குந்திமைந்தர்வான்சேனையார்ப்பதுவுமன்னன்சேனை, நதிகொண்டகனல்கொளுத்துமிராமபாணநுழைகடல்போலொடுங்கதுவுநோக்கிநோக்கிக், கதிகொண்டபரித்தடந்தேர்ச்சல்லியன்றன்கண்போல்வாரெழுநூறுநெடுந்தோட்கள், விதிகொண்டபடைபோல்வெம்படைகளேவிவெம்முரசக்கொடிவேந்தன்மேற்சென்றாரே. (௭௪)

அவரளவோவரவுயர்த்தவரசன்றானுமாகுலத்தோடருஞ்சமரிலரியேறென்னக்,கவரிபுடைபணிமாறத்தவளக்கொற்றக்கவிகையொருதனிநிழற்றக்கரைகாணாத, வவரிநெடும்பெருஞ்சேனைவெள்ளஞ்சூழவுயிரனைய துணைவருடன்மாமன்சூழத், தவர்முதலாம்படைகளொடுதென்னைவென்று தரணிகொளவருகிருபன்றன்னைச்சார்ந்தான். (௭௫)

வீமன்முதற்றம்பியரும்பொருவிலாதவெஞ்சேனைத்தலைவரும்போர்வென்றிகூருஞ், சோமகருமுதலாயநருகண்வீரர்தம்பிகளையரியினங்கொடருமாபோற், றாமமணித்தடஞ்சிகரத்தோளுமார்புஞ்சரமுழுகத்தனுவளைத்திச்சாய்த்தசோரி,பூமுழுதம்பரந்துவரப்பொருதவீரம்புலவோர்க்குமதிசெயித்துப்புகலலாமோ. (௭௬)

தன்றமையன்றனைப்பொருதுவெல்லவந்ததானையெலாநீருக்கித்தரணியாளும், புன்றமையனெதிரவனுக்கிளையவீரர்பொரவந்தோரெழுவரையும்புவிமேல்வீழ்த்தி, யின்றமையுஞ்சமரமினிக்காண்டல்பாவமென்றிமையோரதிசயிப்பவிமையம்போல, நின்றமைகண்டானிலனைமகிழ்ந்துநோக்கிநெஞ்சுறவன்றென்செய்தானெடியமாலே. (எஎ)

செயகந்தன்செயவன்மன்செயசேனன்சேனுவிந்துசயத்திரதன்றிறலார்விந்து, வயமொன்றுவிக்கிரமனெனன்போராவிவானுடபுகுந்ததற்பின்மதங்களேழுங், கயமொன்றுசொரியவெதிர்நின்றதென்னக் களித்துவலம்புரிவீமன்முழக்கக்கண்டங், கயனின்றவலம்புரித்தாரண்ணல்சோர்ந்தானநுசர்மேலன்பெவர்க்குமாற்றலாமோ. (எஅ)

தனக்குநிகர்தானனகிருதவன்மன்றம்பியர்களெழுவர்படத்தம்முன்பட்ட, மனக்கவலையறிந்துபெருஞ்சேனையோடுமற்றவன்றம்பியரைவரோடும்வந்து, சினக்கதிர்வேல்வீமனுயிர்செகுப்பானென்னிச்செருச்செய்தானேனையர்கடிருகியோடவெனக்கிவரேயமையுமெனப்புறக்கிடாத விளையவர்மேற்கடுங்கணையைந்தேவினனே. (எகூ)

சித்திரவாகுவினேடுபெலசேனன்போர்ச்செயசூரன்சித்திரனுத்தமவிந்தென்றே, யத்திரவில்லாண்மையினிற்றிகழாநின்றவைவரிவர்யாவரையுமடர்ப்பான்வந்தோர், சத்திரம்யாவையுமேவிச்சங்கமூதிச்சமர்விளைத்தார்நெடும்பொழுதுசமீரணன்றன், புத்திரனுன்முன்சென்றவெழுவரோடும்பொன்னுலகங்குடிபுகுந்தார்புலன்கள்போல்வார். (அ0)

ஏற்றிடவெங்கனனுழைந்ததென்னமுன்னமெழுவருடன்றம்பியரோரிவருஞ்சேரக், கூற்றிடையேகுதலுமிகக்கொதித்துநாகக்கொடிவேந்தன்முடிவேந்தர்பலருஞ்சூழ, நாற்றிசையுமெழுந்துபெருங்கடலைமோதிநவெடவைக்கனலவித்துநவிலாநின்ற, காற்றெனவேபாண்டவர்தம்முடலந்தோறுங்கணைமுழுகவில்விசயங்காட்டினனே. (அக)

தன்கரத்தில்விற்றுணியவேருேர்வில்லாற்சாதேவன்வலம்புரிப்பூந்தாமவேந்தன்,வன்கரத்துமார்பகத்துமுகத்துஞ்சேரவைவாளிகுளிப்பித்தான்மற்றுமற்று, முன்களத்துளெதிர்ந்தளோரிருசேனைக்கு முன்னெண்ணுந்திறலுடையோர்மூண்டுமூண்டு, பின்களத்தைச்சோரியினுற்பரவையாக்கிப்பிறங்கலுமாக்கினர்மடிந்தபிணங்களாலே. (அஉ)

காந்துகனலுமிழ்சினவேற்கைக்காந்தாரர்காவலனுஞ்சகுனியுந்தன்கனிட்டனுன, வேந்தனுமன்னவனுடன்பல்வேந்தரோடும்வெம்பணைக்கைப்பலகோடிவேழத்தோடு, மேந்துதடம்புயச்சிகரிவீமன்றன்னேடிகன்மலைந்துதொலைந்திரிந்தாரிவரையல்லா, ஞர்ந்தபணியணிக்கொடியோனிளைஞர்மீளவொன்பதின்மரவனுடன்வந்துடற்றினரே. (அங)

பிறங்கியவுத்தமனுதயபானுகீர்த்திபெலவன்மன்பலவீமன்பிரபலதானன், மறங்கிளர்விக்கிரமவாகுசுசிலன்சிலன்வருபெயர்கொளொன்பதின்மர்வனிலேறத், திறங்கொள்கசரததுரகபதாதிகோடிசேரவொருகணத்தவியச்சிலைகால்வாங்கிக், கறங்கெனவேசூழ்வந்துபொருதான்வீமன் கட்டாண்மைக்கிவைபொருளோகருதுங்காலே. (அச)

பாண்டவரில்வீமன்கைப்படையான்முன்னம்பட்டொழிந்தோரொழிந்தோர்கள்பலருங்கூடிக், காண்டரியகேசரிவெஞ்சாபமன்னர்கண்ணிலான்மதலையரக் களத்திலன்று, மூண்டுபொரும்பணித்துவசமுன்னோன்காணமுனைந்தமர்செய்தவலியின்மேன்முடிகள்வீழத், தீண்டரியதிருமேனிதேரில்வீழச்சேனையடைந்தாரரம்பையர்கள்சிந்தைவீழ. (௮௫)

தனக்கிளையோர்தொண்ணூற்றொன்பதின்மர்தாமுஞ்சயவீமன்சரத்தாலுந்தண்டினாலுங், கனக்குடிவிற்குடியேறக்கண்டுகண்டுகைசோரமெய்சோரக்கண்ணீர்சோர, வெனக்குறுதியுரைத்தவர்தம்முரைகேளாமலென்செய்தேனெப்பொருளுமிழந்தேனென்று, மனக்கவலையுறுமன்னன்றன்னைநோக்கிமாமனுமற்றொருகோடிமாற்றஞ்சொன்னான். (௮௬)

வேறு.

அருகுசாயைபோல்வாழுமநுசர்யாரும்வானேற
வருமொழிக்கிசோகமுறினுமீளவாரார்கள்
மருகவாழிகேள்போரின்மடிவுறாதபூபாலர்
முருகவேளையேபோல்வர்முரணுறாதகூர்வேலோய். (௮௭)

திருதநாமனால்வேதகிருபனாதியோரான
நிருபர்சேனைசூழ்போதகிமிரவோடிமாறாது
பொருதசீறிமேன்மோதபுலியினேறுபோல்வாரை
முரசகேதுவோடோடமுரணுபோரின்மூள்வோமே. (௮௮)

எனமகிபன்வாடாமலினியவாய்மையேகூறி
யணிகராசியோடேகியமரில்வீமன்மேன்மோத
முனைகொள்வீமனுமாறுமுறுவல்வாணிலாவீச
மனனிலோடுதேர்மாறிவலிகொள்பாரிலானானே. (௮௯)

தரணிதாழுமாபோதசகுனிசேனைவானேற
முரணுவாருவான்மோதிமுடுகுநீள்கதாபாணி
யரணியாகவேயேனலடவியானதாலிடு
மிரணபூமிமால்யானையிரதவாசிகோலானே. (௯௦)

அலகில்வேலைபோல்சேனையதிபனாவிபோமாறு
பலருமாகிமேன்மோதுபடைஞர்சாயவேநாமு
மிலகுவாளம்வேனேமியெவருமேவுவேமாக
நிலவகேளெனாவீரசகுனிகூறினான்மூள. (௯௧)

வீரகுருதருநாமவிடலைவீதசாதேவ
னிரதமேவியோர்வாளியெழில்கொண்மார்பிலேவாமுன்
மருகனானபூபாலன்மதிகொண்ஞானிபூண்மார்பி
னுருவவீசினான்மாமனுதவியாவொர்கூர்வேலே. (௯௨)

எதிரிலாததோளாண்மையிளவலேறின்மேல்விழ
வதவியாகவேவேலுமுலகுகாவலான்மார்பின்
முதுகிலோடவேநூறமுழுகவேவினான்வாளி
யதலபூமியூடாழியமுதமாரும்வாயானே. (௯௩)

சமரில்வீமனேவோடுதலைவன்வீழவேபூமி
யமரானனதாமாவொரயிலைவீமன்மேலேவ
வெமர்களாவிபோல்வாஞெடிகல்செயாமலீசான
குமரனாவிபோமாறுகுடைதூகாமெனுவீரன். (௯௪)

தனுவின்வேதநூல்வாசிதனயனனதாமாவைவ
முனைகொண்மார்பின்வாய்மூழ்கிமுதுகிலோடவேயெழு
வினைகொள்வாளிமேலேவிவிதமதாகவேபோர்செய்
மனுகுலேசனிள்சாபவலிமைகூறவாராதே. (௯௫)

மருகன்வீழவேசாபமறைவலானுமாமாலை
விருதனோடுபோராடிவெரிகிடாவிடாதோட
வருகுகுழுமாசூரரடையவோடவோடாது
திருகினரவேறுதிகழ்பதாகையான்மாமன். (௯௬)

சகுனியாவிபோமாறுசபதவாய்மைகோடாமன்
மகிபனேவுவேல்போலவழுவுறுமன்மேலோட
வுகவையோமொமாயனுதவுகூரநீள்வேலை
யிகலொடேவினன்வீமனிளவலானபோர்மீளி. (௯௭)

வேறு.

தாவியவெம்பரிமானிரதத்திடைசாதேவ
னேவியவேலொடுசௌபலராயனிறந்தானென்
றேவியதெங்கணும்வெஞ்சமர்பார்முழுதுடையானு
மாவியழிந்தவுடம்பெனவன்மையழிந்தானே. (௯௮)

தும்பியில்வாசியினீடிரதத்திலொர்துணையின்றிப்
பம்பியசேனையழிந்துவரும்படிபாராதான்
றம்பியர்யாவருமாதுலனும்பலதமரும்போ
யம்பியிழந்தபெருங்கடல்வாணரினலமந்தான். (௯௯)

ஒருமதிவெண்குடையிருகவரிக்குலமுருஞ்சி
ரிரதமதங்கயமிவுளிபணிக்கொடிமுதலான
வரசர்பெருந்தகையரசடையாளமனைத்தும்போய்த்
திருநயனங்களினும்பதமலர்கள்சிவப்பேற. (௧00)

அயனிடையசுரர்குருப்பெறலுற்றதவன்பான்முன்
கயமுனிபெறவிமையோர்குருவிரகொடுகைக்கொண்டு
பயமுறமாமுனிவர்க்குரைசெய்ததுபார்மீதே
யுயர்மறையொன்றுளதம்மறையொருமுனியுரைசெய்தான். (௧0௧)

அங்கெமொமறையாலமரத்திடையழிசேனை
யின்னுயிர்பெற்றிசெம்வகைகொடுமீளவுமிகல்வேனென்
றுன்னியுளந்தெளிவுற்றொருவர்க்குமிஃதுரையாதே
தன்னொருவெங்கதையோடுதராபதிதனிசென்றான். (௧0௨)

தூயநலந்தருகங்கையெனப்பலசுரருந்தோய்
பாயதடந்தனின்மூழ்கினனம்மறைபயில்வேனென்
றாயுமனங்கொடுசேவடிமுன்பினதாவேகிச்
சேயவன்வெண்டிரைவாரியின்மூழ்கியசெயலொத்தான். (௧0௩)

வேறு.

கம்பித்தவைந்தபுலனைந்துங்கலக்கமாற
வெம்பித்தடங்கொணஞ்சித்தொடுமேவல்கூரத்
தம்பித்ததோயத்திடைவாயுவுந்தம்பமாகக்
கும்பித்துஞானப்பெருந்தீபங்கொளுத்தினானே. (௧௦௪)

பன்னாளும்யோகம்பயில்வோரிற்பதின்மடங்காத்
தன்னகமுற்றுமெலிவின்றித்தயங்குமாறு
நன்னாளமூலநளினத்தைமலர்த்திநாவா
லொன்னாமலொன்றுமுரைமந்திரமோதினானே. (௧௦௫)

இதயஞ்சிறிதுங்கலங்காதவிறைவனிவ்வா
றதகந்தனிற்புக்குயர்மந்திரமோதும்வேலை
மதவெங்கயப்போர்வளவற்குமுதுகுதந்து
விதமண்டலிகர்புலிகண்டமிருகமொப்பார். (௧௦௬)

பரபாலகமாம்பரித்தாமனும்பாய்பரித்தேர்க்
கிருபாரியனுங்கிருதப்பெயர்க்கேடிலோனு
மொருபாலிறைகொண்டொழிசேனையுந்தாமுமீண்டு
பொருபாரதப்போர்புரிசௌபலன்பொன்றல்கண்டார். (௧௦௭)

கண்டார்மிகவும்பரிவோடுகலக்கமுற்றார்
தண்டாரகைதோய்விசும்பொத்தசமரபூமி
கொண்டான்முரசக்கொடியோனெனக்கோபமிஞ்சி
விண்டார்மிகவும்வியந்தாரவர்வீரமம்மா. (௧௦௮)

பூணாரமார்பின்வலத்தேபுரிபூந்தண்மாலைக்
கோனார்சிலைக்கைநெடுநாகக்கொடிகொள்வேந்தைக்
காணார்களத்திலொருபாலுங்கருகியுள்ளம்
வாளாடருக்கன்குடிபோமகல்வானெனெடொத்தார். (௧௦௯)

தனிவந்துதோன்றுதலுஞ்சஞ்சயனென்னும்வேத
முனிவன்றனைக்கண்டிருதாளின்முடிகள்சேர்த்தி
யனிகங்கெழும்போரரசன்றனையங்கைநெல்லிக்
கனிகண்டனையாயெவட்காண்டுதங்காட்டுகென்றான். (௧௧௦)

இவ்வோர்விசைவினிவன்றன்னைவினவவின்றே
னெவ்வோருயிருக்கழிவில்லையமரின்மோதி
வெவ்வேறடையாரைவிறன்மன்னவர்வீயயாரு
மொவ்வோன்மறித்தமர்மோதவுணர்தலுற்றான். (௧௧௧)

எண்சேச்சமரினிறந்தோர்களெவருமின்றே
நீண்டுபெற்விக்கவிடுவித்துவிரகினெனும்
பாண்டுப்பயந்தோர்படையாவுமடியமோதப்
பூண்டுத்தமமாமறைகொண்டகன்பொய்கைபுக்கான். (௧௧௨)

என்னைத்துருபதேயனுதியர்கோறவென்னைப்
பின்னைக்குவாய்த்தோன்பிழைப்பித்தனன்யாரும்வந்தேன்
றன்னைக்குமுழ்கத்தடம்வாய்த்தமைதந்தையோடு
மன்னைக்குரைப்பேனெனப்போயினனந்தனுளன். (௧௧௩)

வேறு.

வேதியன்வாய்மைகேட்டவேதியன்மகனுமற்றை
யோதியவிருபாகியுள்ளவர்தாமுமெய்தி
மாதுயரகற்றுமற்றவாய்மைகேட்டங்குஞான
வூதியம்பெற்றுலென்னவொடுங்கியவோடைகண்டார். (கக௪)

புள்ளியலரவங்காணார்பொருதெறிதரங்கங்காணார்
துள்ளியமீனங்காணார்சூழ்வருமனிலங்காணு
ரொள்ளியமலர்களெல்லாமுறங்குதலன்றிமன்றல்
வள்ளியதோடுதோறுமதுநுகர்வண்டுங்காணார். (ககரு)

ஏறியபாதம்போலவிறங்கியபாதநோக்கிச்
சாறியல்விரதமிஞ்சுந்தடம்புனலடங்கநோக்கி
மாறியல்வேந்தர்தம்மில்வாண்முகநோக்கிநோக்கிக்
கூறியவரசன்றன்னைக்கூவினரழைக்கலுற்றார். (ககசு)

நின்கிளையாகிவந்தவிருபருந்துணைவர்யாரும்
வன்களிறிவுளிபொற்றேர்வாண்முதற்படைகள்யாவும்
புன்களமதனிற்சேரப்பொன்றினவிம்பரன்றே
வென்கருதினைகொலையாவென்பெறற்கென்செய்தாயே. (ககஎ)

வீரியம்விளம்பல்போதாதாயினும்விளம்புகின்றேன்
போரியலமரிலென்னோர்பொருசிலையெடுத்துநின்றாற்
றேரியல்விசயனோடுநால்வருஞ்சேரவென்கை
மூரிவெங்கணைகளாலேமுடித்தலைதுணிவர்கண்டாய். (ககஅ)

எல்லவன்வீழுமுன்னம்யாரையுந்தொலைத்துவேலைத்
தொல்லைமண்ணளித்திலேனேற்றுரோணன்மாமதலையல்லேன்
வில்லெனும்படையுந்தீண்டேன்விடையவன்முதலோர்தந்த
வல்லியகணையும்பொய்த்தென்மறைகளும்பொய்க்குமாதோ. (ககக)

மோதுமோகரப்போர்வென்றுமுடித்துமோவொன்றிலொன்றிற்
சாதுமோவிரண்டுமெல்லாற்றரணிபர்க்குறுதியுண்டோ
யாதுமோதெளிதிநின்போலேற்றமுள்ளவர்க்கிவ்வாறு
போதுமோபூண்டபூண்டபுகழெலாம்போய்விடாதோ. (கஉ0)

பாண்டவர்முடியவென்றிப்பாரெலாமுனக்கேதந்தான்
மாண்டவர்தம்மைநின்வாய்மறைமொழிதன்னைக்கொண்டு
மீண்டவராக்கிப்பின்னைவேறொருபகையுமின்றி
யாண்டவரிவரேயென்னத்துணைவரோடாளலாமே. (கஉக)

என்றிவைபோல்வபன்னூறியம்பவுமிராசராச
னென்றினுங்கவலைசெல்லாவுணர்வுடையுளத்தனுகி
யன்றிகல்வருணன்கூறுமாகுமென்றறிஞர்சொல்லத்
துன்றியவடிவத்தோடுமடங்கினனன்றேயத்தூடே. (கஉஉ)

உரைத்தனவுரைகட்கெல்லாமுத்தரமுரைசெய்யாத
வரைத்தடந்தோளானெஞ்சின்வலிமையைவலிதினெண்ணி
நிரைத்தவெங்கதிர்கொள்வாளிநெடுஞ்சிலைத்துரோணன்மைந்தன்
விரைத்தொடைக்கிருதனோடுமாதுலனோடுமீண்டான். (கஉ௩)

மற்றவர்மீண்டபின்னர்மாதவக்குந்தியீன்ற
கொற்றவர்தாமுஞ்சேனைக்குழாத்தொடுந்தங்களோடுஞ்
செற்றவர்தம்மையெல்லாஞ்சேணுலகேறவெற்றிப்
பொற்றவிராசராசன்புக்குழியறிவுறாமல். (௧௨௪)

பாடியுங்களமுஞ்சூழ்ந்தபாங்கருமங்குமிங்குந்
தேடியுங்காண்கலாதசிந்தையாகுலத்தராகி
நீடுயிர்த்துயிர்த்துநின்றபொழுதினினிகழும்வேட்டை
யாடியவலைஞர்மீண்டோரானிலற்குரைசெய்வாரே. (௧௨௫)

தவமிகுமுனிவரோடுசுரர்களுந்தோயுநன்னீர்த்
தவமுயல்பொய்கைதன்னிற்றண்டுடைக்கையனாகிப்
புவிமுழுதாண்டவேந்தன்புக்கனன்கண்டோமென்றார்
சவலையின்மனத்தருணகாற்றருள்கூற்றனாற்கே. (௧௨௬)

கருமுகிலனையமேனிக்கண்ணனும்பவளமேனித்
தருமனுமெவருங்கேட்பத்தாமவேல்வீமன்சொன்னான்
பொருமாவுயர்த்தோனின்றோர்பொய்கையிற்புகுந்தானென்று
தெருமருமிருகமாக்கள்செப்பினரென்றுகொண்டே. (௧௨௭)

என்றலுந்தன்னைச்சேர்ந்தோரிடுக்கணுமிளைப்புமாற்ற
நின்றவெம்பெருமானேமிநெடியவனருளிச்செய்வா
னன்றயன்முகத்திற்பெற்றநேசமாமுனிவர்தம்பா
னின்றமந்திரமொன்றுண்டுநிகரதற்கில்லைவேறே. (௧௨௮)

வெஞ்சமரிறந்தோரெல்லாமீண்டுயிர்பெறுவரந்த
வஞ்சகமறைமுன்பெற்றான்வலம்புரித்தாரினானு
நெஞ்சமர்வலிமையோடுநீரிடைமூழ்கிநீங்க
தெஞ்சிடப்பொருவானின்னஞ்சூழ்ந்தனன்போலுமென்றான். (௧௨௯)

மாயவனுரைத்தமாற்றமாருதிகேட்டுத்தந்தை
யாயவன்றன்னைப்போலவப்பெரும்பொய்கையெய்தித்
தூயதண்டெளிவினானுந்தனைவருஞ்சூழ்ந்துநிற்பத்
தீயெனத்தீயநெஞ்சன்செவிசுடச்சிலசொற்சொல்வான். (௧௩௦)

வேறு.

கங்கைமகன்முதலாகக்காந்தாரர்முடிவாகக்களத்தில்வீழ்ந்த
தங்கமணிமுடிவேந்தர்சொல்லிமுடிப்பதற்கடங்கார்துரகமாவுஞ்
செங்கனகமணிக்கொடிஞ்சித்திண்டேரும்பெரும்பணைக்கைச்சிறுத்தசெங்கண்
வெங்கயமுமேறாமல்வீழ்யத்திலேறினையோவேந்தர்வேந்தே. (௧௩௧)

நெஞ்சறியநீயெமக்குநிலைநின்றபழியாகநெடுநாட்செய்த
வஞ்சகமும்பொய்மொழியுமனுநீதிதவறியதுமறந்தாய்கொல்லோ
துஞ்சியநின்சேனையெல்லாமீண்டொருநீயறையுஞ்சுருதியிற்றை
வெஞ்சமாமுடித்தன்றேவறைவதிலைவீரருக்குவீரமாமோ. (௧௩௨)

அடிமாறிநீரிடைப்புக்கருமறைநீபுகன்றாலுமரவப்பைம்பொற்
கொடிமாறிக்குருகுலத்தார்கோவெனின்பேர்மாறிக்குலாவுமாலை
முடிமாறியொருதனிமாமுத்தநெடுங்குடைநிழற்போனுமுந்நீர்ப்
படிமாறியொழியவிடேன்புறப்படாய்மறைபடவிப்பகல்போமுன்னே. (௧௩௩)

ஓதப்பைங்கடல்புடைசூழுலகாளுமுடிவேந்தருறுபோரஞ்சிப்
பாதத்தில்வீழ்வரோபாரரசர்கேட்டாலும்பழியேயன்றே
மேதக்கவரமகளிர்கைப்பிடிக்கவிந்திரனும்விண்ணோர்தாமுங்
காதத்திலெதிர்கொள்ளக்கற்பகநீழலில்வைப்பன்கலங்கலம்மா. (௧௩௪)

களந்தனிலெத்தனைகவந்தங்கண்களிக்கக்கண்டனைநீகைத்தண்டோடிக்
குளந்தனிலிக்கவந்தமுங்கண்டேகுதற்குப்புகுந்தனையோகொற்றவேந்தே
வளந்தனிலிக்கோபமுமென்வஞ்சினமும்போகாதுவந்துன்பாவி
யுளந்தனிலிக்கவலையைவிட்டுடற்றுதலல்லதுமற்றோருறுதியுண்டோ. (௧௩௫)

இனத்திடைநின்றொருபதின்மேலெழுநாளுமொருவருடனிகல்செய்யாமற்
றனத்திடைநின்றுளமகிழும்புலையரைப்போன்மதத்துடனேதருக்கிவாழ்ந்தாய்
சினத்திடைவெம்பொறிபறக்கச்செயிர்த்திருகண்சிவப்பேறச்செருச்செய்யாமல்
வனத்திடைசென்றொளிப்பரோமண்முழுதுந்தனியாளுமன்னரானோர். (௧௩௬)

திரிபுவனங்களுஞ்சேரச்செங்கோன்மைசெலுத்தியநின்சீர்த்தியிந்த
விரிபுவனந்தனிலொளித்தான்மிகுவசையாய்ப்போகாதோவெருவலாமோ
புரிபுவனமுண்டுமிழ்ந்தோன்போரிலங்கைவழிகாணப்பொருதவாளி
யெரிபுவனநுகர்ந்ததுபோலித்தடமும்புகையாமுனெழுந்திராயே. (௧௩௭)

பாவனனிப்படியுரைத்தபழிமொழியுந்தனதுசெவிப்பட்டகாலைச்
சீவனமுற்றையும்விடுவோனிருக்குமோமறையுடனேசேரவிட்டா
னுவனமற்றறியாமலழிவனமற்றறியாமலடுத்தோராவி
வீவனமற்றறியாமனினையுநினைவினுக்குவமைவேறிலாதான். (௧௩௮)

நீளமுறப்பரவையுறவானமுறக்கரைபரந்துநிமிர்ந்தநீத்த
நாளமலர்ப்பொய்கையினின்றெழுவான்மெய்ச்சுருதிமறைநவிலுநாவான்
காளநிறக்கொண்டல்பெருங்கடன்முழுகிவெள்ளமெலாம்கவர்வுற்றண்ட
கோளமுறக்கிளர்ந்ததுபோற்றோன்றினன்மணியுரகக்கொடியினானே. (௧௩௯)

தோன்றிநெடுங்கரையேறிக்கரைமுழுதுநெருக்கமுறச்சூழ்ந்துநின்ற
தேன்றிகழ்தாரைவரையுஞ்செந்திருமாலையுநோக்கிச்சேனையோடு
மான்றிகழ்தேர்முதலானவாகனங்களொடுநின்றீர்வலிகூறென்கை
யூன்றியதண்டுடனின்றேனொருதமியேனெப்படியேயுடற்றுமாறே. (௧௪௦)

ஐவரினுமிப்பொழுதிங்காரென்னோடமர்மலைவாரறுகான்மொய்க்குங்
கொய்வருதார்ப்புயவீரர்கூறுமெனத்திருநெடுமால்கூறலுற்றான்
செய்வருசேவிளம்பூகமடலொடிக்குந்திருநாடாசெருச்செய்வானிம்
மெய்வருசொற்றவறுதவீமசேனனையொழிந்தால்வேறுமுண்டோ. (௧௪௧)

இளம்பருவமுதலுனக்குமிவனுக்கும்வயிர்ப்பெண்ணிலெண்ணொணாதா
லுளம்புகலவரசவையில்வஞ்சினமும்பலபடநின்றுரையாநின்றான்
களம்புகுதுநின்னொழிந்ததுணைவரையுந்தனதுதடக்கையாற்கொன்றான்
விளம்புவதோவேறொருவர்நின்னுடன்போர்மலைவரோவேந்தர்வேந்தே. (௧௪௨)

வில்லாலும்வாளாலும்வேலாலும்பரிநெடுந்தேர்வேழத்தாலுந்
தொல்லாண்மைதவறாமற்செருமலைந்தோர்சான்றாகச்சூழ்ந்துநிற்பப்
புல்லாரைப்புறங்காணும்போர்வேலோயிருவருநீர்பொருதுநும்மில்
வல்லார்கள்வென்றிபுனைந்தவனிதலம்பெறுமிதுவேவழக்குமென்றான். (௧௪௩)

## வேறு.

கொண்டனிகர்திருமேனிக்கோபாலனிவையுரைப்ப
வண்டொடிவலம்புரித்தார்வயவேந்தன்மனங்களித்துத்
திண்டிறல்வீமனைநோக்கிச்சிலைமுதலாம்படைகொண்டோ
தண்டெனுமின்படைகொண்டோசமர்விளைப்பாய்சாற்றென்றான். (௧௪௪)

கனகாத்தின்மிசையேந்திநின்றதுநீள்கதையாகி
லெனகாத்திற்றண்டுகொண்டேயானுமுடற்றுவனென்றான்
றனகாற்குங்குமரற்குந்தண்டொழாய்முடியவற்குந்
தினகரற்குமேலானசிந்தையுடன்செருச்செய்தான். (௧௪௫)

எவ்விடைவீமனும்யானுமிகல்புரிதற்கிடமென்று
பொய்விடையேழடர்த்தோனைப்புயங்ககேதனன்கேட்ப
மெய்விடையானிரைபின்போய்வேயூதுந்திருநெடுமா
லவ்விடையாமிருவருக்குமாம்பரிசாலருள்புரிந்தான். (௧௪௬)

அரும்பெறலாயோதனமற்றவனுரைக்கும்வேலையினி
விரும்புனலாடுதற்கென்றோரிருவரும்வந்தவணெய்தக்
கரும்புயலேயனையானுங்காவலருங்கண்களித்து
விரும்பிமனங்களிகூரமேதகவேயெதிர்கொண்டார். (௧௪௭)

மதுரைநகர்க்கரசனைமாயனுந்தம்முனைவணங்கி
விதுரனையுமெய்தழுவவேல்வேந்தனைவோரும்
கதிரவரோரிருவரையுங்கண்டுகளிப்பவர்போல
வெதிரெதிர்போய்க்கைதொழுதாரிகலாண்மைக்கெதிரில்லார். (௧௪௮)

அன்றுமுதலெண்ணியநாளளவாகவிருவோரும்
குன்றிடமுங்கடலிடமுங்குறித்தநதிகளினிடமுஞ்
சென்றசாரும்படியுந்தீர்த்தங்கடிசைதோறு
மொன்றுபடமகிழ்ந்தாடிமீண்டவாறுரைசெய்தார். (௧௪௯)

அறந்தருகாளையுமுருவானனன்காளையும்புரிந்த
மறந்தருபோர்வெங்களத்துமன்னவர்களனைவோரு
மிறந்தநிலையுந்தினங்களீரொன்பானிலுந்தோன்ற
மறந்திகழ்தோளிருவருக்குமாமாயன்கட்டுரைத்தான். (௧௫௦)

கேட்டருளிநெடுந்தாலகேதனன்மாமனந்தளர்வுற்
றூட்டரவமுடையவற்கோவழிவுவருவதுபோரி
லொட்டமினியேதென்றுகராந்தகனைவினவுதலு
மீட்டுமவற்குரைசெய்தான்விரிதிரைநீர்மறந்தானே. (௧௫௧)

வீமனுக்கும்வீமனுடன்வெகுண்டமர்செய்வலம்புரித்தார்த்
தாமனுக்குமமர்புரியுந்தலமேதென்றுயாவுகின்றோ
னீமனத்தினிகழ்ந்தபடிநிகழ்த்துகெனநிலவொளியாற்
சோமனுக்குநிகரானோனிளவலைநீசொல்லென்றான். (௧௫௨)

தாவெழுமாமணிநெடுந்தேர்த்தபனனிகர்மழுப்படையோன்
மூவெழுகான்முடிவேந்தரனைவரையுமுடிப்பித்த
காவெழுபான்மையினுடையோன்களிக்கரமேதஞ்செய்
பூவெழுநீவிருஞ்சிறந்தபொன்னுலகோடொத்ததால். (௧௫௩)

அங்கிலமேயிருவருக்குமமர்புரியலானவிட
மன்னவர்தம்முடற்சோரியழிந்துசமந்தபஞ்சகமா
மென்னநிலைபெற்றதடங்களுமங்கேயங்கேயுன்
முன்னிலெதிரில்லதனுக்கொலிகடல்சூழ்நிலத்தென்றான். (கருச)

அத்தலத்தின்றிசைநோக்கியனிமினியுமனைவோரு
முத்தநெடுங்குடைநிழற்றமூவகைவாகனமேறிக்
கொத்துடனேநெறிபடரக்கொற்றவர்கொற்றவன்றானுங்
கைத்தலமுந்தண்டமுமாக்கால்வேகமுறச்சென்றான். (கருரு)

தம்பியர்கள்புடைசூழத்தருமன்மகன்பல்லியமும்
பம்பியெழநடக்கின்றபரிசுதனைமுகநோக்கி
யெம்பியருமெங்கிளையுமிறக்கவிருந்தனமென்றே
வெம்பிமனமிகத்தளர்ந்தான்விதிதனக்குவிதிபோல்வான். (கருசு)

முடிக்குலமன்னவர்தத்தமுடிகளினுற்சிவக்கின்ற
வடிக்கமலநடந்துசிவப்பாவதேயெனவிரங்கிக்
கொடிக்கண்முரசெழுதியவக்கோவேந்தன்கொடித்தேர்விட்
டிடிக்குமுரசெனப்புகல்வானிராசராசனுக்கம்மா. (கருஎ)

என்றுணைவருடன்யானுமேவியநின்றொழில்புரிந்து
வன்றுணையாய்ச்சேவிப்பமடங்கலாசனமேறி
யின்றுணைவர்குருகுலத்தாரெனுமிசைபோய்த்திசையேற
நன்றுணைவாவாளுதியோஞால்மெலாநின்குடைக்கீழ். (கருஅ)

தப்பாதென்மொழியென்றுதருமன்மாமதலைமுகி
லொப்பானதிருமேனியும்பர்பிரான்சான்றாகச்
செப்பாதவாய்மையெலாஞ்செப்பினன்செப்பவுமக்
கைப்பானவன்னெஞ்சக்கடுங்கண்ணன்கண்மறுத்தான். (கருகூ)

எங்கிளைஞரென்றுணைவரென்பொருட்டாலிறந்தேக
வுங்களருள்பெற்றிருக்குமுயிர்வாழ்வினினிதன்றே
வங்கமெலாம்வேறுபடவாறுபடுகுருதியின்வாய்க்
கங்கமுங்காகமுங்கொத்தக்களத்தவிந்தானெனும்பெயரே. (கசுo)

எனத்தருமன்வார்த்தைதனக்கிசையாமலிவனேக
வனைத்துவருதினிகளொடுமைவருமாங்குடனேகக்
கனத்தில்வடிவுடையோனுங்காதலுறுமுன்னோனும்
வினைத்தடந்தேர்விதுரனெடும்விரைவுடனேகினரம்மா. (கசுக)

கலங்கள்பலவினமேறிக்காளிந்திக்கரையேறித்
தலங்களினற்றலமானசமந்தகபஞ்சகமெய்தி
வலக்கொள்படைத்தலைவரெலாம்வளைத்தகடலென்வாள
விலங்கலெனச்சூழ்நிற்பவெஞ்சமரந்தொடங்கினரே. (கசுஉ)

பூங்கவனத்துட்புகுந்துபூணனைத்துந்திருத்திமணி
யோங்கவிவையிரண்டுயிர்பெற்றுடற்றுகின்றதெனவுரைப்ப
வாங்கியதண்டமுந்தோளுமலர்க்கரமும்வலிகூர
வாங்குலகுசெவிடுபடவடலரிநாதமுஞ்செய்தார். (கசுங)

கந்தநறுமலர்க்கூந்தற்காந்தாரிபுதல்வனையக்
குந்திமகன்முகநோக்கிக்கொடுஞ்சொற்கள்சிலசொல்வான்
சுந்தருவான்றுன்னைக்கட்டியதோள்வலிகொண்டோ
சிந்தைதனின்வலிகொண்டோசெருச்செயநீபுகுந்தாயே. (௧௬௪)

இடிப்பதுமின்றிருகதையுமென்கதையாலிடியுண்டு
நடிப்பதுமின்றுன்றுடலமுயிர்துறக்கஞ்சுடியேற
முடிப்பதுமின்றழற்பிறந்தாண்முகிலோதிமுகில்பொழிநீர்
குடிப்பதுமின்றொருவேனின்குருதிநீர்குடித்தாலே. (௧௬௫)

வேறு.

இனிவிடுமேன்மேலுரைக்கும்வாசகமெனதுயிர்நீசோறலிற்றைநாளிடை
யுனதுயிர்வானேறவிட்டொழுலகொருகுடைமாநீழல்வைத்தலேதுணி
வனிகழுமாயோனடந்ததேருடையநுசனும்வாளான்மையற்றமூவரு
நினைவுடனேகாணவச்சிரவாயுதநிகர்கதைவீமாவெடுத்திநீயென. (௧௬௬)

நடையொழியாதோன்விறற்குமாரனுநயனமிலாதோன்முதற்குமாரனு
மடலொடுகோர்வாளடிக்குமாறெனவதிர்வுறவேயோடிமத்தவாரணம்
விடையரிமாவேறெனப்பிரதாபமும்விசயமுமேன்மேன்மிகுத்துமேலிடு
கடையுகக்காள்வாயுவொத்துநீடியகதைகொழுபோராதரித்துமுள்ளவே. (௧௬௭)

ஒருமணிநீளாசலத்திறொடுதிரொருமுழுமாநிலவெற்புநீடமர்
புரிவதுபோன்மேலசைத்துமிமிசைபொதியெழுமாருமலொத்தவிரர்க
ளிருவருமாகாயமுட்டநாகர்களிறைகொளகாறுலுதிக்குநாகரும்
வெருவரநீறுசுருட்கவிசினர்விசையுடனேபோர்விறற்கதாயுதம். (௧௬௮)

உவகையினுலேசிரிப்பர்நீள்சினமுறுதலினுலேமடிப்பர்வாய்மலர்
புகையெழவேநிவிழிப்பர்மார்பொடுபுனைகிரிபோலேதடிப்பர்தோளினை
யிகல்புரிதலோடுகற்றசாரிகையிடம்வலமேபோவர்வட்டமாகுவர்
முகடுறமீதேகுதிப்பர்பார்மகன்முதுகுறநேரேகுதிப்பர்மீளவே. (௧௬௯)

ஒருகையினுலேசுழற்றிவான்முகடுடைபடமேலேகிளப்பிநீள்கதை
யிருநிலமீதேமறித்துவீழுமுனிருகையினுலேதரிப்பர்சார்பொடு
விசைவுடனேதாளமொத்தியோடுவர்விசையுடனேகாலொதுக்கிமீளுவர்
பரிதிகள்போலேவிருத்தமாமுறைபவுரிகொளாவிசிகிற்பர்வீரரே. (௧௭௦)

மலரடிதாளுருவட்டவார்தனம்வயிறுமனோகரபற்பமார்பொடு
குலகிரிநேர்தோள்கழுத்துநீடளல்குறுநகைகூர்வாய்கதுப்புவார்குழை
யிலகுபுருகனெற்றியானனமெனவடைவேகூறுறப்பியாவையு
முலைவுறமேன்மேன்மிகுந்தமூளையுமுதிரமுமாறுதுருக்கமோதியே: (௧௭௧)

கதைகதையோடேயடிக்குமோதைகொல்கதையுடையோர்தாரகைக்குமோ
தைகொ, லெதிர்மொழியோவாதிசைக்குமோதைகொலிணையுடலூடேயிடிக்கு
மோதைகொல், பதயுகமாருடிலவைக்குமோதைகொல்பிணைபலகுழ்போதமொத்த
மோதைகொ, றிதியோடுவாளுடுசெற்றும்வானவர்செவிசெவிடாமாறதிர்க்குமோ
தையே. (௧௭௨)

அரிவயமாவேறுயர்த்தராஜுமழல்விடநாகேறுயர்த்தவீரனு
மிருவருமேவாலிசுக்கிரீவர்களெனவமர்மோதாவினைத்தகாலையில்
வரைமுடிமேருவொடித்தகாலிதன்மதலையையேழ்பாரடர்த்தகோமக
னுனைதமொருவுயிர்த்துநீயுனதுயிர்நிலைகூறுவெனக்கெனுமுனம். (௧௭௩)

இருவினைகூறுவறந்தின்மாமகனிளவல்விதாதாவொடொத்தகேள்விய
னுரைதவறுதான்மறைக்குமோவெனநுயிர்துணைவா,கேள்சிரத்திலேயென
வரிமகவானுனுரைத்தபோதிவனவன்முடிமேலேபுடைக்கவீமனு
முருமுறுமாமேருவெற்பதாமெனவுரைதடுமாறுவுழற்றினனரோ. (கஎச)

மகிதலமேல்வீழ்தனுற்றுமீளவும்வலியுடனேபோர்குறித்துமேல்வரு
பகைவனைநீயாவிநிற்பதோர்நிலேபகரெனமாறுசெர்ப்பகேதுவ
மிகனுதலூடேயெனக்குமாருயிரெனமதியாதேயுருத்துவீமனு
முகுதருசெந்நீர்பரக்கமோதினனுயர்கதையாலேசிரத்தின்மேலுமே. (கஎரு)

உரியகதாபாணியர்க்குளோதவொருவமையிலாதானடித்தபோதுயர்
சிரமுடியூடேபிளக்கநாவிருதிசையினும்வார்சோரிகக்கிவீழ்தர
விருநிலமீதேபதைத்துவீழ்தனுமிரிதரமோதாமல்விட்டெநீயினி
விரைவுடனுறுறெனத்தனுண்மையைவிருதர்முன்மேன்மேல்விளக்கவீமனே. ()

வருகலையாருவுயிர்ப்புருவிழிமலர்திறவாநாவரட்சிபோயுகு
குருதியுகாமேதுடைத்துவீழ்தருகுருகுலபூபாலனுக்கிரவேகமொ
டுருமெறிமாமேகமொத்தகாயமுமுதறிமனேவீரமுற்றுமீளவு
மருகொருபார்மேவிநிற்கும்வீமனையடுகதையாலோடிமுட்டிமோதவே. (கஎஎ)

வேறு.

ஓமவுண்டிகொள்பேரழலோடடலுதைவெஞ்சமராடியவாறென
வாமரங்களினுன்மதியாதமராடுகின்றநிசாசரராமென
வீமனுந்துரியோதனநாமனும்வேகமொன்றியவீரியராயடு
சேமவன்கதையாலமராடினர்தேறிநின்றவர்வாள்விழிமூடவே. (கஎஅ)

மேவுசிங்கவியாளவிலோதனர்வீசுகின்றகதாரவமேலிட
வாவுவெம்பரியாதபனுந்தடுமாறிநின்றனன்வானவர்தானவர்
நாவடங்கினர்மாமுனிவோரொடுநாகரஞ்சினர்நான்முகனாதிய
மூவருஞ்செயலேதெனநாடினர்மோழைகொண்டதுமூடியகோளமே. (கஎகூ)

தார்வலம்புரியானெடுபோரழிதாழ்வுகண்டனன்வீமனைவாசிகொ
டேர்விடுந்திருமாலடிநீண்முடிசேரநின்றுரையாடினன்மாருதி
நேர்தளர்ந்தனன்யாதுகொலோசெயனீமொழிந்தருள்வாயெனவானவ
ரூர்புரந்தவனேநமுராரியுமோதினன்பரிவோடவனேடிவை. (கஅ0)

நீயுந்தனைகேளுறுபோரிடைநேர்மலேந்திடுவோரிருவோரினு
மானிலன்பெலவானதிலேமுகுரானனன்றருசெய்வினையாதிக
ஞானியம்பறகாதிவராயிரநாண்மலேந்தனராயினும்வீவொடு
வானகம்புகுதாரிருவோர்களுமாசவன்றருபூணணிமார்பனே. (கஅக)

மாறுகொண்டவராவிகோணின்கதைமாருதன்சுதனேடிவனேருரை
கூறலிங்கிதமேயலவோருரைகூறில்வஞ்சகமாமிவனுண்மையி
னூறுமைந்தரிஞ்திபனுகியநூனலர்திகழ்மார்பனையாருயி
ரீறுகண்டிடலாமவனூருவையேறுபுண்படவேயெதிர்மோதிலே. (கஅஉ)

ஏழ்பெருங்கடல்சூழ்புவிபாரமுமேதமுங்கெடவேதமில்வரும்
வாழவன்றுயர்நாரணனுர்திருவாய்மலர்ந்தசொலான்மகிழாமிக
வூழினும்புரிதாள்வலிதேயெனவூருவின்புடைசேர்கரநாண்மலர்
காழ்நெடுங்கிரியேயனையான்விழிகாணநின்றனன்வானரிகானையே. (கஅ௩)

ஞானபண்டிதன்வாயுகுமாரனுநாரணன்பணியாலிளையோன்மொழி
மோனவன்குறிதானுணராவெதிர்மோதினன்கதைபூபதியூருவின்
மானசஞ்சகனுறடியேமுடிமாறிநின்றிடவேபிழைபோதலின்
மேன்முழங்கினவானவர்தூரியமேல்விழுந்ததுபூமழைசாலவே. (௧௮௪)

மாறிநின்றகையோதனன்மீளவும்வாயுமைந்தனைவாருவுமார்பமு
நீறெழும்படிசாடியபோதவனீணிலந்தனிலோடிவிழாதுத
னூறினின்மிஞ்சியபேருடலோடெதிரோடிவன்றொடைநீடிடமாறவும்
வீறுகொண்டகதாயுதம்வீசினன்வீரனம்புவிமீதுறவீழவே. (௧௮௫)

வேறு.

அரிப்பதாகனுரகப்பதாகனையிர்த்தமேனுறவடர்த்துநீ
ளொருப்பினோடிசையிக்கவூருவையொடிக்கவேயவனுடற்றனு
நெருப்புகுவிழிசிவந்துவார்கடைநிமிர்ப்புறுதபுருவத்தனாய்
மருப்புமாணுமதத்தமாவெனமதத்துமார்பின்மிசைகுத்தினான். (௧௮௬)

கதைப்பும்வாயுநெரியக்கதாயுதகரத்தினானிகலக்கினா
னெதிர்த்தயானையையடர்த்தகேசரியெனப்பொன்மௌலியையிருத்தினா
னுதைத்துமேலிருபதத்தினாலவனுரத்தைவாகுவையொடித்துநீள்
விதத்தினாலிருநிலத்தின்மீதுடல்விதிர்த்துவீசினன்வியக்கவே. (௧௮௭)

நிறத்தநீலகிரியொக்கவேயிருநிலத்தின்வீழ்குருகுலத்தினோ
னுறைத்துமீளவுமுயிர்த்துமாயனொடுருத்துவாசகமுறச்சொல்வான்
குறிப்பினால்விசயனைக்கொடாருயிர்குறிக்கமாமதிகொளுத்தினா
யறத்தினாலடன்மறத்தினீர்மையினையற்பராயரறிகிற்பரோ. (௧௮௮)

மலைத்தபோர்தொறுமெனக்குநீசெய்பிழைமற்றுளோர்செயநினைப்பரோ
குலத்திலேயிழிகுலத்தரானவர்குறிப்பிலாதிவைபிறக்குமோ
சலத்தினால்வினையியற்றுவார்முடிதரித்தகாவலரொடொப்பரோ
நிலத்தில்வாழ்வவர்பெறக்கொடாயினிநினைத்தகாரியமுடித்தியே. (௧௮௯)

எனச்சொல்வாசகமிழற்றிமீளவுமெதிர்ப்பதாகியெழலுற்றபோ
தனற்சகாயன்முனளித்தகானதனடற்சரோருகபதத்தினா
னுனக்குவாழ்வினியெனக்கொலாமெனவுரைத்துமௌலியையுடைக்கவே
சினத்தலாயுதனிறத்தவாள்விழிசிவக்கவாய்மைசிலசெப்புவான். (௧௯௰)

வேறு.

எம்பிரானைமுராரியைமாயனையிம்பரேழ்கடல்சூழ்புவிமேலொரு
தம்பியாவுடையானவனோடெதிர்சந்தியாவெகுளாவிழிதீயெழ
கம்பிகேளரியோடென்மேவியநஞ்சபோலுநரேசர்முன்னையுடல்
கம்பியாவிழவூருவின்மோதுதல்கண்டபோதெனதாருயிர்போனதே. (௧௯௧)

வேறு.

கதையெடுத்தடற்றுமாடவர்கள்கடிதடந்தனக்குமேலொழிய
வதிர்வுறப்புடைப்பரோதொடையிலடிபடத்தகைப்பரோமுடியி
லெதிரியைச்சலத்தினாலென்விழியெதிர்வழக்கழித்தபாவனனை
முதுகிடப்புடைப்பல்பாணுமெனமுசலகைத்தடத்தொடோடினனே. (௧௯௨)

வேறு.

மதியிரவியோடுபோர்செயுமாறெனவலியதிறல்வீமன்மேலிவனோடலு
மிதயமலர்தோறுமேவருநாயகனிவனைவிரைவோடுபோய்விலகாவிரு
பதுமநிகரானதாள்பணியாமிருபரிவினொடுசீருமாண்மைதகாதென
வதிமதுரவாய்மையால்வெகுளாவகையடிகளிவைகேண்மினோவெனவோதினான்

வேறு.

முகுரானனன்மைந்தனும்வீமனுமேமுடியாதபெரும்பகையாளர்கள்காண்
மதிபாலர்திருந்தவையூடுரையாவழுவாதனவஞ்சினமோதினனி
யிகல்வார்சிலையின்குருவானவர்தாமிடுசாபமுமுண்டுதிரௌபதியார்
பகர்சாபமுமுண்டதினாலெதிரேபடுமேயிவன்வெங்கையினாலவனே. (௧௬௪)

வேறு.

வெஞ்சிலைவிதுரனவனுநீவிருமிஞ்சியபுனல்கள்படியவேகினிர்
பஞ்சவர்களொடுவயிரியாயொருபண்பறவினைசெய்சமரபூமியில்
வஞ்சனைவழியிலொழியநேர்படவன்பொடுமறமுமறமதாம்வகை
யெஞ்சியபதினெண்வகைகொணாளினுமின்றமர்பொருததுரககேதுவே. (௧௬௫)

வேறு.

வெற்றிபுனைபலபத்திரராமனுமெய்த்துணைவனிவைசொற்றகாலையின்
மற்றையநுசனொடுற்றநீள்களம்வட்டமிட்டொரிமைப்பினேகின
னற்றையடலமரிற்சுயோதனனற்பவுயிர்நிலைநிற்பநீடுடன்
முற்றுமுகுகுருதிக்கண்மூழ்குறமொய்த்தகழுகினிழற்கண்மேவினன். (௧௬௬)

வேறு.

மைந்தினாற்பெரியோனெனும்வாயுவின்மைந்தனாற்றுரியோதனன்மாமுடி
சிந்தவார்த்தனர்நீடிசைகாவலர்சிந்திவாழ்த்தினர்பூமழைதேவர்கண்
முந்தவோடியதேரொடுகாய்கதிர்மொய்ம்பன்மேல்கடன்மூழ்கினன்மாலைகொ
ளந்திவாய்த்தமபாசறைமேவினரைந்துபார்த்திவரானவர்தாமுமே. (௧௬௭)

வேறு.

மிடன்மிஞ்சுமேவலர்வானிடைபோதரவினைவென்றகாவலர்பாசறைசேருதல்
கடனன்றெனுமுனிமாமகன்வாள்வலிகருதுந்தனீர்மையைவேறறியாவகை
யடல்கொண்டசேனையெலாமவண்வாழ்வுறவவரைந்துவீரருமேவரவேயொரு, பு
டைதங்குகானிடைபோயினனானிபொழிகொண்டல்போறிருமேனிமுராரியே

வேறு.

ஆனகமலமலர்வாவியிடையேமுழுகியாவியுதவுமறையோகபரனாகிமொழி
மானகவசவரராசதுரியோதனனைவாயுகுமரன்முதிர்போரிலெதிர்வீழும்வகை
தானகரடகரிமாவையரிமாபொருததாயமெனவுழறினானெனுமுன்வேதமுனி
ஞானசரிதகுருவாகியதுரோணன்மகனாடுகளமணுகினானொருவிநாழிகையில். ()

வேறு.

உரகதுவசனயர்கின்றவாவியினுணர்வொடுதுயில்வதுகண்டுபேருடல்
கரதலமலர்மிசைகொண்டுவார்புனல்கலுழ்தருவிழியினனன்பினாலமர்
பொருகளனிடைதனதந்தைவீடியபொழுதினுமனமிகநொந்துளானுயிர்
சுரர்களுமுருகவிரங்கினான்வரிதொடுசிலைவிசயதுரங்கதாமனே. (௨௦௦)

வேறு.

முனைத்தலையழிந்துடல்சோரவும்யான்வினைமுடிப்பனெனுநெஞ்சுடைவாள்
வயவீரனை, யனைத்துலகினுங்குருவானசராசனனளித்தமுனியன்புறமார்புதழீஇ
யினை, னினைத்தநினைவின்படியேமிகுபோர்செய்துநினைக்கவனிதந்திடநீதலைநாளி
னி, லெனைத்தனிதெளிந்திலையாதவன்மாயையினெனப்பரிவுகொண்டுசெல்வாய்
மைகள்கூறியே. (௨௦௧)

வேறு.

அருளுறவழக்கழிவுறுதரோர்மாற்றமுமறனுடனழுக்காறனுகுருவேற்றமு, மிருநிலமதித்திடவினிதுகோலோச்சுதலியல்புகிருபர்க்கெனுமுறைமையோபார்த்திலை, கலைகெழுமுடித்தலையென்பிதாமீப்பகெதிமகன்முறித்தவில் விதுரனேபோற்பல, குரவருமுரைத்தசொலுமுறநீகேட்டிலைகுருமாபினுக்கொருதிலகமாமூர்த்தியே. (௨௦௨)

வேறு.

இடியிடித்திடுகெரிசளாமெனவெதிமருச்சுதன்முதலிகலோர்தலை
தடிதடித்திடவவரவர்சேனைகணிபடப்பொருதெழுபுவிநீபெற
விடிவதற்குமுன்வருகுவன்யானெனவிடைகொடுத்தனனரவவிலோதனன்
முடியுடைத்தனதுடையசிகாமணிமுனிமகற்கினிதருள்செய்தபீளவே. (௨௦௩)

வேறு.

பூசுரர்பெருந்தகைபரித்தாமாவிரியல்போனகிருபன்கிருதவன்மன்மூவருமுன், வாசவன்விரிஞ்சனுமைபாகனிவர்முதலவானவர்வழங்கியவிதப்போர்வாளிகளி, லாசுகன்மகன்றனையுமப்போதேதுணைவரானவரையுந்தலைதுணிப்பமெனநாடியவர், பாசறைபுகுந்தனர்பரித்தேரியானையொடுபோரதமுடிந்தபதினெட்டாநாளிரவே. (௨௦௪)

சல்லியபருவம்

முற்றுப்பெற்றது.

---

௨

பத்தாவது

# சௌப்திகபருவம்.

வேலமர்தடக்கைவீரிப்பாடிவீடுசென்றணைதலும்புறத்தோ
ராலமர்கிளையிற்பல்பெருங்காகமரும்பகல்கழித்தகூகையினாற்
சாலவுமிடருற்றலமரக்கண்டுதெம்மிலேமுகமுகநோக்கிக்
காலமுமிடனுமறிந்தமர்செருத்தல்கடனெனக்கருதினரன்றே. (௨௦௫)

உரத்துவாரணங்கண்மதமிகுத்தென்னவூக்கமோடொன்றையுமதியார்
புரத்துவாரத்துப்புகுதலும்வெருண்டுபொங்கழல்போல்வதோர்பூதம்
பரத்துவாசனையுமாதுலன்கிருதபன்மனென்றிவரையுமுனிந்து
கரத்துவார்சிலையுங்கணைகளுமுறித்துக்கடவுதிண்டேர்களுங்கலக்கி. (௨௦௬)

முன்புருவிசயமுனிமகன்றன்னைமுரணெடுந்தோள்களுமாறு
மென்புடனிணமுந்தசைகளுஞ்சிந்தவிளைக்கருஞ்சிறகுறங்காத்தால்
வன்புனைவெழுமாறன்றுறமலைந்துமற்றனோர்கொற்றமுமழித்துப்
பின்புகலறுமாதரந்ததப்பூதப்பெருமையாம்பேசுறுந்தகைத்தோ. (௨௦௭)

மாதவன்விதியாலகல்பெரும்பாடிமாநகர்காவல்கொண்டுற்ற
பூதமேபொருததாத்தலின்மீண்டுபோய்வடதருநிழற்புகுந்து
பேதுறவெருவோடிருந்தனர்சரிபெரியவக்கங்குலிற்றுரோண
சாதனன்மதலையென்செய்தமென்னத்தன்மனத்தெத்தனைநினைந்தான். (௨௦௮)

எஞ்சினகிருபனுயிரினைநிறுத்தியிவ்விரவகல்வதன்முன்னர்
வெஞ்சினமுறச்சென்றுன்பகைமுடித்துமீளுதுமெனப்பலபடியும்
வஞ்சினமுரைத்துவந்தனமின்னம்வன்குறட்பாரிடந்தன்னூற்
றஞ்சினமெனினுமமையுமென்றெண்ணந்துணிந்தனன்றுயிலறுகண்ணான். ()

எண்ணியகருமமுடியினுமுடியாதொழியினுமீசனைத்தொழுதல்
புண்ணியமெனுமாறுன்னியாங்கொருதண்பொய்கையிற்புனல்படிந்தேறிப்
பண்ணியலிசையின்படிவமாந்தெரிவைபங்கனைப்பங்கயமலர்கொண்
டண்ணியகருத்திலிருத்தியஞ்செழுத்தாலாகமப்படியடிபணிந்தான். (௨௪0)

அன்றவன்மறையின்முறையினற்புரிந்தவருச்சனைதனையுவந்தருளி
நின்றனன்விழியுமிதயமுங்களிப்பநீறுடையேறுடைக்கடவுள்
வன்றிறன்முனிவன்மதலையும்விதலைமாறிமாறடர்ப்பதோர்படைநல்
சென்றனனென்றவுரைமுடிவதன்முனேதியொன்றீசனுமீந்தான். (௨௪௧)

பாதிமெய்நீலமாகியபவளப்பருப்பதம்விருப்புடனளித்த
வேதிபெற்றுவகையுடனிமைப்பளவினிருந்தவவ்வீரருந்தானும்
வீதிகொள்பாடிவீடுறப்பூதமீளவந்தடர்த்திவன்கரத்தி
லாதிநல்கியவெம்படையினலஞ்சியாவிகொண்டோடியதன்றே. (௨௪௨)

பருவரலகற்றியிருவர்வீரரையும்பாசறைவாயிலினிறுத்தி
மருவருங்கமலமாலையான்கடப்பமாலையானெனமனங்களித்துப்
பொருவருமுனைக்குக்குரிசிலாயெல்லாப்போரினும்புறமிடாதடர்த்த
துருபதன்மதலைவரிசிலைத்திட்டத்துய்மனைமணித்தலைதுணித்தான். (௨௪௩)

கயில்புரிகழற்காற்றந்தையைச்செற்றகாளையைப்பாளையத்திடையே
துயில்புரியமையத்திமைக்குமுன்சென்னிதுணித்தனன்சுதனெனக்கலங்கி
வெயில்புரிவதன்முன்வல்லிருளிடையேயுணர்ந்தவர்வெருவுடனரற்றப்
பயில்புரிசிலைக்கைச்சிகண்டியைமுதலோர்பலரும்வந்தனர்கள்பாஞ்சாலர். (௨௪௪)

உத்தமோசாவுமுதாமனுமுதலிட்டுள்ளவர்யாவரும்பிறருந்
தத்தமோகையினல்வந்தெதிர்மலைந்தோர்தலைகளாற்பலமலையாக்கி
மெத்தமோகரித்துப்பாரதமுடித்தவீரரைத்தேடிமேல்வெகுளுஞ்
சித்தமோடெங்குந்திரிந்துளானவர்தஞ்சிறுவரைவரையுமுன்சேர்ந்தான். (௨௪௫)

பூதலமுழுதுங்கவர்ந்ததந்தையர்கள்புறத்திடைப்போயதுந்துயின்ற
மாதுலன்முனிவன்மதலைகைப்படையான்மடிந்திடத்தடிந்ததுமுணரார்
தாதலரலங்கற்சமரவாண்முனியைத்தழலிடைவருபெருந்தையல்
காதலம்புதல்வர்கண்டுயில்புரிவோர்கனவுகண்டனரெனக்கண்டார். (௨௪௬)

கண்டவர்தத்தம்படையெடுப்பதன்முன்காசினிமுழுவதும்வென்று
கொண்டவரிவரென்றெண்ணியேசுடரிற்கொளுத்தியசுடரனையாரைத்
திண்டவர்தமக்குச்சிகாமணியனையான்சிக்குறக்கலங்கிவண்டேற
லுண்டவர்தமைப்போன்மதத்தினல்வாளாலொருநொடியினிற்றலைதுணித்தான். ()

துருபதன்மைந்தரனைவரும்பஞ்சத்திரௌபதியருந்துயில்பொழுதிற்
புரவியந்தாமாவினைவரப்புகுந்துபொன்றுவித்தனனெனப்புலம்ப
விரவிடையமர்மற்றென்னைகொலென்னுவிரவிதன்றிருக்குலத்திறைவன் [யோன்.
பெருமையோடெழுந்தான்பகைவன்மேலவன் முன்பின்னிடப்பொருதிடும்பெரி

பொன்னிதன்னையுநேரியம்பொருப்பும்புகாரெனுநகரியும்படைத்த
சென்னியுமவன்றன்சேனையின்விதமுஞ்சேனைமண்டலீகருஞ்சேர
முன்னியசிலைக்கைமுனிமகனுடன்போய்மோதியவேதியான்மடிந்தார்
பின்னியசடையோன்வழங்கியபடைமுன்பிழைத்தவர்யாவரேபிழைத்தார். ()

புகலரும்பதினெண்பூமிமுற்றுடையபூபதிகளுமவர்படைத்த
விகலருந்தந்திதேர்பரிகாலாளென்பனயானவையுஞ்சேரப்
பகலருஞ்சமரிற்பதின்மடங்காகப்பாதிநாளிரவினிற்படுத்தான்
றகலருங்கேள்வித்தாமனேநாமச்சடையவன்றனயனுதலினுல். (௨௨௦)

உன்னியபடியேகடுஞ்சினங்கன்றியுள்ளவர்யாரையுமுருக்கித்
துன்னியவிடைபோற்செருக்கியப்புரத்தின்றுவாரநின்றவரையுங்கூட்டித்
தென்னியகுமரர்சென்னியைத்திளையுர்தேவருந்திகைத்திடத்தூக்கி
வென்னியங்குருவக்தெழுமுனேகுருவின்மிகுகுலவேந்தைவந்தடைந்தான். (௨௨௧)

வேறு.

வந்தனேனையமாதவனேவலான், முந்தைபூதமுதுகிடமாமுடி
சிந்தயாரையுஞ்செற்றகன்பாசறை, யைந்துவீரர்தம்மாவியுங்கொண்டரோ. ()

சொன்னசிங்கத்துவசனையாதியா, மன்னரைவருமாண்டனர்மற்றவர், சென்னியெ
ன்றுசிறுவர்தஞ்சென்னியை, முன்னர்வைத்தனனுன்முனிமைந்தனே. (௨௨௩)

வைத்தசென்னியைநோக்கியவாவுறு, சித்தமன்னவன்றேறிச்சிறுர்முகந்
தத்தமன்புடைத்தந்தையர்வான்முக, மொத்தவாகுமிஃதுண்மையென்றோதினுன்

ஒதும்வேந்தக்கொருமொழியுஞ்சொலான், வேதபண்டிதனிற்கவவ்வீரனைப்
பாதகஞ்செய்கைபார்ப்பனமாக்களுக், கேதமேதமிதென்செய்தவாறெனு. (௨௨௫)

துன்றுபாதகந்தோன்றியநான்முதல், மன்னரோடமலைந்தனைவாளியாற்
சொன்னபாலர்மகுடந்துணித்தநின், றென்னவீரியமென்னினைந்தென்செய்தாய்.

இருகுலத்திலெமக்குமவர்க்குமிங், கொருகுலத்தினுமுண்டெனவில்லையாற்
குருகுலத்தின்கொழுந்திலைக்கிள்ளினை, வருகுலத்தொருமாசறுமைந்தனீ. (௨௨௭)

ஆற்றிலீர்விளையாடியநான்முதற், காற்றின்மைந்தனுடைந்தனைகன்றினே
ன், சாற்றினெல்விளைதானென்னையேசுட, கூற்றின்வாய்ப்புகுந்தேற்கென்னகூ
ற்றையா. (௨௨௮)

பிணைநெடுங்கைப்பகட்டுவெஞ்சேனைகு, ழிணைதருஞ்சொற்கிளைஞர்கள்யாரை
ரையுந், தலைவர்யாரையுந்தோற்றுநின்றேனெனக், கிணையர்பார்மிசையாருளரெ
ன்னிலே. (௨௨௯)

என்றுபன்மொழிகூறியிம்மைந்தரைக், கொன்றவந்தகுமரனைப்போர்தொறு
நின்றநீவினைசெய்கிடைத்தேவ, மொன்றிவாழ்கென்றுயர்விடைநல்கினுன். (௨௩௦)

வெஞ்சராசனவீரனுமாமனு, நெஞ்சமாழ்குறநின்றவர்போனபின்
கஞ்சாண்மலர்க்கண்புனல்சோர்வருஞ், சஞ்சயாரியன்றன்னெடுகூறுவான். ()

யாவொடேந்தையிரக்கமுறுவகை, யாயவின்சொலினுற்றுயராற்றிட
நீயெழுந்தருணின்மொழிவல்லபக், தாயசிந்தைச்சார்களும்வல்லரோ. (௨௩௨)

யானுமெம்பியருமிறந்தோமெனு, மானபங்கமறந்ததன்னெஞ்சினுக்
கானதம்பியனித்தவர்தம்மொடெ, கோவிலம்புரக்கும்படிகூறுவாய். (௨௩௩)

என்னவம்முனிதன்னிணைத்தாண்மலர், சென்னிமீதும்விழியினுஞ்சேர்த்தி டா, வுன்னியாண்மைக்குவமையில்லாதவன், பொன்னிலத்தினுணர்வொடும்போ யினன். (௨௩௪)

வேறு.

வயிரஞ்செறிதருமனனும்வாய்மையும்வலியும்பொருபடைவினையுமேல்வரு
செயிருந்திகழ்தருகுருகுலமகிபதிதிறல்வெஞ்செருமுனையதனின்மேதகு
மயிர்நுண்குழலாமடநல்லார்பலரளிகொண்டெதிர்கொளவமரனனபின்
னுயிர்கொண்டதுசுரருறையும்வானுலகுடல்கொண்டதுதனதுடையபூமியே. ()

வேறு.

கிடந்தவுடல்வானவர்தங்கிளைசொரிந்தபூமழையாற்கெழுமுற்றேங்க
நடந்தவுயிர்புத்தேளிரமகளிர்விழிமலரானலனுற்றேங்க
வடர்ந்தளிகண்மொருமொகெனுமாமோதவலம்புரித்தாரண்ணல்யாரு
மிடைந்துமிடைந்தெதிர்கொள்ளவீரருறைபேருலகமேவினனே. (௨௩௬)

கேள்வியுடைவரிசிலைக்கைமுனிமகனுமாதுலனுங்கிருதனென்னும்
வாள்விறல்கூர்நரபதியுங்குருபதிதன்வாய்மையினன்மாழ்கியேகி
வேள்வியருங்கனன்மூன்றுமொருவடிவாய்ப்பிறந்தனையவியாதற்கைவர்
தோள்வலியுந்தஞ்செயலுந்தொழாமுடியோன்றுஞ்சியதுந்தொழுதுசொன்னர். ()

புரிதவத்திற்கானவனங்கிருபனுக்குந்துரோணமுனிபுதல்வனை
தூரகததாமனுக்குமமைத்திவ்வழிநீரிருத்திரெனச்சொன்னபின்னர்க்
கிருதனுக்குவிடைகொடுத்தானிவருமவன்மொழிப்படியேகிரிசூழ்கானிற்
றருநிலத்தோரதிசயிப்பச்சிவபெருமான்றனைநினைந்துதவஞ்செய்தாரே. (௨௩௮)

நாடியசொற்சுருதிநிகழ்நாவினன்சஞ்சயனுநள்ளென்கங்கு
லோடியொளித்திடுகெதிரோனுதிப்பதன்முன்விலோசனநீருகுப்பவெய்தி
யாடிமுகத்தரசினுக்குமையிருபதரசரையுமளித்துவாழ்ந்து
வாடியமெய்ச்சவுபலைக்குமுற்றதெல்லாம்வாய்மலர்ந்தான்வாய்மைவல்லான். ()

சேனுவிந்துவைமுதலாந்திருமைந்தரைவரும்வான்சென்றநாட்டொட்
டானுமற்சொரிகண்ணீராறுபெருங்கடலாகவழுதசோர்வாள்
பானுள்வந்தருண்முனிவன்பகருமொழிவடஞ்செவியிற்பட்டதாகத்
தூநாகமுருமொலிகேட்டயர்வதுபோல்வீழ்ந்தழுதாள்சுபலன்பாவை. (௨௪௦)

மருத்தின்மகனெனுஞ்சண்டமருத்தனையபுயவலியோன்வன்கைத்தண்டா
லுருத்தமரினுடன்றம்பரூர்புகுந்தான்வாளரவமுயர்த்தோனென்று
வருத்தமுடனுயங்கிமிகமயங்கிநிலமிசைவீழ்ந்துவயிரமான
கருத்தினுடனலமந்தானழுதுபெரும்புனல்சொரியக்கண்ணிலாதான். (௨௪௧)

இப்பான்மற்றிவரிரங்கவெப்பாலுமிருளொளிப்பவிரவியானுந்
துப்பார்செங்கொடிகளெனவுதயகிரிமிசைப்படர்ந்துதோற்றஞ்செய்யத்
தப்பாமனிலமடந்தைதன்பாரமகற்றுவித்தசார்ங்கபாணி
யப்பாலப்பாண்டவர்களைவரொடும்புரிந்தசெயலறைதுமம்மா. (௨௪௨)

ஐந்துபெரும்பார்த்திவரோடாரணியம்புகுந்தபிரானரியகங்குற்
சிந்துதினகரனுதயஞ்செருமுனம்பாசறையிற்சென்றுநோக்க
விந்திரனேநிகர்நிருபர்முடித்தலைகள்வெவ்வேறுமிடையேசிந்த
மைந்தருடற்குறைதழுவியாகுலித்துமெலிந்தரற்றுமானைக்கண்டார். (௨௪௩)

கண்டவுடன்மனமெலிவுற்றிவ்வண்ணமெவன்கொலெனக்கரியமேனிக்
கொண்டலுரைத்தனன்றாகதாமாவின்வினைகளெலாங்கூற்றமுட்க
வண்டமுகடிரவுருத்தருச்சுனனுமாருதியுமவன்றனுவி
யுண்டலறுதவிரோமென்றுரைத்தோடமாறடுத்தேயுரைக்குமன்றே. (உசச)

பாரிடமொன்றினைப்புரத்திபாசவறையெனப்புகன்றுபரிவிற்சென்றேம்
வீரருக்குறுவினைத்தாமன்சுயோதனற்குச்சுனுரைத்துமீண்டானைவ
ராரமணிமுடிகொய்துதரணியெலாமுன்குடைக்கீழமைப்பனின்றே
காரிருக்குமலாளகக்காந்தாரிசுதவுள்ளங்களித்தியென்றே. (உசரு)

இருவினைத்தொடக்கொடுபாசறையிற்புகுதலுமேசெங்கட்பூதம்
பெருகுவிழிநீர்சொரியவடர்த்தலும்பின்னிட்டானைப்பெட்பிற்போற்றி
முருகிதழிச்சடாருளும்படைக்கலம்பெற்றிவ்வண்ணமுடித்தானம்மா
குருகுகிரியெறிந்தோனைநிகர்த்தவன்றன்விறலெவர்க்குங்கூறலாமோ. (உசசு)

என்றுபினும்பாண்டவியமெனும்படையுந்தாந்தான்மற்றெவருமொப்பா
ரன்றுமதுயிலாந்துமளிப்பனெனும்வாய்மையினுலகன்றேனின்றும்
வென்றியுமதழியடையிற்சொல்வன்யான்விடுமினெனமின்னனுனைத்
துன்றிவிதியினைவெவரேவெல்பவரென்றெடுத்தருளிச்சூழ்ச்சிவல்லான். (உசஎ)

மைந்தருயிர்க்கிரங்குவதென்மலர்க்குழலாயுன்கொழுநர்வாழ்தற்கியான்செய்
தந்திரமற்றொருகோடியுரைக்கடங்காவெனத்துயரந்தவிர்த்துத்தன்மன்
கொந்தலருமுகைகோக்கிக்கன்னன்முதல்யாவருக்குங்குலவுமீமத்
தந்தமுறுகடன்கழித்துமெனவுலகன்சொற்படிகின்றளித்தபின்னர். (உசஅ)

அத்திறுபுரியதனிலவருடன்சென்றரியுமந்தன்முன்னர்ப்
பத்தியினுலிறைஞ்சிடமற்றெவர்கொலெனத்தருமன்முதற்பாலரென்ன
வித்தகனுமாகிசொற்றுச்சதாகதிசேயினைத்தழுவவேண்டுமென்ன
வத்தனத்துணைவித்தருளத்தழுவிநெரித்தனன்றுகள்களாயதம்மா. (உசகூ)

இனியூழிவாழ்திரெனவினைஞரொருநால்வருடனறத்தின்மைந்தன்
றனையிருத்தியீள்வலெனச்சாத்தகியுமலாயுதனுந்தன்னைச்சூழ
வினையகற்றும்பசுந்துளவோன்றுவரைநகர்த்திசைநோக்கிமீண்டான்சேர்த்திக்
கனைகடற்பாரளித்தவருமங்கரினறநெறியேகருதிவாழ்ந்தார். (உருo)

ஆ செய்யுள் - ச,ஙருக.

பதினெட்டாம்போர்ச்சருக்கமுற்றிற்று.

---

சௌப்திகபருவம்

முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.